ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஶாஸ்த்ரஜந்யஜ்ஞாந யோகஜந்யஜ்ஞாநங்களைவிட
ஆயிரம்மடங்கதிஶயித்த
பகவத்ப்ரஸாதஜந்ய தத்வயாதாத்ம்யஜ்ஞாநவித்தமராய்
ப்ரபந்நஜநகூடஸ்த்தராய் எழுந்தருளியிருக்கும்
மஹாப்ரபாவரான

# நம்மாழ்வாருடைய

பகவதநுபவ பரீவாஹரூபமான, த்ராவிடவேதஸாகரஸாரமாகிய

# திருவாய்மொழி

## எட்டாம்பத்து.

## மூலமும் அதின்வ்யாக்யாநாதிகளும்

இவை,
ஸ்ரீமத்-உபய-ஸ்ரீமாந்-ஆழ்வார்திருநகரி வடபத்ரஶாயி
**அணாயர்ஸ்வாமி அவர்களாலும்**
ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீபாததூளியாகிய,
**கா. ராமஸ்வாமிநாயுடு அவர்களாலும்**
அநேகப்ரதிகளைக்கொண்டு பரிஶோதிக்கப்பட்டு
சென்னை: ராமாநுஜஸித்தாந்தஸபாத்யக்ஷராகிய
ஸ்ரீமாந்,
முதலியாண்டான்முன்னிலையில்
புலியனூர் - இரங்கசாமிமுதலியார் அவர்கள்குமாரர்
**பு. கிருஷ்ணஸ்வாமிமுதலியார் அவர்களால்**
சென்னை:
ஆதிகலாநிதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டன.

ஆழ்வார் திருவவதாராதிவர்ஷம்-ச௲அ௬-தாரணவர்ஷம்.
August 1884.
*Registered Copyright.*



ஸ்ரீ

    

ஆழ்வார்திருவடிகளேசரணம்.
எம்பெருமானார்திருவடிகளேசரணம்.

# திருவாய்மொழி.

## எட்டாம்பத்து.

## முதற்றிருவாய்மொழி.

### தேவிமார் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(தேவிமாராவார்) கீழிற்றிருவாய்மொழியிலே மநோரதித்தபடி பெறுமையாலே யத்யந்தமவஸந்நராய், எம்பெருமானுடைய வாஶ்ரிதவாத்ஸல்யாதிகுணங்களை யதிஶங்கைபண்ணும்படி கலங்கி, " காணுமாறருளாய் " என்று கூப்பிடுகிறார்.......................................................*

### பன்னீராயிரப்படி.

எட்டாம்பத்தில், இப்படி யேழாம்பத்திலே - உபாயநிவர்த்யமான விரோதி ப்ராபல்யத்தை யநுசந்தித்து, தந்நிவ்ருத்திப்ரகாரத்தை யிப்பத்திலேயநுசந்திப்பதாக; விரோதிநிவர்த்தகனுடைய வாஶ்ரிதாகாங்க்ஷாதீந ஸாந்நித்யத்தையும், ஸ்வவிஷயத்திலே சங்கமுண்டேயாகிலும் இதரசங்கமற்றார்க்கல்லது சுலபனல்ல னென்னுமத்தையும், ஸ்வாஶ்ரிதஜநவிஶ்லேஷத்தில் தானஸஹாயனென்னும்படியான ப்ரேமஜநகத்வத்தையும், ஆஶ்ரிதவிஷயத்தி லத்யந்ததுர்மோசமான விரோதிகளைப்போக்கி அவர்கள் சம்பத்தே தன்சம்பத்தாயிருக்குமாகாரத்தையும், ப்ராப்யபூதனான த

ன்பக்கலிலே ப்ராவண்யமுண்டானல் ப்ரதிபந்தகம் தன்னடையே கழலுமென்னு மிடத்தையும், ஆஶ்ரிதவிரோதியைப் போக்குகைக்காஸங்கமாயிருக்கு மிருப்பையும், அந்தஸ்த்திதனுக்கொண்டு அசேஷவிரோதிநிவர்த்தகனும்படியையும், அப்ருதக்ஸித்தமான வாத்மசுத்தியைப்ரகாசிப்பித்து ஔபாதிக தோஷத்தினுடையவதிதூரீகரணத்தையும், அபாஸ்ததோஷனை வதிகாரியை யதிசயிததாஸ்யாம்ருதத்திலே மக்நனுக்கும்படியையும், ஸ்வதாஸ்யத்தினு மதிகமான ஸ்வகீயதாஸ்யபோகத்தை ப்ரகாசிக்கும்படி தத்விரோதிநிவர்த்தந ப்ரகாரத்தையுமருளிச்செய்து, பூர்வநிருபிதமான விரோதியினுடைய நிவ்ருத்திக்ரமத்தை யுபபாதித்தருளுகிருர்.

இதில் முதற்றிருவாய்மொழியில், அடிமைசெய்யப்பாரித்த வர்ச்சாவதாரஸ்தலத்திலே ஆசானுரூபமான வபிமதம் சித்தியாமையாலே ஆர்த்தராய் மிகவும்பகவதநுபவாகாங்க்ஷைநடக்க; அந்தவாகாங்க்ஷைக்கு ஹேதுவான அநவதிகவிபூதிபூர்த்தியையும், அந்தவிபூதிரக்ஷணர்த்தமான வவதாரங்களினுடைய வதிசயிதபோக்யதையையும், ஆஶ்ரிதபவ்யதாவிசிஷ்டமான வநிஷ்டநிவர்த்தகத்வத்தையும், ஆஶ்ரிதாநாஶ்ரிதவிபாகேந வுண்டான வநுகூலப்ரதிகூலரூபத்தையும், அசேஷப்ரகாரரக்ஷகத்வத்தையும், அகிலாத்மபாவத்தையும், அசேஷப்ரகார போக்யதையையும், ஆஶ்ரிதசம்ரக்ஷணர்த்தமான க்ஷீரார்ணவஶாயித்வத்தையும், அதிசயிதபுருஷார்த்தமான ப்ராப்யதேஶவர்த்தித்வத்தையும், ஆசானுரூபோபகாரத்தால்வந்த வத்யந்தமஹத்தையையு மநுசந்தித்து. ஏவம்ப்ரகாரவிசிஷ்டனை சர்வேஶ்வரன், தம்முடைய வாகாங்க்ஷாநுரூபமாக முகங்காட்டி யாஶ்வசிப்பித்த ப்ரகாரத்தையருளிச்செய்கிருர்.......................................................................................*

ஈடு.

பிராட்டிமாரோடே நித்யபரிகரம்சேவிக்க, பர்யங்க வித்யையிற் சொல்லுகிறபடியே திருவநந்தாழ்வான்மேலே சர்வேஶ்வரன், நாம்பாடின திருவாய்மொழிகேட்கைக்காகத் திருவாறன்விளையிலே யெழுந்தருளியிருந்தான், நாமங்கேபோய்த்திருவாய்மொழி கேட்பித்து அநுகூலவ்ருத்திகளையும்பண்ணி யநுபவிப்போமென்று பாரித்தார்; அது மநோரதமாத்ரமாய், நினைத்தபடிதலைக்கட்டப் பெற்றதில்லை. பிராட்டிமாரருகே யெழுந்தருளியிருக்க, நித்யசூரிகளுண்டாயிருக்க, நினைத்தபடி கார்யஞ் செய்து தலைக்கட்டுகைக்கிடான வைஶ்வர்யம் குறைவற்றிருக்க, ஆஶ்ரிதருகந்தவற்றைத்தனக்குத் திருமேனியாகக்கொண்டுதவும் ஸ்வபாவனுயிருக்க; எனக்குருசியிற் குறைவற்றிருக்க, நினைத்தபரிமாற்றம் பெறுதொழிவோமே என்று வெறுத்தார். இவர்தாம் சர்வேஶ்வரன்பக்கல் தமக்குத் தஞ்சமாக நினைத்திருப்பதிரண்டு ஸ்வபாவத்தை - ஆஶ்ரிதபாரதந்த்ரனுயிருக்குமிருப்பையும், ஸ்வவ்யதிரிக்த சமஸ்தவஸ்துக்களும் தனக்குப்ரகாரமாகத்தான் ப்ரகாரியாய், இவற்றுக்குவந்த வ்யஸநம் தனக்குவந்ததாக நினைத்திருக்கும் ப்ராப்தியையுமாயிற்று; அவையிரண்டும் தம்பக்கல் கார்

யகாமாகக்கண்டிலர்; நானொருவன் தோற்றி சர்வேஶ்வரனுக்கிவையும் பொய்யாகப்புகுகிறதோ என்றதிசங்கைபண்ணினார். “குணஜ்ஞாநத்தாலே ஜீவிக்குமவர்குணங்களிலே யதிசங்கைபண்ணினால் ஜீவிக்கமாட்டாரே. இவர்தம்மை நாமிழக்கவொண்ணாது, இவரைசமாதாநம்பண்ணும்விரகேதோ” என்றுபார்த்து, “வாரீர், நீர்கண்டதெல்லாவற்றிலு மதிசங்கைபண்ணுகிறதென், நாமுமக்கொன்றும் செய்திலோமோ, இவ்வளவாக வுபகரித்தநாம் மேலுள்ளதும் செய்வோங்காணும், நீரிங்ஙனேயதிசங்கைபண்ணவேண்டா” என்று, தன்னுடைய விஸ்ரம்பணீயத்வ ப்ரமுகமானகல்யாணகுணங்களையும், தானிவ்வளவாகப்பண்ணினவுபகாரங்களையுங்காட்டி, இவருடைய வதிசங்கையைத்தீர்த்து சமாதாநம்பண்ண, சமாஹிதராய், அத்தை யநுசந்தித்தினியராகிறார்.

[க்யாத இத்யாதி] [𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌃] [ப்ராஜ்ஞ:] தம்மாலே யபிமதம்பெற விருப்பாரறிவிற் குறையாலிழக்கவேண்டாதபடி தம்மளவையு மவர்களளவையுமறிகைக்கீடான வறிவுடையவர். [𑌕𑍃𑌤𑌜𑍍𑌞𑌶𑍍𑌚] [க்ருதஜ்ஞஶ்ச] கிட்டுமவன்தன்பக்கல் வைமுக்யம்பண்ணுமது தவிர்ந்து ஓரடிவரநின்றவெல்லையுமறிவர். [𑌸𑌾𑌨𑍁𑌕𑍍𑌰𑍋𑌶𑌶𑍍𑌚] [ஸாநுக்ரோஶஶ்ச] அறிவுகொண்டுகாரியங்கொள்ளவுமறியாதே யிருக்குமவர்களுக்கு, அவர்களிழவையநுசந்தித்து “ஐயோ” என்றிரங்குமவராயிருப்பர். [𑌰𑌾𑌘𑌵𑌃] [ராகவ:] இதிவர் தம்மைத்தோற்றிவந்ததல்ல,குடிப்பிறப்பாலே. [𑌸𑌦𑍍𑌵𑍃𑌤𑍍𑌤𑌃] [ஸத்வ்ருத்த:] பரஸம்ருத்த்யேகப்ரயோஜநராயிருப்பர். [𑌖𑍍𑌯𑌾𑌤𑌃] [க்யாத:] இப்படியெதிரிகள்கோஷ்ட்டியிலும்ப்ரஸித்தர்.[𑌨𑌿𑌰𑌨𑍁𑌕𑍍𑌰𑍋𑌶𑌶𑌙𑍍𑌕𑍇] [நிரநுக்ரோஶஶங்கே] இக்குணங்களையுடைய பெருமாளை யித்தசையிலெனக்கு முகங்காட்டக்காணாமையாலே, இக்குணங்களொன்றுமில்லாதநிருஶம்ஸரோபாதியாக சங்கியாநின்றேன். அவர்க்கிக்குணங்களுண்டாகாதொழியாதிறே. [𑌮𑌦𑍍𑌭𑌾𑌗𑍍𑌯𑌸𑌂𑌕𑍍𑌷𑌯𑌾𑌤𑍍] [மத்பாக்யஸங்க்ஷயாத்] என்னுடைய பாக்யஹாநியாலே யாமித்தனையிறே. “அறிவொன்றும்சங்கிப்பன் வினையேன்” என்கிறாரிறேயிவரும். இத்திருவாய்மொழிக் காளவந்தாரருளிச்செய்யும் ஶ்லோகமிது............................................*

## ஜீயர் அரும்பதம்.

தேவிமார்ப்ரவேஶே. சங்கதி (பிராட்டிமாரோடேயித்யாதி.) “எழில்மலர்மாதரும்” என்றத்தைப்பற்ற (பிராட்டிமாரோடேயென்றது.) “யாவரும்வந்தவணங்கும்” என்றத்தைப்பற்ற (நித்யபரிகரம்சேவிக்கவென்றது.) “பாம்பணையப்பன்” என்றத்தைப்பற்ற (திருவநந்தாழ்வான்மேலே யென்றது.) பர்யங்கவித்யையாவது - ஆதாரசக்திக்ரமத்திலே திருவநந்தாழ்வான்மேலே மஹிஷீபூஷணாயுத பரிஜநபரிச்சதாதிவிசிஷ்டனாய், நித்யமுக்தாநுபாவ்யனாயெழுந்தருளியிருக்கும் ப்ரகாரத்தைச்சொல்லுகிற வேதாந்தம்.

"தேவிமாராவார்" என்றுதொடங்கி, "நின்னுருவம்" என்னுமளவுங்கடாக்ஷித்து (பிராட்டிமாருகே யித்யாதிவிசேஷணசதுஷ்டயமும்.) "காணுமாறருளாய்" என்றத்தைப்பற்ற (ருசியில்குறைவற்றிருக்கவென்றது.) வெறுக்கிறதேதுக்காகவென்ன (இவர்தாமித்யாதி) "உமருகந்துகந்தவுருவம்" இத்யாதியைப்பற்ற (ஆஶ்ரிதபாரதந்த்ரனுயித்யாதி.) "இறந்ததும்நீயே" இத்யாதியைப்பற்ற (ஸ்வவ்யதிரிக்தேத்யாதி) (இவற்றுக்குவந்தவ்யஸநம்) என்றவிடத்திலே - "வ்யஸநேஷு மநுஷ்யாணாம்" (வ்யஸநேஷுமநுஷ்யாணும்) இத்யாத்யநுசந்தேயம். "அறிவொன்றும்சங்கிப்பன்" என்றத்தைப்பற்ற (அதிசங்கைபண்ணிறுனென்றது.) இவரிப்படியதிசங்கைபண்ணினுல் ஈஶ்வரன் செய்யநினைத்ததேதென்ன (குணஜ்ஞாநத்தாலே யித்யாதி) "பெரியவப்பனை" இத்யாதியைப்பற்ற (விஶ்ரம்பணீயத்வேத்யாதி.) "தாள்களையெனக்கே தலைத்தலைச்சிறப்பத்தந்த" என்றத்தைப்பற்ற (தானிவ்வளவாகவித்யாதி.)

இப்படியவன் குணங்களிலே யதிசங்கைபண்ணிருண்டோவென்ன (க்யாத இத்யாதி,) "க்யாத: ப்ராஜ்ஞ: க்ருதஜ்ஞஶ்ச ஸாநுக்ரோஶஶ்ச ராகவ: । ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோஶ: ஶங்கே மத்பாக்யஸங்க்ஷயாத்" (க்யாத:ப்ராஜ்ஞ:க்ருதஜ்ஞஶ்சஸாநுக்ரோஶஶ்சராகவ: । ஸத்வ்ருத்தோநிரநுக்ரோஶஶ்ஶங்கேமத்பாக்யஸங்க்ஷயாத்) இதிஸுந்தரகாண்டே ஸீதா. அநுக்ரோஶம் - தயை. காரியங்கொள்ளவுமறியாதேயென்றது - ஆபிமுக்யம்பண்ணி யுஜ்ஜீவிக்கவு மறியாதேயென்றபடி. "க்யாத" இத்யாதியாலே-குணங்களெல்லாவற்றையும்சொல்லி, "நிரநுக்ரோஶ: ஶங்கே" (நிரநுக்ரோஶஶ்ஶங்கே) என்று க்ருபையொன்றிலு மதிசங்கித்தது - மற்றையவற்றுக்கு முபலக்ஷணம். "மத்பாக்யஸங்க்ஷயாத்" (மத்பாக்யஸங்க்ஷயாத்) என்றாப்போலே இவருமருளிச்செய்த துண்டோவென்ன (அறிவொன்றுமித்யாதி.)........................................................................................*



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## எட்டாம்பத்து.

### முதற்றிருவாய்மொழி.

### முதற்பாட்டு.

தேவிமாராவார்திருமகள்பூமியேவமற்றமரராட்செய்வார்
மேவியவுலகமூன்றவையாட்சிவேண்டுவேண்டுருவநின்னுருவம்
பாவியேன்றன்னையடுகின்றகமலக்கண்ணதோர்பவளவாய்மணியே
யாவியேயமுதேயலைகடல்கடைந்தவப்பனேகாணுமாறருளாய்.

#### ஆறாயிரப்படி.

லக்ஷ்மீபூமி நீளாநாயகனாய், * சேஷசேஷாஸந கருடப்ரமுக நாநாவிதாநந்த பரிஜந பரிசாரிகா பரிசரித சரணயுகளனாய், நிகிலபுவந நிர்மாணத்ராண ஸம்ஹாராதிலீலனாய், ஆஸ்ரித பரித்ராணார்த்தமாக விச்சாநுகுண விக்ரஹனாய், ஸ்வஸௌந்தர்யஹ்ருதாசேஷ மநோநயந கமலதளாயதலோசநனாய், அத்யுஜ்ஜ்வல வித்ரும ஸமாநவதநனாய், நீலரத்நஸத்ருஶ திவ்யரூபனாய், எனக்கு தாரகனாய், போக்யனாய், ப்ரணதஜநஸமீஹித நிர்வர்த்தநைக ஸ்வபாவனாயிருந்த வுன்னைக்காணுமாறருளா யென்கிறார்.......................................................................*

#### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், நிரவதிகவிபூதியுக்தனாய், விஶ்லேஷத்தில் தரியாதபடிபண்ணும் போக்யதையையுடைய வுன்னைநான் காணும்படி யிரங்கவேணுமென்கிறார்.

தேவிமார்-உன்னழகுக்கும் பெருமைக்குந் தகுதியானதேவிமார். ஆவார்-ஆவார். திருமகள் - உனக்குநிரதிசயசம்பத்ரூபையானலக்ஷ்மியும். பூமி-சமஸ்தவிபூத்யபிமாநிநியான பூமியும். மற்று-அதுக்குமேலேபின்னையும். இவர்களோடேகூடவிருக்கிறநீ, ஏவ - "க்ரியதாமிதிமாம்வத" (க்ரியதாமிதிமாம்வத) என்கிறபடியேநியோகிக்க. ஆட்செய்வார்-கைங்கர்யம்பண்ணுவார்கள். அமரர்-நித்யஸூரிகள். மேவிய-உன்னுடைப்ருதக்ஸித்தமாம்படிபொருந்தி. மூன்றவை-ப்ரதாநபுருஷகாலாத்மகமான த்ரைவித்யத்தையுடைய. உலகம்-லோகங்கள். ஆட்சி - ஆஜ்ஞாநுவிதாயிகள். வேண்டு - அவற்றினுடைய ரக்ஷணார்த்தமாக தத்ததவஸ்தோசிதமாயும். வேண்டு-ஸ்வாபிமதமுமாயுமிருக்கிற. உருவம்-ரூபங்கள். நின்-உனக்கு. உருவம்-அசாதாரண

ரூபங்கள். இந்த வுபயவிபூதி நிர்வஹணத்தைக்காட்டினவளவன்றியே, பாவியேன் றன்னை-இவ்வாகாரத்தை யநுபவிக்கப்பெறாத பாபத்தையுடையவென்னை. அடுகின்ற-முடிப்பாரைப்போலேநலிகிற. கமலம் - நிரதிசயபோக்யமான தாமரைபோன்ற. கண்ணது-கண்ணும். ஓர்-அத்விதீயமான. பவளம் - பவளம்போன்ற. வாய் - அதரசோபையையுமுடைத்தான. மணியே - நீலரத்நம்போலே தர்ஶநீயனாய். ஆவியே-வ்யதிரேகத்தில் தரிக்கவொண்ணாதபடி ப்ராணபூதனாய். அவ்வளவன்றியே, அமுதே-அழிந்தசத்தையையுண்டாக்கு மநவரதபோக்யமானவம்ருதமாய், அர்வாசீநாம்ருதத்தி லபேக்ஷையுடையார்களுக்கும். அலைகடல்கடைந்த-அருந்தொழில்செய்து கொடுக்கும். அப்பனே-அதிசயிதோபகாரகனானவனே. அப்படி ஆயாசிக்கவேண்டாதபடி, காணுமாறு - கண்டநுபவிக்கும்படியாக. அருளாய் - க்ருபைபண்ணியருளவேணும் ....................................................................*

## ஈடு - முதற்பாட்டு.

பிரிவில் தரிக்கவொண்ணாதபடி நிரதிசயபோக்யனானநீ, உன்னை நான்காணும்படி க்ருபைபண்ணி யருளவேணுமென்கிறார்.

(தேவிமாரித்யாதி) "நகஶ்சிந்நாபராத்யதி" (நகஶ்சிந்நாபராத்யதி) என்பாருமருகேயிருக்க, எனக்கு க்லேசப்படவேண்டுகிறஹேது வென். [மித்ரமௌபயிகம்] [மித்ரமௌபயிகம்] ராவணன்பிராட்டி திருமுன்பேநின்று சிலவற்றை ஜல்பிக்கப்புக்கவாறே; ப்ரஜைநலிந்ததென்னாத்தாய் சீறுளிறே ஜநநியானமுறையாலே, அவனநர்த்தங்கண்டு ஹிதமருளிச்செய்கிறாள். "அவர்திருவடிகளிலேசரணம்புகு" என்றால், அவன் தாழ்வாகநினைத் திசையானென்னுமத்தாலே - தோழமைக்கொள்ளென்கிறாள்; அவர் "மித்ரபாவேந" (மித்ரபாவேந) என்பர், இவள் "மித்ரமௌபயிகம்" (மித்ரமௌபயிகம்) என்னும். அவ்வருகுபோனாலும் பரமசாம்யாபத்தியிறேகொடுப்பது. எனக்கு சத்ருவாயிருப்பாரோடுறவுபண்ணவேண்டுகிற தென்னென்னுமே [ஸ்தாநம்பரீப்ஸதா] [ஸ்த்தாநம்பரீப்ஸதா] கெடுவாய், வழிபறிப்பார்க்கும் தறையிலே கால்பாவிநின்றுகொள்ளவேணுமே. உன்குடியிருப்பை யாசைப்பட்டாயாகி லித்தனையுஞ்செய்யவேணும். எனக்கொருகுடியிருப்பும் வேணுமோ, ஆகாசசாரிகளாயன்றோவிருப்பது நாங்களென்று அவனுக்கு நினைவாக [வதம்சாநிச்சதா] [வதம்சாநிச்சதா] அவரம்புக ளாகாசத்திலே நடவாதோ. [கோரம்] [கோரம்] உன்னைச் சிங்கவிளக்கெரித்துக்கொல்லாதே நற்கொலையாகக் கொல்லும்போது மவரைப்பற்றவேணுங்காண். [த்வயா] [த்வயா] பல சொல்லியென், உனக்கவர்வேணும். [அஸௌ] [அஸௌ] அவர்படியுனக்குத்தோற்றுகிறதில்லையோ. உருவுவெளிப்பாட்டாலே முன்னிலையிவளுக்கு, அச்சத்தாலே முன்னி லையாகத்தோற்றுமவனுக்கு. தீரக்கழிய வபராதம்பண்ணி நிற்கிறவென்னைக் கைக்கொள்ளுவரோவென்ன [புருஷர்ஷப:] [புருஷர்ஷப:] நீசெய்தவற்றை யொன்றாக நினைத்திருப்பாரோ

ருவால்லர், புருஷோத்தமர்காண். (தேவிமாராவார் திருமகள்பூமி) அவர்கள்புருவம் நெளிந்தவிடத்தேயுனக்குக் காரியஞ்செய்யவேண்டும்படி வல்லபைகளாயிருக்கிற பெரியபிராட்டியாரு மாண்டாளாரும் "நகஶ்ஜி ஞாவஶாயஹ்தி" (நகஸ்சிந்நாபராத்யதி) என்று பொறைக்கு வாத்தாயிருக்குமொருத்தி, "பொறுப்பதெத்தை, குற்றந்தானுண்டோ" என்று அந்தப்பொறைவிளையும் பூமியாயிருக்குமொருத்தி. அவர்களருகேயிருக்க எனக்கிழக்கவேண்டுகிறதென் (ஏவ) கைங்கர்யந்தானுத்தேஶ்யமானவோபாதி ஏவிக்கொள்ளுகையு முத்தேஶ்யமென்கை; "கிரயதாமிதி மாம்வத;" (க்ரியதாமிதிமாம்வத;) மின்னிமுழங்கி வில்லிட்டுவர்ஷிக்கும் மேகத்வநிபோலே, கம்பீரமாயிறே திருமிடற்றோசைதானிருப்பது. (மற்றமரராட்செய்வார்) இச்சேர்த்தியில்கிட்டி நின்றடிமைசெய்வார் நித்யசூரிகள். மற்றென்பது - துல்யவிகல்பத்தையாயிற்று. திருமுலைத்தடத்திலே யணைந்தால் பிராட்டிமார்க்குண்டான வினிமையிச்சேர்த்தியிலே கைங்கர்யம்பண்ணப்பெறுகையாலே யிவர்களுக்கு முண்டாம்; "ரமமாணாவநேஷ்வதஃ" (ரமமாணுவநேத்ரயஃ) என்கிறபடியே. ஸ்வரூபாநுரூபமாயிறே சுகங்களிருப்பது. பெருமாளுக்கும் பிராட்டிக்கு மந்யோந்ய ஸம்ஶ்லேஷத்தால் பிறக்கும்ரஸம், இருவருமான சேர்த்தியைக்காண்கையாலே பிறக்கு மிளையபெருமாளுக்கு. (அமரராட்செய்வார்) "வேதம்வல்லார்களைக்கொண்டு" என்கிறபடியே அவர்களும் புருஷகாரபூதராயிறே யிருப்பது. பிராட்டிமாரு மருகேயுண்டாய், "மற்று" என்று அவர்களோடொக்க விகல்பித்துச் சொல்லலாம்படியான நித்யசூரிகளுமுண்டானாலும், ஐஸ்வர்யத்திலே குறையுண்டாகில் கார்யஞ்செய்யவொண்ணாதிறேயென்னில் (மேவியவித்யாதி) கீழும்மேலும் நடுவுமான லோகங்களைச்சொல்லுதல், த்ரிவிதசேதநரையுஞ்சொல்லுதல். (மேவிய) லோகத்துக்கிவன் ரக்ஷகனென்றால் தகும்படியிருக்குமென்னுதல், ராஜ்யந்தான்பொருந்தியிருக்குமென்னுதல். [த்ரைலோக்யமபிநாதேநயேநஸ்யாந்நாதவத்தரம்] [த்ரைலோக்யமபிநாதேநயேநஸ்யாந்நாதவத்தரம்] த்ரைலோக்யத்தையும் கையடைப்பாக்கினாலும், ரக்ஷ்யம்சுருங்கி ரக்ஷகத்வப்பாரிப்பே விஞ்சியிருக்கும். (வேண்டுவேண்டுருவம் நின்னுருவம்) அவ்வோரக்ஷணத்துக்கு வேண்டினவேண்டினவென்னுதல், * இச்சாக்ருஹீதமென்னுதல், ஆஶ்ரிதருகந்தவற்றையே தனக்குத் திருமேனியாகக்கொள்ளுமென்னுதல். (பாவியேன்றன்னை) புருஷகாரமுமுண்டாய், விபூதியையுமுடையனாய், ஆஶ்ரிதாதீநமான விக்ரஹத்தையு முடையனாயிருக்க, இழக்கைக்கடியான பாபத்தைப்பண்ணினவென்னை. அந்தகார்ஹஸ்த்யத்துக்குப் புறம்பாவேனேயென்கிறார். (அடுகின்ற) முடிகின்ற. * உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்ணையுடையவனே. (பவளவாய்) "ஸவிலாஸஸ்மிதாதாரம்பிப்ராணம்முகபங்கஜம்" (ஸவிலாஸஸ்மிதாதாரம்பிப்ராணம்முகபங்கஜம்) என்கிற ஸ்மிதத்தையுடையவனே. (மணியே)

விடாயர்முகத்தே குளிர்நீர்வெள்ளத்தை வெட்டிவிட்டாப்போலே ப்ரமஹரமானவடிவையுடையவனே. இவைகிட! ரொனக்கு பாதகமாகிறது. (ஆவியே) ஒருவாயுவிசேஷமன்றிவர்க்குப்ராணன்; நாய்ச்சிமாரோடும் நித்யசூரிகளோடுங்கூடிக் கண்ணும்வாயும் வடிவுமாயாயிற் றிவருடைய வாவியிருப்பது. (அமுதே) தாரகமான ப்ராணனுய், போக்யவஸ்துவைப்புறம்புதேடவேண்டாதே போக்யமும் தானேயாயிருக்கை. போக்யமும் தானுனல் சாதித்துக்கொள்வாரிவரன்றிக்கே உபாயமும் தானேயாயிருக்கை (அலைகடல்கடைந்தவப்பனே) ப்ரயோஜநாந்தரபரர்க்கு மரியன செய்தபேக்ஷிதங்களைச்செய்யு முபகாரகனே. உமக்குச்செய்யவேண்டுவதென்னென்ன (காணுமாறருளாய்) எனக்குக் கடல்கடையவேண்டா, அவ்வடிவைக்காட்டவமையும். வடிவைக்காண்கை-ப்ராப்யம், அருள்-ப்ராபகம். "ப்ராப்யப்ராபகங்கள் நீயே" என்றிருப்பார்காரியஞ் செய்யலாகாதோ ......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (தேவிமாரித்யாதி.) "அமுதே - காணுமாறருளாய்" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (பிரியிற்றரிக்க வித்யாதி.)

பிராட்டிமாரைச்சொன்ன வநந்தரம், "காணுமாறருளாய்" என்றதுக்குபாவம் (நகஸ்சிதித்யாதி.) புருஷகாரத்தினுறைப்பைக்காட்டுகிருர் (மித்ரமித்யாதி) ஸ்லோகாவதாரிகை (ராவணனித்யாதி) ப்ரதிகூலனுனவனுக்கு ஹிதஞ்சொல்லுவானென்னென்ன (ப்ரஜையித்யாதி) மேலே "ஶரணாகதவத்ஸலஃ" (ஶரணுகதவத்ஸலஃ) என்னுமவள். ஶரணம்புகு என்னுதே, "மித்ரம்-கர்த்தும்-ஔபயிகம்" (மித்ரம் - கர்த்தும் - ஔபயிகம்" என்பானென்னென்ன (அவர்திருவடிகளிலேயித்யாதி) தங்கள்ஸ்வபாவத்தாலும் சொல்லுகிருளென்று பரிஹாராந்தரம் (அவர் மித்ரபாவேநேத்யாதி) அதாவது -"மித்ரபாவேந" (மித்ரபாவேந) என்னுமவரபிப்ராயத்தை யறிந்து. "மித்ரமௌபயிகம்" (மித்ரமௌபயிகம்) என்னுமென்றபடி. தங்களோடு சமராகநினைத்திருப்பர்களென்கைக்கு. இவர்கள் சாம்யாபத்திப்ரதரோவென்ன (அவ்வருகித்யாதி) "ஸ்த்ரைணம்பரீப்ஸதா" (ஸ்த்ராணம்பரீப்ஸதா) என்றதுக்கவதாரிகை (எனக்கித்யாதி) கொள்ளவேணுமே - பறிக்கவேணுமே. சிங்கவிளக்கெரிக்கை - தலையிலே சாணியைவைத்து விளக்கேற்றுகை, வாலிலேபந்தங்கட்டி யெரிக்கையும். ராவணனைப்பார்த்து "அஸௌ" (அஸௌ) என்று காட்டுகிறவளுடைய பாவம் (அவர்படியித்யாதி) அவரசந்நிஹிதராயிருக்க, "அஸௌ" (அஸௌ) என்று முன்னிலையாகத் தோற்றக்கூடுமோவென்ன (உருவித்யாதிவாக்யத்வயம்.) "திவுக்ரீடாவிஜிகீஷா" (திவுக்ரீடாவிஜிகீஷா) இத்யாதி தாதுவாலே க்ரீடாவதிகளென்றுய். (வல்லபைகள்) என்கிருர். பலிதம் (நகஸ்சிதித்யாதி வாக்யத்வயம்) உவாத்தாய் - உபாத்யாயனுய். இருவரையும் சொல்லுகிறதுக்குபாவம் (அவர்களித்யாதி)

கைங்கர்யமுத்தேஶ்யமானல் தாங்களேசெய்யவொண்ணுதோ, ஏவச்செய்யவேணுமோவென்ன (கைங்கர்யந்தானித்யாதி) அதாவது-பாரதந்த்ர்யம் ஸ்வரூபமாகையாலே, ஏவுகை ப்ராப்தமென்றபடி. அவனுடையமிடற்றோசை போக்யமா

கையாலு மேவவேணுமென்று பாவாந்தரம் (மின்னியித்யாதி) "திருமகள்பூமி" என்றவநந்தரம், "ஆட்செய்வார்" என்றதுக்குபாவம் (இச்சேர்த்தியித்யாதி) அல்யவிகல்பமாம்போது பிராட்டிமாருடைய சுகமிவர்களுக்குமுண்டோவென்ன (திருமுலைத்தடத்திலேயித்யாதி) உக்தத்துக்குப்ரமாணம் (ரமமாணு இத்யாதி) "த்ரயஃ-ரமமாணாஃ" த்ரயஃ - ரமமாணஃ) என்றதுக்குபாவம் (ஸ்வரூபேத்யாதி வாக்யத்வயம்) அமரரைச்சொன்னதுக்குப்ரயோஜநமேதென்ன (வேதமித்யாதி) யத்வா, "மற்று" என்று - அல்யவிகல்பத்துக்கு, போகத்தில் அல்யத்வத்தைக்கீழருளிச்செய்து, புருஷகாரத்வத்தில் அல்யதையாகபாவாந்தரம் (வேதமித்யாதி) என்னுதல்.

ஏதந்நியாமகம் (மற்றென்று அவர்களோடொக்க) என்ற மேலில்வாக்யம். "மேவிய" இத்யாதிக்கவதாரிகை (பிராட்டிமாருமித்யாதி) ரக்ஷகனென்றல்-ஆளுகிறவனென்றலென்றபடி. முந்தினவர்த்தத்தில், "மேவிய" என்றது - * ஆட்சிக்கு விசேஷணம். முந்தினவர்த்தத்துக்குப்ரமாணம் (த்ரைலோக்யமித்யாதி) "நாதவத்தரம்" (நாதவத்தரம்) என்றதுக்கர்த்தம் (த்ரைலோக்யத்தையுமித்யாதி)

"இச்சாக்ருஹீதம்" (இச்சாக்ருஹீதம்) என்ற த்விதீயார்த்தத்துக்கு, "வேண்டுவேண்டுருவம்" என்று - முழுச்சொல்லாய், எப்போதுமொக்கவேண்டின வுருவமென்றபடி. மூன்றுமர்த்தத்துக்கு, ஆஶ்ரிதர்வேண்டினரூபமே யுனக்குவேண்டின ரூபமாயிருக்குமென்றபடி.

"பாவியேன்" என்றதுக்கு - கீழில்பதங்களைக்கடாக்ஷித்தர்த்தம் (புருஷகாரமித்யாதி) "மேவிய" இத்யாதியைக்கடாக்ஷித்து, "பாவியேன்" என்றதுக் கர்த்தாந்தரம் (அந்தகார்ஹஸ்த்யேத்யாதி) "கமலக்கண்ணதோர்" என்றதுக்கர்த்தம் (உயிர்க்கெல்லாமித்யாதி) கீழெல்லாம் சொன்னவநந்தரம், "ஆவி" என்றதுக்கர்த்தம் (ஒருவாயுவித்யாதிவாக்யத்வயம்) "அலைகடல்கடைந்தவப்பன்" என்றதுக்கவதாரிகை (போக்யமுமித்யாதி) இப்பதத்தில் "உபாயமும்தானே" என்று தோற்றுகிறதோவென்ன (ப்ரயோஜநாந்தரபரர்க்கித்யாதி)

அத்தேவதைகளைப்பற்றத் தமக்கு வ்யாவ்ருத்தி யருளிச்செய்கிறார் (எனக்கியாதி) "காணுமாறு, அருளாய்" என்கிற பதத்வயபலிதபாவம் (வடிவையித்யாதி வாக்யத்வயம்) தேவதைகளில் தமக்குண்டான வ்யாவ்ருத்தியை யருளிச்செய்கிறாராதல், பலிதமாதல் (ப்ராப்யப்ராபகங்களித்யாதி)

"த்ரைலோக்யமபிநாதேந யேந ஸ்யாந்நாதவத்தரம் । அநேநஶ்ரேயஸா ஸத்யஸ்ஸம்யோஜ்யைவமஹீமிமாம்" (த்ரைலோக்யமபிநாதேந யேநஸ்யாந்நாதவத்தரம் । அநேநஶ்ரேயஸாஸத்யஸ்ஸம்யோஜ்யைவமஹீமிமாம்) இத்யயோத்யாகாண்டே தஶரதஃ. "ஸவிலாஸ" (ஸவிலாஸ) இத்யாதி பஞ்சமேம்ரே..........................................................................*

# இரண்டாம்பாட்டு.

காணுமாறருளாயென்றென்றேகலங்கிக்கண்ணநீரலமரவினையேன்
பேணுமாறெல்லாம்பேணிநின்பெயரேபிதற்றுமாறருளெனக்கந்தோ
காணுமாறருளாய்காகுத்தாகண்ணாதொண்டனேன்கற்பகக்கனியே
பேணுவாரமுதேபெரியதண்புனல்சூழ்பெருநிலமெடுத்தபேராளா.

## ஆறாயிரப்படி.

( காணுமாறருளாய் ) இப்படி, காணுமாறருளா யென்றென்றேக லங்கிக் கண்ணநீரலமரவினையேன், இதற்குமே லில்லையென்னும்படி யாசைப்பட்டாலும், உன்றிருநாமங்களையே சொல்லிக் கூப்பிடப்பெறுமிதுவோ வெனக்கருளுமருள். இங்ஙனன்றிக்கே, காணுமாறருளாய். காணவொண்ணுமோவென்னில்; காணவேணுமென்றபேக்ஷித்தார்க்கு, சக்ரவர்த்திதிருமகனும் ஸ்ரீவசுதேவர்திருமகனும்வந்துதிருவவதாரம்பண்ணியன்றோ வுன்னைக் காட்டிக்கொடுத்தருளிற்று, நெஞ்சாலேயநுபவிக்கலாம்படி யுன்னை யெனக்கு போக்யமாகத் தந்தருளின பரமோதாரனல்லையோ, மற்று மாசைப்பட்டாரெல்லார்க்கு முன்னை போக்யமாகக்கொடுக்குமவனல்லையோ,* மஹார்ணவாந்தர்நிமக்நமான ஜகத்தையெடுத்து ரக்ஷித்தருளின பரமகாருணிகனல்லையோ, காணுமாறருளாயென்கிறார்.......*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், "வேண்டுவேண்டுருவம் நின்னுருவம்" என்றுசொன்ன வவதார விக்ரஹபோக்யதையையநுசந்தித்து நான் க்லேஶியாதபடி கண்டநுபவிக்கும்படி க்ருபைபண்ணி யருளவேணுமென்கிறார்.

காணுமாறு - காணும்படி. அருளாய்-க்ருபைபண்ணவேணும். என்றென்று-என்று பலகாலுஞ்சொல்லி. கலங்கி - காணப்பெறாமையாலேகலங்கி. கண்ண-கண்ணினுடைய. நீர் - நீர். அலமர - பரவாநிற்க. வினையேன் - காணப்பெறாத பாபத்தையுடையேனான நான். உன்னை யாசைப்பட்டும் நீயாதரியாதவளவில், பேணும்-ஆத்மாத்மீயங்களையுமிழந்தும், பலகாலும் சரணம்புக்கும், மோஹித்தும், இப்படி ஆதரிக்கும். ஆறு - ப்ரகாரம். எல்லாம் - எல்லாம். பேணி - ஆதரித்து. அவ்வளவிலுங்கிடையாமையாலே, நின் - உன். பெயரே - திருநாமங்களையே. பிதற்றுமாறு-சொல்லிக்கூப்பிடும்படியாகவிறே. எனக்கு - எனக்குப்பண்ணின. அருள் - அருள். அந்தோ - ஐயோ!. ஆசாலேஶமுடையாரு மநவரதமநுபவிக்க, எனக்கிப்படி பலித்தது, ஆனபின்பு, காகுத்தா - ககுத்ஸ்த்த வம்ஶத்திலே பிறந்து காட்டோடு நாட்டோடு வாசியறக் காட்சிகொடுக்குமவனாய். கண்ணா - க்ருஷ்ணனாயவதரித்துப் பெண்பிறந்தாரெல்லாருங் கண்டநுபவிக்கும்படியெளியனாய். இவ்வளவன்றியே, தொண்டனேன்-சபலனான வெனக்கு. கற்பகம்-நீதானே யுன்னை ப்ரகாசிப்பித்த வௌதார்யத்தையுடையையாய். கனியே - அப்போதே நுகரவேண்டும்படி பக்வபலபூதனாய். பேணுவார் - ஆசையுடையார்க்கு. அமுதே - ஸத்தாஹேதுவான நித்யபோக்யமாய். பெரிய - அபர்யந்தமாய். தண் - சீதளமான. புனல் - ப்ரளயஜலத்திலே. சூழ் - அழுந்தின. பெருநிலம் - மஹாப்ருதிவியை. எடுத்த - எடுத்த. பேராளா - மஹாபுருஷனே. முழுகவுமீட்கவும்வேண்டா, காணுமாறு - நான்கண்டநுபவிக்கும்படி. அருளாய் - க்ருபைபண்ணியருளவேணும். ........................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

காணவேணுமென்று மிகவும் நோவுபட்டிருக்குமிருப்பேயோ என்றிறத்துச் செய்தருளப்பார்த்தது, நானிங்ஙன் படாமே யுன்னைக்காணும்படி க்ருபைபண்ணி யருளவேணுமென்கிறார்.

(காணுமாறருளாய்) ஒருகால் "காணுமாறருளாய்" என்றால், அப்போதே செய்யக் காணவிட்டால், "நாமே ப்ரவர்த்தித்துப் பெறுகிறோம்" என்றிருக்குமவரன்றே. வர்ஷதாரையாலல்லது தரியாத * சாதகம்போலே அவனருளே பார்த்திருக்குமவராகையாலே, திரியட்டும்"காணுமாறருளாய்" என்கிறார். (என்றென்றே) பலகாலும் வார்த்தையிதுவே. "புறம்பேயுமொருபுகலுண்டு" என்றிருக்கிலிறே யத்தைப்பற்றுவது. (கலங்கி) கலக்கமேயாயிற்றேறிவருவது; "ஜடிலம்ஸீரவஸநம்." (ஜடிலம்சீரவஸநம்.) (கண்ணநீரலமர) நிரம்பினவேரிகளுக்குப் பரீவாஹம்போலே, கலங்கினகலக்க முள்ளடங்காமல் கண்ணநீராய் ப்ரவஹியாநிற்கும். (வினையேன்) இதுக்குமுன்பிவ்வஸ்துவைக்காண வாசைப்பட்டாரில் கலங்கிக் கண்ணநீர்பாய்ந்தறிவாரில்லைகிடீர். "காணவேணும்" என்கிற வாசாலேஃமுடையார்க்குத் தன்னைக்காட்டி யவர்கள் கண்ணநீராயுந்துடைக்குமவனை யாசைப்பட்டுக்கிடையாதே, கண்ணுங்கண்ணநீருமாம்படியான பாபத்தைப்பண்ணினேன். (பேணுமாறெல்லாம்பேணி) பேணுகை - ஆசைப்படுகை. முதலிலே அயோக்யனென்றகன்று, "அவன் விரும்பாத நானுமென்னுடைமையு மெனக்குவேண்டா" என்று ஆற்றாமையாலே மடலெடுக்கையிலேகைவைத்து, பலபடியும்ப்ரபத்திபண்ணி, ப்ரணயரோஷம் தலையெடுத்துக் கிலாய்ப்பதுஞ் செய்தவிடத்திலும். (நின்பெயரோ பிதற்றுமாறருளெனக்கு) நீ யெனக்கருளப் பார்த்தபடி நின்பெயரோ பிதற்றுமாறாய்விட்டது. உன்னைப்பெறாத வ்யஸநத்தாலே யுன்னுடைய திருநாமங்களைச்சொல்லி யக்ரமமாகக் கூப்பிடும்படியோ நீயெனக்குப் பண்ணும் க்ருபை. நீசவிஷயங்களை யாசைப்பட்டுக் கூப்பிடுமது தவிர்ந்து நம்பேரைச்சொல்லிக் கூப்பிடும்படிபண்ணினோமாகி லினியென்னென்றிருக்கிறாயோ. சம்சாரிகளில் வ்யாவ்ருத்தியோவெனக்குவேண்டுவது, என்னபிமதம் பெறவேண்டாவோ. (வினையேன் பேணுமாறெல்லாம்பேணி) பேணுதல் - ஆசைப்படுதல். ஆசைப்படும்வழியெல்லாமாசைப்பட்டு. பலவழியுண்டோ ஆசைப்பாட்டிலென்னில்; உண்டு. வகுத்தவிஷயத்திலாசை, அபிமதவிஷயத்திலாசை. இவர்க்குவகுத்தவிஷயமபிமதமாயிருக்கும். வகுத்தவிஷயத்திலாசை க்ரமமாயிருக்கும், அபிமதவிஷயத்திலாசை வரம்பழிந்திருக்கும். வகுத்தவிஷயத்தி லாசைக்கு, அவனைக்கால்கட்டக்கிடைக்கும்; அதுவும் செய்தாரிறே, "நோற்றநோன்பு," "ஆராவமுது," "மானேநோக்கு," "பிறந்தவாறு," "உலகமுண்டபெருவாயன்," இவற்றிலே. அபிமதவிஷயத்திலாசைக்கு, அபிமதன்பாடேறத் தூதுவிடுகைதொடக்கமாக மடலெடுக்கை முடிவாகத்துணிகை; அவையுமெல்லாம் செய்தாரிறே, * அஞ்சிறையமடநாரை தொடக்கமாக, "மாசறுசோதி," "வைகல்பூங்கழிவாய்," "பொன்னுலகாளீர்" இத்யாதிகளிலே. இப்படி பேணுமாறெல்லாம் பேணியும், நின்பெயரோ பிதற்றுமாறே நீயெனக்கருளுமருளென்கிறார். (அந்தோ) உன்னைநீபிரிந்தறியா

ய், பிரிந்தாரைக் கண்டறியாய். நித்யசூரிகள் பிரிந்தறியார்கள், சம்சாரிகள் பிரிவறியார்கள்; இவ்வாற்றாமை யுடையேன் நானொருவனுமே யாயிற்று.

(காணுமாறருளாய்) திருவாறன்விளையையணித்தாக்குதல்,எனக்கவ்வளவும் கால்நடைதருதல் செய்யும்படிபண்ணாய். இப்படிநீரெங்கேயருளக்கண்டு நிர்ப்பந்திக்கிறீரென்ன (காகுத்தா) "ககுத்ஸ்த்தவம்ஶேவிமுகா:ப்ரயாந்தி." (ககுத்ஸ்த்தவம்ஶேவிமுகாஃப்ரயாந்தி.) [ரூபஸம்ஹநநம்] [ரூபஸம்ஹநநம்] ஸம்ஸ்த்தாநந்தன்னை. [லக்ஷ்மீம்] [லக்ஷ்மீம்] சமுதாயசோபையை. [ஸௌகுமார்யம்] [ஸௌகுமார்யம்] அநுகூலர்க்கு மடுத்துப்பார்க்கப்பொறாதிருக்கை. [ஸுவேஷதாம்] [ஸுவேஷதாம்] தாபஸவேஷம். [தத்ருஶுர்விஸ்மிதாகாரா:] [தத்ருஶுர்விஸ்மிதாகாராஃ] விஸ்மிதாந்தஃகரணராய்க்கொண்டு கண்டார்கள். ஆர்தானென்னில் [வநவாஸிந:] [வநவாஸிநஃ] படைவீட்டிலுள்ளார் காணப்பெறாதத்தைச்சருகிலைதின்று தூற்றிலே கிடந்தவர்கள் பெற்றார்கள். அது ஒருகாலமங்ஙனேசெய்து போனானாகி லதுகொண்டுவிளைக்கிறீரோவென்ன(கண்ணா) ருஷிகளுக்கேயன்றிக்கே, "தாஸாமாவிரபூத்" (தாஸாமாவிரபூத்) என்று இடைச்சிகளுக்கு மிடையர்க்குங்காட்டிற்றிலையோ; புறம்புதேடிப்போகிறதென். (தொண்டனேன் கற்பகக்கனியே) சப்தாதிவிஷயங்களிலே யந்யபரனாய், அவற்றிலே சபலனாய்த்திரிகிறவென்னை, அத்தைத்தவிர்த்துன்னை சர்வஸ்வதாநம்பண்ணினவனே. (பேணுவாரமுதே) நீயேவந்து மேல்விழாநின்றால் "அல்லோம்" என்னாதார்க்கு நிரதிசயபோக்யனானவனே. (பெரியவித்யாதி) ஆருன்னைப்பேண ப்ரளயங் கொண்டஜகத்தையெடுத்து ரக்ஷித்தது. ப்ரளயார்ணவம்சூழ்ந்தமஹாப்ருதிவியைஅதினின்றுமுத்தரித்த பெரியோனே. உன்னையாசைப்படுதல், ஆபத்தையறிவித்தல் செய்யமாட்டாத ஜகத்தையன்றோ ரக்ஷித்தது; நீயறிய வாபத்துண்டாமத்தனையன்றோ ரக்ஷிக்கவேண்டுவது. (பேராளா) ரக்ஷ்யத்தினளவல்லாத ரக்ஷகனுடையபாரிப்பு..........................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (காணுமாறித்யாதி) "பிதற்றுமாறருளெனக்கு - காணுமாறருளாய்" என்றவற்றைக் கடாக்ஷித் தவதாரிகை (காணவேணுமித்யாதி.)

மீளவும் "காணுமாறருளாய்" என்றது ஆற்றாமையி னதிசயமென்கிறார் (ஒருகாலித்யாதி.) எதுபோலேயென்ன (வர்ஷதாரையாலித்யாதி.) வீப்ஸைக்கு மவதாரணத்துக்கும் பாவம் (பலகாலுமித்யாதி.) வேறுவார்த்தையில்லையோவென்ன (புறம்பேயுமித்யாதி.) "காணுமாறருளாயென்றென்றேகலங்கி" என்றத்தாலே - ஆகிஞ்சந்யாநந்யகதித்வம் சொல்லுகிறது. இன்னகாலம் கலங்கியென்னாமையாலே (எறிவருவதென்றது.) கலங்குகை - துஃகப்படுகை. இப்படி கலங்கினாருண்டோவென்ன (ஜடிலமித்யாதி.) விஶ்லேஷமுண்டானால் கண்ணநீர்பாய்கிறதெல்லாருக்கும் ஸஹஜமாயிருக்க, தம்மை "வினையேன்" என்றுசொல்லுவானென

ன்னென்ன வருளிச்செய்கிருர் ( இதுக்குமுன்பித்யாதி. ) விவரணம் (காணவேணு மித்யாதி.) ஆசாலேஶமுடையார்க்கென்றது - ஸ்ரீகஜேந்த்ராழ்வான், ஸ்ரீகோபிமா ர்முதலானுரை.

“ பேணுமாறெல்லாம்பேணி- ” ஆசைப்படும்ப்ரகாரமெல்லாமாசைப்பட்டு. ப்ரகாரமேதென்ன ( முதலிலேயித்யாதி. ) “ எனக்கு - அருள் - நின்பெயரோபிதற் றுமாறு ” என்றந்வயித்தர்த்தம் ( நீயெனக்கித்யாதி. ) விவரணம் ( உன்னைப்பெ ருதவித்யாதி. ) ஹார்த்தபாவம் ( நீசவிஷயங்களையித்யாதி. ) இதுதானே போரா தோ வுமக்குபகாரமென்ன ( சம்சாரிகளிலித்யாதிவாக்யத்வயம். ) அபிமதமாவது-ஸாக்ஷாத்காரம்.

“ ஆறு ” என்றதுக்கு - கீழே, ப்ரகாரமாகச்சொல்லி, இங்கே, வழியென்ற ர்த்தாந்தரம் ( ஆசைப்படும் வழியித்யாதி. ) இவர்க்கிரண்டும் பிந்நமாயிருக்குமோ வென்ன ( இவர்க்கித்யாதி. ) த்விவிதவிஷயத்தி லாசைகளுக்கும் பேதமேதென்ன ( வகுத்தவிஷயத்திலித்யாதி. ) இவ்விரண்டும் தீரும்ப்ரகாரமேதென்ன ( வகுத்த விஷயத்திலாசைக்கித்யாதி. ) அன்றிக்கே, க்ரமமாயிருக்கும்படி யென்னென்ன(வ குத்தவிஷயத்தி லாசைக்கித்யாதி) என்னுதல். வரம்பழிந்திருக்கும்படி யென்னெ ன்ன ( அபிமதவிஷயத்திலித்யாதி. )

இப்படி சொன்னவிடத்திலு முதவாமையாலே விஷண்ணராகிறவருடைய விஷாதத்தை த்வேதாவருளிச்செய்கிருர் (உன்னைநீயித்யாதிவாக்யத்வயத்தாலே.) பிரிந்தாரைக் கண்டறியானேவென்ன (நித்யசூரிகளித்யாதிவாக்யத்வயம்.) ஆனபி ன்பு விஶ்லேஷவ்யஸந மெனக்கே யுள்ளதென்கிருர் ( இவ்வாற்ருமை யித்யாதி. )

அருளும்ப்ரகாரமேதென்ன ( திருவாறன்விளையித்யாதி. ) ககுத்ஸ்த்தவம்ஶ த்திலே பிறந்தால் அர்த்திகள் கார்யஞ்செய்யவேணுமோவென்ன ( ககுத்ஸ்த்தவம் ஶஇத்யாதி. ) “ 𑌨𑌿𑌰𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑍁𑌕𑌾𑌮𑍋𑌹𑌿 𑌨𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌕𑌨𑍍𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌯𑌚𑍍𑌛𑌮𑍇𑌮𑌾𑌪𑍍𑌰𑌣𑌯𑌂𑌵𑌿𑌹𑌾𑌸𑍀𑌃 । 𑌨𑌹𑍍𑌯𑌰𑍍𑌥𑌿𑌨𑌃𑌕𑌾𑌰𑍍𑌯𑌵𑌶𑌾𑌦𑍁𑌪𑍇𑌤𑌾𑌃 𑌕𑌕𑍁𑌤𑍍𑌸𑍍𑌥𑌵𑌂𑌶𑍇 𑌵𑌿𑌮𑍁𑌖𑌾𑌃𑌪𑍍𑌰𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 ” ( நிர்வேஷ்டுகாமோஸ்மிநரேந்த்ரகந்யாம் ப்ரயச்சமேமா ப்ரணயம்விபாங்க்ஷீ꞉ | நஹ்யர்த்திந꞉கார்யவஶாப்யுபேதா꞉ ககுத்ஸ்த்தவம்ஶேவிமுகா꞉ ப்ரயாந்தி ) இதி விஷ்ணுபுராணே மாந்தாதாரம் ப்ரதிகந்யார்த்தீ ஸௌபரி꞉. அப் படி. யாருக்குக் காட்டினே மென்ன ( ரூபஸம்ஹாரமித்யாதி ) ஆரண்யகாண்டே. “ நிலம் ” என்ற வசேதநசமாதிக்கு பாவம் ( ஆருன்னையித்யாதி. ) வாக்யவிவர ணம் ( உன்னையாசைப்படுதெலித்யாதி. ) பலிதம் ( நீயறியவித்யாதி. )

காணுமாறருளாயென்றென்றேயென்றுதொடங்கி, எனக்கு - அருள் - நின் பெயரோ பிதற்றுமாருய்விட்டது - அந்தோ - காகுத்தாவென்றுதொடங்கி, எடுத்த பேராளா - காணுமாறருளாயித்யந்வய꞉..............................................*

---

## மூன்றாம்பாட்டு.

---

எடுத்தபேராளனந்தகோபன்றனின்னுயிர்ச்சிறுவனேயசோதைக்
கடுத்தபேரின்பக்குலவிளங்களிறேயடியனேன்பெரியவம்மானே
கடுத்தபோரவுணனுடலிருபிளவாக்கையுகிராண்டவெங்கடலே
யடுத்ததோருருவாயின்றுநீவாராயெங்ஙனந்தேறுவருமரோ.

## ஆருயிரப்படி.

(எடுத்த) அயத்நேந நிதியெடுத்தாப்போலே யெடுத்தநுபவிக்கலாம்படி ஸ்ரீநந்தகோபர்க்கும், யசோதைப்பிராட்டிக்கும் பரமசுலபனாய், ஸ்ரீப்ரஹ்லாத ப்ரதிஜ்ஞாசமய ஸம்பூதனாய், தத்விரோத்யசுரநிரஸநோசித ஸ்ரீந்ருசிம்ஹரூபனாய், நகராங்குரகோடிவிதாரித தத்புஜாந்தரனாய், தத்விதாரணஹேதுபூத நிரவதிகாஶ்ரிதவாத்ஸல்ய மஹோததியா யிருந்துவைத்து, ஆஶ்ரிதனானவெனக்கரியையாயின்று நீவருகிறிலை; வாராதொழிந்தால், உன்னுடைய வாஶ்ரித வாத்ஸல்யகுணைக தாரகரான வாஶ்ரிதஜநங்களெங்ஙனே தரிக்கும்படி யென்கிறார்... ........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதபவ்யனாய்க்கொண்டு அநிஷ்டத்தை நிவர்த்திப்பிக்கும் நீ யென்னவஸ்த்தாநுரூபமாக வாராதவளவிலுன்னைப் பற்றினவர்களெங்ஙனே விஶ்வசிப்பரென்கிறார்.

எடுத்த - தரித்ரன் மஹாநிதியை யெடுத்தாப்போலே யுன்னை யெடுத்துக்கொண்ட. பேராளன் - பெரியவனான. நந்தகோபன்றன் - நந்தகோபனுக்கு. இன் - நிரதிசயபோக்யமான. உயிர் - ப்ராணனாய்க்கொண்டு. சிறுவனே - பவ்யனாயத்யந்த சைசவத்தையுடையனாய். தேவகியார்பிரிந்திருக்க, அசோதைக்கு - யசோதைக்கு. அடுத்த - வந்துகிட்டின. பேரின்பம் - "தொல்லையின்பத்திறுதி" என்கிறபடியே நிரதிசயாநந்தாவஹனாய். குலம் - அக்குலத்துக்கு. இளங்களிறே - ஆனைக்கன்றுபோலே செருக்கனாய் வர்த்திப்பானாய். தாயுந்தமப்பனுமாக நினைத்திராதே, அடியனேன் - அடியேனானவெனக்கு. பெரிய - உன் பெருமையெல்லாங்காட்டி யெட்டாதிருக்கும். அம்மானே - ஸ்வாமியாய். ப்ரபலமாய், கடுத்தபோர் - யுத்தகண்டூதி விஞ்சியிருக்கிற. அவுணன் - ஹிரண்யாசுரனுடைய. உடல் - சரீரம். இருபிளவா - இரண்டுபிளப்பாம்படி. கை - கையில். உகிர் - உகிரை. ஆண்ட - பரிகரமாகவுடையையாய் - எங்கடலே - இப்படியாஶ்ரிதவிஷயவாத்ஸல்யத்துக்கு ஜலதியானவனே. நீ, அன்றுபோலே, இன்று - இன்றும். அடுத்தது - அநுரூபமான. ஓர், உருவாய் - வடிவைக்கொண்டு. வாராய் - வருகிறிலை. ஒருவிஷயத்திலுதவாதிருந்தால், உமர் - உன்னைத்தஞ்சமென்றிருப்பார். எங்ஙனம் - எங்ஙனே. தேறுவர் - விஶ்வசிப்பர்.

ஒன்றேயொன்றடுத்த ரூபமென்று - நரசிம்ஹரூபமாகவுமாம்..............*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

ஆஶ்ரிதசுலபனாயிருக்கிற நீ யின்றுவந்தென்னுபத்தை நீக்காதொழியில், உன்குணமே ஜீவநமாயிருக்கிற வாஶ்ரிதருன்னை யெங்ஙனே விஶ்வசிக்கும்படி யென்கிறார்.

(எடுத்தபேராளன்) நிதியெடுத்துக்கொண்டாப்போலே யுன்னை யெடுத்துக்கொண்ட பாக்யாதிகன். இருவருமொக்க நோன்புநோற்க, அவர் பெற்று முகத்திலே விழிக்கப்பெறாதே போரவிட்டிருக்க, நிதியெடுத்தாப்போலே யெடுத்து புத்ரமுகங்கண்டவரிறே. முன்பு ரிக்தனாய்ப்போந்தவன் கனக்க ஜீவிக்கப்புக்கவாறே, "இவனெடுப்பெடுத்தான்" என்பர்

களிறே. (பேராளன்) பெரியோன். அவன்பெருமையோபாதியும் போரு ங்கிடீ! சென் சிறுமையும். "நீமகனாகவேணும்" என்பார்க்கோர்முகங்கா ட்டலாவது. ஸ்ரீநந்தகோபருடைய நற்சிவன் கண்ணுக்குத்தோற்ற வொ ருவடிவுகொண்டு திரிகிறவித்தனை. ( அசோதைக்கடுத்த ) ஒக்கநோற்கச் செய்தேயும் க்லேசம் மிக்கிருக்குமிறே, உடம்புநொந்து பெற்றவளாகை யாலே; இவள் ப்ரஸவவேதனை யநுபவியாதிருக்கப்பெற்றுக் கொடுநின் றருளித்தனை. கிட்டிக்கொண்டுநிற்கக் கண்டதித்தனை; "[Grantha text] " (ததர்ஸசப்ரபுத்ராஸாயஸோதாஜாதமா த்மஜம்.) (பேரின்பம்) நிரதிசயசுகத்தை விளைத்தவன். "தொல்லையின்ப த்திறுதிகண்டாளே" என்னும்படி யிவளுக்கு நிரதிசயாநந்தத்தை வி ளைத்தாளுயிற்று. * அந்தமில் பேரின்பத்தை * சிற்றின்பமாக்கினன். (கு லவிளங்களிறே.) இடைக்குலத்துக்கானைக்கன்றுபோலே ஶ்லாக்யமானவ னே. அபிஜாதமாய், பருவத்தாலே யாகர்ஷகமா யிருப்பதொருமத்தகஜ ம்போலே, யசோதைப்பிராட்டிக்குப் பிடிகொடாதேதிரியும்படி யென் னவுமாம். அகப்பட்டாலுமானைக் கன்றுபோலே யாயிற்றிருப்பது [ தறி யார்ந்தகருங்களிறே போலநின்று ] என்கிறபடியே - ஒருகம்பத்தோடே சேர்ந்தகளியானைபோலே யாயிற்றுக் கட்டுண்டுநிற்கும்போது மிருக்கும் படி. [தடங்கண்கள்பனிமல்கும்] இவள் "[Grantha text]" (யதிஶக்நோ ஷி) என்றால், பின்னையவனுக்குக் கண்ணநீர்பாய்கைக்கு மேற்படவில்லை சர்வசக்தியஶக்தனென்று தோற்றவிருக்கையிறே யிவள் நியமிக்க வல்ல ளாகிறது. [ தன்மையானே ] ஆஶ்ரிதரிட்டவழக்காகையே ஸ்வபாவமாகவு டையவனே. (அடியனேன் பெரியவம்மானே) உன்னை "மகன்" என்றிரு ப்பார்க்கோர் வுதவலாவது, முறையுணர்ந்திருப்பார்க்குதவலாகாதோ. நா ன் முறையிலே நின்றவாறே நீயும் முறையிலே நில்லாநின்றாய் -" அடி யேன்" என்றுநான்சொல்ல, நீஈஶ்வரனாயிராநின்றாய். (கடுத்தவித்யாதி) யுத்தகண்டூதியையுடையனான ஹிரண்யாசுரனுடலை யிரண்டுபாதியாம் படி. (கையுகிராண்ட) "படையாண்டான்" என்னுமாபோலே. (எங்க டலே) "[Grantha text]" (மஹாவிஷ்ணும்) என்னும்படி பெரியகிளர் த்தியோடேவந்து ப்ரஹ்லாதனுக்குதவினவது தம்பேறாயிருந்தபடி. (அ டுத்ததோருருவாய்) இவனெங்கேகாட்டப்புகுகிறா னென்றறியாமையா லே யெங்குமொக்கச் சினைத்துக்கொடு நின்றான். ஒன்றையறுதியிட்டுத் தோற்றப்பற்றாதபடி யவன்மிகைக்கையாலே அப்போதைக்கு யோக்யமா னவடிவைக்கொண்டு. "[Grantha text]" (நரஸ்யார்த்ததநும்க்ருத்வாஸிம்ஹஸ்யார்த்ததநும்ததா) என்கி றபடியே அவன் வரத்திலேயகப்படாத வடிவைக்கொண்டு. பதற்றத்தா லே ஒன்றினுடலையு மொன்றின்தலையையும் சேர்த்துக்கொண்டு வந்தா னென்றுமாம். அடுத்ததோருருவாயாயிற்றுக்கடுத்த போாவுணனுடல்பி ளந்தது. (இன்றுநீவாராய்) அன்று மின்றுமாயிற்றுதவவேண்டுவது, அ

ன்றுதவினுய், இன்றுதவுகிறிலே. விபரீதஜ்ஞாநமுடையாற்குதவினுய், ய தாஜ்ஞாநமுடையாற்குதவினுய், இவ்விரண்டுகோடிக்கும் புறம்போநான். "மகன்" என்றுகலங்கினவனுக்குதவினுய், "ஊதஸ்ஸர்வமஹம்ஸர்வ" (மத தஸ்ஸர்வமஹம்ஸர்வம்) என்னும் தெளிவுடையவனுக்குதவினுய், "என் றென்றேகலங்கி" என்கிறகலக்கமுடையவெனக்கேயோ வுதவலாகாதது. நீவாராதொழிந்தாலும் ஜீவிக்கவாசையுடையார்க்கேயிறே யுன்னைக்காற் கட்டவேண்டுவது. அதுகிடக்கிடீர், ஆனல் நீரோதுக்குப்படுகிறீரென்ன (எங்ஙனம் தேறுவருமரோ) இவ்வளவில் நீமுகங்காட்டாவிட்டால், உன் குணஜ்ஞாநத்தாலே ஜீவிக்குமவர்கள் பிழைப்பர்களோ. "உன்குணங்க ளேதஞ்சம்" என்றிருக்கிறவர்களெங்ஙனே யுன்னைவிப்ரவஸிக்கும்படி யெ ன்னுதல்... ................ ...... ..........................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு (எடுத்தவித்யாதி) "நந்தகோபன்றனின்னுயிர்ச்சிறுவனே" என்றுதொடங்கி, "இன்றுநீவாராயெங்ஙனம் தேறுவருமரோ" என்கிறவற்றைக்க டாக்ஷித்தவதாரிகை (ஆஸ்ரிதேத்யாதி)

"எடுத்த" என்றதுக்குபாவம் (நிதியெடுத்தித்யாதி) இருவரும் நோன்பு நோற்றிருக்க, இவளை "எடுத்தபேராளன்" என்பானென்னென்ன (இருவருமொ க்க வித்யாதி) "எடுத்த" என்றல்-நிதியெடுக்கையைச்சொல்லுமோவென்ன (மு ன்பித்யாதி) பெருமைசொன்னதுக்குபாவம் (அவன்பெருமையித்யாதி) அவன் - ந ந்தன், ஹார்த்தபாவம் (நீமகனுகவித்யாதி) "இன்னுயிர்ச்சிறுவன்" என்றதுக்குபா வம் (ஸ்ரீநந்தகோபருடையவித்யாதி.)

பெற்றப்ராப்தி யிருவர்க்கு மொத்திருக்க, "அசோதைக்கடுத்த" என்பா னென்னென்ன (ஒக்கநோற்கவித்யாதிவாக்யத்வயம்) "அடுத்த" என்றதுக்கர்த்தம் (கிட்டிக்கொண்டித்யாதி) இதுக்கு ப்ரமாணம் (ததர்ஸசேத்யாதி) "ததர்ஸ ச ப்ரபுத்தாஸா யஸோதா ஜாதமாத்மஜம்। நீலோத்பலதளஸ்யாமம் ததா த்யர்த்தம் முதம் யயௌ" (ததர்ஸசப்ரபுத்தாஸாயஸோதாஜாதமாத்மஜம் । நீலோத்பலதளஸ்யா மம்ததாத்யர்த்தம்முதம்யயௌ) இதிபஞ்சமேம்ஸே. அப்படிவிளைத்தானேவென்ன (தொல்லையித்யாதி) "பேரின்பம்" என்றதுக்கர்த்தம் (அந்தமிலித்யாதி) "குலம்" என்று - இடைக்குலமாதல், ஆபிஜாத்யமாய் களிறுக்குவிசேஷணமாதல். குலத்தி லே பிறந்த விளவானை என்திரண்டாமர்த்தத்துக்கு சப்தார்த்தம். திருமொழி பாசு ரமெடுக்கைக்கதிஷ்டிகை (அகப்பட்டாலுமித்யாதி) அகப்பட்டாலுமானைக்கன்று போலே யிருக்குமோவென்ன (தறியார்ந்தவித்யாதி) இப்பாசுரத்துக்கர்த்தம் (ஒரு கம்பத்தோடேயித்யாதி) களியானை -மதித்தவானை. களி - கர்வம். சர்வசக்தி யிப்ப டியிருக்கைக்குஹேதுவேதென்ன (சர்வசக்தீத்யாதி.)

அடியனுனவெனக்குப் பெரியனுயிருக்கிறவனே என்கிறவருடைய ஹார்த்த பாவம் (உன்னையித்யாதிவாக்யத்வயம்) "அடியனேன்" என்றவநந்தரம், "பெரி யவம்மானே" என்றதுக்குபாவம் (நான்முறையித்யாதி) கீழ்வாக்யவிவரணம் (அ டியேனென்றித்யாதி.)

"போரிலே - கடுத்த - அவுணன்" என்றந்வயித்து (யுத்தகண்டூதியையுடையனென) என்கிறார். "எம்" என்றதுக்கும், "கடல்" என்றதுக்கும்பாவம் (மஹாவிஷ்ணுமித்யாதி.) "உக்ரம்வீரம்மஹாவிஷ்ணும்ஜ்வலந்தம்ஸர்வதோமுகம்। ந்ருஸிம்ஹம்பீஷணம்பத்ரம் ம்ருத்யு ம்ருத்யும்நமாம்யஹம்" (உக்ரம்வீரம்மஹாவிஷ்ணும் ஜ்வலந்தம்ஸர்வதோமுகம் । ந்ருஸிம்ஹம்பீஷணம்பத்ரம் ம்ருத்யு ம்ருத்யும்நமாம்யஹம்) இத்யாநுஷ்டுபே. அடுத்தல் - சூழலாய், எங்கும் சினைத்திருந்த வடிவையுடையனுயென்று முந்தினவர்த்தம்; இத்தை யருளிச்செய்கிறார் (இவனெங்கேயித்யாதி.) சினைத்துக்கொடு - தழைத்துக்கொடு. "அடுத்ததோருருவாய்" என்றதுக்கு - யோக்யமான வடிவையுடையனுயென்றர்த்தாந்தரம் (ஒன்றையறுதியிட்டித்யாதி.) அடுத்துப்பிடித்தவுருவாய் என்று மூன்றுமர்த்தம் (நரஸ்யேத்யாதி.) விவரணம் (பதற்றத்தாலேயித்யாதி.) அன்றிக்கே, இரண்டாமர்த்த விவரணம் (நரஸ்யார்த்ததநுமித்யாதிவாக்யத்வயமும்.) இரண்டர்த்தமென்கையே ஸ்வரஸம்.

விவரணம் (மகனென்றித்யாதி.) மகனென்று கலங்கினவன் - நந்தகோபன். "எங்ஙனம் தேறுவர்" என்றதுக்கு சங்கதியாதல், "இன்றுநீவாராய்" என்கிறவருடைய ஹார்த்தபாவமாதல் (நீவாராதொழிந்தாலுமித்யாதி.)

ஸங்கதியானபோது, (அதுகிடக்கிடீர்) என்னுமளவுமேகவாக்யம். அதுகிடக்கிடீர் - "இன்றுநீவாராய்" என்னுமது கிடக்கிடீரென்றபடி. "உமர் - எங்ஙனம் தேறுவர்" என்கையாலே - தாம் நிராசரராகிறுரென்றது சித்தம். "தேறுவர்" என்று - தரிப்பரென்னுதல், விஶ்வஸிப்பரென்னுதல்.

"நரஸ்யார்த்ததநும்" (நரஸ்யார்த்ததநும்) இத்யாதி, மஹாபாரதே ஜந்மரஹஸ்யே. எடுத்தபேராளனென்று தொடங்கி, அடுத்ததோருருவாய் - கடுத்தபோரவுணனுடலிருபிளவாக்கை யுகிராண்டவெங்கடலே - இன்றுநீவாராய் - உமர் - எங்ஙனம்தேறுவரித்யந்வய:.............................................................*

---

# நான்காம்பாட்டு.

---

உமருகந்துகந்தவுருவநின்னுருவமாகியுன்றனக்கன்பரானு
ரவருகந்தமர்ந்தசெய்கையுன்மாயையறிவொன்றுஞ்சங்கிப்பன்வினையே
னமரதுபண்ணியகலிடம்புடைசூழடுபடையவித்தவம்மானே
யமரர்தமமுதேயசுரர்கணஞ்சேயென்னுடையாருயிரேயோ.

## ஆருயிரப்படி.

(உமருகந்து) ஆஶ்ரிதவிரோதி நிரஸநைக ஸ்வபோகனுய், ஆஶ்ரித பரமபோக்யனுய், ஆஶ்ரிதவிரோதிநாஶகத்வைக ஸ்வரூபனுய், எனக்கு தாரகனுயிருந்தவுன்னுடைய வாஶ்ரிதேச்சாதீந திவ்யாவதார திவ்யசேஷ்டிதத்வ ரூபமான வாஶ்ரிதவாத்ஸல்யகுணமொன்றுமே யெனக்குதாரகம்; நீவாராமையாலே, அதுவு மென்னுடையபாபத்தாலே பொய்யோவென்று சங்கியாநின்றேனென்கிறுர் ,,,........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதாநாஸ்ரிதவிஷயங்களி லநுகூலனுமாய் ப்ரதிகூலனுமாயி ருக்கையாலே, உன்னுடைய ரூபகுணசேஷ்டிதங்க ளாஸ்ரிதாதீநமென்று நினைக்கி றவறிவு சங்கநீயமாகாநின்றதென்கிறார்.

அது-தூத்யாதிமுகத்தாலே லோகப்ரசித்தமான. அமர்-யுத்தத்தை. பண்ணி-உண்டாக்கி. அகல்-விஸ்தீர்ணையான. இடம்-பூமியினுடைய. புடை-பரிசரமெங்கும். சூழ்-சூழ்ந்திருப்பதாய். அடு-கொலையிலே யுத்யுக்தையான. படை-சேனையை. அவித்த-நிஸ்ஸேஷமாக நஸிப்பித்த. அம்மானே-ஸ்வாமியாய். பூமியளவன்றியே, அமரர்தம் - அநுகூலரான தேவர்களுக்கு. அமுதே-அதிசயிதபோக்யமாய். அசுரர்கள்-ப்ரதிகூலரானவசுரர்களுக்கு. நஞ்சே-ப்ராணவிநாசஹேதுவான நஞ்சாய். உபயாகாரத்தாலும், என்னுடை-எனக்கு. ஆருயிரே-தாரகனுனவனே. உமர்-உனக்கசாதாரண சேஷபூதரானவர்கள். உகந்துகந்த-எப்போதுமுகந்த. உருவம்-ரூபமே. நின்-உனக்கு. உருவமாகி-ரூபமாய். உன்றனக்கு-அவ்வடிவிலே. அன்பரானவர் - அன்பையுடையரானவர்கள். உகந்து-ஆதரித்து. அமர்ந்த-அநந்யப்ரயோஜநமாக. செய்கை-அடிமைசெய்கைக்கீடாயிருக்கிற. உன்-உன்னுடைய. மாயை-ஆஸ்சர்யசேஷ்டிதங்களை. அறிவு-அறியும். ஒன்றும்-இதொன்றையுமகப்பட. சங்கிப்பன்-சங்கியாநிற்பன். வினையேன்-தஞ்சமாகநினைத்திருக்கு மர்த்தத்திலே சங்கைபிறக்கும்படியான பாபத்தையுடையநான். ஓ - ஓ என்று-தம்மிழவுதோன்ற வருளிச்செய்கிறார் ......*

## ஈடு - நான்காம்பாட்டு.

"உன்னை யாஸ்ரிதரிட்டவழக்காக்கிவைப்புதி" என்னு மறிவொன்றுலுமே தரித்திருக்கிறநான், அதுவும் பொய்யோவென்று சங்கியாநின்றேனென்கிறார்.

(உமருகந்துகந்தவுருவம்நின்னுருவமாகி) உனக்கசாதாரணராயிருப்பார் மாறுதே யுகந்தவடிவை யுனக்குத் திருமேனியாகக்கொள்ளுவுதியென்னுதல், உனக்கு நல்லராயிருக்குமவர்க ளுகந்தத்தாலே நீயுகந்து அதுனக்கு வடிவென்னுதல். "யெயமாகாஂஷ௱ வஷ௱ெ தெ தாஂஸ்தெயெவ ஹஜாஂ௱ஹஂ" (யேயதாமாம்ப்ரபத்யந்தேதாம் ஸ்ததைவபஜாம்யஹம்) என்னுமாபோலே. "தமருகந்ததெவ்வுருவம்" இத்யாதி. (உன்றனக்கன்பரானவர் உன்பக்கல் ப்ரேமபரவசராயிருக்குமவர்கள். (உகந்து) அத்யாதரத்தைப்பண்ணி. (அமர்ந்தசெய்கை யுன்மாயை) ப்ரயோஜநநிரபேக்ஷமாகக் கிட்டவேண்டும்செயல்கள், உன்னுடைய வாஸ்சர்யசேஷ்டிதங்கள். (அறிவொன்றும்சங்கிப்பன்) இந்தவொருகுணத்தையும்பற்றின வறிவாயிற்றிவர்க்கு சத்தாஹேது; அதிலேயாயிற் றிப்போதிவர்க்கதிசங்கை வர்த்திக்கிறது. (வினையேன்) நானொருவன் கண்ணுஞ்சுழலையிட் டதிசங்கைபண்ணுங்காட்டில், ஸ்வரூபாநுபந்திகுணங்களில்லையாகாதிறே; அதிலேயதிசங்கைபண்ணுகிறது நான்பண்ணினபாபமிறே; "வ்யாதவ்யா ஜகேஜதஜஸ்வா நசெஜாஸுஸாவவ: । ஸவ்ஜெதாநிரநசெஜாஸ

ஞ்ஞாமேஹா ராமஹஷீக்ஷயாசு" (க்யாதஃப்ராஜ்ஞஃக்ருதஜ்ஞஶ்ச ஸாநுக்ரோஶஶ்ச ராகவஃ|ஸத்வ்ருத்தோநிரநுக்ரோஶஶ்ஶங்கேமத்பாக்யஸங்க்ஷயாத்) இப்படிப்பட்ட குணங்களுடையவர்க்கு நானதிசங்கைபண்ணுங்காட்டிலவையில்லையாகிற தன்றிறே, நான் சங்கிக்கைக்கடி யென்பாக்யஹாநியென்றருளிறே.

(அமரதுபண்ணி) ஆஶ்ரிதபக்ஷபாதியென்னு மிடத்துக்குதாஹரணங்காட்டுகிறார். அந்தவமரைப்பண்ணி. மஹாபாரதமிறே. பூமிப்பரப்படைய நெளியும்படியிறே வந்துசூழ்ந்துகொண்டது. (சூழுபடை) சர்வதோதிக்கமாகச் சூழ்ந்துகொண்டு கொல்லவந்தசேநையையவித்த. துர்வர்க்கமடையக் காட்டுத்தீக்கிளர்ந்தாப்போலேகிளர்ந்து, "ஸாரதி, ஸாரதி" என்று வாய்பாறிக்கொண்டுவந்துதோற்ற, அவர்கள்கிளர்த்தியையவித்தானுயிற்று. "மழைகொலோவருகின்றது" என்றுசொல்லுகிற க்ருஷ்ணனுகிற காளமேகமிறே யேறியவித்தது. (அம்மானே) சர்வஸ்வாமியாயிருந்துவைத்து ஆஶ்ரிதபக்ஷபாதத்தாலே அநாஶ்ரிதரையும் கிழங்கெடுத்துப் பொகட்டானித்தனே. (அமரர்தமமுதே) தேவர்களுக்காகவாசுர ப்ரக்ருதிகளோடே யம்பேற்றுப்பண்ணின வ்யாபாரங்களாலே அவர்களுக்கு நிரதிசயபோக்யனுயிருக்கும்படி. (அசுரர்கள்நஞ்சே) ஜந்மத்தாலே யசுரர்களாயும் ஸ்வபாவத்தாலே யசுரர்களாயு முள்ளவர்களுக்காற்றவொண்ணுத நஞ்சானவனே. (என்னுடையாருயிரேயோ) எனக்குஸத்தாஹேதுவானவனே. தேவர்களுக்கு போக்யனு யசுரவர்க்கத்துக்கு நஞ்சாயிருக்கிறவிருப்புத் தமக்குசத்தாஹேதுவாயிருக்கிறபடி... .........*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு. (உமரித்யாதி.) "உமருகந்துகந்தவுருவம்" என்றுதொடங்கி, "அறிவொன்றும் சங்கிப்பன் வினையேன்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (உன்னையித்யாதி.)

"உமருகந்துகந்தவுருவம்" என்கிற வீப்ஸைக் கிரண்டுபாவம் (உனக்கசாதாரணேத்யாதிவாக்யத்வயம்) எப்போது முகந்து போருகிறவென்று முந்தினபாவம்; விஷயவிபாகத்தாலே பேதத்தையங்கீகரித் திரண்டாம்பாவம். ஆஶ்ரிதருகந்தத்தையே திருமேனியாகக்கொள்ளுமோவென்ன, ப்ரமாணங்கள் (யேயதேத்யாதிவாக்யத்வயம்) கீதாஸுசதுர்த்தே. ப்ரயோஜந நிரபேக்ஷமாகக் கிட்டவேண்டும் செயல்களுன்னுடைய வாஶ்சர்யசேஷ்டிதங்களென்றது - அவர்கள் யாதொருசேஷ்டிதங்களை யுகப்பர்களோ, அந்த சேஷ்டிதங்களை யுடைத்தாயிருப்பா யென்றபடி.

இவ்வதிசங்கை அவனுமக்குதவாமையாலே வந்ததன்றேவென்ன (நானொருவனித்யாதி) கண்ணஞ்சுழலையிட்டு - ஆற்றுமையி னதிசயத்தாலே கண்சுழன்றென்றபடி. இப்படி யதிசங்கைபண்ணினருண்டோவென்ன (க்யாத இத்யாதி) "ஞாமேஹா ராமஹஷீக்ஷயாசு" (மத்பாக்யஸங்க்ஷயாத்) என்றதுக்கர்த்தம் (இப்படிப்பட்டவித்யாதி) விக்ரஹசேஷ்டிதங்கள்சொன்னது-ஸ்வரூபகுணங்களுக்கு முபலக்ஷணம்.

அவனுடையவிக்ரஹமும் செயலு மாஸ்ரீதாதீந மென்னுமதுக்கு நியாமகம்-பாரதசமரவ்ருத்தாந்தமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார். (ஆஸ்ரிதபக்ஷபாதி யித்யாதி.) “அந்த” என்கிற ப்ரசித்திக்குபாவம் (மஹாபாரதமிறேயென்று) “அகலிடம் புடைசூழ்” என்றதுக்கர்த்தம் (பூமிப்பரப்படையவித்யாதி) “அவித்த” என்றதுக்குவாசனை (துர்வர்க்கமித்யாதி) அவிக்கைக்கவன் மழையோவென்ன (மழைகொலோவித்யாதி) பெரியாழ்வார்திருமொழி. “அம்மானே - அடுபடையவித்த” என்றதுக்குபாவம் (சர்வஸ்வாமியாயித்யாதி)

“அடுபடையவித்த” என்றவநந்தரம், “அமரர்தமமுதே” என்றதுக்குபாவம் (தேவர்களுக்காகவித்யாதி)

கிழோடேகூட்டிபாவம் (தேவர்களுக்கித்யாதி)

அம்மானுயிருந்துவைத்து - அது - அமர் - பண்ணி, அகலிடம் புடைசூழடுபடையவித்த - அமரர்தமமுதே, அசுரர்கணஞ்சே, என்னுடையாருயிரோயோ - உமருகந்தென்று தொடங்கி, சங்கிப்பன் வினையே னித்யந்வயஃ........... ...... ......*

---

# ஐந்தாம்பாட்டு.

ஆருயிரோயோவகலிட்முழுதும்படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்த
பேருயிரோயோபெரியநீர்படைத்தங்குறைந்ததுகடைந்தடைத்துடைத்த
சீரியரோயோமனிசர்க்குத்தேவர்போலத்தேவர்க்குந்தேவாவோ
வோருயிரோயோவுலகங்கட்கெல்லாமுன்னைநானெங்குவந்துறுகோ.

## ஆறுயிரப்படி.

(ஆருயிரோயோ) நீரோ யுபாயங்களையநுஷ்ட்டித் தென்னைப்ராபிக்குமத்தனையன்றோ வென்னில்;

எனக்கு தாரகனாய், நிகிலஜகந்நிர்மாண மஹார்ணவநிமக்ந ஜகதுத்தரண நிகாரணோத்கிரண விக்ரமண ஹேதுபூத பரமகாருண்யவிசிஷ்டனாய், பயோநிதி மயந மந்த்தந பந்தந பேதந ஹேது பூத ப்ரணயித்வகுணயுக்தனுமாய், ஆத்மகுணங்களாலும் ரூபகுணங்களாலும் மநுஷ்யரிற்காட்டில் தேவர்களெத்தனை விலக்ஷணராயிருப்பார், அப்படியே தேவர்கள் மநுஷ்யரென்னும்படி யந்தகுணங்களால் விலக்ஷணனாய், சர்வலோகங்களுக்கு மாத்மாவாயிருந்த வுன்னை நானென்னுடைய யத்நத்தாலே யெங்குனே ப்ராபிக்கும்படி யென்கிறார்..............................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வப்ரகாரரக்ஷகனான வுன்னை நான் யத்நம்பண்ணிக் காண்பதெங்கே யென்கிறார்.

"ப்ராணஸ்யப்ராண:" (ப்ராணஸ்யப்ராண:) என்கிறபடியே தாரகமான ப்ராணுதிகளுக்கு தாரகனுகையாலே, ஆருயிரோ - பரிபூர்ணப்ராணபூதனுய். அகல் - விஸ்தீர்ணமான. இடம் - ஜகத்தை. முழுதும் - எல்லாம். படைத்து - ஸ்ருஷ்டித்து. இடந்து - ப்ரளயத்திலழியாமலிடந்தெடுத்து. உண்டு - வயிற்றிலே வைத்துநோக்கி. உமிழ்ந்து - உமிழ்ந்து வெளிநாடுகாட்டி. அளந்த - அந்யாபிமானமறும்படி யளந்துகொண்ட. பேருயிரோ - சர்வாதிகசேஷியாய். ஜகத்தை யுஜ்ஜீவிப்பிக்கைக்காக, பெரியநீர் - மஹாஜலமான ஏகார்ணவத்தை. படைத்து - ஸ்ருஷ்டித்து. அங்கு - அங்கே. உறைந்து - கண்வளர்ந்தருளி. அது - தத்கார்யமான க்ஷீரார்ணவத்தை. கடைந்து - கடைந்து. அடைத்து-தத்ஸஜாதீயமான கடலையடைத்து. உடைத்த - சம்சாரிகளுக்கு தீர்த்தஹேதுவாம்படிதநுஷ்கோடியாலேயுடைத்த. சீரியரோ-ஆஸ்ரிதரக்ஷணத்தி லாத்மாவோபாதி சீரியனுய். மனிசர்க்கு - மநுஷ்யாதிகளுக்கு. தேவர்போல - தேவர்களுத்தேஸ்யரானவோபாதி. தேவர்க்கும் - தேவர்களுக்கும். தேவா - உத்தேஸ்யதயா ஆஸ்ரயணீயனுய். உலகங்கட்கெல்லாம் - ப்ராணகம்யமான சகலபதார்த்தங்களுக்கும். ஓருயிரோ - ஏகாத்மாவானவனே. உன்னை - சரீரத்துக்காத்மாவைப்போலே தாரகனுமாய், சேஷியுமாய், பரிவனுமாய், உத்தேஸ்யனுமாய், அவ்வாத்மாக்களைப்போலே ஸ்வரூபபேதமில்லாதபடி சகலசேதநாசேதநங்களுக்கு மேகநியந்தாவான வாத்மாவான வுன்னை யொழிய. நான் - த்வதேகதார்யனுமாய், த்வதேகசேஷபூதனுமாய், த்வதேகரக்ஷ்யனுமாய், த்வதேகாஸ்ரயனுமாய், த்வதேகநியாம்யனுமாயிருக்கிற நான். எங்கு - எங்கே. வந்து - வந்து. உறுகோ-கிட்டுவேன்.

ஸ்வதந்த்ரனுன வுன்னுடைய யத்நம் பலபர்யந்தமாமதொழிய சர்வப்ரகாரபரதந்த்ரனுன நான் யத்நம்பண்ணிக் கிட்டுவதொன்றுண்டோவென்று.

ஓ - ப்ரதிபதம், ஓ! வென்றது - அத்தலை யித்தலையாவதே! என்கிற வெறுப்பைக்காட்டுகிறது.........................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

"ஶாஸ்த்ரபலம்ப்ரயோக்தரி" (ஶாஸ்த்ரபலம்ப்ரயோக்தரி) என்று பேறும்மதானுல் சாதநமும்முடையதலையிலே யாகவேண்டாவோ வென்ன; நான் யத்நம்பண்ணி வந்துகாண வென்றொரு பொருளில்லைகாணென்கிறுர்.

(ஆருயிரேயோ) உயிர்நீயாயிருக்க நானென்னசாதநாநுஷ்டாநம்பண்ணி வந்து கிட்டுவேன்; சரீரரக்ஷணமாத்மாவதன்றே, சரீரந்தான் தன்னை ரக்ஷித்துக்கொள்ளவோ. சம்பந்தமேயோ, அநுஷ்டாநமுமில்லையோவென்கிறுர் (அகலிடமுழுதும்படைத்து) "பஹுஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்று பூமிப்பரப்படங்க ஸ்ருஷ்டித்து, ப்ரளயத்திலே நோவுபட மஹாவராஹமா யெடுத்துக்கொண்டேறி, திரிய ப்ரளயம்வர வயிற்றிலேவைத்து நோக்கி, உள்ளே கிடந்து தளராதபடி வெளிநாடுகாண வுமிழ்ந்து, மஹாபலியாலே யபஹ்ருதமான தசையிலே யெல்லை நடந்து மீட்டுக்கொண்டு, இப்படி யந்த துர்த்தசைகளிலே அபேக்ஷாநிரபே

க்ஷமாக வுணர்ந்து நோக்கும்நீயே, இதுகிட்டும் விரகு பார்க்கவேண்டாவோ. (பேருயிரோயோ) பெரியோனே. (பெரியநீரித்யாதி) சர்வவிஷயமாகப்பண்ணும் வ்யாபாரத்தோடு, பிராட்டிக்காகப்பண்ணும் வ்யாபாரத்தோடு வாசியற்றிருக்கும்படி. (பெரியநீர்படைத்தங்குறைந்து) ஏகார்ணவத்தைஸ்ருஷ்டித்து, ஸ்ருஷ்ட்யர்த்தமாக வதிலேகண்வளர்ந்து. (அதுகடைந்து) பிராட்டியை லபிக்கைக்காக அத்தைக்கடைந்து, அவளோட்டை சம்ப்லேஷத்துக்காக அத்தையடைத்து, அவ்வருகுண்டானராக்ஷசர்வந்து ஆஶ்ரிதரைநலியாதபடி அத்தையுடைத்த. (சிரியரோயோ) நித்யாஶ்ரிதையோடல்லாதாரோடுவாசியற விஷயீகரிக்கும் சீர்மையுடையவனே. (மனிசரித்யாதி) ஐஶ்வர்யத்தாலும் கௌரவ்யதையாலும் மநுஷ்யர்களுக்கு தேவர்களிருக்குமாபோலேயாயிற்று, அந்ததேவர்களிற்காட்டில் சர்வேஶ்வரனிருக்கும்படி. (ஓருயிரேயோ வுலகங்கட்கெல்லாம்) கேவலசரீரமோ, ஆத்மாவோ, ஹிதசிந்தைபண்ணுவார்; நானுன்னைப்பெறுகைக்கு சாதநாநுஷ்டாநம்பண்ணுகிறேன், உன்னைப்போலே யிருப்பதொரு தத்த்வாந்தரமுண்டாகில் சொல்லிக்காண். உயிராயிருக்கிறவுன்னை சரீரபூதனான நானென்ன சாதநாநுஷ்டாநத்தைப்பண்ணி வந்துகிட்டுவேன். ஆத்மா சரீரத்துக்கு ஹிதசிந்தைபண்ணுமதொழிய, சரீரம் ஸ்வரக்ஷணத்தைப்பண்ண வென்பதொன்றுண்டோ. ஆதாரமாய் நியந்தாவாய் சேஷியாயிருக்கிற நீயொழிய, ஆதேயமாய் நியாம்யமாய் சேஷமானவிது ஸ்வரக்ஷணத்தைப்பண்ணவோ. ஆதாராதேயநியந்த்ரு நியாம்யபாவங்களாலே சரீரலக்ஷணமிதுக்குண்டானபின்பு, அல்பசைதந்யமும் "நீயேகடவாய்" என்கிற ப்ரதிபத்திக்குக் கண்டவித்தனையன்றி சாதநாநுஷ்டாநம் பண்ணக்கண்டதோ ...... ..................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (ஆருயிரோயோவித்யாதி.) "எங்குவந்துறுகோ" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (சாஸ்த்ரபலமித்யாதி.)

பதப்ரயோகத்துக்கு பாவம் (உயிர்நீயாயித்யாதி.) உயிரவனுறல் சாதநாநுஷ்டாநம் பண்ணப்போகாதோவென்ன (சரீரேத்யாதி) விவரணமாதல்.

"அகலிடம்" இத்யாதிக்கவதாரிகை (சம்பந்தமேயோவித்யாதி.)

ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைச் சொன்னவநந்தரம், பிராட்டியை லபிக்கைக்குப் பண்ணின வ்யாபாரங்களைச் சொன்னதுக்கு பாவம் (சர்வவிஷயமாகவித்யாதி.) வாசியற்றிருக்கும்படி யென்றது - பிராட்டிகார்யம்போலே யெல்லார்கார்யமும்செய்யுமென்றபடி. "பெரியநீர்படைத்தங்குறைந்து-அகலிடமுழுதும்படைத்து" என்றந்வயிப்பது. * சீர்மையேதென்ன (நித்யாஶ்ரிதையித்யாதி.)

"உலகங்கட்கெல்லாம் - உயிர்" என்றதுக்கு பாவம் (கேவலேத்யாதி.) "ஓர்" என்றதுக்கு பாவம் (நானுன்னையித்யாதி.) கீழே "ஆருயிரோயோ" என்றது - ஸ்வவிஷயம், "ஓருயிரோயோ" என்றது - சர்வவிஷயம்; ஆகையாலே புந

ருக்தியில்லையென்னுதல். அதவா, "ஆருயிரேயோ" என்றதின் நிகமநம் - "ஒருயிரேயோ" என்றதென்னுதல்.

"உன்னைநான்" இத்யாதிக்கர்த்தம் (உயிராயிருக்கிறவித்யாதி.) விவரணம் (ஆத்மாவித்யாதி.) சரீர சரீரிபாவ லக்ஷணங்கள் சொல்லாநின்றுகொண்டு, பூர்வோக்தார்த்தத்தை ஸ்த்திரீகரிக்கிறுர் (ஆதாரமாயித்யாதி.) இவ்விபூதி சரீரமானபடி யெப்படி யென்ன; சரீரலக்ஷணமுண்டாகையாலே யென்கிறுர் (ஆதாராதேயேத்யாதி.) சரீரம்போலே யசேதநமன்றே, சிறிது சைதந்யமுண்டேயென்ன (அல்பசைதந்யமுமித்யாதி.)

ஆருயிரேயோ - பெரியநீர்படைத்தங்குறைந்து - அகலிடமுழுதும்படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்த பேருயிரேயோ - அதுகடைந்தடைத்துடைத்தசீரியரோயோ, மனிசர்க்குத் தேவர்போலத் தேவர்க்கும் தேவாவோ - உலகங்கட்கெல்லாம் - ஒருயிரேயோ - உன்னை நானெங்குவந்துறுகோவித்யந்வயঃ..............................*

---

# ஆறம்பாட்டு.

---

எங்குவந்துறுகோவென்னையாள்வானேயேழுலகங்களுநீயே
யங்கவர்க்கமைத்ததெய்வமுநீயேயவற்றவைகருமமுநீயே
பொங்கியபுறம்பாற்பொருளுளவேலுமவையுமோநீயின்னேயானுன்
மங்கியவருவாநேர்ப்பமுநீயேவான்புலனிறந்ததுநீயே.

## ஆறுயிரப்படி.

(எங்குவந்து) சர்வலோகங்களும், தத்ஸமாராத்யமான அக்நீந்த்ராதிதைவமும், அவற்றினுடைய க்ரியைகளும், லோகத்துக்குப் புறம்புள்ள பதார்த்தங்களும், ப்ரக்ருதி சம்யுக்தமாய் கர்மசங்குசித ஜ்ஞாநமாய் சூக்ஷ்மமாயிருந்த புருஷஸமஷ்டியும், கர்மசம்பந்தரஹிதமாய், ப்ரக்ருதி விநிர்முக்தமாய், பரிசுத்தமாயிருந்த வாத்மஸ்வரூபமும் நீயே; ஆதலால், என்னுடைய யத்நத்தாலுன்னை நானெங்ஙனே ப்ராபிக்கும்படி; இதற்கு முன்பு நிர்ஹேதுகமாக வென்னை விஷயீகரித்தாப்போலே, இன்னமு முன்க்ருபையாலே விஷயீகரித்தருளாயென்கிறுர்.

திவ்யை

பூர்வோக்தமான வாத்மசரீரபாவ மிந்த சாமாநாதிகரண்யமென்னுமிடஞ் சொல்லிற்றுயிற்று................ ..................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், கார்யகாரணவஸ்த்த சகலபதார்த்தங்களும் நீயிட்ட்வழக்காம்படி சர்வாத்மபூதனுகையாலே யெங்கேவந்து கிட்டுவதென்கிறுர்.

என்னை-என்னை. ஆள்வானே-இவ்வளவும்வர நிர்வஹித்தவனே. ஏழுலகங்களும்-சாதநாநுஷ்ட்டாநம்பண்ணுவார்க் கநுஷ்ட்டாநஸ்த்தலமாயும் ப்ராப்யமாயுமு

ள்ள சமஸ்தலோகங்களும். நீயே-நீயிட்டவழக்கு. அங்கு-அந்தலோகங்களில். அவர்க்கு-பலார்த்திகளான வாராதகர்க்கு. அமைத்த - பலப்ரதமாகவு மாராத்யமாகவும் சமைத்துவைத்த. தெய்வமும்-தைவங்களும். நீயே - நீயிட்டவழக்கு. அவற்றவை-அத்தைவங்கள்விஷயமாக. கருமமும் - ஆராதநரூபமான வவ்வோகர்மங்களும். நீயே-நீயிட்டவழக்கு. பொங்கிய-இந்தலோகங்களிற்காட்டில்விஞ்சி. புறம்பால்-புறம்பான. பொருள்-மஹதாதி சமஸ்தபதார்த்தங்கள். உளவேலும்-ப்ரமாணப்ரஸித்தமாய்த்தோன்றினவுண்டாகிலும். அவையும்-அவையும். நீ-நீயிட்டவழக்கு. மங்கிய-சம்ஹ்ருத்யவஸ்தமாய் நாமரூபரஹிதமான. அருவாம் நேர்ப்பமும் - சூக்ஷ்மசிதசித்தும். நீயே-நீயிட்டவழக்காயிருக்கும். வான்-பரமாகாசத்தில். புலனிறந்ததும்-அதீந்த்ரியமான முக்தாத்மவர்க்கமும். நீயே-நீயிட்டவழக்காயிருக்கும். இன்னே-இப்படி. ஆனல்-சர்வாத்மபூதனுதலினல். நான்-த்வதேகநிர்வாஹ்யனனநான். யத்நம் பண்ணி, உன்னை-உன்னை. எங்கு-எங்கே. வந்து-வந்து. உறுகோ-கிட்டுவேன் ......*

## ஈடு - ஆறும்பாட்டு.

உக்தார்த்தத்தைவிஸ்தரிக்கிருர்.

(எங்குவந்துறுகோ) மேருசிகரத்திலேநிற்கிறுனெருவனை யொருபங்குசென்றுகிட்டவோ. (என்னையாள்வானே) இவ்வளவும் வரநின்றேன் நானுகிலன்றே மேலும் நான்வந்து கிட்டப்பார்ப்பது. (ஏழுலகங்களும்நீயே) சகலலோகங்களும் நீயிட்டவழக்காம்படி யிருக்கிறவனே. அபேக்ஷவர்த்திக்கிற வென்னையொழிய விமுகராயிருப்பார் தாமே ஸ்வாதீநராயிருக்கிருர் (அங்கவர்க்கமைத்த தெய்வமும்நீயே) அவர்களைக் குடிமைகொள்ளுகிற தேவதைகளும் நீயிட்டவழக்கு. (அவற்றவைகருமமும்நீயே) அவ்வோதேவதைகளுடைய ஸ்ருஷ்ட்யாதிவ்யாபாரங்களோதானவர்கள்பக்கல்கிடக்கிறது. ஆக, இவ்வருகுண்டான கார்யவர்க்கம் த்வததீநமென்னு மிடஞ்சொல்லிற்று. (பொங்கியவித்யாதி) ஒன்றுக்கொன்று விஸ்த்ருதமாய், அண்டத்துக்குப்புறம்பாய், அதுக்குக்காரணமான மஹதாதிகளென்று சிலவுண்டாகில், அவையுமுன்னதீநம். (மங்கியவித்யாதி) கார்யாகாரமடங்கவழிந்து சூக்ஷ்மாவஸ்த்தையை பஜித்திருக்கிற அவ்யக்தமும் நீயிட்டவழக்கு. (வான்புலனிறந்ததும்நீயே) இவற்றின்படியன்றிக்கே, வானுய் - அவ்யக்தத்தையும் வ்யாபிக்கவற்ருய், சக்ஷுராதிகரணங்களுக் கவிஷயமாயிருந்துள்ள காரணமான ஜீவஸமஷ்டியும் நீயிட்டவழக்கு. பத்தாத்மஸ்வரூபமும் நீயிட்டவழக்கென்கை. (இன்னேயானல்-எங்குவந்துறுகோ) அர்த்ததத்த்வமிதுவானபின்பு, ஏங்கேவந்து கிட்டக்கடவேன். "மங்கியவருவாம்நேர்ப்பமென்று-பத்தஸமஷ்டி" என்றும், "வான்புலனிறந்ததென்று – முக்தஸ்வரூபத்தைச் சொல்லுகிறது" என்றும் பிள்ளான். அப்போது, அஸத்ஸமமாய் சூக்ஷ்மமான வாத்மசமஷ்டியென்றும், பரமபதத்திலேயாய் அதீந்த்ரியமான முக்தாத்ம ஸ்வரூபமென்றும் நிர்வாஹம். இத்தால்சொல்லிற்ருயிற்றென்னென்னில்; கார்யாவஸ்த்தையோடு காரணுவஸ்த்தையோடு முக்தனனவவஸ்த்தையோடு

வாசியற உன்கைபார்த்திருக்கவேண்டினபின்பு, நானென்காரியத்துக்குக் கடவேனுகையென்ருெரு பொருளுண்டோ ...............................*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு (எங்குவந்தித்யாதி)

" எங்குவந்துறுகோ! " என்கிற ஸ்வரத்துக்குபாவம் (மேருவித்யாதி) "எங்கு" என்று - அவன்வர்த்திக்கிற ஸ்தாநத்தி னௌந்நத்யமும், "வந்துறுகோ" என்று-தம்முடைய வசக்தியும் தோற்றுகிறது. இவ்வளவும்வர- உன்பக்கல் ருசிபிறக்குமளவும் வரவென்றபடி.

"அங்கவர்க்கு" இத்யாதிக்கவதாரிகை (அபேக்ஷயித்யாதி)

"பொங்கிய-" ஒன்றுக்கொன்று தசகுணிதமாயென்றபடி. "பொருள்" என்று - மஹதஹங்காராகாச வாய்வக்நிஜலஷடாவரணத்தைச்சொல்லுகிறது. " உளவேலும் " என்கிறயதிசப்தம் - வார்த்தைப்பாடு.

"நேர்ப்பம்-" அவ்யக்தமென்றபடி.

"வானாய்" என்றதின்விவரணம் (அவ்யக்தத்தையும் வ்யாபிக்கவற்ருயென்றது.) அதாவது - ஜ்ஞாநத்வாராவிபுவாய், அத்தாலே வ்யாபிக்கவற்ருயென்றபடி. ப்ரக்ருதியிலே லீநமாய் காரணமான ஜீவஸமஷ்டியுமென்றபடி. பிள்ளான் நிர்வாஹத்துக்கு, ப்ரக்ருத்யாத்யாவரணஸப்தகத்தையும்-பொருளென்கிறது. சப்தார்த்தம் (அப்போதித்யாதி) நேர்ப்பம்-ஆத்மா.

என்னையாள்வானே யென்றுதொடங்கி, இன்னேயானுல் - எங்குவந்துறுகோ வித்யந்வயః ..........................................................*

---

# ஏழாம்பாட்டு.

இறந்ததுநீயேயெதிர்ந்ததுநீயேநிகழ்வதோநீயின்னேயானுற்
சிறந்தநின்றன்மையதுவிதுவுதுவென்றறிவொன்றுஞ்சங்கிப்பன் வினையே
கறந்தபாலெய்யேநெய்யினின்சுவையேகடலினுளமுதமேயமுதிற் [ன்
பிறந்தவின்சுவையேசுவையதுபயனேபின்னைதோண்மணந்தபேராயா.

## ஆருயிரப்படி.

( இறந்ததும்நீயே ) பூதபவிஷ்யத்வர்த்தமாந சகலஜந்துஜாதத்துக்கு மாத்மாவாய் ரக்ஷகனுயிருந்த வுன்னுடைய விந்த நிரவதிககாருண்யத்தையும் பொய்யோவென்று சங்கியாநின்றேன். இப்படி யதிசங்கைபண்ணுவானென்னென்னில் ; நிரவதிக போக்யபூதனுயிருந்த வுன்னைக் காணப்பெறுதொழிந்தால் சங்கை பிறவாதோவென்கிறுர். ..................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வப்ரகார போக்யபூதனுன நீ, காலோபாதிகமாயும் தேசோபாதிகமாயுமுள்ள சமஸ்தபதார்த்தங்களையும் ப்ரகாரமாக வுடையையா யிருப்புதி

யென்கிற வித்தத்வஜ்ஞாநத்தையும் சங்கிக்கும்படி பண்ணுகின்ற தன்னைக் கிட்டப்பெறுதவிழவென்கிறுர்.

கறந்த - கறந்தபோதே. பால் - ஸ்வாபாவிகரசத்தையுடைத்தான பாலாய். நெய்யே - அதில் சாராம்ஸமான நெய்யாய். நெய்யின் - நெய்யினுடைய. இன்-இனிய. சுவையே - ரசமாய். இப்படி லௌகிகபோக்யமன்றியே, திவ்யபோக்யமாம்படி, கடலினுள் - கடலிலேபிறந்த. அமுதமே - அம்ருதமாய். அமுதில் - அந்த வம்ருதத்திலே. பிறந்த - உத்பந்நமாய். இன்சுவையே - லோகோத்தரமான வினிமையாய். சுவையது - அவ்வினிமையால்பிறந்த. பயனே - ப்ரயோஜநமான சுகமாய். இப்படி ப்ராக்ருத போக்யமாமளவன்றியே, அநந்யப்ரயோஜநர்க்கதிசயிதபோக்யபூதனும்படி, பின்னை - நப்பின்னைப்பிராட்டி. தோள்-திருத்தோளோடே. மணந்த-சம்ஸ்லேஷித்த. பேராயா - மஹாப்ரபாவனுன க்ருஷ்ணனே. வினையேன் - உன்னுடைய நிரதிசயபோக்யதையை யநுபவிக்கப்பெறுத பாபத்தையுடைய நான். இறந்தது மெதிர்ந்ததும் நிகழ்வது - பூதபவிஷ்யத்வர்த்தமாந காலோபலக்ஷிதசகலபதார்த்தங்களும். நீயே - தனித்தனியே நீயிட்டவழக்கு. இன்னே - இப்படி. ஆனல்-ஆனபின்பு. அது - தூரஸ்த்தமாயும். இது - சந்நிஹிதமாயும். உது - அதூரவிப்ரக்ருஷ்டமாயுமுள்ள தேசோபலக்ஷித சகலபதார்த்தங்களும். சிறந்த - விலக்ஷணமான. நின் - உன்னுடைய. தன்மை - ஸ்வபாவங்கள். என்று - என்று. அறிவு - அறிகிறவித்தத்வஜ்ஞாநம். ஒன்றும் - ஒன்றையுமகப்பட. சங்கிப்பன் - குலையப்புகுகிறதோவென்று சங்கியாநிற்பன்.......................................................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

சகலபதார்த்தங்களு முனக்கு ப்ரகாரதயா சேஷமாய், நீ ப்ரகாரியாய், நீயே யவற்றுக்கு நிர்வாஹகனென்னு மறிவொன்றுங்கொண்டுதரித்திருக்கிற நானென்பாபத்தாலே அதிலுமதிசங்கைபண்ணுகின்றேனென்கிறுர்.

(இறந்ததித்யாதி) "இக்காலத்துக்குநான்கடவேன், மற்றொருகாலத்துக்கு வேறேசிலர்கடவர்" என்றுதானுன்னுலே சொல்லலாமோ. பூதகாலத்திலுள்ளாரோடு பவிஷ்யத்காலத்திலுள்ளாரோடு வர்த்தமாநகாலத்திலுள்ளாரோடு வாசியற எல்லாரும் த்வததீநர். (இன்னேயானல்) எங்குவந்துறுகோ என்று கீழ்ப்பாட்டோடே யந்வயம். (சிறந்தநின்தன்மை யநுவிதுவுதுவென்று) தூரஸ்த்தமாயும், சந்நிஹிதமாயும், அதூரவிப்ரக்ருஷ்டமாயுமுள்ள சகலபதார்த்தங்களும், சேஷித்வத்தாலே சிறந்திருந்துள்ள வுன்னுடையப்ரகாரம். (இன்னேயானல்) இறந்ததும்நீயேயென்னுதல், சிறந்தநின்தன்மையென்னுதல். இப்படி காலத்ரயவர்த்திபதார்த்தங்களும் நீயிட்டவழக்காகையாலே சகலபதார்த்தங்களு முனக்கு ப்ரகாரமென்னுதல், தூரஸ்த்தமாயும் ஸந்நிஹிதமாயும் அதூரவிப்ரக்ருஷ்டமாயுமுள்ள பதார்த்தங்களுனக்கு ப்ரகாரமாயற்றல் காலத்ரயவர்த்திபதார்த்தங்களும் நீயிட்டவழக்கென்னுதல். (என்றறிவொன்றும்சங்கிப்பன்) தன்னையொழிந்ததட்டங்கலும் தனக்கு ப்ரகாரமாய்த்தான் ப்ரகாரியா

யிருக்கையாலே, இவற்றுக்கு வந்தது தனக்கு வந்ததாக நினைத்திருப்பா
னொருவனென்கிற வறிவாயிற்றிவர்க்கு ஜீவிக்கைக்குஹேது; அதொன்றி
லு மதிசங்கைபண்ணுகின்றேன், அதெனக்குக் கார்யகரமல்லாமையாலே.
(வினையேன்) கலக்கத்தாலே யதிசங்கைபண்ணுங்காட்டி லவன்ஸ்வரூப
மில்லையாகாதிறே, எனக்கிப்புத்தியிறக்கைக்கடி யென்பாபமிறே. “ ஸஜ்ஞ
ஹோமஹ்வஸிக்ஷயாக” (ஸங்கேமத்பாக்யஸங்க்ஷயாத்) கீழிலதிசங்கைக்கு
மிதுக்கும் நெடுவாசியுண்டு. ஆஸ்ரிதபரதந்த்ரனென்கிற ஸ்வபாவத்தாலே
யதிசங்கைபண்ணிற் லாப்ரயணத்திற் குறையாலேயென்று நினைத்திருக்
கலாம், இதிலவனுடைய சத்பாவத்திலேயிறே யதிசங்கை. ப்ரகாரியாய்க்
கொண்டிறே அவனுடையசத்தை. ஸ்வவ்யதிரிக்தங்க ளவனுக்குப்ரகார
மாய்க்கொண்டிறே யுண்டாவது. இப்படி ஸ்வரூபத்தி லதிசங்கைவர்த்தி
க்கைக்கடியென்னென்னில்; அதிசங்காஹேதுசொல்லுகிறது (கறந்தபா
லித்யாதி) வ்யதிரேகத்தில் ஜகத்து உபஸம்ஹ்ருதமென்று நினைக்கவேண்
டும்படியான வுன்போக்யதாப்ரகர்ஷ மதிசங்காஹேது. (கறந்தபால்) கற
ந்தபோதை ரஸத்தைநினைக்கிறது, அல்லது கறவாதபாலில்லையிறே, உ
பாதிவிசேஷத்தால்வந்தரஸவிசேஷத்தை வ்யாவர்த்திக்கிறது. (நெய்யே)
அதில் சாராம்சம். (நெய்யினின்சுவையே) நெய்யிலினியசுவையானவ
னே (கடலினுளமுதமே) மஹத்தத்த்வத்தைக்கலக்கி அதில் சாராம்ஸ
மாக வாங்கினவம்ருதம்போலே போக்யனானவனே. (அமுதில்பிறந்தவின்
சுவையே) அதில் ரசாம்சத்தைச்சொல்லுகிறது. (சுவையதுபயனே) ர
சாநுபவ சுகரூபமானவனே. ஒன்றிலொன்று மேற்பட்ட ரசாம்சங்களை
ச்சொல்லி, அதுபோராமையாலே தன்னையேசொல்லுகிறது (பின்னை
தோள்மணந்தபேராயா) ஒருமிதுநாநுபவமாயிற்றிவர்க்குபோக்யம். சம்
சாரியை யவனாநந்திப்பிக்குமாபோலேயாயிற் றாநந்தமயனை யவளுகப்பிக்
கும்படி. இருவருடைய சேர்த்தியழகாயிற் றிவர்க்குபோக்யம்..........*

## ஜீயர் அரும்பதம்.

எழாம்பாட்டு (இறந்ததுமித்யாதி) “ அதுவிதுவுது-சிறந்தநின்தன்மை-என்
றறிவொன்றும் சங்கிப்பன்வினையேன் ” என்கிறவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (ச
கலேத்யாதி) “ இறப்பு எதிர் ” என்று - காலபரமாகையாலே, “ இறந்தது, எதிர்
ந்தது ” என்றது - தத்தத்காலவர்த்தி பதார்த்தவாசகமாகிறது.

ஏககாலவர்த்திபதார்த்த நிர்வாஹகனென்னாதே, “ காலத்ரயவர்த்திபதார்த்
தநிர்வாஹகன் நீ ” என்றதுக்குபாவம் (இக்காலத்துக்கித்யாதி சப்தார்த்தம் (பூத
காலத்திலித்யாதி) “ இன்னேயானல் - ” இப்படியானலென்றபடி. “ இறந்ததும்
நீயே ” என்றுதொடங்கி, “ நிகழ்வதோநீயின்னேயானல் - எங்குவந்துறுகோ ’
என்று கீழிற்பாட்டோடே யன்வயமானபோது, “அதுவிதுவுது-சிறந்தநின்தன்மை-’
என்றறிவொன்றும் சங்கிப்பன் வினையேன்” என்று மேலேயன்வயம். “இன்னேயா
னல்” என்றது - இப்பாட்டுக்குசேஷமாக யோஜநாத்வய மருளிச்செய்கிறார் (இன்

னேயாகு லித்யாதிவாக்யத்வயத்தாலே) த்ருதீயயோஜநாவிவரணம் (இப்படிகால த்ரயேத்யாதி) இந்தயோஜனையில், "இன்னேயாகுல்" என்றது-இப்படியாகையா லேயென்றபடி. த்விதீயயோஜநாவிவரணம் (அரஸ்த்தமாயுமித்யாதி) த்விதீயயோ ஜனையில், "அதுவிதுவுதுவென்கிறவை-சிறந்தநின்தன்மை - இன்னேயாகுல்-இற ந்ததும்நீயே யெதிர்ந்ததும்நீயே நிகழ்வதோநீயென்கிற - அறிவொன்றும் சங்கிப் பன்வினையேன்" என்றந்வயம். த்ருதீயயோஜனையில், "இறந்ததும்நீயே யெதிர்ந் ததும்நீயே நிகழ்வதோநீயின்னேயாகுல் - அதுவிதுவுது- சிறந்தநின்தன்மை-என்ற றிவொன்றும் சங்கிப்பன்வினையேன்" என்றந்வயம். "'அதுவிதுவுது - சிறந்தநின் தன்மை' என்றது - 'ஸவ-ுஂஸமாவெ்நாஷி' (ஸர்வம்ஸமாப்நோஷி) என்கிறப் போலே; 'இறந்ததும்நீயே' இத்யாதி - 'தடுதாஸிஸவ-ுஃ' (ததோஸிஸர்வஃ) என்கிறப்போலேயிருக்கிறது" என்றருளிச்செய்வர். இவ்வறிவிலே சங்கிக்கிறேனெ ன்கைக்கு, இத்தைத்தஞ்சமாக நினைக்கைக்கு ஹேதுவேதென்ன (இவற்றுக்குவந்த தித்யாதி) "வினையேன்" என்றதுக்குக் கீழில் பதத்தோடே சங்கதியருளிச்செய்கி ருர் (கலக்கத்தாலேயித்யாதிவாக்யத்வயத்தாலே) உக்தார்த்தத்துக்குப்ரமாணம் (சங்கஇத்யாதி) கீழி லதிசங்கைக்குமிதுக்கும் வாசியேதென்ன (கீழிலித்யாதி) கீழி லதிசங்கையென்றது - நாலாம்பாட்டிலதிசங்கை. இதுக்கும் - இப்பாட்டி லதிசங் கைக்குமென்றபடி. ப்ரகாரித்வத்திலேயன்ருே வதிசங்கை, சத்பாவத்திலேயோ வென்ன (ப்ரகாரியாயித்யாதி) ப்ரசங்காத் ப்ரதிகோடியையுங் காட்டுகிருர் (ஸ்வவ் யதிரிக்தேத்யாதி)

அந்தஹேதுவேதென்ன (வ்யதிரேகத்திலித்யாதி) பாலென்னுமல், "கறந்த பால்" என்றுவிசேஷித்ததுக்கு ப்ரயோஜநமும், வ்யாவர்த்யமுமருளிச்செய்கிருர் (கறந்தபோதையித்யாதி வாக்யத்ரயத்தாலே) உபாதிவிசேஷமாவது - காய்ச்சு கைமுதலானவை.

மேலுக்கவதாரிகை (ஒன்றிலொன்றித்யாதி) தன்னை-அவன்றன்னையென்ற படி. பேராயா-பெரியவிடையனே. கேவலமவனைச்சொல்லாதே, "பின்னைதோள்ம ணந்த" என்றுவிசேஷித்ததுக்குப்பாவம் (ஒருமிதுநேத்யாதி) "பின்னைதோள்மண ந்த" என்றத்தால்பலிதம் (சம்சாரியையித்யாதி) "ஒருமிதுநாநுபவம்" இத்யாதியி ன்விவரணம் (இருவருடையவித்யாதி) பேராயா-பெரியோனேயென்றுமாம்.

கறந்தபால் நெய்யேயித்யாரப்ய; மணந்தபேராயா-இறந்ததும் நீயேயென் றுதொடங்கி, இன்னேயாகுல்-அதுவிதுவுது-சிறந்தநின்தன்மை-என்றறிவொன்று ம் சங்கிப்பன் வினையேனித்யந்வயஃ. இது மூன்ரும்யோஜனையில். "என்றறிவொ ன்றும்" என்றது - என்கிற ஜ்ஞாநமொன்றையுமென்றபடி. என்றறிகிற வறிவொ ன்று மென்றுமாம்................................................................*

## எட்டாம்பாட்டு.

மணந்தபேராயாமாயத்தான்முழுதும்வல்வினையேனையீர்கின்ற
குணங்களையுடையாயசுரர்வன்கையர்கூற்றமேகொடியபுள்ளுயர்த்தாய்
பணங்களாயிரமுமுடையபைந்நாகப்பள்ளியாய்பாற்கடற்சேர்ப்பா
வணங்குமாறறியேன்மனமும்வாசகமுஞ்செய்கையும்யானுநீதானே.

## ஆறாயிரப்படி.

( மணந்தபேராயா ) உம்முடைய வபேக்ஷிதம்செய்யவேண்டுமோ கி லோரஞ்சலிமாத்ரமாகிலும் பண்ணமாட்டீரோவென்னில்; அதுக்குத் தரம் மேலிட்டு, ப்ரவணஸ்வபாவனுகையாலும், "ஹ்ருதயாநு்யாமமந்தேவ ஜநஸ்யகுணவத்தயா" (ஹ்ருதயாங்யாமமக்த்தேவ ஜநஸ்யகுணவத்தயா) என்னும் ப்ரக்ரியையாலே, முழுதும் வல்வினையேனுயிருந்த வென்னையுங்கூட வீராநின்ற சௌசீல்யாதி கல்யாணகுணங்களை யுடையையாயிருக்கையாலும், ஆஶ்ரிதவிரோதிநிரஸநைக ஸ்வபாவனுயிருக்கையாலும், ஆஶ்ரிதருடையவாபத்துக் குதவவருகைக்கிடான பெரியதிருவடியை திவ்யவாஹநமாக வுடையனுகையாலும், திருநாட்டில் நின்றும்வக் தாஶ்ரிதருடைய வாபத்தைப்போக்கப் பற்றுமை யணித்தாகத் திருப்பாற்கடலிலே வந்து திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந் தருளுகையாலும், மத்ஸ்வரூபகரணசேஷ்டிதங்கள் த்வத் ஸங்கல்பாயத்தமாய் த்வதாத்மகமாய் த்வச்சரீரமாகையாலும், என்னுலொருசெயலில்லை; ஆதலால், வணங்குமாறறியேனென்கிறார். ..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதசம்ஶ்லேஷார்த்தமாகவும் விரோதிநிரஸநார்த்தமாகவும் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற நீயிட்டவழக்காம்படி யென் கரணங்களும் கரணியான நானு முனக்கு ப்ரகாரமானபின்பு நான் வணங்குவனென்றொரு ப்ரகாரமறிகிறிலேனென்கிறார்.

மாயத்தால் - ஆஶ்சர்யசேஷ்டிதங்களாலே. முழுதும் - அகிலபதார்த்தங்களையும். மணந்த - அபிமதையோடே செறிந்துகப்பிக்கும். பேராயா - பெருமையையுடைய க்ருஷ்ணனுய். வல்வினையேனை - அப்படி சம்ஶ்லேஷிக்கப்பெருத ப்ரபல பாபத்தை யுடையேனுன வென்னை. ஈர்கின்ற - சர்வகாலமு மீராநிற்கிற. குணங்களை - சீல சௌலப்ய சௌந்தர்யாதிகளான குணங்களை. உடையாய் - ஸ்வபாவமாகவுடையையாய். வன்கையரசுரர் - ஆஶ்ரிதவிரோதிகளான ப்ரபலாசுரர்க்கு. கூற்றமே - ம்ருத்யுவாய். கொடிய - அவர்கள் கண்டபோதே முடியும்படியான. புள் - பெரியதிருவடியை. உயர்த்தாய் - கொடியாகவுடையையாய். இப்படிஜகத்ரக்ஷணார்த்தமாக, ஆயிரமும் - ஆயிரம். பணங்கள் - பணங்களை. உடைய-உடையனுமாய். பை - அதிவிஸ்தீர்ணமான. நாகம் - திருவநந்தாழ்வானுகிற. பள்ளி - படுக்கையை. ஆய் - உடையையாய்க்கொண்டு. பாற்கடல் - திருப்பாற்கடலிலே. சேர்ப்பா-கண்வளர்ந்தருளுகிறவனே. மநமும் வாசகமும் செய்கையும் - மநோவாக்காயரூப கரணங்களும். யானும் - கரணியான நானும். உனக்கு ப்ரகாரமாய்க்கொண்டு, நீதானே - நீதானேயாம்படியா யிருந்தது. ஆகையால், வணங்கும் - வணங்குகைக்கு. அறறியேன் - ஒருகர்த்தாவையுமறிகிறிலேன், கரணங்களையுமறிகிறிலேன்..........*

## ஈடு - எட்டாம்பாட்டு.

ஏதேனுஞ் செய்தாலும் பேறும்மதாய் உமக்காஶ்ரயிக்கைக்குக் கரணங்களுமுண்டானல் நீரோ யத்நிக்கவேண்டாவோ வென்ன; ஆத்மா

த்மீயங்களுடைய வுன்னதிநமானபின் பென்னல் செய்யலாவ தொன்றில்லை, நீயே ரக்ஷிக்கவேணுமென்கிறார்.

(மணந்தபேராயாமாயத்தால்) அபிநிவேசத்தாலே நப்பின்னைப்பிராட்டி தோளோடே சம்ஸ்லேஷித்தபேராயனே. நப்பின்னைப்பிராட்டியிற்காட்டி லிடைத்தனத்தில் க்ருஷ்ணனுக்குண்டான வேற்றம்.(முழுதும்வல்வினையேனையீர்கின்றகுணங்களையுடையாய்)(முழுதும்-ஈர்கின்றகுணங்கள்)சிலகுணங்களீரச் சிலகுணங்கள் தாரகமாகையன்றிக்கே,எல்லாமொக்க வீரும்படியான குணங்களையுடையவனே.உன்குணங்களாகையும் நானாகையுமே நோவுபடுகைக்கடி. ( வல்வினையேன் ) சிலர் குணஜ்ஞாநத்தாலே ஜீவித்திருக்க, அது பாதகமாம்படி பாபத்தைப்பண்ணினேன். ( ஈர்கின்ற ) நலிந்ததாய்விடுகிறதில்லை. அம்புபட்டபுண் மருந்திட்டாற்றலாம், குணத்தால்வந்தநோய்க்குப்பரிஹாரமில்லையே. ( அசுரர்வன்கையர்கூற்றமே ) முன்கைமிடுக்கரான வசுரர்க்கு அந்தகன் தண்ணீரொன்னும்படி கூற்றமானவனே. ( கொடியபுள்ளுயர்த்தாய் ) கண்டபோதே ப்ரதிபக்ஷத்தை மாய்க்கவல்ல பெரியதிருவடியைக் கொடியாகவுடையவனே, ப்ரதிபக்ஷத்தை முடிக்கைக்குத்தான்வேண்டா, கொடியைக்காணவமையும். (பணங்களித்யாதி) ஸ்வஸ்பர்ஶத்தாலே விகசிதமானபணங்களையுடையனாய், பகவதநுபவஹர்ஷத்துக்குப் போக்குவிடாகப்பலதலைகளையுமுடையனாய், சர்வேஶ்வரனுக்கும் பிராட்டிமார்க்கும் நினைத்தபடிபரிமாறுகைக்கீடான பரப்பையுடையனாயிற்றுத் திருவநந்தாழ்வா னிருப்பது; அப்படிப்பட்டிருக்கிறவனைப் படுக்கையாக வுடையவனே. (பாற்கடல்சேர்ப்பா) ஆஶ்ரிதர் கூக்குரல் கேட்கைக்காகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தவனே.

( வணங்குமாறறியேன் ) பரமபதத்தைவிட்டுத் திருப்பாற்கடலிலே சாய்ந்து என்னுடைய ரக்ஷணத்துக்கு முற்பாடனாயிருக்கிற வுனக்கு நானொரு கிஞ்சித்காரம்பண்ணினேனாகைக் கொருவிரகறிகிறிலேன். அறியாதொழிகிறதென், உமக்கு மநோவாக்காயங்களுண்டு, அவற்றுக்காஶ்ரயம் நீருண்டு, வணங்கத்தட்டென்னென்ன (மனமுமித்யாதி) எனக்காயிருப்பதொரு நெஞ்சும் வாக்கும் செய்கையும் எனக்காயிருப்பதொரு நானுமுண்டாகவேணுமே, எல்லாம் நீயிட்டவழக்கா யன்றோ விருக்கிறது. வணங்கவேணுமென்னும் நினைவுண்டு, வணங்கும்ப்ரகார மறிகிறிலேன்.*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. ( மணந்தவித்யாதி. ) "வணங்குமாறறியேன், மனமும் வாசகமும் செய்கையும்யானுநீதானே " என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (ஏதேனுமித்யாதி.)

"மாயம் -" அபிநிவேசம். "பேராயா" என்றதுக்கர்த்தம் (நப்பின்னையித்யாதி.)

"முழுதமீர்கின்ற" என்றதுக்கு பாவம் (சிலகுணங்களித்யாதி.) "வல்வினையேனையீர்கின்றகுணங்கள்" என்றுகூட்டி பாவம் (உன்குணங்களாகையுமித்யாதி.) விஶ்லேஷவேளையிலே குணங்கள் பாதகமாகை சஹஜமாயிருக்க, "வல்வினையேன்" என்று நோவுபடுவானென்னென்ன (சிலரித்யாதி.) குணஜ்ஞாநத்தாலேயென்றது - "தஸ்மிம்ஶ்சபஹவோகுணா:" (தஸ்மிம்ஶ்சபஹவோகுணா:) என்றத்தைப்பற்ற. வர்த்தமாநார்த்தம் (நலிந்ததாயித்யாதி.) பரிஹரித்துக்கொள்ளவொண்ணுதோவென்ன (அம்பித்யாதி.)

"வன்கையர், வன்கூற்றம்" என்றந்வயித்து அதுக்கு வ்யாவர்த்யம் (முன்கையித்யாதி.)

புள்ளின்கொடுமைசொல்லி, "உயர்த்தாய்" என்றதுக்கு பாவம் (ப்ரதிபக்ஷத்தை யித்யாதி.)

"பணங்கள், ஆயிரம், பை" என்ற மூன்றுக்குமர்த்தம் (ஸ்வஸ்பர்ஶத்தாலேயித்யாதி.)

"சேர்ப்பா -" சேர்ந்தவனே.

"வணங்குமாறறியேன்" என்று உபாயம் தேடுவதில் வணங்காதே வெறுமனே யிருக்கவொண்ணுதோவென்ன (பரமபதத்தையித்யாதி.) "ஆறு" என்றதுக்குபாவம் (வணங்கவேணுமென்னுமித்யாதி.)

மாயத்தால் - மணந்தபேராயா - வல்வினையேனை - முழுதும் - ஈர்கின்ற குணங்களையுடையா யித்யாரப்ய, சேர்ப்பா - மநமும் வாசகமும் செய்கையும் யானு நீதானே - வணங்குமாறறியேனித்யந்வய:......................................*

---

# ஒன்பதாம்பாட்டு.

---

யானுநீதானேயாவதோமெய்யேயருநரகவையுநீயானல்
வானுயரின்பமெய்திலென்மற்றைநரகமேயெய்திலெனெனிலும்
யானுநீதானுய்த்தெளிதொறுநன்றுமஞ்சுவனரகநானடைதல்
வானுயரின்பமன்னிவீற்றிருந்தாயருளுகின்றாள்களையெனக்கே.

## ஆறுயிரப்படி.

(யானுநீதானே) உம்முடைய ஸ்வரூபமுட்பட சர்வமும் நானேயென்னுமிடமறிந்தீராகி லுமக்கென்பக்க லலப்தாம்சமுண்டோ வென்னில்;

சர்வமும் நீயேயாதலால், இவ்விடத்தே யிருந்தத்தோடு திருநாட்டிலிருந்தத்தோடு வாசியில்லை நிரூபிக்கில்; அப்படியேயாகிலும், சர்வமும்நீயே யென்னுமிடத்தை யறியச்செய்தேயும், திருநாட்டிலே நீயேயாயிருக்குமிருப்பைக்காணுதே யிருக்குமிவ்விருப்பாகிற நரகத்தை மிகவுமஞ்சாநின்றேன்; அருளுநின்தாள்களை யெனக்கே யென்கிறார்.........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இவ்வறிவோடேயெங்குமிருந்தாலும் குறைவற்றிருக்க, துஃகாத்மகமான சம்சாரத்திலிருக்க வஞ்சாநின்றேன், நிரதிசயபுருஷார்த்தமான ப்ராப்ய தேசவர்த்தியான வுன்திருவடிகளைத் தந்தருளவேணுமென்கிறார்.

யானும்-அஹம்புத்திவ்யவஹார விஷயமானநானும். நீதானே-த்வத்ப்ரகார பூதனுகையாலே நீ தானேயாயிருப்பன். இப்படி "ஃஹம்ெவெகூஃஸிஹமெவா ெஃவெதெ" (அஹம்வைத்வமஸிபகவோதேவதே) என்று, ஆவது - இவ்வர்த்தம். ப்ரமாணப்ரஸித்தமாகையாலே, மெய்யே-பரமார்த்தம். அரு - துஸ்தரமாய். நரகவையும்-துஃகோத்தரமான சம்சாரத்தில் வஸ்துக்களானவையும். "ஸவ-ுஂவஃ ஃஂஞ ஹ" (ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம) என்கிற மர்யாதையாலே, நீ-த்வத்ப்ரகார பூதங்கள். ஆனல்-ஆனபின்பு. வான்-விலக்ஷணமானவுனக்கு சேஷமானவாத்மாவுக்கநுரூபமான பரமபதத்தில். உயர்-உச்ச்ரிதமான. இன்பம்-ஆநந்தத்தை. எய்திலென்-பெற்றிருக்கிலென். மற்றை-அவிலக்ஷணமாய் ஸ்வாதந்த்ர்யாவஹமாய் துஃகோத்தரமாகையாலே யதுக்கெதிர்த்தட்டான. நரகமே-சம்சாரநிரயத்தை. எய்தில்-பெறில். என்-என். எனிலும்-என்கிறவர்த்தஸ்த்திதியானதுலோகத்திலே வ்யவஹரித்துப்போரிலும். யானும்-ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய் விலக்ஷணமான அஹமர்த்தம். நீதானுய்-அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநனை நீயாம்படித்வத்ப்ரகாரமாக. தெளிதொறும்-உணர்ந்தபோதெல்லாம். நரகம் - சம்சாரநிரயத்தை. நான் - நான். அடைதல் - கிட்டுகையை. ஸ்ரீ கௌஸ்துபத்தைச் சேற்றிலேபுதைத்தவோபாதி, நன்றும் - மிகவும். அஞ்சுவன்-அஞ்சாநின்றேன். வான் - பரமவ்யோமசப்தவாச்யமான பரமபதத்திலே. உயர் - அவாங்மநசகோசரமாம்படி உச்ச்ரிதமான. இன்பம்-ஆனந்தத்தை. மன்னி - உடையையாய்க்கொண்டு. நிரந்தரமாக, வீற்று - உன்னுடைய சர்வசேஷித்வவ்யாவ்ருத்திதோன்ற. இருந்தாய்-எழுந்தருளியிருக்கிறவனே. இவ்விபூதியிலுள்ளாரநுபவித்தடிமைசெய்கிற, நின்-உன். தாள்களை-திருவடிகளை. எனக்கு-எனக்கு. அருளு-தந்தருளவேணும்.............................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

"சகலபதார்த்தங்களும் நீயிட்டவழக்கு" என்கிறவிந்தஜ்ஞாநத்தோடே யிருக்குமிடத்தில் சம்சாரத்தோடு பரமபதத்தோடு வாசியில்லையேயாகிலும், இந்தஜ்ஞாநத்துக்குவிரோதியான சம்சாரத்திலிருக்க வஞ்சாநின்றேன், இதுக்கநுகூலமான பரமபதத்திலே யென்னைக்கொடுபோகவேணுமென்கிறார்.

(யானுநீதானேயாவதோமெய்யே) நான் "நீ" என்கிற சொல்லுக்குள்ளே யடங்கும்படி யுனக்குப்ரகாரமாய், நான் ப்ரஹ்மசப்தவாச்யனும்படி யிருக்கிற விவ்வர்த்தமோ, அது சத்யம். "ஆெத்தெவ ... ஃஹஂ ..." (ஆத்மேத்யேவதுக்ருஹ்ணீயாத், அஹம்மநுரபவம்ஸூர்யஸ்ச) என்றிறே முக்தர்பாசுரம். (மெய்யே) அதில் சம்சயமில்லை. (அருநரகவையும்நீ) எனக்குப் பொறுக்கவொண்ணுதே கால்வாங்கியல்லது நிற்கவொண்ணுதபடியான சம்சாரமும் நீயிட்டவழக்கு. இதிப்போதுசொல்லுகிறது, நீநினைத்தவன்று கழித்

துத்தரவல்லையென்கைக்காக. ஆக, நானுமெனக்கு விரோதியான சம்சாரமுமுனக்கு ப்ரகாரம். (ஆனல்) அர்த்ததத்வமிதுவானல். (வானுயரின்பமெய்திலென்) சேஷத்வஜ்ஞாநத்தோடே திருநாட்டிலேபோய் நிரதிசயாநந்தத்தைப்பெற்றிருக்கிலென். (மற்றைநரகமேயெய்திலென்) சுகத்துக்கும் சேஷத்வஜ்ஞாநத்துக்கு மெதிர்த்தட்டான சம்சாரத்திலேயிருக்கிலென். உடையவன்வைத்தவிடத்திலே கிடக்குமத்தனையன்றேயென்றேரர்த்ததத்வமுண்டு ; ( எனிலும் ) இவ்வர்த்த மிப்படியானலும். ( யானுநீதானய்த்தெளிதொறும் ) இஸ்ஸம்சாரமுனக்குப்புறம்பென்கிற வாகாரத்தாலன்றிக்கே, “ நானுனக்கத்யந்தசேஷபூதன் ” என்கிறதெளிவுபிறக்கப்பிறக்க. (நன்றுமஞ்சுவன்நரகம்நானடைதல்) சேஷத்வஜ்ஞாநமுண்டானபின்பு சேஷவஸ்துசேஷிசெய்தபடிகண்டு அவனெல்லைக்குள்ளே கிடக்குமித்தனையன்றே, நம்மைநிர்ப்பந்திக்கக்கடவனே வென்றிறே தேவர்க்குநினைவு; உனக்கிதுநினைவானலும், இஸ்ஸம்சாரத்திலிருப்பை நான் மிகவுமஞ்சாநின்றேன், சேஷத்வப்ரதிபத்திக்கு விரோதியாகையாலே. நீரஞ்சுங்காட்டில் நம்மாற்செய்யலாவதுண்டோ வென்னில் ( வானுயரின்பம் மன்னிவீற்றிருந்தாயித்யாதி) இதுவேயன்றிக்கே, நித்யவிபூதியிலே நிரதிஸயாநந்தயுக்தனய், உன்னுடைய சேஷித்வவ்யாவ்ருத்திதோற்ற விருப்பதோ ரிருப்புண்டு; அவ்விருப்பிலே யென்னையழைத்து அசாதாரணர்பரிமாற்றத்தை யெனக்குத்தரவேணும்......................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (யானுநீயித்யாதி) “ நன்றுமஞ்சுவன் நரகம் நானடைதல், வானுயரின்பம் மன்னிவீற்றிருந்தாய் ” இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (சகலேத்யாதி)

கண்டதெல்லாவற்றிலு மதிசங்கைபண்ணுகிறதென், சர்வமும் ப்ரகாரமாக நாம் ப்ரகாரியாகவிருக்கிற வறிவுகொண்டாறியிருக்கவொண்ணுதோவென்ன (சகலேத்யாதி) என்று கீழோடே யிதுக்குசங்கதி.

“யானுநீதானே, அருநரகவையும்நீ” என்றது - சகலபதார்த்தங்களுக்கு முபலக்ஷணம். தன்னை யவனகச்சொல்லலாயிருக்குமோவென்ன (ஆத்மேத்யேவேத்யாதி) முக்தர்பாசுரம்-முக்தப்ராயர்பாசுரமென்றபடி. அவதாரணர்த்தம் (அதிலித்யாதி)

நரகவையென்றது - நரகமென்றபடி. சம்சாரமுனக்கு ப்ரகாரமென்றதுக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறர் (இப்போதித்யாதி) பதத்வயோக்தார்த்தத்தைச்சேர்த் தருளிச்செய்கிறர் (ஆகநானுமித்யாதி)

“ எனிலும் ” என்றதுக்கர்த்தம் (உடையவனித்யாதிவாக்யத்வயம்) புறம்பென்கிற வாகாரத்தாலன்றிக்கேயென்றது-உன்னையொழிய ஸ்வதந்த்ரமென்கிறவாகாரத்தாலன்றிக்கே, உனக்கத்யந்த பரதந்த்ரமாகையாலே யென்றபடி. “ நீதானய்த்தெளிதொறும் ” என்றது-நீதானகத் தெளிவுபிறக்கப்பிறக்கவென்றபடி. “நான்” என்றதுக்குபாவம் (சேஷத்வஜ்ஞாநமித்யாதி) என்னுதல், “ உடையவன்வைத்தவிடத்திலே ” இத்யாதிவாக்யவிவரணமாதல்.

இதுவேயன்றிக்கே - இஸ்ஸம்ஸாரமேயன்றிக்கேயென்றபடி.

யானுநீதானேயென்றுதொடங்கி, யானுநீதானாய்த் தெளிதொறும் - நரகம்-அடைதல்-நான்-நன்றுமஞ்சுவன்-வானுயரின்பம் மன்னிவீற்றிருந்தாய் - நின்தாள்களையெனக்கு - அருளித்யந்வயஃ. ........................................................*

## பத்தாம்பாட்டு.

தாள்களையெனக்கேதலைத்தலைச்சிறப்பத்தந்தபேருதவிக்கைம்மாறாத்
தோள்களையாரத்தழுவியென்னுயிரையறவிலைசெய்தனன்சோதீ
தோள்களாயிரத்தாய்முடிகளாயிரத்தாய்துணைமலர்க்கண்களாயிரத்தாய்
தாள்களாயிரத்தாய்பேர்களாயிரத்தாய்தமியனேன்பெரியவப்பனே.

### ஆறாயிரப்படி.

( தாள்களை ) சம்சாரிகளெல்லாரும் ப்ராக்ருதவிஷயைக தாரக போஷக போக்யராயிருக்கச்செய்தே, என்னையுன்றிருவடிகளையே தாரக போஷக போக்யமாயிருக்கும்படி பண்ணியருளினாய்; இந்தமஹோபகாரமே யமையாதோ, இவ்வுபகாரத்துக்குக் கைம்மாறாக வென்னுடைய வாத்மாவையுனக்கே யடிமையாகத்தந்தேனென்னும் ப்ரீதியாலே சம்பாவித்து, தம்முடையவாத்மாவை ஆத்மாந்தசேஷமாகக்கொடுத்து, இந்தமஹோப்காரத்தைப்பண்ணின வுன்னையொருகால் காணவேணும். காணவெளிதோவென்னில்; காணவேணுமென்றபேக்ஷித்த வாஶ்ரிதர்க்காகவன்றே, நீயஸங்க்யேய திவ்யரூபங்களையும், அஸங்க்யேய கல்யாணகுணங்களையு முடையையாயிருக்கிறது, உன்னையொழிய வொருக்ஷணமாத்ரமும் செல்லாதிருக்கிறவெனக்கு மரியையாகலாமோ, பிரானேயென்கிறார்.

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆசாநுரூபோபகாரத்துக்குத் தாம்பண்ணின ப்ரத்யுபகாரத்தாலே யத்தலையிற்பிறந்த வௌஜ்ஜ்வல்யத்தையு மதிசயித வைபவத்தையு மருளிச்செய்கிறார்.

“ அருளாநின்றாள்களை யெனக்கே ” என்றவாசைக்கீடாக, தாள்களை - அத்திருவடிகளை. எனக்கே - எனக்கசாதாரணமாம்படி. சேஷத்வப்ரதிசம்பந்தியாகவும், ஆஶ்ரயணப்ரதிசம்பந்தியாகவும், கைங்கர்ய ப்ரதிசம்பந்தியாகவும், தலைத்தலை-மேன்மேலன. சிறப்பு-சிறக்கும்படி. தந்த-தந்தருளின. பேருதவி - மஹோபகாரத்துக்கு. கைம்மாறு-ப்ரத்யுபகாரமாக. அமூர்த்தமான, என்-என். உயிரை-ஆத்மவஸ்வை. உபகாரஸ்ம்ருதியிலுண்டான ஹர்ஷாதிசயத்தாலே, தோள்களை - தோள்கள். ஆர-நிரம்பும்படி. தழுவி - அமூர்த்தவஸ்துவை யாலிங்கநம்பண்ணுமாபோலே அத்யாதரம்பண்ணி. இஷ்டவிநியோகார்ஹமாம்படி, உபகார ப்ரத்யுபகாரங்களிலுண்டான க்ரயவிக்ரயஸமாதியாலே, அறவிலை-அறவிலை. செய்தனன் - செய்துதந்தேன். சோதீ - “ அதுவுமற்றாங்கவன்றன்னது ” என்று மீளாதே, உபகாரஸ்ம்ருதியிலுண்டான கலக்கத்தாலேபண்ணின சமர்ப்பணத்தை ஹர்ஷப்ரகர்ஷத்தாலே, உன்னதுபெ

ற்ருயாயிராதே பெருப்பேறுபெற்ருயான வௌஜ்ஜ்வல்யத்தையுடையவனே. இந்த வடிவிலொளியளவன்றிக்கே, பஹுமுகமாகத்தழைத்த, "ஆயிரந்தோளால்" என்கிறபடியே, தோள்கள்-உபகாரகமானதிருத்தோள்கள். ஆயிரத்தாய்-ஆயிரத்தையுமுடையையாய். "ஸஹஸ்ரஶீர்ஷா" (ஸஹஸ்ரஶீர்ஷா) என்கிறபடியே, முடிகள்-திருமுடிகள். ஆயிரத்தாய் - ஆயிரத்தையுமுடையையாய். "ஸஹஸ்ராக்ஷ:" (ஸஹஸ்ராக்ஷ:) என்கிறபடியே, துணை-இணையான. மலர்-மலர்போன்ற. கண்கள்-திருக்கண்கள். ஆயிரத்தாய்-ஆயிரத்தையுமுடையையாய். "ஸஹஸ்ரபாத்" (ஸஹஸ்ரபாத்) என்கிறபடியே. தாள்கள்-திருவடிகள். ஆயிரத்தாய் - ஆயிரத்தையுமுடையையாய். "நாமஸஹஸ்ரவாந்" (நாமஸஹஸ்ரவாந்) என்கிறபடியே, பேர்கள்-திருநாமங்கள். ஆயிரத்தாய் - ஆயிரத்தையுமுடையையாய். தமியனேன்-அறிவையும்சங்கிக்கும்படி தனிமைப்பட்டவெனக்கு. பெரியவப்பனே - உன்பெருமைக்கீடாக வுபகரித்தஸ்வாமியானவனே.

இப்படி யௌஜ்ஜ்வல்யத்தையும் வைபவத்தையுமுடையவனே, எனக்கு மஹோபகாரகனுறுயென்றுமாம். என்னுயிரை யறவிலைசெய்தனனென் றந்வயம்...*

## ஈடு - பத்தாம்பாட்டு.

தாம்மநோரதித்தபடியே திருவடிகளைத்தந்தருளின மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமாக வாத்மவஸ்துவை யுனக்குத்தந்தேனென்கிறுர். இப்போது திருவடிகளைக் கொடுக்கையாவது-சம்சாரத்தோடுபொருந்தாதபடியையும் தன்னையொழியச்செல்லாதபடியையும் தமக்குப்பிறப்பித்த தசையைப்ரகாசிப்பிக்கை.

(தாள்களையெனக்கே தலைத்தலைச்சிறப்பத்தந்த) "பலரடியார்முன்பருளிய" என்கிறபடியே-ஸ்ரீவால்மீகிபகவான், முதலாழ்வார்கள்தொடக்கமானுருண்டாயிருக்க, என்பக்கலிலே விசேஷ கடாக்ஷம்பண்ணி, மிகச்சிறக்கும்படிதந்த. பூர்ணமாகத்தந்தவென்கை. (பேருதவி)சொள்ளுகிறவென் தரத்திலன்றிக்கே, தன்தரத்திலேதருகை. (கைம்மாறு) ப்ரத்யுபகாரமாக. (தோள்களையாரத்தழுவி) ஒருவனுக்கொருவன் கந்யகையையணைத்துக் கொடுக்குமாபோலே, இங்குமணைத்துக்கொடுக்கலாம்படி அமூர்த்தமானவாத்மவஸ்து, தானுந்தோளுமாய்ப்பணைத்ததாயிற் றுபகாரஸ்ம்ருதியாலே. "எனதாவியாவியும் நீ - எனதாவியார் யானூர்," "மனமும்வாசகமும்செய்கையும் யானுநீதானே என்பதானவற்றை மறந்தார் ஹர்ஷத்தாலே. (என்னுயிரையறவிலைசெய்தனன்) என்னுடைய வாத்மவஸ்துவை தேவர்க்கநர்ஹமாம்படி யறவிலை செய்துதந்தேன்.

(சோதீ) இவர் தம்மதல்லாததொன்றைத் தம்மதாக ப்ரமித்துக் கொடுத்தாப்போலே, அவனும் தன்னதல்லாததொன்றைப் பெற்றுப் போலே ப்ரமித்துஜ்ஜ்வலனுகாகின்றுன். "விஜ்வர:" (விஜ்வர:) என்னும்படியிராநின்றுன். (தோள்களித்யாதி) முன்பிழவாலே கூப்பிட்டவர் தரித்துப்ரத்யுபகாரத்திலே யிழிந்தபடியைக்கண்டு, அத்தாலே யவனுக்குப்பிறந்தபௌஷ்கல்யத்தைப்பேசுகிறுர். உபகாரஸ்ம்ருதியாலே யிவருடை

யவாத்மவஸ்துதாளுந்தோளுமாய்த் தளிர்த்தாப்போலே, * சதைகரூபமானவடிவும் சதசாகமாயிற்று. ஒருசம்சாரியை லபித்து அவாப்த சமஸ்த காமனான விவனிப்படி ஹ்ருஷ்டனானென்கிறவிது கூடுமோவென்னில்; சார்வபௌமனான க்ஷத்ரியனுக்கோ ருயர்த்தியுண்டென்று, அபிமதையான மஹிஷிபக்கலிலே சாபலமின்றிக்கே யொழியுமோ. அவாப்தசமஸ்தகாமத்வமும் ப்ரமாணஸித்தமாய், ஆஶ்ரிதவாத்ஸல்யமும் ப்ரமாணப்ரஸித்தமானு லப்படியேகொள்ளுமத்தனையன்றோ எனக்கு ஹர்ஷத்தைப்பிறப்பித்து, அந்தஹர்ஷத்தைக்கண்டு அத்தாலே தானிப்படி விஸ்த்ருதனுவதே! யென்றுகொண்டாடுகிறார். ( தமியனேன் ) இவன்ஸ்வரூபத்திலு மாஶ்ரிதபாரதந்த்ர்யத்திலு மதிசங்கைபண்ணினபோதை வெறுமையை நினைத்துச்சொல்லுகிறார். (பெரியவப்பனே) பண்ணினவுபகாரமோரளவுபட்டிருந்ததில்லையீ !. என்பக்கலிலே யொருநன்மையுண்டாய்ச் செய்தாயல்லையிறே, ப்ராப்தியாலேசெய்தாயத்தனையிறே...................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (தாள்களையித்யாதி) "பேருதவிக்கைம்மாறு" என்றுதொடங்கி, "அறவிலைசெய்தனன்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (தாம்மநோரதித்தவித்யாதி) ஆனால், தாள்களைத்தந்தானோவென்ன (இப்போதித்யாதி)

"தலைத்தலை-" மிகவும். "சிறப்ப-" ஶ்லாக்யமாக. "எனக்கே" என்கிறவவதாரணார்த்தம் (பலரடியாரித்யாதி) பலிதம் (பூர்ணமாகவித்யாதி) உபகாரத்துக்கு மஹத்வமேதென்ன (கொள்ளுகிறவித்யாதி) நிரவயவமான வுயிருக்குத்தோள்களுண்டோவென்ன (ஒருவனுக்கித்யாதி) ஆத்மாவாகிற பெண்ணின்தோளை யாரத்தழுவியென்றபடி. ஆத்மஸமர்ப்பணம், ஶேஷத்யந்த பரதந்த்ரமாகச்சேர வுக்திகளோடு விரோதியாதோவென்ன (எனதாவியித்யாதி)

உஜ்ஜ்வலனனதுக்கு ப்ரமாணம் (விஜ்வரஇத்யாதி)

"தோள்களாயிரத்தாய்" என்றுதொடங்கி வர்ணிக்கிறதுக்குபாவம் (முன்னிழவாலேயித்யாதி) "அறவிலைசெய்தனன்-" அறவிலைசெய்து தந்தேனென்றபடி. விக்ரஹம் சதைகரூபமாயிருக்க, அநேகாவயவங்களாகப் பணைக்கக்கூடுமோவென்ன (உபகாரஸ்ம்ருதியாலேயித்யாதி) யுக்தியேயன்றிக்கே ப்ரமாணகதியாலும் கூடுமென்கிறார் (அவாப்தஸமஸ்தகாமத்வமுமித்யாதி) ஆஶ்ரிதவாத்ஸல்யமும் ப்ரமாணப்ரஸித்தமானுலென்றது - 'ந த தோ விஜ்வரஹ்ருஷ்டோ' ( நததோவிஜ்வரஹ்ருஷ்டோ ) இத்யாதிப்ரமாணங்களைப்பற்ற. "தோள்களாயிரத்தாய்" இத்யாதி சம்புத்திகளுக்கு பாவம் (எனக்குஹர்ஷத்தையித்யாதி.)

இப்போது ஹர்ஷமாயிருக்க, "தமியனேன்" என்கிறதென்னென்ன (இவன்ஸ்வரூபத்திலுமித்யாதி) " அப்பன் " என்றதுக்கு - உபகாரகனென்றருளிச்செய்து, ஸ்வாமியென்றர்த்தாந்தரம் (என்பக்கலிலேயித்யாதி)

சோதீ, தோள்களாயிரத்தாயென்றுதொடங்கி, பெரியவப்பனே - தாள்களையெனக்கே தலைத்தலையென்றுதொடங்கி, அறவிலைசெய்தன னித்யந்வயඃ .........*

# பதினொன்றும்பாட்டு.

பெரியவப்பனைப்பிரமனப்பனையுருத்திரனப்பனைமுனிவர்க்
குரியவப்பனையமரரப்பனையுலகுக்கோர்தனியப்பன்றன்னைப்
பெரியவண்குருகூர்வண்சடகோபன்பேணினவாயிரத்துள்ளு
முரியசொன்மாலையிவையும்பத்திவற்றாலுய்யலாந்தொண்டீர்நங்கட்கே.

## ஆறாயிரப்படி.

(பெரியவப்பனை) ப்ரஹ்மாதி சகலசுரகணங்களுக்கும், சர்வலோகத்துக்கு மீச்வரனாயிருந்த நீயே யுன்றிருவடிகளைத் தந்தருளவேணுமென்றுசைப்பட்டு, "ஸஜ்ஜேஷ்ஹாமஹ்லக்ஷயாஜ" (ஸங்கேமத்பாக்யஸங்க்ஷயாத்) என்று பிராட்டிசொன்னாப்போலே சொன்ன உரியசொன்மாலையான வித்திருவாய்மொழியைவல்லார்க் கெம்பெருமானைப்பெறலாம்; நான்பட்டபாடுபடவேண்டா. நீரிப்பாடுபடுவா னென்னென்னில்; இக்கண்ணாலே யிப்போதே காணவேணுமென்று படுகிறேன், எம்பெருமானைப்பெறுதொழிகிறேனென்று படுகிறேனல்லேனென்கிறார். ...............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழி ஆத்மோஜ்ஜீவநஹேதுவென்று பலத்தையருளிச்செய்கிறார்.

பெரியவப்பனை - சர்வாதிகஸ்வாமியாய். பிரமன் - சகலஸ்ரஷ்டாவானப்ரஹ்மாவுக்கு. அப்பனை - உத்பாதகனாய். அப்படியே, உருத்திரன் - சம்ஹாரகர்த்தாவான ருத்ரனுக்கும். அப்பனை - உத்பாதகனாய். முனிவர்க்கு - ஜ்ஞாநாதிகரான சநகாதிமுநிகளுக்கு. உரியவப்பனை - அசாதாரணசேஷியாய். அமரர் - அவசிஷ்டரான தேவர்களுக்கு. அப்பனை - உத்பாதகனாய். இப்படி, உலகுக்கு - சகலலோகத்துக்கும். ஓர் - அத்விதீயனான. தனியப்பன்றன்னை - ப்ரதாந நாயகனானவனை. பெரிய- பெரிய. வண் - சம்பத்தையுடைத்தான. குருகூர்-திருநகரிக்குநிர்வாஹகராய். வண்- ப்ரபந்தநிர்மாணமுகத்தாலே மஹோதாரரான. சடகோபன் - ஆழ்வார். பேணின- அத்யந்தாபிநிவேசம்பண்ணி யாதரித்துச் சொன்ன. ஆயிரத்துள்ளும் - ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளும். பகவத்போக்யதாதிகுண ப்ரதிபாதநத்தில், உரிய - உரிய. சொன்மாலை - சப்தசந்தர்ப்பத்தை யுடைத்தாயிருக்கும். இவைபத்தும் - இவைபத்தும். இவற்றால் - இவற்றாலே. தொண்டீர் - இதரவிஷயங்களிலே சபலராய்த் தொண்டராய்த் திரிகிறவர்களே. நங்கட்கு - அநாதிகால மங்யபரரான நமக்கு. உய்யலாம் - உஜ்ஜீவிக்கலாம்.

இது - எழுசீராசிரியவிருத்தம். .........................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் -இத்திருவாய்மொழியிற்சொன்ன வர்த்தத்தை சங்க்ரஹேணசொல்லி, இத்தை யப்யசிப்பார்க்கு சர்வேஸ்வரனை லபித்துஜ்ஜீவிக்கலாமென்கிறார்.

(பெரியவப்பனை) உபயவிபூதியுக்தனை. (பிரமனப்பனை) சதுர்த்தச புவநேஸ்வரனான ப்ரஹ்மாவுக் குத்பாதகனானவனை. (உருத்திரனப்பனை) அவன் புத்ரனான ருத்ரனுக்கும் நிர்வாஹகனானவனை. (முனிவர்க்குரிய வப்பனையென்கிறது) சநகாதிகளுக்கு ப்ரஹ்மபாவனையையாகையாலே, உரியவென்று - அண்மைசொல்லுகிறது. (அமரரப்பனை) தேவர்களுக் குத்பாதகனானவனை. (உலகுக்கோர்தனியப்பன்றன்னை) இப்படிபிரித்துச்சொல்லுகிறதென், சகலலோகங்களுக்கு மேகநிர்வாஹகனானவனை. "ஹ-ுதாநாംயொவ்யயஃவிதா" (பூதாநாம்யோவ்யயஃபிதா) என்றிறேயிருப்பது. இப்போதிவைசொல்லுகிறதென்னென்னில்; நிதியெடுத்தவன் "இன்னதுகண்டேன், இன்னதுகண்டேன்" என்னுமாபோலே, ஸ்வரூபத்திலும் குணத்திலுமதிசங்கைபண்ணினபோ திழந்தாராயிருந்தவற்றை லபிக்கையாலே யிவற்றைப்பிரித்துச்சொல்லுகிறார். முனிவர்க்குரிய வப்பனையென்று - ஆஸ்ரிதபவ்யதையைச்சொல்லுகிறது. (பெரியவண்குருகூர்) ரக்ஷகன் தாழ்த்தவாறே அதிசங்கைபண்ணுகையும், உபகாரஸ்ம்ருதியாலே ஹ்ருஷ்டராகையுமாகிற விவற்றுக்கடி அவ்வூரில் பிறப்பென்கை. (வண்சடகோபன்) மாநசாநுபவமாத்ரமாய்விடாதே, ப்ரபந்திகரித்த வௌதார்யம். (பேணினவாயிரத்துள்ளுமுரியசொன்மாலையிவ்வையும்பத்து) அவனைத் தாமாசைப்பட்டபடியைச்சொன்னபத்து. (உரியசொன்மாலை) "யதோவாசொநிவர்த்தந்தே" (யதோவாசோநிவர்த்தந்தே) என்று மீளுகையன்றிக்கே, பகவத்குணங்களுக்கு நேரேவாசகமாகை. (இவற்றாலுய்யலாந்தொண்டீர்நங்கட்கே) அநாதிகாலம் பகவத்விமுகராய், விஷயாந்தரப்ரவணராய், "ஶஸன்னேவ" (அஸந்நேவ) என்கிறபடியே அஸத்ஸமராயிருக்கிற நமக்கு, "ஸந்தமேநம்" (ஸந்தமேநம்) என்கிறபடியே உஜ்ஜீவிக்கலாம்........................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (பெரியவித்யாதி.) "இவற்றாலுய்யலாம்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியிலித்யாதி.) இத்திருவாய்மொழியிற் சொன்ன வர்த்தமாவது - ஆஸ்ரிதபாரதந்த்ர்யமும், ஸ்வவ்யதிரிக்த சமஸ்தவஸ்து ப்ரகாரித்வமும்.

"பெரியவப்பனை" என்றதுக்கு - பரமசேஷியென்றர்த்தமாகையாலே, அத்தால் பலித்தவர்த்தம் (உபயவிபூதியுக்தனையென்று.) "உரியவப்பனை" என்று விசேஷித்ததுக்கு பாவம் (ஸநகாதிகளுக்கித்யாதி.) ப்ரஹ்மபாவனை - ப்ரஹ்மைகத்யாநத்தையுடையராகை. தனி - அஸஹாயனென்றபடி. "ஏகநிர்வாஹகன்" என்னுமதுக்கு ப்ரமாணமாதல், "அப்பன்" என்றதுக்கு - ஜநகனாக வர்த்தாந்தரமாதல் (பூதாநாமித்யாதி.) இப்போதிவையென்றது - "பெரியவப்பன்" என்றுதொடங்கிச் சொன்னவற்றை. ஸ்வரூபத்தி லதிசங்கைதீர்ந்தமைக்கு பதங்கள் ஸ்புடமாய், ஆஸ்ரிதபாரதந்த்ர்யத்தி லதிசங்கைதீர்ந்தமைக்கு பதமஸ்புடமாயிருக்கையாலே, அதின்னதென்று வ்யக்தமாக வருளிச்செய்கிறார் (முனிவர்க்குரியவித்யாதி.)

திருநகரியில் சம்பந்தம் சொல்லுகிறதுக்கு பாவம் (ரக்ஷகனித்யாதி.)*வண்மையேதென்ன (மாநசாநுபவமித்யாதி.)

பேணின - ஆசைப்பட்ட. உரிய - தகுதியாக.

பெரிய வண்குருகூர் வண்சடகோபன் - ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு - பெரியவப்பனை யென்றுதொடங்கி, உலகுக்கோர் தனியப்பன்றன்னை - முனிவர்க்குரியவப்பனை - பேணின - இவையும்பத்து - உரியசொன்மாலை - இந்தப் பத்துப்பாட்டும் சர்வேஸ்வரனுக்கு ஸத்ருஸமான சந்தர்ப்பத்தை யுடைத்தாகையாலே, தொண்டீர், நங்கட்கு - இவற்றாலுய்யலாமென்றந்வயம். ................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(தேவிமாராவார்)

ஶ்ர்யாத்யைஃ பத்நயாதிமத்த்வாத்ரகுயதுகுலயோருத்பவாத்ஸ்வா
ஶ்ரிதேச்சாநீதேஹாவிக்ரஹத்வாத்ஸகலசிதசிதாமந்தராத்மத்வபூம்நா।
ஸ்வாமித்வாத்ஸ்வாஶ்ரிதாவேத்யகிலகுணதயா ஜ்ஞாநிநாமப்யதுஃகஸ்தா
நேச்சாபாதநாத்யைஃ ஸ்ப்ருஹயதிவஶகஸ்தேந ஸத்த்வஸ்தஶௌரிஃ॥ ௮௨

(ஶ்ர்யாத்யைஃ பத்நயாதிமத்வாத்) தேவிமாராவாரித்யாதி - லக்ஷ்மீபூமிகளை பத்நிகளாகவும், சேஷசேஷாசந வைநதேயர்களை பரிஜநமாகவு முடையனுகையாலும்; (ரகுயதுகுலயோருத்பவாத்) காணுமாறருளாய்காகுத்தா, எடுத்தபேராளன் நந்தகோபன்றனித்யாதி - ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக ராமக்ருஷ்ணரூபேணவதரிக்கையாலும்; (ஸ்வாஶ்ரிதேச்சாநீதேஹாவிக்ரஹத்வாத்) உமருகந்துகந்தவுருவம் நின்னுருவமாகியித்யாதி - தனக்கபிமதரானவருகந்தவடிவைத் தனக்குத்திருமேனியாகவும், அவர்களுக்கபிமதைகளான க்ரியைகளைத் தனக்கபிமதைகளாகவும் கைக்கொள்ளுமவனுகையாலும்; (ஸகலசிதசிதாமந்தராத்மத்வபூம்நா) ஓருயிரேயோவுலகங்கட்கெல்லாம், ஏழுலகங்களும் நீயேயித்யாதி - சமஸ்த சேதநாசேதநங்களுக்கு மந்தராத்மாவாய் நிற்கையாலும்; (ஸ்வாமித்வாத்) இறந்ததும்நீயேயித்யாதி- காலத்ரயத்திலுள்ள பதார்த்தங்களையும் சேஷமாக வுடையனுகையாலும்; (ஸ்வாஶ்ரிதாவேத்யகிலகுணதயா) வல்வினையேனையீர்கின்றகுணங்களையுடையாய்-ஆஶ்ரிதருடைய மநஸ்ஸை யாகர்ஷிக்கவல்ல வநந்தகல்யாணகுணங்களை யுடையனுகையாலும்; (ஜ்ஞாநிநாமப்யதுஃகஸ்த்தாநேச்சாபாதநாத்யைஃ) யானுநீதானாய்த் தெளிதொறும்நன்றுமஞ்சுவனித்யாதி - சேஷத்வஜ்ஞாநயுக்தராய், சேஷியான தன்னிடத்திலே ந்யஸ்தபரராயிருப்பாரையு மஸ்த்தாநத்திலே பயத்தை யுண்டாக்கித் தன்னை ப்ரார்த்திக்கப்பண்ணு மவனுகையாலும்; ஆதிசப்தத்தாலே - அநந்தர காதையிலே "என்னுயிரையறவிலைசெய்தனன்சோதீ" என்று சொல்லப்படுகிற நிரதிசயதீப்திமத்வம் ஸங்க்ரஹிக்கப்படுகிறது. இப்படிகளாலெம்பெருமான், தன்னைக் காணவேணுமென்றாசைப்படுமவர்களுக்குத் தானே த்ருஸ்யனுகாநிற்கிறு னென்று "தேவிமாராவார்" என்கிறதஸகத்திலே யாழ்வாராலே தெளிவிக்கப்பட்டதென்கிறூர். ௮௨

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

தேவனுறைபதியிற்சேரப்பெறுமையான்
மேவுமடியார்வசனுமெய்ந்நிலையும் - யாவையுந்தா
னுநிலையுஞ்சங்கித்தவைதெளிந்தமாறன்பான்
மாநிலத்தீர்நங்கண்மனம். (எக)

( தேவனுறைபதியில் ) இதில் - அவனுடைய குணங்களிலும் ஸ்வரூபத்திலு மதிசங்கித்த வதிசங்கையைப் போக்கினபடியைப் பேசின பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; இவர் மநோரதித்தபோதே அத்தேசத்திலேபுக்குத் திருவாய்மொழிகேட்பித் தடிமைசெய்யப் பெறுமையாலே மிகவுமவஸந்நராய், "அவனாஶ்ரிதபரதந்த்ரன், சர்வநிர்வாஹகனென்றிருந்தோம், இவையும் நம்மைத்தோற்றிப் பொய்யாகிறதோ" என்று இவரவன்குணத்திலும் ஸ்வரூபத்திலு மதிசங்கைபண்ணி, கீழ் தம்மைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக்கொண்டவுபகாரத்தை ஸ்மரிப்பித்து, அவன் தம்மதிசங்கையைப்போக்க, அத்தையநுசந்தித்து அதிசங்கைதீருகிற *தேவிமாரிலர்த்தத்தை "தேவனுறைபதியில்" இத்யாதியாலேயருளிச்செய்கிறாரென்கை.

( தேவனுறைபதியில் ) கீழே - "தன்மைதேவபிரானறியும்" என்னும்படியான *தேவர்க்குந்தேவனானவன், திவ்யமஹிஷிகளோடே நித்யவாசம் பண்ணுகிற திருவாறன்விளையிலே புக்குப் பாடி யடிமைசெய்யப் பெறுமையாலே யென்னுதல்; அன்றிக்கே, "தேவிமாராவார்திருமகள்பூமியேவமற்றமரராட்செய்வார்-அப்பனேகாணுமாறருளாய்," "என்றென்றேகலங்கி" என்றவசந்நரா யென்னுதல். ( மேவுமடியார்வசனுமெய்ந்நிலையும் யாவையும்தானுநிலையும்சங்கித்து ) தன்னையாஶ்ரயித்திருக்கிற ததீயபரதந்த்ரனும்நிலையிலும், சேதநாசேதநங்களெல்லாம் "தான்" என்கிற சொல்லுக்குள்ளே யடங்கும்படியான நிலையிலு மதிசங்கைபண்ண. அதாவது - "𑌕𑍍𑌯𑌾𑌤𑌃 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌃 - 𑌸𑌙𑍍𑌗𑍇 𑌮𑌤𑍍𑌭𑌾𑌗𑍍𑌯𑌸𑌙𑍍𑌕𑍍𑌷𑌯𑌾𑌤𑍍" ( க்யாதஃப்ராஜ்ஞஃ - ஸங்கேமத்பாக்யஸங்க்ஷயாத் ) என்னும்படி, "உமருகந்துகந்தவுருவம்நின்னுருவமாகி" என்றுதொடங்கி, "அறிவொன்றும்சங்கிப்பன்வினையேன்" என்றும், "இறந்ததும்நீயே" என்றுதொடங்கி, "அறிவொன்றும்சங்கிப்பன்வினையேன்" என்றும், இப்படி ஸ்வரூபத்திலும்குணத்திலு மதிசங்கைபண்ணினபடியை யடியொற்றினபடியென்கை. இப்படி யாஶ்ரித பாரதந்த்ர்யத்திலும் சர்வநிர்வாஹகத்வத்திலும் பிறந்த விஶ்ஸங்கை நிவ்ருத்தமாம்படி பூர்வோபகாரத்தை ஸ்மரிக்கும்படி, "மலரடிப்போதுகளென்னெஞ்சத் தெப்பொழுதுமிருத்திவணங்கப் பலரடியார் முன்பருளிய" என்றுபகரித்தத்தை ஸ்ம்ருதிவிஷயமாம்படி ப்ரகாசிப்பிக்க, அத்தை "தாள்களையெனக்கே தலைத்தலைச்சிறப்பத் தந்தபேருதவி" என்றநுசந்தித்து ப்ரீதராய்த் தெளிந்தவென்கை. ( தெளிந்தமாறன்பால் மாநிலத்தீர்நங்கள்மனம் ) இதரவிஷயங்களிலே மண்டியிருக்கிற மஹாப்ருதிவியிலுள்ளவர்களே, உங்களைப்போலன்றிக்கே ஆழ்வார்விஷயத்திலேயாயிருக்கும் நம்முடையமநஸ்ஸு. உங்களுக்கிதரவிஷயத்திலேயாயிருக்கும், ஆழ்வார்க்கு பகவத்விஷயத்திலேயாயிருக்கும், உபயவ்யாவ்ருத்தரான வெங்களுக்கு ஆழ்வார்விஷயத்திலேயாயிருக்கும் மநஸ்ஸு. (எக)

எட்டாம்பத்தில் - முதற்றிருவாய்மொழி முற்றிற்று.

ஆக, திருவாய்மொழி - எக.—பாட்டு - எஅங.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## எட்டாம்பத்து.

## இரண்டாந்திருவாய்மொழி.

### நங்கள் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(நங்கள்வரிவளை) இந்தவ்யசநம்மூறுகி எம்பெருமானோடேகலந்துபிரிந்த பிராட்டியாய், காணவேணுமென்று கூப்பிடுகிறார். ஸ்ரீவைகுண்டநாதனான சர்வேஸ்வரனும், "'உன்னுடைய கடாக்ஷலக்ஷ்யமாகப் பெறுவதுகாண்' என்றாசைப்படவேண்டும்படியான வடிவையுடைய நீயாசைப்படுகைக்கீடா யிருப்பதொரு விஷயமுண்டோ, நீயாசைப்பட்ட விஷயமேது" என்றும், "உனக்குச்செல்லுகிறவவசாதமேது" என்று மிவளுடையதோழிமார் கேட்க;

### பன்னீராயிரப்படி.

இரண்டாந்திருவாய்மொழியில், தம்முடைய வாகாங்க்ஷாநுரூபமாக வக வாயிலே யவன்வந்துமுகங்காட்டினபடியை யநுசந்தித்தவர், அவனுடைய பூர்த்தியைக்கண்டு பாஹ்யசம்ஶ்லேஷம்பண்ண வபிநிவேசித்து அதித்வரிதசித்தராய், ப்ராப்யபூதனான வீஸ்வரனுடைய வதிகம்யத்வஸூசகமான சௌலப்யாதி குணவத்தையையும், அநுபாவ்யாகாரத்தையும், ஆகர்ஷகமான வாபிரூப்யத்தையும், அநிஷ்டநிராசகமான பரிகரவத்தையையும், அபரிச்சேத்யமான வௌஜ்ஜ்வல்யாதிசயத்தையும், அதிசயிதஜ்ஞாநர்க்கு மவகந்துமசக்யதையையும், அபிநிவேசஜநகமானவாகாரவிசேஷங்களையும், அந்யசக்தவிஷயத்தி லசுலபத்தையையும், அநந்யார்ஹத்வாபாதகத்வத்தையும், சித்தாபஹாரியான திவ்யவிக்ரஹோச்ச்ராயத்தையு மநுசந்தித்து, ஏவம்பூதனான சர்வேஸ்வரனை யநுபவிக்குமிடத்து இவ்வருகுண்டான வநுபவத்தில் சங்கமற்றாலல்லது சித்தியாதென்றறுதியிட்டு த்வரையாலே ஆர்த்தரானதம்முடைய வார்த்தியை யாற்றுகைக்காக நிஷேதோந்முகரான ஸுஹ்ருத்ப்ரப்ருதிகளைக்குறித்துத் தம்முடைய நிஸ்ஸங்கதையை வெளியிட்டப்ரகாரத்தை. நாயகனான வீஸ்வரனைப்பிரிந்த நாயகியானவள் தன்னுடைய வபிசரணோ த்யோகத்தாலே தோழிமார் தாய்மாரோடு தான்வளர்த்தகிளி பூவை மயில் குயில்களோடு வாசியற சர்வர்பக்கலிலும் சங்கமற்றுத்தன்னுடைய ஸ்த்ரீத்வாதிகுணங்களையுமநாதரித்து அவன் வடிவழகிலே யபஹ்ருதசித்தையான வாகாரத்தைப்பேசின பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்........................................................*

ஈடு.

கீழ்த்திருவாய்மொழி ப்ராபகப்ரதாநம், இது ப்ராப்யப்ரதாநமாயிருக்கிறது. கீழேயவன் குணங்களிலும் ஸ்வரூபத்திலு மதிசங்கைபண்ணித்தெளிந்து, " வணங்குமாறறியேன் " என்று தந்தலையில் சாதநயோக்யதையைத்தவிர்த்து, " யானுநீதானேயாவதோமெய்யே " என்று அவன்பக்கல் ந்யஸ்தபரதையைச்சொல்லி, இப்படி ப்ராசங்கிகமாக "அவனேப்ராபகன் " என்னுமிடத்தை நிஷ்கர்ஷித்தார். அவனே ப்ராபகனுமிடத்தில் பேற்றுக்கு விளம்பஹேதுவில்லையாயிருக்க, அவன்வந்து முகங்காட்டாதொழிகைக்கு ஹேதுவுண்டாக வேணுமென்று பார்த்தார்; அதிலவன்பக்கல் பார்க்கலாவதொன்றில்லை, இதுக்கடி நம்பக்கலிலேயாகவேணும்; " ஊஊெவஃ-ஷ்ஹுதம்கிஞ்ிநூஹஃஹி நஸம்ஶய: " (மமைவதுஷ்க்ருதம்கிஞ்சிந்மஹதஸ்திநஸம்ஸய:) என்றுளிறேபிராட்டி. இவருமப்படியே, "நெடுநாள்சம்சரித்துக்கண்டதெல்லாவற்றிலும் ருசிபண்ணிப்போந்தோம், நம்முடைய பூர்வவ்ருத்தத்தையும் நமக்கிப்போதுள்ளவளவையும் சர்வஜ்ஞனவனறியாமையில்லை; நாமறியாதிருக்க, அவனறிய வவன்பக்கல் ருசியிலே நமக்குக்குறையுண்டாகவேணும்" என்றுபார்த்து, " அதுண்டாகவுமாம், இல்லையாகவுமாம், புறம்புண்டானவற்றில் ருசியில்லையென்னுமிடத்தை யவன்திருவுள்ளத்திலே படுத்துவோம்" என்றுபார்த்து, ப்ராப்யவிரோதிகளிலும், ப்ராபகவிரோதிகளிலும் தமக்குருசியில்லாமையையபந்யாபதேசத்தாலே யருளிச்செய்கிறார். சர்வேப்வரனோடேகலந்து பிரிந்தா ளொருபிராட்டி, அவன்றானே வரக்கண்டிருக்கையன்றிக்கே. * அபிசாரிகையாய் அவனிருந்ததேசத்தேறப்போவதாகவொருப்பட; இத்தையநுசந்தித்த தோழிமார்தொடக்கமானர், உனக்கிதாகாதுகாண் " என்று ஹிதஞ்சொல்லி மீட்கப்பார்க்க, அவர்களைக்குறித்து, தோழிமார்தொடக்கமானவர்களிலும் மற்றுமுள்ளவர்களிலும் நசையில்லாமையையவர்களுக்கறிவிக்கிறபாசுரத்தாலே தமக்கு நசையில்லாமையை யவன்திருவுள்ளத்திலே படுத்துகிறார்..........................................*

## ஜீயர் அரும்பதம்.

நங்கள் வரிவளைப்ரவேசமே, கீழ்த்திருவாய்மொழிக்கு மித்திருவாய்மொழிக்கும் பலிதமானவர்த்தத்தை யருளிச்செய்கிறார் ( கீழிவித்யாதிவாக்யத்வயத்தாலே ) ப்ராபகப்ரதாநமானபடி யெங்ஙனேயென்ன (கீழேயவனித்யாதி)

இத்திருவாய்மொழிக்கு சங்கதி (அவனேயித்யாதி) " நம்பக்கலிலேயாக " என்றதுக்கு ப்ரமாணம் (மமைவேத்யாதி) "ஊஊெவஃ-ஷ்ஹுதம்கிஞ்ிநூஹஃஹி நஸம்ஶய:" ( மமைவதுஷ்க்ருதம்கிஞ்சிந்மஹதஸ்திநஸம்ஸய: ) இத்யாதிஸீதா. " கிஞ்சித் " என்றது - அசிர்வாச்யமென்றபடி. ப்ராப்யவிரோதி - கிளிமுதலானவை. ப்ராபகவிரோதி-தாயார்முதலானர். ப்ராபகவிரோதிகளில் நசையற்றபடியைச்சொல்லுகை யித்திருவாய்மொழிக்கபேக்ஷிதம்; ஸ்ரீகோசாந்தரங்களிலுமில்லை.

மாதாபிதாக்களுக்கு ப்ராபகவிரோதித்வம் தச்சுஸ்ருஷணதிகளாலே சிலபலங்களு ண்டென்று சாஸ்த்ரம்சொல்லுகையாலே.

அந்யாபதேஶப்ரகாரத்தை விஸ்தரிக்கிறார் (சர்வேஶ்வரனேடித்யாதி) "கா ஞாயி௰ நீவயாயா திவஸஜெதம்ஸாஹிஸாரிகா" (காந்தார்த்திநீசயாயாதிஸங் கேதம்ஸகபிசாரிகா..............................................................*

---

# இரண்டாந்திருவாய்மொழி
## முதற்பாட்டு.

நங்கள்வரிவளையாயங்காளோநம்முடையேதிலர்முன்புநாணி, நுங்க ட்கியானொன்றுரைக்குமாற்ற நோக்குகின்றேனெங்குங்காணமாட்டேன், சங்கஞ்சரிந்தனசாயிழந்தேன்றடமுலைபொன்னிறமாய்த்தளர்ந்தேன்,வெ ங்கட்பறவையின்பாகனெங்கோன்வேங்கடவாணனைவேண்டிச்சென்றே.

### ஆறாயிரப்படி.

உகவாதார்முன் பென்னுடைய வவஸாதத்தை வ்யஞ்சிப்பிக்கை யிலுள்ள லஜ்ஜையாலும், அவஸாதந்தான் நிரவதிகமாயிருக்கையாலே ய துக்கு வாசகமாயிருப்பதொரு சப்தம்காணாமையாலு மென்னுடைய வவ சாதத்தை யுங்களுக்குச்சொல்லமாட்டுகிறிலேன். இப்படி யவசாதம்வரு கைக் காசைப்பட்டதென்னென்னில்; தீக்ஷ்ண நிரீக்ஷண நிர்தக்த ப்ரதிப க்ஷனை பெரியதிருவடியை வாஹநமாகவுடைய திருவேங்கடமுடையா னை யாசைப்பட்டு, சங்கம்சரிந்தன சாயிழந்தேன் தடமுலை பொன்னிற மாய்த் தளர்ந்தேனென்கிறார்..................................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், சர்வசுலபனான திருவேங்கடமுடையானை யபிநிவேசித்தெ ன்னுபரணசோபையோடு ஆபிருப்யத்தோடு வாசியறவிழந்தேனென்று தோழிமா ர்க்கறிவிக்கிறார்.

வரி-வரியையுடைத்தான. வளை-வளையையுடையராயிருக்கிற. நங்கள்-நம்மு டைய. ஆயங்காளோ - ஆயங்காள். நம்முடை - சமானசுகதுஃகைகளான வுங்களைப் போலன்றியே. ஏதிலர்-ஹிதவசநம்பண்ணி மீட்கத்தேடுகிறவர்களாகையாலே சாத் ரவகோடியிலே நிற்கிறதாயார், அயலார். முன்பு-முன்பு. நாணி-சொல்லநாணி. நு ங்கட்கு-அந்தரங்கைகளானவுங்களுக்கு. யான், உரைக்கும்-சொல்லலாவது. ஒன்று- ஒரு. மாற்றம்-வார்த்தையானது. நோக்குகின்றேன் - பாராநின்றேன். எங்கும்-எல் லாவழியாலும். காண-இந்தவிகாரஹேதுவைப்பாசுரமிட்டுச்சொல்லும்படிகாண.மா ட்டேன்-மாட்டுகிறிலேன். ஆதலால், என்விகாரங்கொண்டறியுமித்தனை; அதாவது, வெம்-ஆஶ்ரிதவிரோதிகளை யழியச்செய்யும், வெவ்விய. கண் - பார்வையையுடைய. பறவையின்-பெரியதிருவடியைநடத்தும். பாகன்-நிர்வாஹகனாய். அந்தவாஹநாதி

ஷ்ட்டாநத்தைக்காட்டி, எம்-என்னையடிமைகொண்ட. கோன்-ஸ்வாமியாய். அநுபவிக்கைக்கிடாக, வேங்கடம்-திருமலையிலே. வாணனை - சுலபனாய்வந்துநிற்கிறவிவனை. வேண்டி-இவ்வாகாரங்களடியாகவபிநிவேசித்து. சென்று-நடந்து. சங்கம்-என்னுடையசங்குவளைகளானவை. சரிந்தன-சரிந்துகழன்றன. சாய்-ஸ்வாபாவிகமான வடிவிலொளியும். இழந்தேன்-இழந்தேன். தடம்-பெரிய. முலை-முலைகள். பொன்னிறமாய்-பசப்பாலேபொன்னிறமாய். தளர்ந்தேன்-சிதிலசரீராயானேன்.

நிர்த்தோஷப்ரமாணருடனாய், நிருபாதிகசம்பந்தயுக்தனாய், நிரவதிகஸௌலப்யவிசிஷ்டனானவனென்றுகருத்து... ..........................................*

## ஈடு - முதற்பாட்டு.

தோழிமாரானவர்கள், "உகவாதாரொதிரன்றோ லஜ்ஜிக்கவேண்டுவது, எங்களுக்கு லஜ்ஜிக்கவேணுமோ, உனக்கோடுகிற தசையைச்சொல்லு" என்ன, பிறர்க்குமறைத்துங்களுக்குச் சொல்லலாம்வார்த்தைபார்த்தவிடத்தொன்றுங்காண்கிறிலேனென்கிறாள்.

(நங்கள்வரிவளை) முன்புங்களோடென்னோடு வாசியறவெல்லார்க்குமுண்டானவளை. "ஏகம் து:கம் ஸுகஞ்ச நௌ" (ஏகம்துஃகம்ஸுகஞ்சநௌ) என்று சுகதுஃகங்களொன்றாகச் சொல்லிப்போந்த நீங்களநுஷ்ட்டாநத்திலே வந்தவாறேபேதிப்பதே!. இப்போதநுஷ்ட்டாநத்தில் பேதமென்னென்னில்; கையிலேகண்டிலோமோ. நான்சங்கையற்றிருந்தேன், நீங்கள்சங்கையுடையிகோளாயிருந்திகோள். ( வரிவளை ) வரியையுடையவளையென்னுதல், தர்ஶநீயமானவளையென்னுதல். இவளைதரிப்பிக்கைக்காக அவர்களும்வருந்தி தரித்திருப்பர்களிறே. பிராட்டியைப்பிரிந்தவிடத்தில் பெருமாளிற்காட்டிலும் " தம்முடையகாவற்சோர்வாலேவந்தது" என்றுதளர்த்தியிரட்டித்திருக்கச்செய்தேயும், பெருமாள் தளருவவொன்று தம்முடைய தளர்த்திதோற்றாதபடி இளையபெருமாள் தரித்திருந்தாப்போலே, இவர்களும் தரித்திருப்பர்கள் வளையை. (ஆயங்காளோ) தோழிமாரிலும் தரமுண்டாயிருக்க, இப்போதெல்லாருமொருபடிப்பட்டிருக்கிறார்கள். (ஆயங்காள்) தோழிமீர். (ஓ) விஷாதாதிசயசூசகம். அவர்களைசம்போதித்துவைத்து வார்த்தைசொல்லுவதுக்குமுன்னே விஷண்ணையாகிறாள். இவ்விஷாதஹேதுவைப் புறம்புள்ளார்க்கு மறைத்தாயாகிலு மெங்களுக்குச்சொல்லவேண்டாவோ, உனக்கோடுகிறதசையைச் சொல்லாயென்ன (நம்முடையித்யாதி) தோழிமாரிப்போது ஹிதஞ்சொல்லி மீட்கப்பாராநின்றார்களாகிலும், பெறுமிடத்தில் விழுக்காட்டிலொத்திருக்கையாலே-நம்முடையேதிலரென்கிறாள். ஏதிலர்—சத்ருக்கள். இவளுக்குச்சில சத்ருக்களில்லையிறே; ஹிதஞ்சொல்லி மீட்கப்பார்க்கிற தாய்மாரிறே சத்ருக்கள். (ஏதிலர்முன்புநாணி) சத்ருக்கள்முன்புலஜ்ஜித்து. (நுங்கட்கு) தோழிமாரானவுங்களுக்கு. (யானித்யாதி) நானொருவார்த்தைசொல்லவேணுமென்றாராய்ந்து பாராநின்றேன். (எங்குங்காணமாட்

டேன்) இதுக்கொருபாசுரமிட்டுச் சொல்லவேணுமென்று பார்த்தவிடத்து ஒருபடியாலும் க்ஷமையாகிறிலேன்.

மாட்டேனென்கிறதென், சிலர்க்குமறைத்து ஆப்தர்க்குச்சொல்லத்தட்டென்னென்ன (சங்கம்சரிந்தன) நானித்தையார்க்குமறைத்து ஆர்க்குவெளியிடுவது. "ஜமஷஸ்தூிதழ" (ஜகதஸ்தமிதம்) என்றுப்போலே காணுமிருக்கிறது. இவளைக்கிடையாதபோது நாயகனில்லை, நாயகனில்லாதபோது உபயவிபூதியுமில்லை. அதாவது - இவள்கையும் வளையுமாயிராதவன்று நாயகனுளனாகமாட்டான், இருவருமானசேர்த்தியிலே யுண்டாகக்கடவ வுபயவிபூதியுமழியும். (சாயிழந்தேன்) அவனோடேகலந்துபெற்றதாய், அவன் வருமளவும் தரிக்கைக்குக் கைம்முதலான வெழிலையுமிழந்தேன். (தடமுலையித்யாதி) அவன்வந்தாலும் ப்ரயோஜநமில்லாதபடி அவன்கைம்முதலுமழிந்தது. (தடமுலை) போக்தாவாலுண்டறுக்கவொண்ணாத பரப்பையுடையமுலை. (பொன்னிறமாய்) விவர்ணமாய். சுக்ஷேத்ரம் மணலீடாய்ப்போமாபோலே. (தளர்ந்தேன்) இழந்தவைவந்தாலும் தொங்குகைக்காஶ்ரயமில்லை. (வெங்கட்பறவையின் பாகனெங்கோனித்யாதி) இழந்தவிழவுக்கு ஹேதுசொல்லுகிறது. (வெங்கட்பறவை) வெவ்வியகண்ணையுடைய பெரியதிருவடி. வருமிடத்தில் ப்ரதிபந்தகங்களையும் போக்கிக்கொடுவருமென்னுதல். சம்ஶ்லேஷதசையிலேபிரித்துக்கொடு போமென்னுதல், "ஃகூரஃ க்ரூரஹ்ருதயஃ" (அக்ரூரஃ க்ரூரஹ்ருதயஃ) (பறவையின்பாகனெங்கோன்) பெரியதிருவடிமுதுகிலிருப்பைக்காட்டியாயிற் றென்னையநங்யார்ஹையாக்கிற்று. (வேங்கடவாணனை) பரமபதத்திலிருப்பை யாசைப்பட்டேனல்லேன், நமக்குக்காட்சிதருகைக்கு வரநின்றவிடத்தே. (வேண்டிச்சென்றே) நம்மைவேண்டிவந்தவனை நாம் வேண்டிச்சென்று. நாமாசைப்பட்டுச் சென்றென்றபடி. அவன்றன் வரக்கண்டிருக்கையன்றிக்கே, அவனிருந்ததேசத்தளவும்சென்றபேக்ஷிதம் பெறுமையாலே, சங்கம் சரிந்தன. (சென்று) பால்சென்றுப்போலே சென்றற்றென்றுமாம் ................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (நங்களித்யாதி) "நம்முடையேதலர்" என்றுதொடங்கி, "காணமாட்டேன்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (தோழிமாரித்யாதி)

"நங்கள்" என்றத்தை * வரிவளைக்கு விசேஷணமாக்கி, விஶ்லேஷதசையிலே வரிவளையெங்கேயென்ன (முன்புங்களோடித்யாதி) "நங்கள்" என்று - ஆத்மநிபஹுவசநமாய், "வரிவளையையுடையநங்களாயங்காளோ" என்று - தோழிமார்க்கு விசேஷணமாக்கி, அர்த்தாந்தரம் (ஏகம்துஃகமித்யாதி) ரஸோக்தியாகக் கீழ்வாக்யவிவரணம் (நான்சங்கையற்றித்யாதி) சங்கு-வளையென்று ஸ்வபாவார்த்தம்; சங்கையென்றுத்வநி. இவள்கையில் வளைதொங்காதிருக்கஅவர்கள் தரித்திருக்கை ஸ்நேஹத்துக்குக்கொத்தையன்றோவென்ன (இவளைதரிப்பிக்கைக்காகவித்யாதி) இதுக்குத்ருஷ்டாந்தம் (பிராட்டியையித்யாதி) காவற்சோர்வு - ரக்ஷாச்யுதி. பஹுவசநார்த்தம் (தோழிமாரிலுமித்யாதி) விஷாதாதிசயமேதென்ன (அவர்களையித்யாதி)

என்னுடையேதலரென்னுதே, மீட்கப்பார்க்கிற தோழிமாரையுங்கூட்டி "நம்முடையேதலர்" என்கிறதென்னென்ன (தோழிமாரிப்போதித்யாதி) இப்போது "ஏதலர்" என்கிறது ஆரையென்ன (இவளுக்குச்சிலவித்யாதி)

"மாட்டேன்" என்றதுக்கர்த்தம் (இதுக்கொருபாசுரமித்யாதி)

கழன்றனவென்னுதே, " சரிந்தன " என்றதுக்குபாவம் ( ஜகதஸ்தமிதமித்யாதி ) அஸ்தமிதமானபடி யெப்படியென்ன (இவளைக்கிடையாதபோதித்யாதி வாக்யத்வயம்) உக்தார்த்தவிவரணம் (அதாவதித்யாதி வாக்யத்வயமும்.)

"சாய்" என்றது-சமுதாயசோபை. போச்சுதென்னுதே, "இழந்தேன்" என்றதுக்குபாவம் (அவனேடேயித்யாதி)

"தடமுலை" என்றுவர்ணித்து. "பொன்னிறமாய்" என்றதுக்குபாவம் (அவன்வந்தாலுமித்யாதி) "தடம்" என்றதுக்கர்த்தம் ( போக்தாவாலித்யாதி ) " தடமுலை " என்று - முலையினுடைய போக்யதையைச்சொல்லி, பொன்னிறமாச்சுதென்றதுக்கு த்ருஷ்டாந்தம் (சுக்ஷேத்ரமித்யாதி)

இரண்டாமர்த்தத்துக்குப்ரமாணம் (அக்ரூர இத்யாதி) "வேங்கடவாணனை" என்றதுக்கு வ்யாவர்த்யம் (பரமபதத்திலித்யாதி) "வேண்டிச்சென்று" என்றதுக்குசப்தார்த்தம் (நம்மையித்யாதி) "சென்று" என்றதுக்குபாவம் (அவன்ருனித்யாதி) "சென்று" என்றதுக்கர்த்தாந்தரம் (பாலித்யாதி) முந்தினவர்த்தத்துக்கு, "சென்று" என்றது - போயென்றபடி. இரண்டாமர்த்தத்துக்கு, இளைத்தென்றபடி.

வெங்கட்பறவையென்று தொடங்கி, வேண்டிச்சென்று - கிடையாமையாலே சங்கம் சரிந்தனவென்றுதொடங்கி, தளர்ந்தேன்-ஆகையாலே, நங்கள்வரிவளையென்றுதொடங்கி, காணமாட்டேனித்யன்வயம்.................................*

---

# இரண்டாம்பாட்டு.

வேண்டிச்சென்றென்றுபெறுகிற்பாரி லென்னுடைத்தோழியர்நுங்கட்கேனு,மீண்டிதுரைக்கும்படியையங்தோகாண்கின்றிலேனிடராட்டியேனுன், காண்டகுதாமரைக்கண்ணன்கள்வன்விண்ணவர்கோனங்கள்கோனைக்கண்டா, லீண்டியசங்குநிறைவுங்கொள்வானெத்தனைகாலமிளைக்கின்றேனே.

## ஆறுயிரப்படி.

( வேண்டிச்சென்று ) நீ யாசைப்பட்டவிஷயம் - திருவேங்கடமுடையானுகில் அது யுக்தம். உனக்குங்கூட ஸ்ப்ருஹணீயனுனவனுகிலும், நீயாசைப்பட்டால் கிடையாததுண்டோவென்னில்; ஆசைப்பட்ட பொருள்பெறுவாரெல்லாரிலும் தலையாயிருக்கச்செய்தேயும், ஆசைப்பட்டுப்பெருதே நான்படுகிறவ்யஸநம் வாசாமகோசர மாகையாலே வ்யஸநப்படுமத்தனையல்லது உங்களுக்குச் சொல்லுகைக் கொருசொல்லு சொல்லக்காண்கிறிலேன். அவனை யாசைப்பட்டா லுத்தரக்ஷணம் பெருதொழியில் தளர்ந்துகொண்டுநிற்கு மித்தனையோ வென்னில் ; ஸதாநுபூயமாநமானுலும் அபூர்வதர்ஶநீயமாய், புண்டரீகதளாமலாயதமான திருக்கண்களையுமுடையனுய் தத்ஸௌந்தர்ய பரிமுஷித சகலஜந மநோநயநனுய்,

* அயர்வறுமமரர்களதிபதியா யிருந்துவைத்து, என்னையடிமைகொண்ட பரமசீலனாயிருந்த வவனை யாசைப்பட்டுப் பெறாதே, என்னுடைய வலயாதிபூஷணங்களையும், ஆத்மகுணங்களையுமிழந்து, அவைகொள்கைக்கு நான்வருந்துகிற தெத்தனைகாலமுண்டென்கிறார். ........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநுபாவ்யாகார விசேஷத்தையுடையனான வவனபஹரித்த வளைமுதலானவற்றை வாங்குகைக் கெத்தனைகாலம் க்லேசிக்கிறேன், உங்களுக்ககப்பட விதுசொல்லும் விரகறிகிறிலேனென்கிறாள்.

சென்று - இவன்பாடே சென்று. ஒன்று - ஒன்று. வேண்டி - வேண்டி. பெறுகிற்பாரில் - பெறவேணுமென்றிருப்பாரில். என்னுடை-எனக்கசாதாரணைகளான. தோழியர் - தோழிமாரான. நுங்கட்கேலும் - உங்களுக்கேயாகிலும். ஈண்டு - இவ்விடத்தில். இது - இந்தவவசாதஹேதுவை. இடராட்டியேன் - து:காபிபூதையான. நான் - நான். சொல்லி யாறவேண்டி யிருக்கச்செய்தே, உரைக்கும்படியை - சொல்லும்படி. அந்தோ - ஐயோ !. காண்கின்றிலேன் - காண்கிறிலேன். து:கமேதென்னில், காண் - எப்போதும் காண்கைக்கு. தகு - தக்கிருப்பதாய். தாமரை - விகாஸம், செவ்வி, குளிர்த்தி, நாற்றங்களாலே தாமரைபோன்றிருக்கிற. கண்ணன்-கண்ணையுடையனாய். கள்வன் - பார்வையாலே தன் பவ்யதையைக் காட்டி வஞ்சித்து சர்வஸ்வாபஹாரம்பண்ணின க்ருத்ரிமனாய். இக்கண்ணழகாலே, விண்ணவர் - சூரிகளையடங்க. கோன் - அலற்றப்பண்ணுமவனாய். அப்படி, நங்கள்-என்னையும். கோனை - ஈடுபடுத்தினவனை. கண்டால் - கண்டால். ஈண்டிய - என்பக்கலில் நின்றுமங்கேபோய்க்குவிந்த. சங்கும் - வளைகளையும். நிறைவும் - ஸ்த்ரீத்வாதிபூர்த்தியையும். கொள்வான் - வாங்கிக்கொள்ளுகைக்காக. எத்தனை - எத்தனை. காலம் - காலமுண்டு. இளைக்கின்றேன் - தளர்ந்து க்லேசிக்கிறேன். ................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

" இப்படியானாலும் அந்தரங்கைகளான வெங்களுக்கு நோவிற்சொல்லலாகாததுண்டோ, சொல்லாய் " என்ன, துஃகாநுபவத்தால்வந்த விளைப்பின் மிகுதியாலே யுங்களுக்குச் சொல்லும் பாசுர மறிகிறிலேனென்கிறாள்.

( வேண்டிச்சென்றொன்று பெறுகிற்பாரில் ) என்பக்கலிலே வந்தொன்றை யபேக்ஷித்துப் பெறுமவர்களில் தலையான வரிசையையுடைய தோழிமாரான வுங்களுக்காகிலும். (என்னுடைத்தோழியர்) உயிர்த்தோழியர். சென்றென்றது - வந்தென்றபடி. அங்ஙனன்றிக்கே, பதபங்கத்தைப்பண்ணி, " (வேண்டிச்சென்றொன்றுபெறுகிற்பாரில்) அவனையொன்றபேக்ஷித்துச்சென்றாரி லோரபேக்ஷிதம் பெற்றாரில்லை ; ' ஸகல ஃபலப்ரதோஹிவிஷ்ணு:, ' ( ஸகலபலப்ரதோஹிவிஷ்ணு:, ) ' வேண்டிற்றெல்லாந்தரும் ' என்கிறவிடம் உக்திமாத்ரமே " என்றொரு தமிழன் நிர்வஹித்தான். ( ஈண்டு ) இப்போது. முன்பெல்லாம் சொல்லிப் போந்தேனேயாகிலு மிப்போது சொல்லலாவதுகாண்கிறிலேன். ( இது ) எல்லாவற்றிலும் பாசுரமிட்டுச் சொல்லிப் போந்தேனே யாகிலும், இது சொல்லு

கைக்குப் பாசுரங்காண்கிறிலேன். ( உரைக்கும்படியை ) நெஞ்சிலே விஷமூர்ந்தாப்போலே யூராநின்றது, பாசுரமிட்டுச் சொல்லலாவதில்லை. ( அந்தோ ! காண்கின்றிலேன் ) எனக்கோடுகிற தசையை யுங்களுக்குச் சொல்லி யகஞ்சுரிப்படுத்தி தரிக்கைக்கு, கேட்கிற வுங்களிலுமெனக்குத் தேட்டமாயிருக்க, பாசுரங்காண்கிறிலேன். "ப்ரலாபைரேவதார்யதே." ( ப்ரலாபைரேவதார்யதே. ) ( இடராட்டியேன்நான் ) நோவாட்டியேன் நான். என்னிடருக்கன்றிக்கே, "சொல்லு, சொல்லு" என்றலைக்கிற வுங்களுக்கன்றிக்கே, துஃகப்படுகிற நான்.

( காண்டகுதாமரைக்கண்ணன் ) காணத்தக்கிருந்துள்ள கண்ணையுடையவன். சதா தர்ஶநயோக்யமான கண்கள். விகாஸம், செவ்வி, குளிர்த்தி, நாற்றம், இவற்றால் பங்கஜசத்ருஶமாயிருக்கை. ( கள்வன் ) நோக்காலே தன் செல்லாமையை யாவிஷ்கரித்து, என்னுத்மாத்மீயங்களை யபஹரித்தவன். ( விண்ணவர்கோன்நங்கள்கோனை ) நித்யசூரிகளைப்போலே யென்னை யநந்யார்ஹையாக்கினவன். ஒருவிபூதியாகப் படுத்தினபாட்டைக்கிடீ ! றென்னை யொருத்தியையும் படுத்திற்று. ( கண்டால் ) காணப்பெற்றால். (ஈண்டியசங்கும்) திரண்டவளையையும். ஒருவலம்புரிகிடந்தவிடத்தே ஆயிரம்சங்குசேரும். * வலம்புரியாழியன் - வேங்கடவேதியனிறே. ( நிறைவும் ) அடக்கத்தையும். (கொள்வான்) கொள்ளுகைக்காக. தன்பக்கல் தொங்காதவை யெல்லாவற்றுக்கும் புகலங்கேயென் றிருக்குமே. இவளுக்குக் கைமுதலங்கேயிறே. இதுவாகி லுன்துணிவுகாலஞ்சென்றவாறே நீயே யிளைத்துமீளுகிறுயென்ன (எத்தனைகாலமிளைக்கின்றேனே) இதுசொல்லிப் பகட்டக் கேட்பனே, இவ்வாசையோடே யெத்தனைகாலமுண்டிளைத்துப்போருகிறது. ........................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. ( வேண்டியித்யாதி. ) "ஈண்டிதுரைக்கும்படியை யந்தோ காண்கின்றிலேனிடராட்டியேன்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை (இப்படியானுலுமித்யாதி.)

"சென்று - வேண்டி - ஒன்றுபெறுகிற்பாரி லென்னுடைத்தோழியர் நுங்கட்கேலும்" என்றந்வயித்தர்த்தம் ( என்பக்கலிலேயித்யாதி. ) "தலையானவரிசையையுடைய" என்றதுக்கு சப்தமேதென்ன ( என்னுடைத்தோழியரித்யாதி. ) இவ்வர்த்தத்துக்கு, "பெறுகிற்பாரில்" என்றது - சப்தமீ. "சென்று" என்றது-விபரீதலக்ஷணையாய், வந்தென்றபடி. த்விதீயார்த்தம் - வெறுப்பிலே. பதபங்கத்தைப் பண்ணியென்றது - "பெறுகிற்பார்" என்கிறவிவ்வளவிலே பதத்தைநிறுத்தியென்றபடி. "இல்" என்றது - இல்லையென்றபடி. "பெறுகிற்பார்-" பெற்றுரென்றபடி.

"ஈண்டு" என்கிறதுக்கு பாவம் ( முன்பெல்லாமித்யாதி. ) "இது" என்றதுக்கு வாசநை ( எல்லாவற்றிலுமித்யாதி. ) "உரைக்கும்படியை" என்றதுக்கு வாசநை ( நெஞ்சிலேயித்யாதி. ) "உரைக்கும்படியை - காண்மாட்டேன்" என்கையாலே - நெஞ்சில் நிறைந்திருக்கிறது சித்தம். "அந்தோ !" என்று விஷண்ணையாகிறவளுடைய பாவம் ( எனக்கோடுகிறவித்யாதி. ) அகஞ்சுரிப்படுத்தி - சங்கோசிப்பித்து. அப்படிசொலவு - தாரணத்துக்குடலாய்த் தேட்டமாயிருக்குமோவென் ( ப்ரலாபைரித்யாதி. )

நோவேதென்ன ( என்னிடருக்கித்யாதி ) "இடராட்டியேன்" என்றதுக் கவதாரிகையி லொருபாவமும், இங்கே யொருபாவமும்.

விவரணம் ( சதாதர்ஶநேத்யாதி. ) "தாமரைக்கண்" என்றதுக்கர்த்தம் ( விகாஸமித்யாதி. ) "தாமரைக்கண்ணன்" என்றத்தையும் கூட்டி, "கள்வன்" என்றதுக்கு பாவம் ( நோக்காலேயித்யாதி. ) இத்தால் பாவம் ( ஒருவிபூதியாகவி த்யாதி. )

இவள்கையிற்சங்குக ளவனிடத்தில் திரளுகைக்கு ஹேதுவேதென்ன (ஒரு வலம்புரியித்யாதி) அவனுக்குவலம்புரியுண்டோவென்ன (வலம்புரியாழியனித்யா தி) திருமொழி. ஸ்பஷ்டோர்த்த:. அவனிடத்திலே கொள்ளவேணுமென்கிற தென் னென்ன (தன்பக்கலித்யாதி) கேட்பனோ - கேட்பேனோவென்றபடி. பகட்ட-ப்ரமி ப்பிக்க.

காண்டகுதாமரையென்றுதொடங்கி, எத்தனைகாலமிளைக்கின்றேன்; ஆகை யாலே, இடராட்டியேன்நான் - சென்றுன்று - வேண்டி - பெறுகிற்பாரில் வைத் துக்கொண்டு, என்னுடைத்தோழியர் நுங்கட்கேலு மீண்டிதுரைக்கும்படியை - கா ண்கின்றிலேன் - அந்தோ! வித்யந்வய:. அன்றிக்கே, காண்டகுதாமரையென்று தொடங்கி, இளைக்கின்றேன்; ஆகையாலே, வேண்டிச்சென்றுன்று பெறுகிற்பாரி லென்னுடைத்தோழியரென்றுதொடங்கி, இடராட்டியேன்நான் - காண்கின்றிலே ன் - அந்தோ! என்று தமிழன் நிர்வாஹத்துக்கந்வயம். "𑌦𑍇𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑍁𑌵 𑌨𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌮𑍇𑌕𑌪𑌿𑌙𑍍𑌗𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌰𑍍𑌦𑍍𑌧𑌿𑌂𑌤𑍍𑌰𑌿𑌭𑍁𑌵𑌨𑌕𑌾𑌞𑍍𑌚𑌕𑌾𑌰𑍍𑌤𑍍𑌤𑌵𑍀𑌰𑍍𑌯𑌃। 𑌵𑍈𑌦𑍇𑌹𑌃 𑌪𑌰𑌮𑌪𑌦𑌂𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑍍𑌯𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌸𑍍𑌸𑌕𑌲𑌫𑌲𑌪𑍍𑌰𑌦𑍋𑌹𑌿𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃" (தேவேந்த்ரஸ்த்ரிபுவநமர்த்தமேகபிங்கஸ்ஸர்வர்த்திம்த்ரிபுவநகாஞ்சகார்த்தவீர்ய: । வைதேஹ:பரமபதம்ப்ரஸாத்யவிஷ்ணும்ஸம்ப்ராப்தஸ்ஸகலபலப்ரதோஹிவிஷ்ணு:) இதி ஸ்ரீவிஷ்ணுதர்மே..............................................................*

## மூன்றும்பாட்டு.

காலமிளைக்கிலல்லால்வினையேனுனிளைக்கின்றிலன்கண்டுகொண்மின்
ஞாலமறியப்பழிசுமந்தேனன்னுதலீரினிநாணித்தானென்
நீலமலர்நெடுஞ்சோதிசூழ்ந்தநீண்டமுகில்வண்ணன்கண்ணன்கொண்ட
கோலவளையொடுமாமைகொள்வானெத்தனைகாலமுங்கூடச்சென்றே.

### ஆறாயிரப்படி.

(காலமிளைக்கில்) அவனை யாசைப்பட்டுப்பெறாதே யுனக்குள்ள வையுமிழந்து அவை பெறுகைக்கு நெடுங்காலம்வருந்தியும் பெறாதபி ன்பு, இனித்தான் வருந்தினால் கிடைக்குமோ; இனியவைபெறுகையில் வருந்தாதேவிட்டாலோவென்னில்; நிரவதிக நீலஜ்யோதி:பரிவ்ருதமஹா வலாஹக ஸத்ருஶமான திருமேனியை யுடையனான க்ருஷ்ணனாலே யப ஹ்ருதமான கோலவளையொடுமாமைகொள்வா னுத்யுக்தையான நானெ

த்தனைகாலம் கூடச்சென்றாகிலும்கொள்வன், இக்காலதத்த்வந்தான் மு டிந்துபோமத்தனையல்லது நான்கொண்டல்லதுவிடேன், இத்தைக்கண்டு கொண்மின். அவன்றுனைசைப்பட வவனுக்கு மரியையாயிருக்கக்கடவ நீயவனையாசைப்பட்டா லுனக்குப் பழிவருமென்று லஜ்ஜையில்லையோ வென்னில்; ஞாலமறியப்பழிசுமந்தேன் நன்னுதலீரினி நாணித்தானென் னென்கிறாள் ................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அதிசயிதாபிரூப்யத்தை யுடையவனைச் சென்று கிட்டி யென்வ ளைதொடக்கமானவை வாங்குமிடத்தில், நீங்கள் "அவன் துர்லபன்" என்று வில க்கிலும், காலம் முடிந்துபோகிலும், நான் கிட்டியல்லது விடேனென்கிறாள்.

நீலம் - நீலநிறமாய். மலர் - விகசிதமாய். நெடும்-அபரிச்சேத்யமான. சோ தி - தேஜஸ்ஸாலே. சூழ்ந்த - சூழப்பட்ட. நீண்டமுகில் - மஹாமேகம்போலே யி ருக்கிற. வண்ணன் - நிறத்தையுடைய. கண்ணன் - க்ருஷ்ணன். கொண்ட - அப ஹரித்துக்கொண்ட. கோலம் - தர்ஸநீயமான. வளையொடு - வளையோடேகூட. மா மை - என்னிறத்தை. எத்தனைகாலமும் - அநேககாலம். கூடச்சென்றே - கூடச்செ ன்றேயாகிலும். கொள்வான் - கொள்ளுகைக்காக. ஞாலம் - லோகம். அறிய-அறி யும்படி. பழி - துணிந்து புறப்பட்டாளென்கிற பழியை. சுமந்தேன் - சுமந்தேன். நல் - அழகிய. நுதலீர் - நுதலையுடைய தோழிமீர். இனி - இனி. நாணித்தான்-லஜ் ஜித்து. என் - என்னப்ரயோஜநமுண்டு. ஆதலால், காலமிளைக்கிலல்லால் - காலமி ளைத்து முடிந்துபோமதொழிய. வினையேன் - அவன் துர்லபனானாலும் விடமாட்டா தபாபத்தையுடைய. நான் - நான். இளைக்கின்றிலன் - இளைத்துவிடுகிறேனல்லேன். கண்டுகொண்மின் - இது ப்ரத்யக்ஷித்துக்கொள்ளுங்கோள். .......................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

நாங்கள்சொல்ல மீண்டிலையாகிலு மெட்டவொண்ணாத விஷய மாகையாலே நாட்சென்றவாறே நீயேமீளுதி, எங்கள்வார்த்தைக்கு மீ ண்டாயாக வமையாதோவென்ன; காலதத்த்வம் முடியிலும் நானவனைக் கண்டல்லது விடேனென்கிறாள்.

(காலமித்யாதி) "[Grantha quotation]" (அநாதிர்ப்பகவாங்காலோநாந்தோஸ்ய) என்கிறகாலம் முடிந்துபோமித்த னையல்லது நானிளைத்துமீளுகிறிலேன். (நானிளைக்கின்றிலன்) "[Grantha quotation]" (நகாலஸ்தத்ரவைப்ரபு:) என்று காலத்துக்கு மவ்வருகான விஷயத்தை விளாக்கொலைகொண்ட வபிநிவேசத்தையுடை யநான் மீளுவனோ. (வினையேன்) "[Grantha quotation]" (துர்லபம்) என்றாலு ம் மீளவொண்ணாதவிஷயத்திலே கைவைக்கும்படியான பாபத்தைப்பண் ணினேனென்னுதல், நீங்கள்சொன்னவார்த்தை நெஞ்சில் படாதபடியா ன பாபத்தைப்பண்ணினேனென்னுதல். இப்போ திங்ஙனேசொன்னாயா கிலும் மேலநுஷ்டிக்கிறாய் நீயேயென்ன (கண்டுகொண்மின்) ப்ரத்ய

க்ஷிக்கலானவர்த்தம் பிறர்பக்கலிலேகேட்டறியவேணுமோ. உன்றுணிவி துவானபின்பு எல்லாருமொக்கப் பழிசொல்லுகிறார்களிறேயென்ன (ஞாலமறியப்பழிசுமந்தேன்) இன்றேநான்பழிசுமந்தது; “நாடுமிரைக்கவே” என்றவன்றே பழிசுமந்திலேனோ. “பழிசுமந்தேன்” என்னுமதுவார்த்தையோ, ஸ்த்ரீத்வப்ரயுக்தமான லஜ்ஜையை நோக்கவேண்டாவோவென்ன (நன்னுதலீரினிநாணித்தானென்) நம்மழகழிவதற்குமுன்பன்றோ அவைநோக்கவேண்டுவது, ஜகத்ப்ரஸித்தமாய்விட்டதாகி லினிலஜ்ஜித் தென்ன ப்ரயோஜநமுண்டு. (நன்னுதலீர்) நுதல்-நெற்றி. உங்கள்முகத்தி லெழிலழியாதிருக்க என்முகத்தி லெழில்குடிபோனபடி கண்டிகோளே; இந்தநெடுவாசியைப்பார்த்தன்றோ வார்த்தைசொல்லுவது. அது கிடக்க, அவன் சௌந்தர்யம் நம்மைநினைத்தபடி செய்யவொட்டாநின்றதோவென்கிறதுமேல் (நீலமலரித்யாதி) நீலமானநிறத்தையுடைத்தாய் (மலர்) விஸ்த்ருதமாய். (நெடும்) அபரிச்சேத்யமாய். (சோதிசூழ்ந்த) தேஜஸ்ஸாலே சூழப்பட்டு, அபரிச்சேத்யமாயிருப்பதொரு காளமேகத்தின்நிறம்போலே யிருக்கிறநிறத்தையுடையனுய், அவ்வடிவை பரார்த்தமாக்கிவைக்குமவ னபஹரித்த தர்ஶநீயமான வளையோடேகூட அவன் வாய்புலற்றும் நிறத்தையும் மீட்டுக்கொள்ளுகைக்காகக் காலமெல்லாம் கூடச்சென்றும் - ஞாலமறியப்பழிசுமந்தேன் நன்னுதலீரினிநாணித்தானென். (எத்தனைகாலமும் கூடச்சென்று) நெடுங்காலம் சம்ஶ்லேஷார்த்தமாகச்சென்றென்னுதல் ........ ........................... ............*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு. (காலமித்யாதி.) “காலமிளைக்கிலல்லால்வினையேன் நானிளைக்கின்றிலன்” என்றபதத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (நாங்களித்யாதி.)

நீ யிளையாமைக்கு ஹேதுவேதென்ன (நகால இத்யாதி.)

(அநாதிர்ப்பகவானித்யாதி) “[illegible] ஞஸஂயமேஃ” (அவ்யுச்சிந்நாஸ்ததஸ்த்வேதே ஸர்க்கஸ்த்தித்யந்தஸம்யமாஃ) இத்யுத்தரார்த்தம். அவர்களை “நன்னுதலீர்” என்கையாலே தானெழிலிழந்தமையை ஸித்தவத்கரித்து, “இனி” என்றதுக்கர்த்தம் (நம்மழகழிவதற்கித்யாதி.) “ஞாலமறியப்பழிசுமந்தேன் - இனி” என்று கூட்டி பாவாந்தரம் (ஜகத்ப்ரஸித்தமாயித்யாதி.) “நன்னுதலீர்” என்று அவர்களை சம்போதிக்கிறவளுடைய ஹார்த்தபாவம் (உங்கள்முகத்திலித்யாதிவாக்யத்வயமும்.)

அதுகிடக்க - பழி பரிஹரிக்குமது கிடக்கச்செய்தே யென்றபடி. மூந்தினவர்த்தத்துக்கு, “எத்தனைகாலமும் கூடச்சென்று” என்று - முழுச்சொல்லாய், காலமெல்லாம் கூடியுமென்றபடி.

நீலமலரென்றுதொடங்கி, கூடச்சென்று - ஞாலமறியப்பழிசுமந்தேன் நன்னுதலீரினிநாணித்தானென், ஆகையாலே, காலமிளைக்கிலல்லால் வினையேன் நானிளைக்கின்றிலன் கண்டுகொண்மினித்யந்வயஃ. அன்றிக்கே, “நாணித்தானென்” என்று க்ரியாபதமாகவுமாம். ....................................................*

## நான்காம்பாட்டு.

கூடச்சென்றேனினியென்கொடுக்கேன்கோல்வளைநெஞ்சத்தொடக்கமெல்லாம், பாடற்றொழியவிழந்துவைகல்பல்வளையார்முன்பரிசழிந்தேன், மாடக்கொடிமதிட்டென்குளந்தைவண்குடபானின்றமாயக்கூத்த, ளுடற்பறவையுயர்த்தவெல்போராழிவலவனையாதரித்தே.

### ஆறாயிரப்படி.

(கூடச்சென்றேன்) இதுக்குமுன்பவனை யாசைப்பட்டு உன்னுடைய வுபகரணங்களை யிழந்தாப்போலே, இனியுள்ளவற்றையுமிழவாதே யவனை யாசைப்படத்தவிர்ந்தாலோவென்னில்; ஹேமகிரிசிகர ஸத்ருஶ ப்ராஸாதாலங்க்ருதமாய், த்வஜவிராஜித ப்ராகாரபரிவ்ருதமாய், தக்ஷிணதிக் திலகபூதமாயிருந்த திருக்குளந்தையில் பரமோதாரமான மேலைத்திக்கிலே, வைநதேயவாஹநனாய், விஜிதரிபுநிகர சுதர்ஶந விப்ராந்த தக்ஷிணபுஜனாய்க்கொண்டு, ஸுந்ருத்தவத்தர்ஶநீயனாம்படி நின்றருளின வவனை யாதரித்துக்கூடச்சென்றேன். சென்று, கோல்வளைநெஞ்சத்தொடக்கமெல்லாம் பாடற்றொழியவிழந்து வைகல்பல்வளையார் முன்னே யென் ஸ்வபாவமெல்லாமிழந்தேன்; இனி யென்கொடுக்கேனென்கிறார் ...*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதாநிஷ்ட நிவர்த்தநமான வாயுதாதிபூர்த்தியையுடையவனைக்கிட்டவேணுமென்று நினைத்து, சர்வஸ்வாபஹாரம்பிறந்த நானினியெத்தைக்கொடுப்பதென்கிறாள்.

மாடம் - மாடங்களையும். கொடி - கொடியோடேகூடின. மதிள் - மதிளையுமுடைத்தாய். தென் - நன்றான. குளந்தை - திருக்குளந்தையில். வண் - அழகிய. குடபால் - மேற்பக்கத்திலே. நின்ற - நின்ற. மாயக்கூத்தன் - ஆஶ்சர்ய சேஷ்டிதயுக்தனாய். ஆடல் - ஹர்ஷத்தாலே தர்ஶநீயகதியான. பறவை - பெரியதிருவடியை. உயர்த்த - மேற்கொண்டிருப்பானாய். ஆஶ்ரிதவிரோதிநிரஸநத்தில், வெல் - வெற்றியையுடைத்தான. போர் - போரையுடையனான. ஆழி - திருவாழியை. வலவனை- வலத்திலேயுடையனானவனை. ஆதரித்து - ஆதரித்து. கூட-சம்ஶ்லேஷிக்கவேணுமென்று.நான், கோல்-அழகிய. வளை-வளை. நெஞ்சம்-நெஞ்சு. தொடக்கமெல்லாம்-தொடக்கமானவையெல்லாம். பாடு - என்பக்கல். அற்று-சேஷியாமல். ஒழிய - விட்டுப்போம்படியாக. இழந்து - இழந்து. பல் - பல. வளையார் - வளையையுடையபெண்டுகள். முன் - முன்னே. வைகல் - நெடுங்காலமுண்டு. பரிசு - என்ஸ்வபாவம். அழிந்தேன் - அழிந்துபோய். இனி - இனி. என் - எத்தை. கொடுக்கேன் - கொடுப்பேன்.

ஆழிவலவனென்று - வல்லவனென்றுமாம். நெஞ்சத்துளக்கமென்று-நெஞ்சோடுண்டான துவக்கிழந்தேனென்றுமாம் .........................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

உன்துணிவிதுவாக இன்னமுள்ளதடைய விழக்கிறுயிறேயென்ன; இனிநானெத்தை யிழப்பதென்கிறுள்.

(கூடச்சென்றேன்) நான்முடிந்து ஒருதலையேயாம்படி கிட்டினேனென்னுதல், சம்ஶ்லேஷார்த்தமாகச்சென்று கிட்டினேனென்னுதல். (இனியென்கொடுக்கேன்) பண்டேயெல்லாமிழந்தபின்பு இனியெத்தை யிழப்பது.

(கோல்வளையித்யாதி) தர்ஶநீயமானவளை, நெஞ்சுதொடக்கமானவையெல்லாம் என்பாடற்று வாஸனையோடே போம்படியாகவிழந்து. அவன் விபூதியோபாதி போருமிவள் பரிகரத்தின்பரப்பும். (வைகல்பல்வளையார் முன்பரிசழிந்தேன்) கழற்றிப்பூணு மாபரணமு மிழவாதவர்கள் முன்பே, கழற்றவேண்டாத வாபரணமான பரிசுண்டு - ப்ரகாரம் - லஜ்ஜை, அத்தையிழந்தேன். (மாடக்கொடிமதிள் தென்குளந்தை) மாடங்களையும், கொடியோடேகூடின மதிளையுமுடைத்தான தென்குளந்தையிலே. (வண்குடபால்நின்ற) அழகிதான மேலைபார்ஶ்வத்திலேநின்ற. இதுவுமொரு பரத்வஹேதுபோலே. (மாயக்கூத்தன்) ஆஶ்சர்யசேஷ்டிதன். (ஆடல் பறவையுயர்த்த) சர்வேஶ்வரவாஹநமென்னும் ஹர்ஷப்ரகர்ஷத்தாலே களித்தாடாநின்றுள்ள பெரியதிருவடியாலே வஹிக்கப்பட்டிருப்பானுய். (வெல்போராழிவலவனை) புக்கபோரிலே வென்றல்லது மீளாத திருவாழியை வலவருகேயுடையனுயிருக்கிற சர்வேஶ்வரனையாசைப்பட்டு. மாடக்கொடிமதிள் தென்குளந்தை வண்குடபால் நின்ற - ஆடல்பறவையுயர்த்த வெல்போராழிவலவனை - மாயக்கூத்தனை - ஆதரித்து-கூடச்சென்றேன்-கோல்வளைநெஞ்சத் தொடக்கமெல்லாம் பாடற்றொழிய விழந்துவைகல் பல்வளையார் முன்பரிசழிந்தேன் - இனி யென்கொடுக்கேனென்றந்வயம் ..................................... .........................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (கூடச்சென்றேனித்யாதி) "கோல்வளை" என்றுதொடங்கி, "பரிசழிந்தேன் – இனியென்கொடுக்கேன்" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (உன்துணிவித்யாதி)

முந்தினயோஜனையில், சரீரத்தைவிட்டு நித்யவிபூதியிலேபோ யவனோடே கூடும்படி சென்றென்று சப்தார்த்தம்; அத்தைக்கடாக்ஷித் தருளிச்செய்கிறுர் (பண்டேயித்யாதி)

பாடு - பக்கமாய், என்பார்ஶ்வத்திலே. அற்று - இராதே. ஒழிய - வாஸனையோடே போம்படியாக வென்றபடி. "எல்லாம்" என்கைக்கநேகமுண்டோவென்ன (அவன்விபூதியித்யாதி)

மேலைபார்ஸ்வத்திலே நிலையைச்சொன்னதுக்குபாவம் (இதுவுமித்யாதி) இதுவுமொரு பரத்வஹேதுவென்று -"ஆடல் பறவை, ஆழிவலவன்" என்றத்தை சமுச்சயிக்கிறது.......................................................................*

# ஐந்தாம்பாட்டு.

ஆழிவலவனையாதரிப்புமாங்கவனம்மில்வரவுமெல்லாந்
தோழியர்காணம்முடையமேதான்சொல்லுவதோவிங்கரியதுதா
னூழிதோறூழியொருவனுகநன்குணர்வார்க்குமுணரலாகாச்
சூழலுடையசுடர்கொளாதித்தொல்லையஞ்சோதிநினைக்குங்காலே.

## ஆறாயிரப்படி.

(ஆழிவலவனை) அவனை யாசைப்பட்டால் பெறவொண்ணுது, துஷ்ப்ராபன், அவனை யாசைப்படவேண்டாவென்னில்; * பரஞ்ஜ்யோதிஸ்ஸான சர்வேஸ்வரனை நினைக்கப்புக்கால் ஜ்ஞாநவதா மக்ரேசரர்களான சநகாதிமுநிகளுக்கு மூழிதோறூழிகூடினுலு மொருவனுகவுணரவொண்ணுத திவ்யசேஷ்டிதங்களையும், தேஜஃப்ரப்ருத்யஸங்க்யேய கல்யாணகுணத்தையுமுடையா னெருவனுகிலு மந்த சங்கசக்ரகதாதரனு யிருந்தவனை யாசைப்படுகையும், ஆசைப்பட்ட நம்போல்வார்பக்க லவன்வருகையும், நாம் தொடங்கியோ; இப்படி யரியனு யிருக்கச்செய்தே, ஆசைப்படுவாரும், பெறுவாருமெத்தனைவர், "அவனரியன்,அவனையாசைப்படவேண்டா" என்று சொல்லுகை யெளிதென்னுச்சொல்லு மித்தனையோவென்கிறுர்.......................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தத்த்வஜ்ஞராயிருப்பார்க்கும் அபரிச்சேத்யமான வதிசயிதௌஜ்ஜ்வல்யத்தை யுடையனுன சர்வேஸ்வரனை யாசைப்படுகையும், அவன் நமக்கு முகங்காட்டுகையும், நம்முடையவளவேயா யிருக்கிறதோவென்கிறுள்.

நினைக்குங்கால் - ஆராய்ந்து பார்க்குமளவில். தத்த்வத்தை, நன்கு - நன்ருக. உணர்வார்க்கும் - உள்ளபடி யறியவல்லார்க்கும். ஊழிதோறூழி - காலதத்வமுள்ளதனையும். ஒருவனுக - எவம்வித ஸ்வபாவனுயிருப்பா னெருவனுக. உணரலாகா - பரிச்சேதித்தறியவொண்ணுதபடி. சூழல் - ஆஸ்ரிதரை யகப்படுத்திக்கொள்ளும் சூழ்ச்சியாகிற சேஷ்டிதங்களை. உடைய - உடையனுய். சுடர் - ஸ்வரூபபரிணமம் வாராதபடி யுபாதாநமாகையும், உபாதாநமான தானே நிமித்தமாகையும், சிதசித்பரிணமம் தனக்குத் தட்டாதபடியுமாகிற தேஜஸ்ஸை. கொள் - உடைய, ஆதி-காரணபூதனுய். தொல்லை - நித்யாசாதாரணமாய். அம்-அப்ராக்ருதமான. சோதி-ஜ்யோதிர்மயரூபத்தை யுடையனுய். ஆழிவலவனை - கையுந்திருவாழியுமான சர்வேஸ்வரனை. ஆதரிப்பும் - ஆதரிந்தாஸ்ரயிக்கையும். ஆங்கு - ஆஸ்ரயணுவஸ்த்தையில். அவன் - சர்வஸ்மாத்பரத்வத்தோபாதி சௌசீல்யத்தையு முடையவவன். நம்மில்-

ஆஶ்ரிதைகளான நம்பக்கலிலே. வரவும் - வருகையும். அபேக்ஷிதங்கள்செய்கையும், எல்லாம் - எல்லாம். நம்முடையமேதான் - நம்மளவிலே யுடையோ மானேமோ. தோழியர்காள் - என்னேபாதி யிவ்விஷயத்தில் வாசியறியும் தோழிமீர்காள். சர்வ சாதாரணமான சௌலப்ய சௌசீல்யாதிகள் கிடக்க. சொல்லுவதோ - ஸ்வைரமான தௌர்லப்யம் சொல்லுகையோ. இங்கு - இங்கு. அரியதுதான் - அரியதாயிருக்கிறது.......................................................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

வாங்மநஸ்ஸுக்களுக் கெட்டவொண்ணுத விஷயத்திலே அதிப்ரவணேயா யேதுக்கு துஃகப்படுகிருயென்ன; ஆனுலு மவனேயாப்ரயிக்கையு மவனுலே விஷயீக்ருதராகையுமான விம்மர்யாதை நம்மைத்தோற்றியுண்டாயிற்ருே, அநாதியன்ருேவென்கிருள்.

( ஆழிவலவனேயாதரிப்பும் ) திருவாழியை வலவருகேயுடையனுனவனே யாப்ரயிக்கையும். (ஆங்கு) ஆப்ரயணதசையிலே. (அவன்) மேன்மையோபாதி நீர்மையுடையனுனவன். (நம்மில்வரவுமெல்லாம்) ஆப்ரயித்த நாமிருந்த ப்ரதேசங்களிலேவந்து விஷயீகரிக்கையுமாகிற விவை யெல்லாம். (தோழியர்காள்) என்னேபாதி யிவ்விஷயத்திலே யவகாஹித்திகோளல்லிகோளோ. (நம்முடையமேதான்) நம்மளவதோ. அவனே யாப்ரயிக்கையும் அவனபேக்ஷிதம் செய்கையுமாய்ப் போருகிறவிது நம்மைத்தோற்றிப் புதியதாகவிட்டதொரு மர்யாதையோ. (சொல்லுவதோவிங்கரியதுதான்) அர்த்தஸ்த்திதி யேதேனுமாயிருக்க, தோற்றிற்றுச் சொல்லுகையோ வரியது. நிவாரகரில்லையென்று ப்ரதிபந்தங்களேச் சொல்லக்கடவதோ. அவன்கிட்ட வரியனுயிருக்கிறமை யில்லையோவென்ன; அதுதானும் நான்சொல்லக் கேட்கவேண்டாவோ வுங்களுக்கு (ஊழியித்யாதி) (நன்குணர்வார்க்கும்-ஒருவனென்று-ஊழிதோறூழி-உணரலாகா) எத்தனேயேனு மதிசயிதஜ்ஞாநரா யிருப்பார்க்கும், காலமெல்லாம் கூடி யறியப்புக்காலுமறியப்போகாது ஏவம்விசிஷ்டனென்று. (சூழலுடைய) கிட்டினுரை யகப்படுத்திக்கொள்ளுகைக் கீடான விரகுகளே யுடையனுயிருக்கும். (சுடர்கொள்) தேஜஃப்ரப்ருத்யஸங்க்யேய கல்யாணகுணங்களே யுடையவன். ( ஆதி ) ஜகத்காரணபூதன். ( தொல்லையஞ்சோதி ) ஸ்வாபாவிகமாய், நிரவதிகதேஜோரூபமாய், இதரவிஸஜாதீயமான திவ்யவிக்ரஹத்தை யுடையனுயிருக்கும். (நினேக்குங்கால்) அவன் பெருமையை யாராயப்புகில்.

நினேக்குங்கால் - நன்குணர்வார்க்கும் - ஒருவனுக - ஊழிதோறூழி - உணரலாகாச் சூழலுடைய சுடர்கொளாதித்தொல்லையஞ்சோதி—ஆழிவலவனே யாதரிப்பும், ஆங்கவன் நம்மில் வரவுமெல்லாம், தோழியர்காள், நம்முடையமேதான், சொல்லுவதோ விங்கரியதுதான். விலக்ஷணவஸ்துவே சுலபமானுல், பற்றவடுக்குமோ விடவடுக்குமோவென்கிருள்.*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (ஆழிவலவனையித்யாதி.) "ஆழிவலவனை" என்று தொடங்கி, "நம்முடையமேதான்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (வாங்மநஸ்ஸுக்களுக்கித்யாதி.)

"நம்மில்வரவும்" என்றத்தைப்பற்ற (மேன்மையோபாதியித்யாதி.) நம்மில் - நாமிருந்தவிடத்தே.

விவரணம் (நிவாரகரித்யாதி.)

அந்வயத்தில் பரத்வத்தை முந்தறச்சொல்லி, அநந்தரம் நீர்மையைச் சொன்னதுக்கு பாவம் (விலக்ஷணவஸ்துவித்யாதி.).....................................*

# ஆறம்பாட்டு.

தொல்லையஞ்சோதிநினைக்குங்காலென்சொல்லளவன்றிமையோர்தமக்கு
மெல்லையிலாதனகூழ்ப்புச்செய்யுமத்திறநிற்கவெம்மாமைகொண்டா
னல்லிமலர்த்தண்டுழாயுந்தாரானூர்க்கிடுகோவினிப்பூசல்சொல்லீர்
வல்லிவளவயல்சூழ்குடந்தைமாமலர்க்கண்வளர்கின்றமாலே.

## ஆறுயிரப்படி.

(தொல்லையஞ்சோதி) அவனரியனல்லனேவென்னில்;

நாம்சொல்லுமளவோ வவனுடையவருமை, ப்ரஹ்மாதிதேவர்களுக்குங்கூட வறியவொண்ணாத ஸ்வரூபஸ்வபாவங்களையுடையா னொருவனல்லனே; அத்திறம்நிற்க, என்னை விஷயீகரித்தருளுகைக்காகத் திருக்குடந்தையிலேபுகுந்துவைத் தென்னுடைய சர்வஸ்வத்தையு மபஹரித்துத் தன்றிருவடிகளி லல்லிமலர்த்தண்டுழாயும் தருகிறிலன். இப்படியந்யாயஞ்செய்த வவனையொழிய மற்றாரைக்கூப்பிடுவோம், சொல்லீரென்கிறார் .....................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அதிசயிதஜ்ஞாநர்க்கும் அவகாஹ மஶக்யமாம்படி சம்ஶயஜநகனானவன் நம்மோடே சம்ஶ்லேஷித் தீடுபடுத்தினபின்பு, வேறார்க்குக் கூப்பிடுவோமென்கிறாள்.

நினைக்குங்கால் - ஆராயப்பார்த்தோமாகில். தொல்லை - அஸாதாரணமாய். அம் - அநவதிகமான. சோதி - அவனுடைய தேஜஸ்ஸானது. என் - என்னுடைய. சொல்லளவு - சொல்லிலடங்குமது. அன்று - அன்று. இமையோர்தமக்கும் - அதிசயிதஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளுக்கும். நிஷ்கர்ஷிக்கவொண்ணாதபடி, எல்லையிலாதன - அபர்யந்தமான. கூழ்ப்பு - சம்சயத்தை. செய்யும் - விளைக்கும். அ-அந்த. திறம் - மேன்மையிடையாட்டம். நிற்க-நிற்க. வல்லி - பூங்கொடியும். வளம் - அழகிய. வயல் - வயலும். சூழ் - சூழ்ந்த. குடந்தை - திருக்குடந்தையிலே. மா - ஶ்லாக்யமான. மலர் - தாமரைபோலேயிருக்கிற. கண் - திருக்கண்கள். வளர்கின்ற- வளரும்

படி சாய்ந்தருளின. மால்-ஆஶ்ரிதவ்யாமோஹத்தை யுடையவனுக்கொண்டு. எம்-என். மாமை-நிறத்தை. கொண்டான்-அபஹரித்தான். அல்லி - பூந்தாரினுடைய. மலர்-விகாஸத்தையுடைத்தான. தண்டுழாயும் - திருத்துழாய்மாலையையும். தாரான்-தருகிறிலன். இனி-நாமவனாலேநலிவுபட்டபின்பு. நலிந்தவவனையொழிய, ஆர்க்கு-ஆரிருக்கலாரிட்டு. பூசலிடுகோ-கூப்பிடுவோம். உறவுசெய்தகப்படுத்தினவனையொழிய வுறவில்லாதார்க்குக் கூப்பிட்டுப்ரயோஜநமென், சொல்லீர்-சொல்லிகோள்.*

## ஈடு - ஆறும்பாட்டு.

நீசொல்லுகிறபடியே யெளியனல்லன், துர்லபனென்ன; சுலபனாகிலும் துர்லபனாகிலும் தன்னையொழியச் செல்லாதபடி நம்மைப்புகுரநிறுத்தினவன்வாசலிலே கூப்பிடாதே, சம்பந்தமில்லாதார்வாசலிலேயோ கூப்பிடுவதென்கிறாள்.

(தொல்லையஞ்சோதிநினைக்குங்கால்) ஆராயப்புக்கால், இதரவிஜாதீயமான விக்ரஹத்தையுடையவன். (என்சொல்லளவன்று) அவனுடையவைலக்ஷண்ய மென்னுடையபேச்சினளவன்று. நானேரபலையிருந்துசொல்லுமளவோ வவன்பெருமை. (இமையோரித்யாதி) எத்தனையேனு மதிசயிதஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளுக்கு மளவிறந்த சம்ஶயங்களைப் பண்ணுநிற்கும். "யஞாயංஹமவாநு஬ு ஹாஜா நாதிவாฆංவஉழ," (யந்நாயம்பகவாந்ப்ரஹ்மா ஜாநாதிபரமம்பதம்,) "நஹ்ராஹ்யஃகேசித்க்வசித்.'' (நக்ராஹ்யஃகேசித்க்வசித்.) இதன்றிக்கே, இமையோரொன்கிறது-நித்யஸூரிகளையாய், அவர்கள் * சூட்டுநன்மாலைகள்தூயனவேந்திநிற்க, தான் * ஈட்டியவெண்ணெய் தொடுவுண்ணப்போரும்படியாகவுமாம். (அத்திறம்நிற்கவெம்மாமைகொண்டான்) அம்மேன்மையுங் கிடக்கச்செய்தே, தன்சௌந்தர்யாதிகளைக்காட்டி யென்னிறத்தைக்கொண்டான். என்னோடேயிட்டுக்கொண்டல்லது தரியாதானாய், நம்முடைய நிறத்தைக் கொண்டது தன்னுடைய வைலக்ஷண்யத்தைப் பாராதேயன்றோ. (அல்லிமலர்த்தண்டுழாயுந்தாரான்) நம்நிறத்தைக்கொண்டால் தன்னோடே ஸ்பர்ஶமுள்ளதொன்றைத்தந்து நம்மை யுஜ்ஜீவிப்பிக்கலாமிறே, அது செய்கிறிலன். அது செய்தானாகில் பூவுக்கிட்டோம்போலும் என்றிருக்கலாமே. (ஆர்க்கிடுகோவினிப்பூசல்சொல்லீர்) நம்மைநலிந்தவன்வாசலிலே கூப்பிடாதே ஆர்வாசலிலே கூப்பிடுவோம், சொல்லிகோள். (வல்லியித்யாதி) பூங்கொடிபடர்ந்த சோலைகளும், வளவிதான வயல்களுஞ்சூழ்ந்த திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிறசர்வேஶ்வரன். (மாமலர்க்கண் வளர்கின்றமால்) ப்ராப்தனானவன் மலர்ந்த தாமரைப்பூப்போலே யிருக்கிறகண் என்னளவிலலரக்காண்கிறிலேன். விசேஷகடாக்ஷம்பண்ணக்காண்கிறிலேனென்கை. கூக்குரல்கேட்கைக்குசந்நிஹிதனென்கை. வல்லிவ

ளவயல்சூழ்குடந்தை மாமலர்க்கண்வளர்கின்றமால் - தொல்லையஞ்சோதி யென்றுதொடங்கி, ஆர்க்கிடுகோவினிப்பூசல்சொல்லீரென்றந்வயம். ...*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (தொல்லையஞ்சோதி யித்யாதி) "அத்திறம்நிற்கவெம்மாமை கொண்டான் - ஆர்க்கிடுகோவினிப்பூசல்சொல்லீர்" இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை (நீசொல்லுகிறவித்யாதி) "குடந்தைமாமலர்க்கண்வளர்கின்ற" என்றத்தைப் பற்ற (சுலபனுகிலுமென்றது) "இமையோர்தமக்கும்" இத்யாதியைப்பற்ற (துர்லபனுகிலுமென்றது) "மால்" என்றத்தைப்பற்ற (சம்பந்தமில்லாதாரொன்றது)

"நினைக்குங்கால்-அஞ்சோதி" என்றதுக்குபாவம் (ஆராயப்புக்காலித்யாதி) தன்பேச்சளவன்றேவென்ன (நாஞேரபலையித்யாதி) இவ்விடத்திலே - "நஸமர்த்தாஸ்ஸுராஸ்தோதும் யமநந்யபவம்விபும்। ஸ்வரூபவர்ணநம்தஸ்ய கதம்யோஷித்கரிஷ்யதி" (நஸமர்த்தாஸ்ஸுராஸ்தோதும் யமநந்யபவம்விபும்। ஸ்வரூபவர்ணநம்தஸ்ய கதம்யோஷித்கரிஷ்யதி) என்றதநுஸந்தேயம்.

"தமக்கும்" என்றத்தை யுபஜீவித்தருளிச்செய்கிருர் (எத்தனையேனுமித்யாதி) சம்சயங்களையென்றது - அறியாமைகளையென்றபடி. சம்சயங்களைப்பண்ணுமென்னுமதக்கு ப்ரமாணத்வயம் (யந்நாயமித்யாதி) "தந்தாஸ்மஜகத்தாமதவஸர்வகதாச்யுத" (தந்தாஸ்மஜகத்தாமதவஸர்வகதாச்யுத). இத்யுத்தரார்த்தம். "தவாந்தராத்மாமமசயேசாந்யேதேஹிஸம்ஜ்ஞகா: । ஸர்வேஷாம்ஸாக்ஷிபூதோஸௌநக்ராஹ்ய:கேநசித்க்வசித்" (தவாந்தராத்மாமமசயேசாந்யேதேஹிஸம்ஜ்ஞகா: । ஸர்வேஷாம்ஸாக்ஷிபூதோஸௌநக்ராஹ்ய:கேநசித்க்வசித்) இதி ப்ரஹ்மருத்ரஸம்வாதே.

"சம்பந்தமில்லாதார் வாசலிலேயோகூப்பிடுவது" என்று - உபகாரம்சொல்லி, "மாமைகொண்டான்" என்று - அபகாரம்சொல்லுவானென்னென்ன (என்ஞேடேயித்யாதி) இட்டடு - விவாதம்.

அல்லி - உள்ளிதழ். தந்தானுகில் தரமோவென்ன (அதுசெய்தானுகிலித்யாதி) பூவுக்கிட்டோம்போலுமென்றது - காமுகர் காமிநிகளுக்கிட்டதென்றபடி. பூவுக்கிட்டோமென்று - காமுகர் காமிநிகளுக்கிட்டத்தை. பூவுக்கிட்டோமென்று சங்கேதச்சொல். இத்தால் - அவன் திருத்துழாய்தந்தானுகில், நாமும் பூவுக்கிட்டதென்றிருக்கலாமென்றுகருத்து.

"இனி - ஆர்க்கு - பூசல் - இடுகோ - சொலலீர்" என்றந்வயித்தர்த்தம் (நம்மை நலிந்தவனித்யாதி)

"வல்லி" என்றது - சோலைக்கு முபலக்ஷணம். வளவிதான - அழகிதான. தாத்பர்யம் (ப்ராப்தனுனவித்யாதி) மா-ஶ்லாக்யமாய். மலர் - மலர்ந்தவென்றபடி. கீழ்வாக்யத்துக்குபாவம் (விசேஷகடாக்ஷமித்யாதி) "குடந்தைமாமலர்க்கண்வளர்கின்ற" என்றதுக்குபாவம் (கூக்குரலித்யாதி)

வல்லிவளவயலென்றுதொடங்கி, மால்-நினைக்குங்கால்-தொல்லையஞ்சோதி யென்றுதொடங்கி, பூசல்சொல்லீரித்யந்வய:..........................................*

# ஏழாம்பாட்டு.

மாலரிகேசவனாரணன்சீமாதவன்கோவிந்தன்வைகுந்தனென்றென்
றோலமிடவென்னைப்பண்ணிவிட்டிட்டொன்றுமுருவுஞ்சுவடுங்காட்டா
னேலமலர்க்குழலன்னைமீர்காளென்னுடைத்தோழியர்காளென்செய்கேன்
காலம்பலசென்றுங்காண்பதாணையுங்களோடெங்களிடையில்லையே.

## ஆறாயிரப்படி.

(மாலரி) இப்படி கூப்பிடச்செய்தேயும் தன்னைக்காட்டாதிருக்கிற வவனை யாசைப்படுவாருண்டோவென்னில்; ஆஸ்ரிதவத்ஸலன், ஆஸ்ரிதார்த்திஹரன், ஆஸ்ரிதவிரோதிநிரஸநஸ்வபாவன், சர்வசக்தி, சமஸ்தகல்யாணகுணநிதி, ஸ்ரியஃபதி, பரமசீலவான், ஸ்ரீவைகுண்டநிலயனென்றுகூப்பிடும்படி பண்ணிவிட்டிட்டொன்று முருவும் சுவடுங்காட்டான்; ஏலமலர்க்குழலன்னைமீர்காள், என்னுடைத் தோழியர்காள், என்செய்கேன், வ்யஸநம் பொறுக்கலாயிருக்கிறதில்லை, காலம்பலசென்று முங்களாணையேகண்டல்லது விடேன், நீங்களிதற்குவிரோதத்தைப்பண்ணி லுங்களோடுமுறவில்லையென்கிறாள். ..............................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அபிநிவேஸஜநகமாய் ஆஸ்ரிதோபகாரகனுடைய வாகாரங்களையநுபவித்திடுபெட்டநான் அநேககாலஞ்சென்றேயாகிலும் கண்டல்லதுவிடேன், விலக்குகிற வுங்களோடெங்கள்பக்க லொருதொடக்கமில்லை யென்கிறாள்.

மால் - ஆஸ்ரிதவ்யாமுக்தனானவன். அந்தவ்யாமோஹத்தாலே, அரி-அவர்கள்பாபங்களை யபஹரிக்கும் ஸ்வபாவத்தையுடையவன். நிவ்ருத்தபாபரானார்க்கு நித்யாநுபாவ்யமான துணையாம்படி, கேசவன்-ப்ரஸஸ்தகேசனானவன். நாரணன்-கீழ்ச்சொன்ன வ்யாமோஹாதிகளுக்கெல்லாம் தளமானநிருபாதிக சம்பந்தத்தையுடையவன். சீமாதவன் - இக்குணங்களை ப்ரவ்ருத்தமாக்கும் லக்ஷ்மிக்குப்பதியானவன் ஸ்ரியஃபதித்வ நாராயணத்வங்கள் நிறம்பெறும்படிபிறந்து, கோவிந்தன் - ஆஸ்ரிதபவ்யனானவன். வைகுந்தன்-பவ்யதையைக்கண் டாஸ்ரயித்தார்க்குக்கொடுக்கும் பரிபூர்ணவிபூதியையுடையவனே. என்றென்று-என்றென்று இந்தஸ்வபாவங்களைப்பலகாலுஞ்சொல்லி. ஒருகார்யார்த்தமாகவன்றியே, ஓலமிட - ஆர்த்யதிசயத்தாலேகூப்பிடும்படி. இதுவே ஸ்வபாவமாக, என்னை-என்னை. பண்ணி-பண்ணி. விட்டு-கைவிட்டு. இட்டு-பொகட்டு. ஒன்றும்-ஒருப்ரகாரத்தாலும். உருவும்-தன்வடிவையும். சுவடும்-தன்னைக்கிட்டுகைக்கிடாயிருப்பதோரடையாளத்தையும். காட்டான் - காட்டுகிறிலன். என்னைவிலக்குவதாக வுத்யோகித்து, ஏலம்-ஏலம்போலே ஸ்ரமஹரமான பரிமளத்தையும். மலர்-பூவையுமுடைத்தாயுள்ள. குழல் - குழலையுடைய. அன்னைமீர்காள் - அன்னைமீர்காள். ஏவம்விதைகளாய், என்னுடை - எனக்கஸாதாரணைகளான. தோழியர்காள் - தோழிமீர்காள். அவனீடுபடுத்திமுகங்காட்டாதொழியில், என்செய்கேன்-என்னாலேசெய்யலாவதென்றுன். இப்போதைக்கு விட்டுப்பிடியெனிலும், பலகாலம்-காலதத்த்வமுள்ளதனையும். சென்றும்-சென்றாகிலும். ஆணை - ஆணையே.

காண்பது-காணக்கடவேன். உங்களோடு - இந்த வ்யவஸாயத்தைக் குலைக்கநினைக்கிற வுங்களோடு. எங்கள்-எனக்கு. இடை-ஒருசம்பந்தம். இல்லை-இல்லை.

கேவலம் ஆணையென்றது - அவன் நாமக்ரஹணம் பண்ணுமைக்கென்றுகருத்து. அல்லது, உறவில்லாத விவர்களை யாணையிடக்கூடாதிறே ...... ..............*

ஈடு - ஏழாம்பாட்டு.

அவனைக்கண்டுமுடிகை யரிது, விடவல்லையேயென்றறவுமுறையாரலைக்க; அவன் குணங்களிலே யகப்பட்ட நான் காலமெல்லாம்கூடவாகிலு மவனைக்கண்டல்லது விடேன், தத்விரோதிகளான வுங்களோட்டை சம்பந்தமெனக்கு வேண்டாவென்கிறுள்.

( மால் ) ஆஸ்ரிதர்பக்கல் வ்யாமோஹமே வடிவாகவுடையவன். * பொய்ந்நின்றஞாநந் தொடங்கி, இவ்வளவும்வரக் கூப்பிடப்பண்ணின வ்யாமோஹம். ( அரி ) விரோதிநிரசநசீலன். ( கேசவன் ) காலமெல்லாமநுபவியாநின்றுலும் மீளவொண்ணுதபடி ப்ரசஸ்தகேசன். (நாரணன்) ஆஸ்ரிதவத்ஸலன். ( ஸ்ரீமாதவன் ) அதுக்கடியான ஸ்ரியஃபதியானவன். ( கோவிந்தன் ) அவளோட்டைச் சேர்த்தியாலே ஆஸ்ரிதர்க்குக் கையாளாயிருக்குமவன். ( வைகுந்தன் ) இதுக்கெல்லாமடியான மேன்மையையுடையவன். ( என்றென்று ) நிரந்தரமாக. ( ஓலமிட ) காரியப்பாடறக்கூப்பிடும்படி. ( என்னைப்பண்ணி ) "ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய" ( ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய ) என்கிறபடியே, இதுவேயாத்ராயாகப்பண்ணி, ( விட்டு ) என்னைத் தன்பக்கலினின்றும் பிரித்து. ( இட்டு ) அசேதநவத்பொகட்டு. ( ஒன்றுமுருவும்சுவடுங்காட்டான் ) தன்வடிவைக்காட்டுகிறிலன், தானிருந்தவிடத்துக் கோரடையாளங்காட்டுகிறிலன். "தாஸாமாவிரபூத்" ( தாஸாமாவிரபூத் ) என்கிறபடியே வடிவைக்காட்டுதல், ராமாஶ்ரமத்தில் ஸ்ரீபரதாழ்வானுக்கு தூமாதிகளடையாளமானுப்போலே, இருந்தவிடத்துக் கொருசூசகம்காட்டுதல் செய்கிறிலன்.

( ஏலமலர்க்குழலன்னைமீர்காள் ) நீங்கள் பண்டிருக்குமாபோலே நானுங்களை யென்று காணக்கடவேன். ( ஏலமலர் ) ஏலம்போலேகமழுகிற பரிமளத்தையுடைய மலர். ( என்னுடைத்தோழியர்காள் ) உங்களுக்கு ஹிதஞ்சொல்லி மீட்குமதில்லை, என்ப்ரியமேயிறே யுங்களுக்குத்தேஶ்யம். ( என்செய்கேன் ) ஓரடையாளமும் காணுத நானினியெத்தைச் செய்வேன்.

எங்களைக்கேட்கில் விடவடுக்குமென்ன ( காலம்பலசென்றும்காண்பது ) காலமெல்லாம் கூடவாகிலும் கண்டல்லதுமீளேன். அதுசெய்துதலைக்கட்டலாவதொன்றல்லகாணென்ன (ஆணை) விடுகிறவர்களாணையிடாளிறே, பற்றுகிறவ ஞணையிடுகிருள். இப்படி துணியச்செய்தேயும் ஹிதஞ்சொல்லத் தொடங்கினர்கள் (உங்களோடித்யாதி) உங்களோடெனக்கொருசம்பந்தமில்லை, எனக்கு நீங்கள் ஹிதஞ்சொல்லவேண்டா. ...*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (மாலித்யாதி) " காலம்பலசென்றும்காண்பது, ஆணை, உங்களோடெங்களிடையில்லையே " என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (அவனையித்யாதி) முடிகை-தலைக்கட்டுகை.

அந்த வ்யாமோஹமேதென்ன (பொய்ந்நின்றவித்யாதி) அன்றிக்கே, ஸ்வவிஷயே வ்யாமோஹமாக வர்த்தாந்தரமாதல். "என்றென்றோலமிட" என்கையாலே (காரியப்பாடறக்கூப்பிடும்படியென்றது) காரியப்பாடாவது - க்யாதிலாப பூஜாபேக்ஷை. சுவடு-அடையாளம். " உருவும்சுவடும் - ஒன்றும் - காட்டான் " என்றந்வயம். அப்படி காட்டினவிடமுண்டோவென்ன (தாஸாமித்யாதிவாக்யத்வயம்)

இப்போது ஏலமலர்க்குழலாயிருக்கிறீர்களோவென்ன (நீங்கள்பண்டித்யாதி) " என்னுடை " என்றதுக்குபாவம் (உங்களுக்கித்யாதி வாக்யத்வயம்.)

ஆராணையிடுகிறதென்ன (விடுகிறவர்களித்யாதி)

ஏலமலர்க்குழலன்னைமீர்காள், என்னுடைத்தோழியர்காள் - மாலரியென்று தொடங்கி, உருவும்சுவடும் - ஒன்றும் - காட்டான் - என்செய்கேன், காலம்பலவென்றுதொடங்கி, இடையில்லையே யித்யந்வயஃ.........................................*

# எட்டாம்பாட்டு.

இடையில்லையான்வளர்த்தகிளிகாள்பூவைகள்காள்குயில்காள்மயில்கா, ளுடையநம்மாமையுஞ்சங்குநெஞ்சுமொன்று மொழியவொட்டாது கொண்டா, னடையும்வைகுந்தமும்பாற்கடலுமஞ்சனவெற்புமவைநணிய, கடையறப்பாசங்கள்விட்டபின்னையன்றியவனவைகாண்கொடானே.

## ஆறாயிரப்படி.

(இடையில்லை) தன்னை ப்ரதிபந்திக்கிற வன்னைமாரோடு முறவறச்செய்தேயு மவனைக்காணுதொழிந்தவாறே, தான்வளர்த்த தன்னுடைய லீலோபகரணமானகிளிகள், பூவைகள், குயில்கள், மயில்களென்கிற விவற்றோடுள்ள ஸம்பந்தமாகாதே யவனைக்காண்கைக்கு ப்ரதிபந்தகமென்றுபார்த்து, அவற்றைநோக்கிச்சொல்லுகிருள். அவன் நம்முடையநிறமும், வளையும்,நெஞ்சும் தொடக்கமாகவுள்ள சர்வஸ்வத்தையு மபஹரித்துக்கொண்டுபோனுனுகிலும், பரமப்ராப்யமான திருநாடும், திருப்பாற்கடலும், திருமலையும் தன்னையாசைப்பட்டார்க்குக்காணல் நணியவாகில் காட்டாதொழிவானென்னென்னில்; உங்கள்பக்கலுள்ளசங்கம் நிஃஶேஷமாகப்போனலல்லது அவனவைகாண்கொடான், ஆதலால் இனியுங்களோடு முறவில்லையென்கிருர் .........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிஸ்ஸங்கர்க்கல்லது அவன் சுலபனுகாதபடியாலே முன்பே பந்துவர்க்கத்தில் சங்கராஹித்யஞ்சொன்னளாய், தன் லீலோபகரணங்களான சுகசாரிகாதிவிஷயமான சங்கராஹித்யத்தைச்சொல்லுகிருள்.

யான் - யான். வளர்த்த - வளர்த்துப்போந்த. கிளிகாள் - கிளிகாள். பூவைகாள் - பூவைகாள். குயில்காள் - குயில்காள். மயில்காள் - மயில்காள். உங்களுக்கு, என்பக்கல், இடை - ஓரவகாசம். இல்லை - இல்லை. நம்முடைய - நம்முடையதான. மாமையும் - நிறத்தையும். சங்கும் - வளையையும். நெஞ்சம் - நெஞ்சையும். ஒன்றும் - ஒன்றும். ஒழிய - அவசேஷிக்க. ஒட்டாது - ஒட்டாதே. கொண்டான் - அபஹரித்துக்கொண்டவன். அடையும் - எட்டாதபடிபோயிருக்கிற. வைகுந்தமும்-பரமபதமும். பாற்கடலும் - திருப்பாற்கடலும். அஞ்சனவெற்பும் - திருமலையுமாகிற. அவை - ப்ராப்யஸ்த்தலங்களானவை. நணிய - கிட்டியநுபவிக்கக்குறையில்லை. பாசங்கள் - இதரவிஷயத்தில் ஸங்கங்களை. கடையற - ஸவாஸநமாக. விட்ட - விட்ட. பின்னை - பின்பு. அன்றி - அல்லது. அவன் - ப்ராப்யபூதனானவவன். அவை - அந்த போகஸ்த்தாநங்களை. காண்-காண. கொடான் - கொடான் .........................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

கிளிகள்தொடக்கமான லீலோபகரணங்களில் தனக்குண்டான வநாதரத்தைச்சொல்லுகிறாள்.

(இடையில்லை) என்பக்கலுங்களுக்கோரவகாசமில்லை. (யான்வளர்த்தகிளிகாள்) பழமைகொண்டு பின்னாட்டுகிறிகோளிறே நீங்களும். (பூவைகள்காளித்யாதி) முன்பிவளாதரித்தவை, அவனுடைய லீலோபகரணங்களிலும் குவாலிறே; அவையெல்லாவற்றிலும் நசையற்றபடி. (உடையவித்யாதி) எல்லாவற்றிலும் நசையற்றபடிக்கு ஹேதுசொல்லுகிறது. நம்முடைத்தானநிறமும், வளையும், நெஞ்சும், பாஹ்யங்களோடு ஆந்தரங்களோடு வாசியற நம்பக்கலொன்றும் சேஷியாதபடி கைக்கொண்டவன். (அடையும்வைகுந்தமும்) சேரும் பரமபதமும். இத்தலையிலுள்ளதெல்லாம் நேராகக்கொண்டு, எட்டவொண்ணாதநிலத்திலேபோய்ப்பாரித்து வெற்றிகொண்டாடியிருந்தானென்கை. (பாற்கடலும்) அத்தோடு தோள்தீண்டியான திருப்பாற்கடலும். (அஞ்சனவெற்பும்) திருமலையும் பரமபதத்தோடொக்கச் சொல்லலாயிருக்கிறதாயிற்று. (அவைநணிய) ப்ராப்யபூமியானவை, கிட்டிய-கிட்டிற்றின. ஆனாலநுபவிக்கத்தட்டென்னென்ன; அவன் சுணையுடையவன், புறம்பேயு மொருவிஷயத்திலே நசைகிடக்க ஸ்வாநுபவத்தைக்காட்டிக்கொடான் (கடையித்யாதி) பின்னாட்டாதபடி ஸவாஸநமாக பாஹ்யருசிபோனாலல்லது போகஸ்த்தாநங்களைக் காட்டிக்கொடான். கீழே "வணங்குமாறறியேன்" என்று ப்ராபகாபாஸங்களை விட்டார், இங்கே ப்ராப்யாபாஸங்களை விடுகிறார்... ...*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (இடையில்லையித்யாதி) " மயில்காள் " என்னுமளவும்கடாக்ஷித்தவதாரிகை (கிளிகளித்யாதி)

இடை - அவகாஶம்.

"யான்வளர்த்த" என்றதுக்குபாவம் (பழமைகொண்டித்யாதி) கிளிதொடக்கமானவற்றில் பஹுவசநத்துக்கு பாவம் (முன்பிவளித்யாதி)

"உடையாம்" என்றது - நம்முடையதானவென்றபடி. ஒழியவொட்டாது- சேஷிக்கவொட்டாதபடி. "அடையும்" என்றது - ஈஸ்வரனைச்சேருகிறவென்றபடி.. "கொண்டானடையும்வைகுந்தமும்" என்றுகூட்டிபாவம் (இத்தலையிலுள்ளதெல்லாமித்யாதி)

ப்ரவேசத்திலே - இத்திருவாய்மொழி ப்ராப்யப்ரதாநமென்று சொன்னத்தை யிங்கேகாட்டுகிறார் (கீழேவணங்குமாதித்யாதி)

நம் - உடைய - மாமையும் சங்குமென்றுதொடங்கி, காண்கொடான்; ஆகையாலே, யான் வளர்த்தவென்றுதொடங்கி, இடையில்லை யித்யந்வய꞉ .........*

## ஒன்பதாம்பாட்டு.

காண்கொடுப்பானல்லனூர்க்குந்தன்னைக்கைசெயப்பாலதோர்மாயந் தன்னன், மாண்குறட்கோலவடிவுகாட்டிமண்ணும்விண்ணுநிறையமலர்ந்த, சேண்சுடர்த்தோள்கள்பலதழைத்ததேவபிராற்கென்னிறைவினோடு, நாண்கொடுத்தேனினியென்கொடுக்கே னென்னுடைநன்னுதனங்கைமீர்காள்.

### ஆறுயிரப்படி.

(காண்கொடுப்பானல்லன்) உனக்குத் தன்னைக்காட்டானோ வென்னில்;

ஸ்வவ்யதிரிக்தவிஷயசங்கம் விட்டாலல்லதார்க்குந் தன்னைக்காட்டானென்று அவற்றை நோக்கிச் சொல்லி, தத்தர்ஸநார்த்தமான ஸ்வோத்யோகத்தை ப்ரதிபந்திக்கைக்காக, "அவனையாசைப்பட்டு, இதுக்குமுன்புன்னுடைய வுபகரணங்களை யிழந்தாப்போலே இன்னமுள்ளவற்றை யிழவாதே யிருக்கப்பார்க்கிலத்தைவிடு" என்று அந்யராயிருப்பார் சொல்ல; அவர்களைநோக்கி, "சர்வஜ்ஞனாய் சர்வசக்தியாயிருந்த சர்வேஸ்வரனாலு மிப்படி நிர்மிக்கமுடியாது" என்னும்படி யாஸ்சர்யமாய், நிரதிசயசௌந்தர்யவிசிஷ்டனுமாய், சர்வவசீகரணமான தன்னுடைய மாண்குறள் கோலவடிவுகாட்டி, மஹாபலியுடைய சர்வேந்த்ரியங்களையுமபஹரித்து, நெய்தல்பூவலர்ந்தாப்போலே சர்வலோகமும் நிறையும்படி மலர்ந்த திருமேனியையும், கற்பகச்சோலை தழைத்தாப்போலே தழைத்தநிரதிசயோஜ்ஜ்வலமான திருத்தோள்களையு முடையனாயிருந்த தேவபிராற்கென்னிறைவினோடு நாண்கொடுத்தேன், இனி யென்கொடுக்கேன், என்னுடை நன்னுதல் நங்கைமீர்காளென்று சொல்லுகிறார்......................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், வாமநவேஷத்தைக்காட்டி அநந்யார்ஹமாம்படி ஜகத்தை யளந்துகொண்ட சர்வேஸ்வரனுக்கு என்னுடைய பூர்த்தியோடே லஜ்ஜையு மிழந்தேன், இனி யெத்தைக்கொடுப்பேனென்கிறாள்.

ஆர்க்கும் - எத்தனையேனுமளவுடையார்க்கும். ஸ்வயத்நத்தாலே, தன்னை - தன்னை. காண் - காண. கொடுப்பான் - கொடுக்குமவன். அல்லன் - அல்லனாய்வைத்து. ஆஶ்ரிதார்த்தமாக, மாயந்தன்னால் - தன்வஞ்சநத்தாலே. கைசெய்-கைத்தொழிலுக்கு. அப்பாலது - அப்பாலாய். ஓர் - அத்விதீயமான. கோலம் - ஸௌந்தர்யத்தையுடைய. மாண் - அர்த்தியான. குறள்வடிவு - வாமநவேஷத்தை. காட்டி-காட்டி. அநந்தரத்திலே, மண்ணும் - பூமியும். விண்ணும் - ஊர்த்வலோகமும். நிறைய-நிறையும்படியாக. மலர்ந்த - விஸ்த்ருதனாய். சேண் - ஓங்கி. சுடர் - உஜ்ஜ்வலமான. பல - பல. தோள்கள் - தோள்களும். தழைத்த - தழைத்திருக்கிற. தேவபிராற்கு - ப்ரஹ்மருத்ராதிபதியானவவனுக்கு. என் - என்னுடைய. நிறைவினொடு-ஸ்த்ரீத்வபூர்த்தியோடேகூட. நாண் - லஜ்ஜையையும். கொடுத்தேன் - கொடுத்தேன். என்னுடை - என்னோடுறவுடையீர்களாய். நல் - உஜ்ஜ்வலமான. நுதல்-நெற்றியையுடைய. நங்கைமீர்காள் - குறைவற்றவர்களே. ஸ்வரூபஸ்வபாவங்களிரண்டுமிழந்தபின், இனி - இனி. என் - எத்தை. கொடுக்கேன் - கொடுப்பேன். ..............*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

"இதுவே துணிவாகில் ஆத்மாத்மீயங்களை நேராக விழக்கிறாயிறே" என்ற தாய்மாரைக்குறித்து, முன்பே யடையவிழந்திலேனோ,இனியெத்தை யிழப்பதென்கிறாள்.

( காண்கொடுப்பானல்லனார்க்குந்தன்னை ) ஸ்வயத்நத்தாலே காணநினைப்பாரெத்தனையேனு மதிசயிதஜ்ஞாநரோயாகிலும், தன்னைக்காட்டும் ஸ்வபாவனல்லன். (கைசெயவித்யாதி) (மாயந்தன்னால்-கைசெயப்பாலதோர்-கோலம்-மாண்குறள்-வடிவுகாட்டி) மாயந்தன்னால் - க்ருத்ரிமத்தாலே. க்ருத்ரிமமாவது - உபயவிபூதியுக்தனான தானொன்றுமில்லாதானாய்வருகையும், ஶ்ரிய:பதியான தன்னை அர்த்தியாக்குகையும், சிறுகாலைக்காட்டிப் பெரியகாலாலே யளந்துகொள்ளுகையும். (கைசெயப்பாலதான-கோலவடிவு) கைசெய்கைக்கப்பாலதான வழகையுடையவடிவு. கைசெய்கை - கைசெய் என்று குறைத்துக்கிடக்கிறது. அக்ருத்ரிமமானகோலமென்னுதல். அன்றிக்கே, கருவி உயிர்பெறவெழுதினாப்போலே யிருந்துள்ள கோலவடிவென்றுமாம். ( மாண்குறள்-வடிவு ) இரப்பிலே தகணேறி அபரிச்சேத்யனான தான் வாமநவேஷனாய். (கோலவடிவு) இப்படி அழிவுக்கிட்டவடிவுக் காலத்திவழிக்கவேண்டியிருக்கை. ( காட்டி ) மஹாபலியை வஞ்சிக்கைக்காக அக்ருத்ரிமமான வழகையுடையமாண்குறளான வடிவைக்காட்டி. (மண்ணும்விண்ணும்நிறையமலர்ந்த) கையிலே நீர்விழுந்த ஸமநந்தரம் சமஸ்தலோகங்களும் விம்ம வளர்ந்த. (சேண்சுடர்த்தோள்கள் பலதழைத்த) நீண்டு ஒளியையுடைத்தாய், கல்பகதரு பணைத்தாப்போலே பலதோள்களையுடையவன். (தேவபிராற்கு) இந்த்ரனிழந்த ராஜ்யத்தைக்கொடுத்து தேவர்களுக்குபகாரகனானவனுக்கு. (என்னிறைவினொடுநாண்கொடுத்தேன்) நானிரண்டுராஜ்யமிழந்தேன். இந்த்ரன் ராஜ்யம்பெற்றுப் போனான், மஹாபலி ஔதார்யம்பண்ணிப்போ

ளுன், நானெனக்கு ஸர்வஸ்வமுமான வடக்கத்தையும் லஜ்ஜையையுமிழந்தேன். (இனியென்கொடுக்கேன்) இனியெத்தைக்கொடுப்பேன். (என்னுடைநன்னுதல்நங்கைமீர்காள்) துஃகமறியாமையாலே அழகிலும்குறைவற்று, பரிபூர்ணைகளாய், எனக்கு ஹிதஞ்சொல்லலாமிறே யுங்களுக்கு. கீழே நாலாம்பாட்டிலே "இனியென்கொடுக்கேன்" என்றுசொல்லிற்று, இதுக்குமதுக்கும் வாசியென்னென்னில்; பெரியதிருவடி முதுகிலிருப்பிலும் கையுந்திருவாழியுமான சேர்த்தியிலுந் தோற்று * மாயக்கூத்தனையாதரித்துக் கலக்கச்சென்று கிட்டாமையாலே வந்த விழவதில்; ஸ்ரீவாமநனுடைய வழகிலும் சீலத்திலும் தோற்ற மஹாபலியைப்போலே சர்வத்தையு மிழந்தேனென்கிறதிதில். ........................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. ( காண்கொடுப்பானித்யாதி. ) "நாண்கொடுத்தேனினியென்கொடுக்கேன்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை ( இதுவேயித்யாதி. )

"கைசெய்கை" என்றிருக்கவில்லையேயென்ன (கைசெய்கையையித்யாதி.) "கைசெய்கைக்கப்பாலது" என்றத்தால் பலிதம் (அக்ருத்ரிமமித்யாதி.) கைசெய்கைக்கப்பாலதான - கடந்திருப்பதானவென்ருய், அக்ருத்ரிமமானவென்றபடி "க்ரியயாநிர்வ்ருத்தஃக்ருத்ரிமஃ" (க்ரியயாநிர்வ்ருத்தஃக்ருத்ரிமஃ) என்கிறந்யாயத்தாலே, க்ருத்ரிமமென்று - பண்ணப்பட்டத்தைச்சொல்லி, அக்ருத்ரிமமென்று - பண்ணப்படாதபடி யென்றபடி. இத்தால் - சித்ரத்தி லெழுதப்போகாத வடிவழகென்கை. கையாலே செய்கையை - சித்ரமாகவெழுதுகையை, பாலது - ஸ்வபாவமாகவுடைத்தான, கோலவடிவென்றர்த்தாந்தரம் ( அன்றிக்கே கருவியித்யாதி. ) கருவி-சித்ரம். உயிர்பெற - ப்ராணனுண்டாம்படி. அழகிதாகவென்றுமாம். "மாண்" என்று-ப்ரஹ்மசாரியாகையாலே ( இரப்பிலேதகணேறி ) என்கிருர். அழிவுக்கிட்டவடிவுக்கு - தன்மேன்மையைவிட்டு நீர்மையைக் கொள்ளுகைக்காகக்கொண்ட வடிவுக்கென்றபடி. முந்தினவர்த்தத்தை யுபஜீவித்து, "காட்டி" என்றதுக்கர்த்தம் ( மஹாபலியித்யாதி. )

"நிறைவும், நாணும்" என்றிரண்டாகையாலே ரசோக்தி ( நானிரண்டுராஜ்யமிழந்தேனென்று. ) இத்தைவிவரிக்கிருர் ( இந்த்ரன் ராஜ்யமித்யாதி வாக்யத்ரயத்தாலே. )

இவர்களுடையவழகையும் பூர்த்தியையும் சொல்லுகிறவளுடைய ஹார்த்தபாவம் ( துஃகமறியாமையாலேயித்யாதி. ) இப்புநருக்திக்கு விஷயபேதத்தாலே வந்தபேதமொழிய, ஆகாரபேதமில்லையென்று பரிஹரிக்கிருர் (பெரியதிருவடி யித்யாதிவாக்யத்வயத்தாலே.)

என்னுடைநன்னுதல்நங்கைமீர்காள் - ஆர்க்குந்தன்னை - காண்கொடுப்பானல்லனாய் - கைசெயப்பாலதான ஓர் - கோலம் - மாண்குறள் - வடிவுகாட்டி - மாயந்தன்னால் - மண்ணும்விண்ணும் நிறையமலர்ந்த சேண்சுடர் - தழைத்த - பல-தோள்களையுடைய - தேவபிராற்கு என்னிறைவினோடு நாண்கொடுத்தேன், இனி யென் கொடுக்கேனித்யந்வயஃ. ........................................*

# பத்தாம்பாட்டு.

என்னுடைநன்னுதனங்கைமீர்காள்யானினிச்செய்வதெனென்னெஞ்சென்னே, நின்னிடையேனல்லேனென்றுநீங்கிநேமியுஞ்சங்குமிருகைக்கொண்டு, பன்னெடுஞ்சூழ்சுடர்ஞாயிற்றோடுபான்மதியேந்தியோர்கோலநீல, நன்னெடுங்குன்றம்வருவதொப்பானுண்மலர்ப்பாதமடைந்ததுவே.

## ஆறாயிரப்படி.

(என்னுடை) "ஆகிலுமவனை யாசைப்படுகையீடல்ல" என்று அவர்கள்சொல்ல; நான் தோழிமாரைவிட்டாப்போலே யென்னெஞ்சென்னை நின்னிடையே னல்லேனென்று நீங்கி, சங்கசக்ர கதாதரனாய், நீலமான திருமேனியையுடையனாய், நிரவதிகதீப்தியுக்த திவாகர நிஶாகராலங்க்ருத நிரதிசய ரமணீய வரணீய ஜங்கம நீல மஹாசலம்போலேயிருந்த வவனுடைய நாண்மலர்ப்பாதமடைந்தது; யானினிச்செய்வதென், என்னுடைநன்னுதல் நங்கைமீர்காளென்கிறாள் ...... ......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், மநோஹாரியா யுத்துங்கமான வடிவழகையுடைய வவன்திருவடிகளிலே யென்னெஞ்சான தென்னைவிட்டு ப்ரவேஶித்தது, நீங்கள் நியமிக்கிறதுக்கென்னாற்செய்யலாவ தென்னென்கிறாள்.

என்-எனக்குபவ்யமாய்ப்போந்த. நெஞ்சு-நெஞ்சானது. நின்-அவன்விஶ்லேஷித்துப்போன வுனக்கு. இடையேனல்லேன்-கரணமாவேனல்லேன். என்று - என்று. என்னை-கரணியானவென்னை. நீங்கி-விட்டகன்று. நேமியும்-திருவாழியையும். சங்கும்-ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும். இருகை-இரண்டுதிருக்கையிலும். கொண்டு- ஏந்திக்கொண்டு. பல்-பலவாய். நெடும்-பரந்து. சூழ்-சூழ்ந்த. சுடர் - சுடரையுடைத்தான. ஞாயிற்றோடு - ஆதித்யனோடேகூட. பால் - பால்போலேவெளுத்தநிறத்தையுடைய. மதி - சந்த்ரனையும். ஏந்தி - தன் கொடுமுடிகளிலே யேந்தி. ஓர் - அத்விதீயமாய். கோலம் - தர்ஶநீயாகாரமாய். நீலம் - நீலநிறத்தையுடைத்தாய். நல் - தாது வைசித்ர்யாதிகளாலுண்டான வைலக்ஷண்யத்தையுடைத்தாய். நெடும் - உத்துங்கமான. குன்றம் - மலை. வருவது - நடந்துவருமது. ஒப்பான்-ஒத்து ஆஶ்ரிதர்க்குவந்து தோற்றுமவனுடைய. நாள் - அபிநவமான. மலர் - தாமரைபோலே யிருக்கிற. பாதம்- திருவடிகளை. அடைந்தது - அடைந்தது. என்னுடை - என்னோடுறவுடையீர்கோளாய்வைத்து. என்னீடுபாடறியாதபடியாலே, நன்னுதல் - அவயவசோபையாலும். ஆத்மகுணத்தாலும், நங்கைமீர்காள் - பூர்ணைகளாயிருக்குமவர்களே. யான் - உங்களைப்போலன்றியே ஈடுபட்ட நான். இனி - அஸஹாயையாம்படி நெஞ்சமிழந்தபின்பு. உங்கள் நியமநத்துக்கு, என் - எத்தை. செய்வது - செய்வேன்.

நெஞ்சுடையாரன்றோ தரித்திருப்பதென்று கருத்து. ......................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

எல்லாஞ்செய்தாலும் ஹிதைஷிகளான நாங்கள் சொல்லிற்றுக் கேட்கவேணுங்காணென்ன; நீங்கள்சொன்ன வார்த்தைகேட்கைக்கு நெஞ்சுவேணுமே, அதன்பக்கல் போயிற்றென்கிறாள்.

(என்னுடைநன்னுதல்நங்கைமீர்காள்) எனக்குறவுமுறையாரான நீங்கள், வடிவழகிலும் ஸ்த்ரீத்வத்திலும் குறைவற்றிருக்கையாலே நிர்த்துஃகைகளாயிருந்திகோள். (யான்) நானெல்லாமிழந் தவஸந்நையானேன். (இனிச்செய்வதென்) இப்படியானபின்பு, எத்தைச்செய்வேன். இவற்றைமீட்கவோ, அவனைநியமிக்கவோ.

எல்லாவளவிலும் தரித்திருக்கவேண்டாவோவென்ன ; அதுக்கும் நெஞ்சுவேண்டாவோவென்கிருள் (என்னெஞ்சு) எல்லாவவஸ்த்தையிலு மெனக்கு பவ்யமானநெஞ்சு. (என்னை) தன்னைக்கொண்டு ஜீவிக்கவிருக்கிற வென்னை. (நின்னிடையேனல்லேனென்று நீங்கி) உன்னோடெனக்கடைவில்லையென்றகன்று. * இத்யுக்த்வாபருஷம்பண்ணிப்போயிற்று. ப்ராப்திசொல்லி மீட்கவொண்ணுதபடி "ஸந்ந்யஸ்தம்மயா" (ஸங்யஸ்தம்மயா) என்றுபோயிற்று. உங்களுக்குநான் நின்றநிலையிறே யென்னெஞ்செனக்கவ்வருகேபோனபடி. (நேமியுமித்யாதி) பின்தொடரவொண்ணுதபடி கடலிலேயாயிற்றுப்புக்கது. வெறும்புறத்திலே யாலத்திவழிக்கவேண்டியிருக்கிறவிரண்டுகையிலு மாழ்வார்களைதரித்து, பலவாய் தூரப்போயெங்குமொக்க வ்யாபிப்பனவான வொளிகளையுடைய வாதித்யனோடேபாலோடொத்த தேஜஸ்ஸையுடைய சந்த்ரனையேந்தி, அத்தேஜஸ்ஸுக்களுக்கு பரபாகமாய், இதரவிஸஜாதீயமாய், கண்டார்கண்குளிரும்படி நீலமாய், மற்றுமநுக்தமான வழகுகளையுடைத்தாய், அபரிச்சேத்யமாயிருப்பதொருமலை நடந்துவருமாபோலேயாயிற் ருழ்வார்களை யேந்திக்கொண்டுலாவும்படி. (நாண்மலர்ப்பாதமடைந்ததுவே) செவ்விப்பூவிலே வண்டுபடிந்தாப்போலே சேர்ந்தது - யானினிச்செய்வதென்... ... ......*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. ( என்னுடையித்யாதி. ) "என்னெஞ்சு - நாண்மலர்ப்பாதமடைந்தது" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை ( எல்லாம்செய்தாலுமித்யாதி. )

செய்யலாவதில்லையோவென்ன ( இவற்றையித்யாதி. ) இவற்றையென்றது- கீழிற்பாட்டிற்சொன்ன நாணும் நிறைவும் தொடக்கமானவற்றை.

அடைவு - சம்பந்தம். அகன்றதின் சரமாவதியையருளிச்செய்கிருர் (இத்யுக்த்வேத்யாதி.) "இத்யுக்த்வா பருஷம் வாக்யம் ராவணம் ராவணாநுஜ:। ஆஜகாம முஹூர்த்தேந யத்ர ராமஸ் ஸலக்ஷ்மண:" ( இத்யுக்த்வர்பருஷம்வாக்யம் ராவணம்ராவணுநுஜஃ । ஆஜகாமமுஹூர்த்தேநயத்ரராமஸ்ஸலக்ஷ்மணஃ ) இதியுத்தகாண்டே. சம்பந்தம்சொல்லி மீட்கப்போகாதபடி சவாஸநமாகவிட்டுப்போயிற்றென்கிருர் (ப்ராப்திசொல்லியித்யாதி.) "உங்களோடெங்களிடையில்லை" என்று நான் போனுப்போலே நெஞ்சும் போயிற்றதென்கிருர் ( உங்களுக்கித்யாதி. )

"நேமியும்" இத்யாதி பதங்களுக்குவாசகை (பின்தொடரவித்யாதி.) "நல்" என்றதுக்கர்த்தம் (மற்றுமநுக்தமான வழகுகளையுடைத்தாயென்றது.)

"யானினிச்செய்வதென்" என்றதுக்கு, இப்பாட்டுக்கு சேஷமாக வொரு தாத்பர்யமருளிச்செய்கிறார் (செவ்விப்பூவிலேயித்யாதி.)

என்னுடைநன்னுதல் நங்கைமீர்காள், என்னெஞ்சென்னைநின்னிடையேயென்றுதொடங்கி, அடைந்தது - யானினிச்செய்வதென் இத்யந்வய:...............*

## பதினொன்றாம்பாட்டு.

பாதமடைவதன்பாசத்தாலேமற்றவன்பாசங்கண்முற்றவிட்டுக்
கோதில்புகழ்க்கண்ணன்றன்னடிமேல்வண்குருகூர்ச்சடகோபன்சொன்ன
தீதிலந்தாதியோராயிரத்துள்ளிவையுமோர்பத்திசையோடும்வல்லா
ராதுமோர்தீதிலராகியிங்குமங்குமெல்லாமமைவார்கடாமே.

### ஆறாயிரப்படி.

(பாதமடைவதன்) திருவடிகளைச் சேரவேணுமென்னு மாசையாலே, தத்வ்யதிரிக்தவிஷயசங்கத்தை நிப்ஶேஷமாகவிட்டு, ஸ்வவ்யதிரிக்த சகலவிஷயசங்கநிவர்த்தகமான கல்யாணகுணங்களையுடையனான கண்ணன்றன்னடிமேல் வண்குருகூர்ச்சடகோபன்சொன்ன நிரவத்யமான வித்திருவாய்மொழியைவல்லார், நிரஸ்த சமஸ்ததுஃகராய், அங்குமிங்குமெல்லாப்படியாலும் பரிபூர்ணரென்கிறார். .....................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை யிசையோடே யப்யசிக்கவல்லவர்கள், உபயவிபூதியிலும் பகவதநுபவ பரிபூர்ணராயிருப்பரென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

பாதம் - திருவடியை. அடைவதன்-ப்ராபிக்கையிலுண்டான. பாசத்தாலே-அபிநிவேசத்தாலே. மற்ற - இதரவிஷயமாய். வன் - ப்ரபலமான. பாசங்கள் - பாசங்களை. முற்ற - நேராக. விட்டு-விட்டு. இப்படி இதரசங்கமறுகையாலே, கோது-கோது. இல் - அற்ற. புகழ் - புகழுடைய. கண்ணன்றன் - க்ருஷ்ணன். அடிமேல் - திருவடிகள் விஷயமாக. வண் - தம்முடைய பாவவ்ருத்தியை ப்ரபந்நீகரித்த பரமௌதார்யத்தையுடைய. குருகூர்ச்சடகோபன் - ஆழ்வார். சொன்ன - அருளிச்செய்ததாய். தீது - அர்த்தாந்தர ப்ரஸ்தாவமாகிறதீது. இல்-இன்றியே. அந்தாதி-அந்தாதியாய். ஓர் - அத்விதீயமான. ஆயிரத்துள் - ஆயிரத்துள். ஓர் - கடலிலே முத்துப்பட்டாப்போலே அத்விதீயமான. இவை - இவை. பத்தும்-பத்தையும். இசையோடும் - இசையோடேகூட. வல்லார்-அப்யசிக்கவல்லவர்கள். அவித்யாகர்ம வாஸநாருசி ப்ரக்ருதிசம்பந்த ரூபதோஷங்களில், ஆதும் - ஏதேனும். ஓர் - ஒரு. தீது-தோஷம். இலராகி - இன்றியே. இங்கும் - இந்தவிபூதியிலும். "[Grantha] [Grantha]" (துஷ்யந்திசரமந்திச) என்கிறபடியே குணநுபவபரிபூர்ணராய், அங்கும் - அந்தவிபூதியிலும். "[Grantha]" (ஸோஶ்நுதேஸர்வாந்காமாந்) என்கிறபடியே அவாப்தசமஸ்தகாமராய்க்கொண் டநந்யாதீநராய், எல்லாமமைவார்கள்தாமே - சர்வப்ரகாரபரிபூர்ணராவர்கள்.

இது - எண்சீராசிரியவிருத்தம்.......................................*

## ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழிவல்லார், அவித்யாதி சகலதோஷங்களும் நீங்கி, இஹலோக பரலோகங்களில் தாங்களே க்ருதக்ருத்யராவரொன்கிறார்.

(பாதமித்யாதி) திருவடிகளைக் கிட்டுகையிலுண்டானசங்கத்தாலே புறம்புண்டான வலியசங்கங்களை நிஸ்ஸேஷமாகவிட்டார். இதுவாயிற்றித்திருவாய்மொழியிற் சொல்லிற்றாயிற்று. புறம்டள்ள பற்றுக்களற்றுத்திருவடிகளை யாசைப்பட்டவரல்லர்; "மாற்பால்மனஞ்சுழிப்ப மங்கையர்தோள்கைவிட்டு" என்கிறபடியே, திருவடிகளில் சங்கத்தாலே ஔபாதிகமான பாஹ்யசங்கத்தைத் தவிர்ந்தவர். (சோதில்புகழ்) திருவடிகளில் சங்கத்துக்குமுத லவனுடைய கல்யாணகுணங்கள். குணங்களுக்குக்கோதாவது - தன்னையொழியப்புறம்பேயும் நசைபண்ணும்படியிருக்கை. (கண்ணன்றன்னடிமேல்) இப்புகழையுடைய க்ருஷ்ணன் திருவடிகளிலேயாயிற்றுச்சொல்லிற்று. பரமோதாரரான வாழ்வாரருளிச்செய்த. (தீதிலந்தாதி) ப்ரபந்தத்துக்குத் தீதாவது - கதாந்தர ப்ரஸ்தாவம். ராமவ்ருத்தாந்தத்தைச் சொல்லப்புக்கு, சுப்ரஹ்மண்யோத்பத்தி, புஷ்பகவர்ணநம், இவைதொடக்கமானவற்றிலே யிழிகை, "நாராயணகுமாரிமாழ" (நாராயணகதாமிமாம்) என்று யுத்தப்ரகாராதிகளைச்சொல்லுகை. (ஓராயிரத்துள்ளிவையுமோர்பத்திசையோடும்வல்லார்) அத்விதியமானவாயிரந்திருவாய்மொழியி லிப்பத்தை ப்ரீதிப்ரகர்ஷத்தாலே சொல்லுமவர்கள். (ஆதுமோர்தீதிலராகி) அவித்யாதி தோஷங்களும் நீங்கும். புறம்புள்ள நசையற்றிருக்கச்செய்தே ப்ரபந்தம் தலைக்கட்டுகைக்காக விருக்குமதுவுமவர்களுக்கில்லை. (இங்குமங்குமெல்லாமமைவார்கள்தாமே) இஹலோகத்தோடு பரலோகத்தோடு வாசியறக் குறைவற்றிருப்பர்கள். இஹலோகத்தில், "க்ருதக்ருத்யாஃப்ரதீக்ஷந்தே" (க்ருதக்ருத்யாஃ ப்ரதீக்ஷந்தே) என்கிறபடியே சமைந்திருப்பர்கள்; பரலோகத்தில், "அஹம்ஸர்வங்கரிஷ்யாமி" (அஹம்ஸர்வம் கரிஷ்யாமி) என்று குறைவற்றிருப்பர்கள். (தாமே) (ஈஸ்வரன் முழங்கைத்தண்ணீர் வேண்டா,) உபயவிபூதியிலும் தாங்களே ப்ரதாநராவர்கள்.........................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (பாதமித்யாதி.) "இவையுமோர்பத் திசையோடும்வல்லார்" என்றுதொடங்கி மேலெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியித்யாதி.) "ஆதுமோர்தீது" என்றத்தைப்பற்ற (அவித்யாதி சகலதோஷங்களுமென்றது.)

அடைவதன் - அடைகையிலுண்டான வென்றபடி. இத்திருவாய்மொழியில் சொன்னவர்த்தத்தைச் சுருங்கவருளிச்செய்ததென்னுமிடம் தோன்ற வருளிச்செய்கிறார் (இதுவாயிற்றித்யாதி.) இத்தாலிவர்க்கு வ்யாவ்ருத்தி (புறம்புள்ளவித்யாதி, தவிர்ந்தவரொன்னுமளவாக.)

"பாதமடைவதன்பாசத்தாலே" என்றத்தோடே "கோதில்புகழ்" என்றதுக்கு சங்கதி (திருவடிகளிலித்யாதி.)

கதாந்தரப்ரஸ்தாவமுண்டான ப்ரபந்தங்களைக் காட்டுகிறார் (ராமவ்ருத்தாந்தத்தை யித்யாதி வாக்யத்வயத்தாலே.) "நமோ ஹவதெ தமெ வாஸாயாமித தெஜஸெ। யஸ்ய வ்ராஸாதா வக்ஷ்யாமி நாராயணகதாமிமாம்." (நமோபகவதேதஸ்மை வ்யாஸாயாமிததேஜஸே। யஸ்யப்ரஸாதாத்வக்ஷ்யாமி நாராயணகதாமிமாம்.) இசையோடே பாடும்போது ப்ரீதியுண்டாகவேண்டுகையாலே (ப்ரீதிப்ரகர்ஷத்தாலே) என்கிறார்.

"ஆதும் - தீது" என்றதுக்கர்த்தம் (அவித்யாதீத்யாதி.) "ஓர்தீது" என்றதுக்கர்த்தம் (புறம்புள்ளவித்யாதி.)

இருக்கும் ப்ரகாரமேதென்ன (இஹலோகத்தி லித்யாதி வாக்யத்வயம்.) "ஊமே" என்றவவதாரணார்த்தம் (உபயவிபூதியிலு மித்யாதி.) "வ்ராயஶ: வாவகாரிகா ந்ரதெ ாவிஜதெஜந:। க்ருதக்ருத் ாஃ தீக்ஷதெ ஹ்ரு யிவாதிரிழ" (ப்ராயஶ:பாபகாரித்வாந்ம்ருத்யோருத்விஜதேஜந:। க்ருதக்ருத்யா:ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும்ப்ரியமிவாதிதிம்) இதி மஹாபாரதே. .........*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(நங்கள் வரிவளை.)

தாக்ஷ்யாத்யஹ நக்வாஹ நயநதயா நீலமெவாக்ருதிகா ஶ்சர்யெஷ்டிதகாஸாவயா தபாயொகிஹி நிஜூவெ ஷ்வாஶாவா தி ஹ திவிர ஹாஜநாஶ்ரஹாவா ஞிவஜா நாஜநாநாஸஹ தஜ தி ஹ நாயஹ்ஹாரி:॥ (அரு)

(தார்க்ஷயோத்யத்வாஹநத்வாத்) வெங்கட்பறவையின் பாகனெங்கோன் - விரோதிநிரஸநத்திலே யுத்யுக்தனான வைநதேயனை வாஹநமாகவுடையனாகையாலும்; (ஶுபநயநதயா) காண்டகுதாமரைக்கண்ணன் - சதாதர்ஶநீயமாய், சரஸிஜஸத்ருஶமான திருக்கண்மலரையுடையனாகையாலும்; (நீலமேகாக்ருதித்வாத்) நீலமலர்நெடுஞ்சோதிசூழ்ந்த நீண்டமுகில்வண்ணன் - வர்ஷுகவலாஹகம்போலேயிருக்கிற வடிவையுடையனாகையாலும்; (ஆஶ்சர்யோச்சேஷ்டிதத்வாத்) வண்குடபால்நின்ற மாயக்கூத்தன் - அத்யாஶ்சர்யங்களான சேஷ்டிதங்களையுடையனாகையாலும்; (துரவதரதயாயோகிபிர்நிர்ஜரைஶ்ச) ஒருவனை நன்குணர்வார்க்கு முணரலாகா - எத்தனையேனு மதிசயிதஜ்ஞாநரான யோகிகளாலும் ப்ரஹ்மாதிகளாலும் "இன்னபடி" என்றறியவொண்ணாதபடி யிருக்குமவனாகையாலும்; (ஸ்வேஷுவ்யாமுக்தபாவாத்) மாமலர்க்கண்வளர்கின்றமாலே - ஸ்வாஶ்ரிதரிடத்திலே மிகவும் வ்யாமோஹத்தைப்பண்ணுமவனாகையாலும்; (ப்ரதிஹதிவிரஹாத்) காலம்பலசென்றும் காண்பதாணை - ஆஶ்ரிதர் காணுமிடத்தில் ப்ரதிஹதிரஹிதனாகையாலும்; (தூர்ஜநாத்ருஶ்யபாவாத்) கடையறப்பாசங்களித்யாதி, காண்கொடுப்பானல்லனார்க்குந்தன்னை - ஸவாஸநமாக இதரவிஷயஸங்கத்தை விடாதே, ஸ்வயத்நத்தாலே காணவுத்யோகிக்குமவர்களுக் கத்ருஶ்யனாகையாலும்; (நிஸ்ஸங்காநாம்ஜநாநாம்ஸுலபதம:) என்னெஞ்சென்னை நின்னிடையேனல்லேனென்று நீங்கியித்யாதி - இதரவிஷயசங்

கரஹிதருடையமநஸ்ஸு, தன்னிடத்திலே சேரும்படி யிருக்குமவனுகையாலும்; எம்பெருமானிதரவிஷயத்தில் பற்றற்றபேர்களுக் கத்யந்தசுலபனு யிருக்கிறுனென்று "நங்கள்வரிவளை" என்கிறதசகத்திலே ஆழ்வார் நிர்ணயித்தருளினுரென்கிறுர்.*

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

நங்கருத்தைநன்ருகநாடிநிற்குமாலறிய
விங்கிவற்றிலாசையெமக்குளதென் - சங்கையினுல்
தன்னுயிரின்மற்றினசைதானெழிந்தமாறன்ரு
னங்நிலையையாய்ந்துரைத்தானங்கு. (எஉ)

(நங்கருத்தை) இதில் - ஆழ்வார் ஆத்மாத்மீயங்களில் நசையற்ற * நங்கள் வரிவளையை யநுவதித் தருளிச்செய்கிறுர். எங்ஙனேயென்னில்; கீழ் - அதிசங்கை தீர்த்தமாத்ரமாய், ஸ்வாபேக்ஷிதமான பாஹ்யசம்ஶ்லேஷம் பிறவாமையாலே கலங்கி அவஸ்த்தாந்தராபந்நராய், "சர்வஜ்ஞனவவனறிய நாமறியாதேயிருக்க, நமக்கு சம்சாரத்திலே நசையுண்டாகவேணும்" என்று பார்த்து ஆத்மாத்மீயங்களில் தாம் நசையற்றபடியை யந்யாபதேசத்தாலே யருளிச்செய்கிற * நங்கள்வரிவளையிலர்த்தத்தை, "நங்கருத்தை" என்றுதொடங்கி யருளிச்செய்கிறுரென்கை.

(நங்கருத்தைநன்ருகநாடிநிற்கும்மாலறிய) நம்முடையஹ்ருதயத்தை நன்ருக வாராய்ந்துபோரும் மாலறியவென்னுதல், நம்முடைய ஹ்ருதயத்தை நன்ருக விரும்பி வர்த்தித்துப்போரும் சர்வேஶ்வரனறியவென்னுதல். * உள்ளத்தே யுறையும் மாலிறே இவர் * கருத்தையுறவீற்றிருந்தானும்; இப்படி சர்வஜ்ஞன சர்வேஶ்வரனறியும்படி. (இங்கிவற்றிலாசையெமக்குளதென்சங்கையினுல்) இந்த விபூதியிலே, "பாசங்கணீக்கியென்னை" என்னும்படி, பண்டே * ஏருளிலும் * மாலுக்குவையத்திலும் கைகழன்றவிவற்றிலாசை; அவற்றை யுபேக்ஷித்திருக்கிற நமக்கு, நாமறியாமல் தானறிந்ததாகச் சிறிதபேக்ஷையுண்டென்று நினைத்திருக்கிறுனென்கிறசங்கையினுலே. (தன்னுயிரின்மற்றில்நசைதானெழிந்தமாறன்ருன் அங்நிலையையாய்ந்துரைத்தானங்கு) ஆத்மாவிலும் அதுக்கசலான வாத்மீயங்களிலும் நசையற்றவாழ்வார், அந்தஸ்வபாவத்தை யாராய்ந்தருளிச்செய்தார் அத்தசையிலே. அதாவது - "ஹ ந்ஶ்ராஜ்ஹிரோம்வாவாழ" (ஹந்யாமஹமிமாம்பாபாம்) என்றுதாயோடுறவறுத்து, "ராஜ்யம்வாஹஞ்ராஜஸ்ய" (ராஜ்யம்சாஹஞ்சராமஸ்ய) என்றும், "நைச்சத்ராஜ்யம்" (நைச்சத்ராஜ்யம்) என்றும் நசையற்று, சித்ரகூடத்திலே சென்று, * சிரஸாயாசித்து பாதுகைகளைப் பெற்ருப்போலே,இவரும், "வேங்கடவாணனைவேண்டிச்சென்று - சங்கஞ்சரிந்தனசாயிழந்தேன்" என்றும், "கோலவளையொடுமாமைகொள்வான்," "கோல்வளைநெஞ்சத் தொடக்கமெல்லாம் பாடற்ருெழியவிழந்துவைகல் பல்வளையார்முன்பரிசழிந்தேன்" "காலம்பலசென்றும் காண்பதாணை யுங்களோடெங்க ளிடையில்லையே," "கடையறப்பாசங்கள் விட்டபின்னையன்றி யவனவைகாண்கொடானே," "நாண்கொடுத்தே னினியென்கொடுக்கேன்," "நின்னிடையேனல்லேனென்றுநீங்கி," "பாதமடைவதன்பாசத்தாலே மற்றவன்பாசங்கள்முற்றவிட்டு" என்றுமிப்படியாயிற்று அங்நிலையை யாய்ந்துரைத்தபடி.......................................................................(எஉ)

எட்டாம்பத்தில் - இரண்டாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - எஉ.—பாட்டு - எகூச.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## எட்டாம்பத்து.

## மூன்றாந்திருவாய்மொழி.

### அங்குமிங்கும் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(அங்குமிங்கும்) இப்படி யெம்பெருமானைப்பிரிந்து வ்யஸநப்படுகிற தமக்கொருதுணையின்றியே யிருக்கிறபடியை யருளிச்செய்கிறார். ...*

### பன்னீராயிரப்படி.

மூன்றாந்திருவாய்மொழியில், அவனுடைய நிஸ்ஸங்கசுலபதையையநுசந்தித்து, இதரசங்கநிவ்ருத்திபூர்வகமாகத் தாம் தத்விஷயத்திலே சக்தரானபடியை யநுசந்தித்தவர், அவனுஶ்ரிதரக்ஷணார்த்தமாக விந்தவிபூதியிலே தன் போக்யதையையும் சௌகுமார்யத்தையும் பாராதே ஆசுரப்ரக்ருதிகளும் அந்யபரருமான திரள்களுக்கு நடுவே அசஹாயனாய்வந்து வர்த்திக்கிற விதுக்கஞ்சி; அவனுடைய வதிசயிதபோக்யதையையும், விரோதிநிரஸநோத்யுக்தமான வாயுதவத்தையையும், ஸஹாயாந்தரராஹித்யத்தையும், க்ஷணகாலம் காணாதொழியிலும் கல்பமாம்படி யச்சத்தை விளைக்கும்படி ஆபிரூப்யாதிசயத்தையும், ஆயாஸஸஹமல்லாத சௌகுமார்யத்தையும், ரமணீயவிக்ரஹனாய்வைத்து விரோதிநிரஸநார்த்தமாக வ்யாபரிக்கும்படியையும், கிஞ்சித்காராநுகுணமான ஶ்ரியஃபதித்வத்தையும், அசேஷஜநசம்ஶ்லேஷஸ்வபாவத்தையும், அதிசயிதஜ்ஞாநர்க்கு மறியவரியவாகாரத்தையும், அத்யந்தவிலக்ஷணபுருஷரும் சேவிக்கும்படியான வதிசயிதசக்தியோகத்தையு மநுசந்தித்து, எவம்ப்ரகாரவிசிஷ்டனானவன் தன்னழகையும் மார்த்தவத்தையும் பாராதே ப்ரதிகூலபூயிஷ்டமான சம்சாரத்திலே அஸஹாயனாய்வர்த்திக்கிறவளவிலே யடிமைசெய்யப் பெற்றிலோமென்று தளர்ந்தவர், அவன் தன்னுடைய வாஶ்ரிதசாமக்ர்யத்தையும் அதிசயிதசக்தியையுங் காட்டக் கண்டு சமாஹிதரா யுகந்து தலைக்கட்டுகிறார். *

### ஈடு.

கீழ்த்திருவாய்மொழியில் பத்தாம்பாட்டிலே - "ஓர்கோலநீலநன்னெடுங்குன்றம் வருவதொப்பான்" என்று வடிவழகை யநுசந்தித்தவாறே, தாம்பட்ட க்லேசத்தைமறந்து, "இவ்வடிவோடே சம்சாரத்திலே தனியேவந்தவதரித் துலாவாநிற்கும்; சத்ருக்களும், மத்யஸ்த்தரும், ப்ரயோஜநாந்தரபரருமாய், இவனுக்குப் பரிவுடையா ரொருவருமின்றிக்கேயிருக்கிற சம்சாரத்திலே, அர்த்திகளுடைய வபேக்ஷிதங்களைப் பூரிக்கைக்

காக சம்சாரிஸஜாதீயனுய், சிலர்க்குப் பரதந்த்ரனுயும், ( சிலரர்த்தித்தது வே வ்யாஜமாக, ) அவதாரத்துக்குப் பிற்பட்டார்க்குக் கோயில்களிலும் க்ருஹங்களிலும் சந்நிஹிதனுயும் வர்த்திக்கிற விவனுடைய சௌகுமார் யமறிந்து பரியக்கடவாரொருத்தருமில்லே; நானுமுதவப்பெறுகிறிலேன்" என்று அவன்தனிமைக்கு வெறுத்து பீதராக; " 'நமக்குப்பரிவரில்லே' என்று பயப்படவேண்டா, முமுக்ஷுக்களும் முக்தரும் நித்யசித்தரும் நமக்குப் பரிகையே யாத்ரையாயிருக்குமவர்களன்றே, நமக்குத்தான்வே றே சிலர்பரியவேண்டியிருந்ததோ" என்று சர்வேஶ்வரன் தன் சர்வசக் தித்வத்தைக்காட்டி சமாதாநம்பண்ண ஸமாஹிதராய் ஹ்ருஷ்டராகிறர்.

" சர்வேஸ்வரனுக்குப் பரிகைக்குத் தமக்குக்கூட்டாவாரில்லேயெ ன்று தம் தனிமைக்கு வெறுக்கிறர்" என்றுஞ் சொல்லுவர்கள். "நித்ய சூரிகள் பகவதநுபவத்திலே யந்யபரர், சம்சாரிகள் சப்தாதிகளிலேயந்ய பரர்; ப்ரஹ்மேசாநாதிகள்,தங்களுக்காக 'நீணகர்நீளெரிவைத்தருளாய்' என்று அவனே யம்புக்கிலக்காக்குதல், ஏவித்தேவைகொள்ளுதல் செய்வ ர்களாகையாலே, பரிகைக்குத் தமக்கொருதுணையில்லே." என்று தம் தனி மைக்கு வெறுக்கிறர். சேஷவஸ்துவுக்கு "சேஷியேரக்ஷகன்" என்னும் வெளிச்சிறப்பு அறிவுக்குமுதலடி; சேஷவஸ்துவாகில், சேஷிக்கதிசயத் தைவிளேத்துத் தன்ஸ்வரூபசித்தியாகையாலே, " அவன்ரக்ஷ்யன், நாம்ர க்ஷகர் " என்னுமளவும் செல்லவறிகை - ஸ்வரூபத்தை யுள்ளபடியுணரு கையாவது..............................................................................*

## ஜீயர் அரும்பதம்.

அங்குமிங்கும் ப்ரவேஶே, கீழே ஆத்மாத்மீயங்களிலே நசையற்றபடியைச் சொல்லி, இதிலே " அவனுக்குப்பரிவரில்லே " என்று துஃகப்படுகிறதுக்கு ப்ரசக்தி யேதென்ன ( கிழிற்றிருவாய்மொழியிலித்யாதி. ) "என்மனம்சூழவருவாரே" என் றத்தைப்பற்ற ( சம்சாரத்திலேயித்யாதி. ) " தானவர்யாவரும் - வானவர் " என்ற த்தைப்பற்ற ( சத்ருக்களுமித்யாதித்ரயம். ) " கோளூரகத்தும்புளிங்குடியும் " என் றத்தைப்பற்ற ( கோயில்களிலுமித்யாதி. ) " கைகளேயாரத்தொழக்காணேன் "என் றத்தைப்பற்ற ( நானுமுதவப்பெறுகிறிலேனென்றது. ) " கலக்கமில்லா " இத்யாதி யைப்பற்ற ( முமுக்ஷுக்களுமித்யாதி. ) " மாகடல்தன்னேக்கடைந்தானே " என்ற த்தைப்பற்ற ( சர்வசக்தித்வத்தையென்றது. )

" தாளும்தோளும்கைகளேயார " இத்யாதியைப்பற்ற சங்கத்யந்தரம் ( சர் வேஶ்வரனுக்கித்யாதி. ) துணையில்லேயென்கிறதென், நித்யசூரிகள்முதலானுரில்லே யோவென்ன (நித்யசூரிகளித்யாதி.) தேவை - கார்யம்.

ரக்ஷகனேக்கண்டால் ஸ்வாபேக்ஷிதங்களே யர்த்திக்குமதொழிய, பரியத்தேடு கிறதென்னென்ன ( சேஷவஸ்துவுக்கித்யாதி. ) சரமாவதியேதென்ன (சேஷவஸ் துவாகிலித்யாதி.) " இத்திருவாய்மொழி ஆழ்வாருடைய திருப்பல்லாண்டு " என் றருளிச்செய்வர்...............................................................................*

## மூன்றாந்திருவாய்மொழி

## முதற்பாட்டு.

அங்குமிங்கும்வானவர்தானவர்யாவரு
மெங்குமினையையென்றுனையறியகிலாதலற்றி
யங்கஞ்சேரும்பூமகண்மண்மகளாய்மகள்
சங்குசக்கரக்கையவனென்பர்சரணமே.

### ஆறாயிரப்படி.

ஸ்வர்க்காதிலோகங்களிலும், இந்தலோகத்திலும், மற்றுமெங்கும் வர்த்திக்கிற தேவதானவ ப்ரப்ருதி ஸமஸ்தாத்மாக்களும், ஏவம்பூதனென்றுன்னை யுள்ளபடியறியாதே, லக்ஷ்மீபூமி நீளாநாயகனாய், சங்கசக்ரகதாதரனாய், பரமப்ராப்யனாயிருந்தவுன்னைத் தங்களுக்கு ப்ராப்யமான க்ஷாத்ரைச்வர்யத்துக்குபாயமென்பர்; ஆதலால், எனக்கவர்கள் துணையல்லவென்கிறார்..........................................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், உன்னுடைய நிரதிசயபோக்யதையை யறியாதே, உன்சக்தியோகத்தையேசொல்லி அநுகூல ப்ரதிகூல விபாகமற அபிமதசாதநமென்னாநிற்பர்களென்கிறார்.

அங்கும் - ஊர்த்வலோகங்களிலும். இங்கும் - பூமியிலும். எங்கும் - பாதாளாதிகளான சமஸ்தப்ரதேசங்களிலும். வானவர் - அநுகூலரானதேவர்களும். தானவர்-ப்ரதிகூலரானவசுரர்களும். யாவரும் - ததாவிதரான மநுஷ்யாதிகளுமெல்லாம். உன்னை - அநுபாவ்ய மஹிஷ்யாதிவிசிஷ்டனானவுன்னை. இனையை - இவ்விதபோக்யன். என்று-என்று. அறியகிலாது-அறியமாட்டாதே. அலற்றி-ரக்ஷகத்வைகாந்தமான சர்வசக்தியோகாதிகளைச்சொல்லிக்கூப்பிட்டு. பூமகள் - புஷ்பபரிமளம் வடிவுகொண்டாப்போலேயிருக்கிற லக்ஷ்மியும். மண்மகள் - கந்தவதியாகையாலே போக்யதையேவடிவான பூமியும். அவ்வளவேயன்றியே, ஆய்மகள் - ஆபிஜாத்யாதிக்யத்தையுடைய நீளையும். சௌந்தர்ய சௌகுமார்யாதிகளிலேயகப்பட்டு, அங்கம்-திருமேனியை. சேரும்-பிரியாமல்பொருந்தி யநுபவிக்கும்படியாய். சங்குசக்கரம்-அநுபாவ்யரான வாழ்வார்களை. கையவன் - கையிலேயுடையனாயிருக்கிறவிவன். போக்யபூதனென்றநுபவியாதே, புருஷகாரபூர்த்தியையுமுடையனாகையாலே, சரணம்-அபீஷ்டபலசாதநபூதன். என்பர்-என்னாநிற்பர்கள்,

ப்ரதிகூலரான வசுரவர்க்கத்தைப்பற்றவும் சேஷித்வம் சாதாரணமாகையாலே, ஸ்வாபீஷ்டஸித்த்யர்த்தமான சரண்யத்வமுமுண்டென்றுகருத்து. ப்ரயோஜநாந்தரபரரானவர்களும், இவனுடைய சௌந்தர்ய சௌகுமார்யாதிகளை யநுசந்தித்து, பரிவாரகப்பெற்றதில்லையென்று வெறுத்தாராயிற்று..........................*

## ஈடு - முதற்பாட்டு.

இதில், முதற்பாட்டில், உன் ஸௌகுமார்யத்தையறிந்து பரிகை யன்றிக்கே, தங்களுக்கிஷ்டப்ராப்தி சாதநமென்றிருப்பர்களென்று ஐஶ்வர்யார்த்திகளை க்ஷேபிக்கிறார்.

( அங்குமிங்குமித்யாதி ) உபரிதநலோகங்களிலும், பூமியிலும். (எங்கும்) அநுக்தமானபாதாளாதிகளிலும். (வானவர்) அநுகூலர். (தானவர்) ப்ரதிகூலர். (யாவரும்) இரண்டுவகையுமான மநுஷ்யாதிகளும். (இனையையென்றுன்னை) (உன்னை - இனையையென்று) சர்வசேஷியான வுன்னை, இப்படிப்பட்டவனென்று-நிரதிசய ஸௌகுமார்யயுக்தனென்று. இவர் நெஞ்சிலவன் ஸௌகுமார்யமேயாயிற் றுறைத்திருப்பது. கருமுகை மாலைபோலேயிருக்கிற வுன்படியறியாதே. (அறியகிலாது) அறியாதே. பரியவறியாமைக்கு, அநுகூலரானதேவர்களோடு, ப்ரதிகூலரானவசுரர்களோடு, இவ்விரண்டுங்கூடின மநுஷ்யரோடு வாசியில்லை. அவனைப் பரியக்கண்டவர்களெல்லாரு மென்றிருக்கிறாராயிற்றிவர். (அலற்றி) "யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்," (யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்) "பராஸ்யஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீஜ்ஞாநபலக்ரியாச" (பராஸ்யஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீஜ்ஞாநபலக்ரியாச ) என்று, தங்களுடைய ரக்ஷணத்துக்குடலான வசநங்களைக் கதறுநிற்பர்கள். உன்னை ரக்ஷ்யனென்றறியார்கள். (அங்கஞ்சேருமித்யாதி) இதுக்குமேல் ஸௌகுமார்யத்தையு மழகையுஞ்சொல்லுகிறது. ( பூமகள் மண்மகளாய்மகள் - அங்கஞ்சேரும்) அவனையாஶ்ரயிக்கைக்குப் புருஷகாரமாகப் பிராட்டிமாருண்டென்பர்கள். "நகஶ்சிந்நாபராத்யதி" ( நகஶ்சிந்நாபராத்யதி ) என்பாரும், "குற்றத்தையுணருகிறதென், பொறுக்குமித்தனையன்றோ" என்பாரும், முதலிலே குற்றங்காணுதபடி. ஸ்வபோக்யதையை முன்னிடுவாரு மங்கேயுண்டென்பர்கள். "வடிவாய்நின்வலமார்பினில் வாழ்கின்றமங்கையும்பல்லாண்டு" என்று அச்சேர்த்திக்கு மங்களாசாஸநம்பண்ணுவாரில்லை. (சங்குசக்கரக்கையவன்) கையுந்திருவாழியுமானவழகை யநுபவிக்கைக்கிழிவாரில்லை. நம்விரோதியைத் துண்டிக்கைக்குக் கையிலே திவ்யாயுதங்களையுடையவனென்பர். "வடிவார்சோதிவலத்துறையும் சுடராழியும்பல்லாண்டு" என்னவேண்டியிருக்குமே யிவர்களுக்கு. ( என்பர்சரணமே ) ( சரணம் - என்பர் ) அபிமதசாதநமென்பர். அபிமதமென்றறிவாரில்லை- சுகுமாரவிஷயமென்றறிவாரில்லை. முந்தானையேற்றல், எதிரிகளம்புக் கிலக்காக்குதல் செய்வர்கள்......... ......................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (அங்குமித்யாதி) " இனையையென்று-அறியகிலாது-சரணம்-என்பர்" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (உன்ஸௌகுமார்யத்தையித்யாதி)

"எங்கும்" என்றது - பாதாளாதிவாஸிகளான தானவரென்றபடி. விவரணம் (நிரதிசயேத்யாதி) "இனையை" என்றது - சாமாந்யமாயிருக்க, "சௌகுமார்யயுக்தன்" என்றுசொல்லுமோவென்ன; புத்திஸ்த்தமாகையாலே சொல்லுமென்கிறார் (இவர்நெஞ்சிலித்யாதி) "இனையை, அறியகிலாது" என்கிறவிரண்டையுங்கூட்டிபாவம் (கருமுகையித்யாதி) ப்ரஸக்தஸ்யஹிப்ரதிஷேதஃ, ப்ரதிகூலரானதாநவர்க்குப்பரிய யோக்யதையுண்டோ, வெறுக்கிறதென்னென்ன; த்ருஷ்டாந்தார்த்தமென்கிறார் (பரியவறியாமைக்கித்யாதி) அதாவது - ப்ரதிகூலரானவர்கள் பரியவறியாதாப்போலே, அநுகூலரும் பரியவறியார்களென்றபடி. "விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராய" (விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராய) இத்யாதிப்படியே வஸ்துகத்யாபரியக்கண்டவர்களென்று பரிஹாராந்தரம் (அவனைப்பரியவித்யாதி) வஸ்துஸ்த்திதியறிந்தாஶ்ரயித்தமை - ப்ரஹ்லாதவிபீஷணர்களிடங்களிலே கண்டுகொள்வது. "அலற்றி" என்றதுக்கு - அக்ரமமாக ஸ்தோத்ரம்பண்ணியென்னுதே, "கதறுகிற்பர்கள்" என்றது ஆழ்வார்க்கஸஹ்யமென்னுமிடம் தோற்றுகைக்காக, பின்னையெதுசெய்யவேணுமென்ன; சௌகுமார்யத்தை யநுசந்தித்துப்பரியவேணும், அதுசெய்கிறார்களில்லையென்கிறார் (உன்னைரக்ஷ்யனென்றித்யாதி)

புஷ்பவாஸிநியாகையாலே நிரதிசய சௌகுமார்ய சௌந்தர்யயுக்தையான பிராட்டிமுதலானார்சேரும் திருமேனியென்கையாலே - இவனுடைய சௌந்தர்யமும் சௌகுமார்யமும் ஸித்தமென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (இதுக்குமேலித்யாதி) அவனைரக்ஷகனென்றிருக்குமவர்கள், பிராட்டிமாரை ப்ரதிபத்திபண்ணும் ப்ரகாரத்தையருளிச்செய்கிறார் (அவனையித்யாதி) புருஷகரிக்கும் ப்ரகாரமெப்படியென்ன (நகஸ்ஸிதித்யாதி) (ஸ்வபோக்யதையைமுன்னிடுவாரும்) என்றவிடத்திலே - "நிஸாமயதமாம்நீளாயத்போகபடலைர்த்ருவம் । பாவிதம்ஸ்ரீநிவாஸஸ்யபக்ததோஷேஷ்வதர்ஶநம்" (நிஸாமயதுமாம்நீளா யத்போகபடலைர்த்ருவம் । பாவிதம்ஸ்ரீநிவாஸஸ்யபக்ததோஷேஷ்வதர்ஶநம்) என்கிற ஶ்லோகமநுசந்தேயம். அவர்களுடைய ப்ரதிபத்தியை துச்சீகரிக்கு மிவருடைய பாவத்தை யருளிச்செய்கிறார் (வடிவாயித்யாதி) இப்பதத்தை ப்ரயோகிக்கிறவருடையஹார்த்தபாவம் (கையுமித்யாதி) ஆனால்தாமெப்படியிருப்பரென்ன (வடிவார்சோதியித்யாதி) விவரணம் (சுகுமாரவிஷயமித்யாதி) சாதநமென்றுசெய்வதேதென்ன (முந்தானையேற்றலித்யாதி) இத்தால் - த்விவிதைஶ்வர்யகாமரையும் சொல்லுகிறது.

அங்குமிங்கும்-எங்கும்-வானவர்தானவர்யாவரும்- உன்னை - இனையையென்று - அறியகிலாதலற்றி-பூமகள் மண்மகளாய்மகள்-அங்கஞ்சேரும் - சங்குசக்கரக்கையவன்-சரணம் - என்பரித்யந்வயః.........................................*

## இரண்டாம்பாட்டு.

சரணமாகியநான்மறைநூல்களுஞ்சாராதே
மரணந்தோற்றம்வான்பிணிமூப்பென்றிவைமாய்த்தோங்
கரணப்பல்படைபற்றறவோடுங்கனலாழி
யரணத்திண்படையேந்தியவீசற்காளாயே.

## ஆறாயிரப்படி.

( சரணமாகிய ) இப்படி ஐஶ்வர்யார்த்திகள் துணையல்லரென் றருளிச்செய்து, கைவல்யார்த்திகளும் தமக்குத் துணையல்லரென்கிறார்.

ஐஶ்வர்யோபாய விதாயக சாஸ்த்ரங்களை விட்டு மோக்ஷோபாய விதாயக சாஸ்த்ரத்தையவலம்பித்தநாமும், அப்ராக்ருத ஸ்வாசாதாரண திவ்யரூபவிசிஷ்டனாய், சங்கசக்ரகதாதரனான பரமபுருஷனை சுபாஶ்ரய மாகவநுசந்தித்து, இந்த்ரியஜயத்தைப்பண்ணி, சம்சாரநிவ்ருத்திமாத்ரத் தை ப்ராப்யமாகப்பற்றினோ மித்தனையிறே ; அவன்றிருவடிகளை ப்ராப்ய மாகப் பற்றிற்றிலோமிறே ; ஆதலால், நீங்களு மெனக்குத் துணையல்லீ ரென்கிறார்.

தம்மோடவர்களுக்குண்டான வைஶ்வர்ய வைராக்யரூப சாம்யத் தாலே கைவல்யார்த்திகளை அஸ்மச்சப்தத்தாலே வ்யபதேசிக்கிறார். ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், விரோதிநிராஸகபரிகரவானானவனைக்கொண்டு கேவலம் ஜராம ரணாதி நிவ்ருத்தியைப்பண்ணிக்கொள்ளுகிற கேவலரை, சேஷத்வ சாதர்ம்யத்தா லே யுடன்பட்டுநின்று க்ஷேபிக்கிறார்.

த்ரைகுண்யபுருஷர்களுக்கு, சரணமாகிய-புகலிடமாய். ஐஸ்வர்யதத்ஸாதந ப்ரதிபாதகமான, நால்-நாலுவகைப்பட்டதாயிருக்கிற. மறை-வேதங்களாகிற. நூல் களும்-சாஸ்த்ரங்களை. சாராதே - “ வெஃவாஃ தாஃவாஜுநாந )ஃஸ்ரீதிவாஉி நஃ ” (வேதவாதரதாஃபார்த்தநாந்யதஸ்தீதிவாதிநஃ) என்று மேலெழத்தோன்றுகி ற வர்த்தங்களை ப்ரதிபத்திபண்ணப்பற்றாதே. * நிஸ்த்ரைகுண்யராய்க்கொண்டு, மு முக்ஷுக்களாய், சரணம்-பாதகோபகரணங்களையுடைத்தாய். பல்-பஹுவிதமான. ப டை-சத்ருசேனைகள். பற்று-பற்று. அற-அற. ஒடும்-ஓடும்படி. கனல் - தீப்தனாகிற. ஆழி - திருவாழியாழ்வானாகிற. அரணம் - க்ஷேமங்கரமாய். திண் - ஸ்த்திரமான. படை-ஆயுதத்தை. ஏந்திய-உடையனான. ஈசற்கு-சர்வேஶ்வரனுக்கு. ஆளாய் - சே ஷபூதராய்வைத்து. சேஷத்வாநுரூபமான வதிசயத்தைவிளைத்துப்பரியாதே, மர ணம்-மரணம். தோற்றம்-ஜந்மம். வான்-பெரிய. பிணி-வ்யாதி. மூப்பு - ஜரை. என் று-என்றுசொல்லுகிற. இவை-ஷட்பாவவிகாரங்களை. மாய்த்தோம் - கழித்துக்கொ ண்டுவிட்டோ மித்தனையிறே.

தாதர்த்யம் ஸ்வரூபமாயிருக்க, ஸ்வார்த்தபரராகை அநுரூபமோவென்று கருத்து .............................................................................*

## ஈடு-இரண்டாம்பாட்டு.

“ ஐஶ்வர்யம்போலே நிலைநில்லாததொன்றன்றேயிது, நித்யமாயி ருப்பதொன்றன்றோ ” என்று ஆத்மலாபத்துக்காக வுபாசிக்கிற கேவலர் வந்துதோற்ற, அவர்களை க்ஷேபிக்கிறார். (சரணமித்யாதி) “ ஸை ஸுஃ ண்ய)விஷயாவெஃாஃ ” (த்ரைகுண்யவிஷயாவேதாஃ) என்கிறபடியே ஐஶ் வர்யதத்ஸாதநங்களை ப்ரதிபாதிக்கிற பூர்வபாகத்திலிழியாதே, அத்தைவி

ட்டு மோக்ஷத்தை யுபதேசிக்கிற வேதாந்தபாகத்திலே புகுராநின்று, சர்வேஶ்வரனை யாஶ்ரயித்து, சரீரசம்பந்தத்தை மாய்த்தோ மித்தனையன்றே! நாம் செய்ததென்று க்ஷேபிக்கிறது.

(சரணமாகிய) ஐஶ்வர்ய தத்ஸாதந விஷயஜ்ஞாநசாதநமான. (நான்மறைநூல்கள்) சதுர்வேதமாகிற சாஸ்த்ரங்கள். நூல்-சாஸ்த்ரம். நூலென்று – பிரித்து, ஆகமாதிகளைச சொல்லுகிறதென்றுமாம். நான் மறையாகிற சாஸ்த்ரமென்றே யருளிச்செய்வது. "வேதஶாஸ்த்ராவிரோதிநா" (வேதஶாஸ்த்ராவிரோதிநா) என்னக்கடவதிறே. (மரணம்தோற்றம்) ஜந்மமரணங்கள், ப்ரபலவ்யாதி, ஜரைதொடக்கமான ஷட்பாவவிகாரங்களை மறுவலிடாதபடி கழித்துக்கொண்டவித்தனையிறே நாமும்செய்தது. பூஜாவசநம் க்ஷேபத்திலே. (கரணப்பல்படையித்யாதி) உபகரணங்களையுடைத்தாய்ப் பலவகைப்பட்ட சத்ருசேனை நிஶ்ஶேஷமாகவோடும்படி ஜ்வலியாநின்ற திருவாழியென்னுதல், கரணக்ராமங்களை விஷயங்களினின்றும் நிஶ்ஶேஷமாக – பற்றற, ஓடும்படி கனலாநின்றிருந்துள்ள திருவாழியென்னுதல். (அரணத்திண்படை) ஆஶ்ரிதர்க்கரணாய், சத்ருக்களாலே பேதிக்கவொண்ணாதபடியா யிருக்கை. (திண்படை) ஈஶ்வரன்விடிலு மாஶ்ரிதரை விடாதவென்றுமாம். (ஏந்தியவீசற்கு) திருவாழியை யேந்துகையாலே சர்வேஶ்வரனானவனுக்கு. (ஆளாயே) அவர்களாளாகையாவதென்னென்னில்; பகவத்ப்ராப்தி காமனுபாதி பகவத்பஜநமு மந்திமஸ்ம்ருதியுமுண்டாகையாலே சொல்லுகிறது. ஆளாயே-மரணந்தோற்றம் வான் பிணி மூப்பென்றிவைமாய்த்தோம்.....................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (சரணமாகியவித்யாதி) "மரணம் தோற்றம் வான்பிணி மூப்பென்றிவைமாய்த்தோம்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (ஐஶ்வர்யம்போலேயித்யாதி)

இப்பாட்டுக்கெல்லாம் பாவம் (த்ரைகுண்யேத்யாதி) தத்ஸாதநமென்றது-ஜ்யோதிஷ்டோமாதிகளை. "நான்மறைநூல்" என்றது – பூர்வபாகத்தை. (வேதாந்தபாகத்திலே – நின்று) என்றது – அர்த்தாத்ஸித்தம். நாம்செய்ததென்றது – நீங்கள்செய்ததென்றபடி. நான்மறைநூல் சரணமாகையாவதென்னென்ன (ஐஶ்வர்யேத்யாதி) தத்சாதநமென்றது – ஜ்யோதிஷ்டோமாதிகளை. ஐஶ்வர்யவிஷயதத்ஸாதந விஷய ஜ்ஞாநங்களுக்கு சாதநமானவென்றபடி. "வேதமானசாஸ்த்ரம்" என்றவிடமுண்டோவென்ன (வேதசாஸ்த்ரேத்யாதி) "ஆர்ஷம் தர்மோபதேஶஞ்ச வேதஶாஸ்த்ராவிரோதிநா । யஸ்தர்க்கேணாநுஸந்தத்தே ஸ தர்மம் வேத நேதர:" (ஆர்ஷம்தர்மோபதேஶஞ்சவேதஶாஸ்த்ராவிரோதிநா । யஸ்தர்க்கேணாநுஸந்தத்தேஸதர்மம்வேதநேதர:) ஆர்ஷம் – ருஷித்ருஷ்டபுராணாதிகம். தர்மோபதேஶம் – மநுவசநம்.

மாய்த்துக்கொண்டிகோளென்னுதே, "மாய்த்தோம்" என்று - பூஜ்யோக்தியேதென்ன (பூஜாவசாமித்யாதி) "மாய்த்தோம்" என்றதிலேநோக்கு.

உபகரணங்களாவன - ரதகஜாதிகள். த்விதீயார்த்தத்துக்கு, "கரணம்" என்று - இந்த்ரியங்களாய், "பல்படை" என்று-ஸமூஹமாய், இந்த்ரியக்ராமங்களென்றபடி. ஆளாகையாவ தென்னென்னிலென்றது - பகவதநுபவத்தைவிட்டு ஸ்வாநுபவத்ருப்தராளாகையாவ தென்னென்னிலென்றபடி.

சரணமாகியநான்மறை நூல்களும்சாராதே - கரணப்பல்படையென்றுதொடங்கி, ஆளாய்க்கொண்டு - மரணம். தோற்றமென்றுதொடங்கி, மாய்த்தோமித்யந்வய: ஆழியாகிற வரணத்திண்படையென்றபடி....... ........ .....................*

# மூன்றாம்பாட்டு.

ஆளுமாளாராழியுஞ்சங்குஞ்சுமப்பார்தாம்
வாளும்வில்லுங்கொண்டுபின்செல்வார்மற்றில்லை
தாளுந்தோளுங்கைகளையாரத்தொழக்காணே
னாளுநாளுநாடுவனடியேன்ஞாலத்தே.

## ஆறாயிரப்படி.

(ஆளுமாளார்) தன் தனிமையினுடைய ப்ரசங்கத்தாலேயவன் தனிமையை நினைத்து, "அவன்தனிமைக்குதவப்பெற்றிலேன்" என்று சொல்லிக்கொண்டு தம்முடைய தனிமையைச் சொல்லுகிறார்.

மாரீசநிரஸநார்த்தமாகவாதல், கரதூஷணநிரஸநார்த்தமாகவாதலெழுந்தருளும்போது, துணையின்றியே, தன்னுடைய சங்கசக்ராதி திவ்யாயுதங்களைத் தானே சுமந்துகொண்டுபோகாநிற்கும்; வாளும் வில்லுங்கொண்டு பின்செல்வார்மற்றில்லை; தானெழுந்தருளும்போ தவனுடைய திவ்யாயுதங்களைச் சுமந்துகொண்டு, அவன்திருவடிகளையும் திருத்தோள்களையும், என்னுடைய கைகளினுடைய விடாய்தீரும்படி தொழக்காணப்பெறுகிறிலேன்; "காந்தாரமத்யேவிஜநேவிஸ்ருஷ்டாபாலேவகந்யாவிலலாபஸீதா" (காந்தாரமத்யேவிஜநேவிஸ்ருஷ்டாபாலேவகந்யாவிலலாபஸீதா) என்றபிராட்டியைப்போலே, அவனைக் காணவேணுமென்றாசைப்பட்டு, நாளும்நாளு மிந்தலோகமாகிற காட்டிலே தனியே கிடந்து கூப்பிடாநின்றேனென்கிறார். ..........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், விரோதிபூயிஷ்டமான ஜகத்தில் ஆஸ்ரிதரக்ஷணார்த்தமாக ப்ரவ்ருத்தனானவவனுடைய ஸஹாயாந்தரராஹித்யத்தை யநுசந்தித்து, நானடிமைசெய்யும்படி காணப்பெறுகிறிலேனென்று வெறுக்கிறார்.

ஞாலத்து - ராவணதுர்யோதநசமரான ப்ரதிகூலர் வர்த்திக்கிற ஜகத்திலே. ஆளும் - பரிவராயிருப்பாராளும். ஆளார் - வேணுமென்றங்கீகரிக்கிறிலர். தாம் - அடுத்துப் பார்க்கப்பொறுத சௌகுமார்யத்தையுடைய தாம். ஆழியும் - திருவாழியையும். சங்கும் - திருச்சங்கையும். சுமப்பார் - மலையெடுத்தாப்போலேவஹிப்பர். அப்படியானாலும், வாளும் - நந்தகத்தையும். வில்லும் - ஸ்ரீசார்ங்கத்தையும். கொண்டு - கொண்டு. "ப்ருஷ்டதஸ்துதநுஷ்பாணி:" (ப்ருஷ்ட்டதஸ்துதநுஷ்பாணி:) என்கிற இளையபெருமாளைப்போலே, பின்செல்வார் - பின்செல்லுகைக்கு. மற்று - வேறொருவர். இல்லை - இல்லையாயிராநின்றது. நான் பின்செல்லவென்றாலிலேக்கிலும், தாளும் - "மத்தமாதங்ககாமிநம்" (மத்தமாதங்ககாமிநம்) என்னும்படி நடக்கிற திருவடிகளையும். தோளும் - "பாஹுச்சாயாமவஷ்டப்த:" (பாஹுச்சாயாமவஷ்டப்த:) என்று நிழல்செய்கிற திருத்தோள்களையும். கைகளை-என்கைகளைக்கொண்டு. ஆர - பூர்ணமாக. தொழ - தொழுதடிமைசெய்கைக்கு. காணேன்-என்கண்ணாலே காணப்பெறுகிறிலேன். அடியேன் - சேஷத்வமே ஸ்வரூபமானநான். சேஷிக்கதிசயஜநகமான சேஷவ்ருத்தியே ஜீவநமாகையாலே, பசியர் சோறு தேடுமாபோலே, நாளும் நாளும் - நாள்தோறும். நாடுவன் - தேடாநின்றேன்....*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

ப்ரயோஜநாந்தரபரர்க்காகத் தன் வாசியறியாதே யெதிரிடவல்ல சம்சாரத்திலே தனியே வர்த்தியா நிற்கும், அங்குத்தைக்கு ரக்ஷையாக நானுதவப்பெறுகிறிலேனென் றின்னாதாகிறார்.

(ஆளுமாளார்) விபூதித்வயத்திலும் பரிகைக்காளில்லை, தனியே யொருவரை யாளவேணுமென் றிருக்கிறார். நித்யசூரிகள் பகவதநுபவத்திலே யந்யபரர், சம்சாரிகள் சப்தாதிகளிலே யந்யபரர். (ஆழியும் சங்கும் சுமப்பார்தாம்) ஆபரணமான திவ்யாயுதங்கள், அவன் சௌகுமார்யத்தாலே மலையெடுத்தாப்போலே சுமையாய்த் தோற்றுகிறதிவர்க்கு. எதிரிகளுக்கஸ்த்ரமாய் அநுபவிப்பார்க் காபரணமாயிருக்கிறவை. (தாம்)தம்மைப் பார்த்துக்கொள்ளவேண்டாவோ. * எப்போதும் கைகழலா நேமியானன்றோ, அவனுக்கு நிரூபகங்களானவிவை சுமையோவென்ன; அது தான்செய்கிறது? (வாளும்வில்லுங்கொண்டு) இளையபெருமாளைப்போலே ஒருவர்பின்னே கொடுசென்றாலாகாதோ. (ஆளுமாளார், சுமப்பார் தாம், பின்செல்வார்மற்றில்லை) என்கிறது - "பரிவரானநீரவற்றுக்கன்றோ" என்று தம்மை யேவுவாராக. (தாளுந்தோளும்) நடக்கும்போது நடைச்சக்ரவத்துப்பிடிக்கும்படியாயிற்று மாறியிடும்திருவடிகளிருப்பது. "அக்ரத:ப்ரயயௌராம:" (அக்ரத:ப்ரயயௌராம:) என்னக்கடவதிறே. அத்தையும், வீசுதோள்களையும். (கைகளையார) "வயிறாரவுண்ண" என்பாரைப்போலே. (தொழக்காணேன்) தொழுகையும், பரிகையும், பர்யாயம்போலேகாணும். தொழக்காணப் பெறுகிறிலேன். நமஸ்ஸப்தத்தால் - எனக்கன்று, அவனுக்கென்றிறே சொல்லுகிறது. தொழுகையும், நம:என்கையும், பர்யாயமிறே. (நாளும்நாளும்நாடுவன்) அவன்தனிமை

யை யநுசந்தித்து, "அவனுக்கென்வருகிறதோ" என்று நாள்தோறுமா ராயாநிற்பன். சம்பந்தம் நித்யமானால் தத்கார்யமான பரிவும் நித்யமாகக் கடவதிறே. (அடியேன்) ஸ்வரூபஜ்ஞாநமுடைய நான் - சேஷிக்கதிசய த்தை விளைக்கையே சேஷவஸ்துவுக்கு ஸ்வரூபமென்றறிந்தநான். (ஞால த்தே) பரமபதத்திலேயிருந்து அஸ்த்தாநே பயசங்கைபண்ணுகிறேனோ. ப்ரஹ்மாஸ்த்ர ப்ரயோகம்பண்ணுவார், நாகபாசத்தையிட்டுக் கட்டுவார், அழைத்துவைத்து மல்லரையிட்டு வஞ்சிக்கத்தேடுவார், பொய்யாசநமி டுவாராகிற தேசத்திலே வர்த்தியாநின்றால் நானஞ்சாதேசெய்வதென். *

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு. (ஆளுமித்யாதி.) "ஞாலத்தே - ஆளுமாளார்" என்று தொடங்கி, "தொழக்காணேன்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (ப்ரயோ ஜநாந்தரேத்யாதி.) "தொழக்காணேன்" என்றத்தைப்பற்ற (நானுதவப்பெறுகி றிலேனென்றது.)

உபயவிபூதியையுமாளாநிற்க, "ஆளுமாளார்" என்கிறதென்னென்ன (வி பூதித்வயத்திலுமித்யாதிவாக்யத்வயம்.) இல்லாதபடி யெப்படியென்ன (நித்யசூரி களித்யாதிவாக்யத்வயம்.)

ஏந்தினுரொன்னுதே, "சுமப்பார்" என்றதுக்கு பாவம் (ஆபரணமானவித்யா தி.) ஆயுதங்களாபரணமானபடி யெப்படியென்ன (எதிரிகளுக்கித்யாதி.)

"வாளும்வில்லுங்கொண்டு" என்கிறதுக்கவதாரிகை (எப்போதுமித்யாதி.) "பின்செல்வார்மற்றில்லை" என்று வயிறெரிகைக்கு, பின்செல்வா ருண்டோவென் ன (இளையபெருமாளையித்யாதி.) ஏவுவாராக வென்றது - தம்மை யேவுகைக்காக வென்றபடி.

தாள்களையும் தோள்களையும் தொழுகைக்கு அப்படி யாகர்ஷகமாயிருக்கு மோவென்ன (நடக்கும்போதித்யாதி.) நடைச்சக்ரவத்துப் பிடிக்கையாவது-கதி சார்வபௌமன் வந்தானென்றுவிருதுபிடிக்கை. மாறியிடும்திருவடிகளாகர்ஷகமெ ன்னுமதுக்கு ப்ரமாணம் (அக்ரத இத்யாதி.) "[Grantha text] " (அக்ரதஃப்ரயயௌராமஸ் ஸீதாமத்யேஸுமத்யமா) இத் யாதி. "கைகளையார" என்றது - கைகளாரவென்றபடி. ஐகாரம்-அவ்யயம். "ஆர" என்றதுக்கர்த்தம் (வயிறுரவித்யாதி.) பரியக்காணே னென்னுதே, "தொழக்கா ணேன்" என்பானென்னென்ன (தொழுகையுமித்யாதி.) தொழுகையும் பரிகையும் பர்யாயமானபடி யெப்படியென்ன (நமஸ்ஸப்தத்தாலித்யாதி.) அதாவது-அவனுக் கு பாரதந்த்ர்மானால் அவனுக்கதிசயத்தைப்பண்ணுகை ஸ்வரூபமாகையாலே, நமஸ் ஸப்தத்தாலே பரிவைச் சொல்லுகிறதென்றபடி. தொழுகைதான் நமஸ்கார வாசி யோவென்ன (தொழுகையுமித்யாதி.)

நாள்தோறு மாராயவேணுமோ வென்ன (சம்பந்தமித்யாதி.) விவரணம் (சேஷிக்கித்யாதி.)

"ஞாலத்தே" என்றதுக்குபாவம் (பரமபதத்திலேயித்யாதிவாக்யத்வயம்.)*

## நான்காம்பாட்டு.

ஞாலம்போனகம்பற்றியோர்முற்றுருவாகி
யாலம்பேரிலையன்னவசஞ்செய்யுமம்மானே
காலம்பேர்வதோர்காரிருளூழியொத்துளதாலுன்
கோலங்காரெழில்காணலுற்றாழுங்கொடியேற்கே.

### ஆறாயிரப்படி.

(ஞாலம்) ஓர் முற்றுருவாய், அந்தப்பிள்ளைத்தனத்தாலே சர்வலோகங்களையு மமுதுசெய்து, பெரியவெள்ளத்திலே சிறியதோராலிலையிலே, யசோதைப்பிராட்டியைப்போலே யிருப்பாளொருதாயாருமின்றியே, தனியே கண்வளர்ந்தருளுகிறதசையில் துணையாயிருக்கப்பெறுமையாலும், உன்வடிவழகைக்காண வாசைப்பட்டுப்பெறுமையாலும், அகாதமான துஃகார்ணவத்திலே நிமக்நனாய்க்கிடக்கிற வெனக்கொருக்ஷணமானது, அந்தகாரமயமான ராத்ரியுகமாய்ச் செல்லுகிறதென்கிறார் ...*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அஸஹாயனான வடதளசாயியினுடைய வாபிரூப்யத்துக் கென்னப்ரமாதம்வருகிறதோவென் றஞ்சிக்கலங்கின ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்.

ஓர்-அத்விதீயமாய். முற்று-அதிமுக்தமான. உருவாகி - வடிவையுடையையாய். ஞாலம்-மஹாஜகத்தை. போனகம்-போஜநமாக. பற்றி - அமுதுசெய்து. ஆல்-ஆலென்று. பேர்-பேர்சொல்லலாமளவானது. இலை - ஓரிலையிலே. அன்னவசஞ்செய்யும்-இடம்வலங்கொண்டு கண்வளர்ந்தருளுகிற. அம்மானே-ஸ்வாமியானவனே. அந்தப்ரளயத்திலே யென்னப்ரமாதம் வருகிறதோவென்று. கார் - காளமேகத்தின். எழில்-எழிலையுடைத்தான. உன், கோலம்-வடிவழகை. காணலுற்று-காணவேணுமென்று நிர்ப்பந்தித்து. ஆழும் - அச்சத்தாலே யாழங்காற்படும்படியான. கொடியேற்கு-கொடியபாபத்தையுடையவெனக்கு. பேர்வது-ஒருக்ஷணத்தில்நின்றும் க்ஷணாந்தரத்திலேபேருகிற. காலம்-காலாவகாசமானது. ஓர்-அத்விதீயமான. காரிருள்-காடாந்தகாரத்தையுடைத்தான. ஊழியொத்து-கல்பம்போலே. உளது-ஆகாநின்றது.

உன்னுடைய வகடிதகடநாசாமர்த்யமான சக்தியோகமும் சர்வரக்ஷகத்வபூர்த்தியும் அச்சத்துக்குறுப்பாமென்றுகருத்து... ... ... ... ... ... ... *

### ஈடு - நான்காம்பாட்டு.

இவரிப்படியஞ்சினவாறே,ப்ரளயாபத்தினின்றும் ஜகத்தையெடுத்து வயிற்றிலேவைத்து நோக்கினவனன்றோ நான், நீர் நமக்கு பயப்படவேண்டாகாணுமென்று தான் சர்வரக்ஷகனாயிருக்கிறவிருப்பைக்காட்டினான்; சர்வரக்ஷகமான வஸ்துவாகாதே ப்ரளயத்திலே யகப்படப்புக்கதென்று அதுக்குமஞ்சுகிறார்.

(ஞாலம்போனகம்பற்றி) " இதுநமக்கு சாத்மியாது " என்றறியாதே, பூமிப்பரப்பையன்றோ வயிற்றிலேயெடுத்துவைத்தது. " வெண்

ணையும்சாத்மியாது" என்றிறே யிவரிருப்பது. (ஓர்முற்றுருவாகி) ஒருகொறுட்டிலேதெறித்தால் மற்றைக்கொறுட்டாலே பால்பாயும்பருவமாயிற்றுப்பருவம். யசோதாஸ்தநந்தயத்துக்கும் கிழாயிறேயிருப்பதிந்த மௌக்த்யம். ப்ரளயாபத்திலே வரையாதே ரக்ஷித்தரக்ஷகத்வமும், அகடிதகடநாசாமர்த்யமு மிவர்நெஞ்சில் படுகிறதில்லை; சௌகுமார்யமேயாயிற்றிவர்க்குத் தோற்றியிருக்கிறது. (ஆலம்பேரிலை) அங்கொருதொட்டிலிலே கிடக்கப்பெற்றது, இங்கொருபவனான வாலிலையிலேயாயிற்றுத் திருக்கண்வளர்ந்தருளுகிறது. (பேரிலை) பேருகிறவிலை. முகிழ்விரிகிறவிலை. "கதந்வயம்ஸிஸுஸ்ஸேதேலோகேநாஸமுபாகதே । ஸாகாயாம்வடவ்ருக்ஷஸ்யபல்லவேத்விதிவிஸ்மிதஃ" (கதந்வயம்ஸிஸுஸ்ஸேதேலோகேநாஸமுபாகதே । ஸாகாயாம்வடவ்ருக்ஷஸ்யபல்லவேத்விதிவிஸ்மிதஃ) "இளந்தளிரில் கண்வளர்ந்த" என்கிறபடியே. ஆலிலையென்று- ஒருபேர்மாத்ரமென்னுதல்; பெரியவிலையென்று-விபரீதலக்ஷணையாய், சிற்றிலையென்றுதல். (அன்னவசஞ்செய்யும்) உணவுக்கிடாக இடம்வலங்கொள்ளும். யசோதைப்பிராட்டி தொட்டிலில்பண்ணும் வ்யாபாரமெல்லாம் பண்ணுமாயிற்றதுக்குள்ளே. * கிடக்கில்தொட்டில் கிழியவுதைத்திடுமெதில்; தனக்கு சாத்மியாதபூமியை யமுதுசெய்கையும், "சாத்மியாது" என்றறியாதமுக்தனுகையும், ப்ரளயத்திலே அல்பாவகாசமான வாலிலையிலே கண்வளர்ந்தருளுகையும், அதிலேகிடந்தவிடத்தில் கிடவாதே வ்யாபரிக்கையும், இதெல்லாம் பயஸ்த்தாநமாயிருக்கிறதாயிற்றிவர்க்கு. (அம்மானே) சர்வரக்ஷகனானவனே. ஒருகாபுருஷனுக்கு வந்ததொன்றன்றிக்கே சர்வரக்ஷகனானவனுக்குவந்ததென்றிதுவும் பயஸ்த்தாநமாகிறதிவர்க்கு.

(காலமித்யாதி) உன்தனிமையை யநுசந்திக்க வநுசந்திக்க, ஒருக்ஷணத்தினின்றும் க்ஷணாந்தரத்திலே பேருகிற நடுவில் சந்திமாத்ரம், மஹாந்தகாரமான கல்பமாய்க்கொண்டு நெடுகாநின்றதெனக்கு. (உன்கோலம் காரெழில்காணலுற்று) உன்னுடையகறுத்தவெழிலான கோலமென்னுதல், மேகத்தினுடைய வெழில்போலே யிருந்துள்ளவழகென்னுதல். (காணலுற்றுழுங்கொடியேற்கு) மங்களாஸாஸநம்பண்ணுகைக்குன்னழகியவடிவைக்காண வாசைப்பட்டுப்பெறுதே நோவுபடுகிற மஹாபாபியானவெனக்கு. சம்சாரபயமவனே யாஸ்ரயிக்கப்போம்; ஒருகாலத்திலும் முடியாதே நித்யமாயிருப்பதொருபய மநுவர்த்திக்கும்படியான பாபத்தைப்பண்ணினேன். "ரக்ஷகனுக்கென்வருகிறதோ" என்கிறபயத்துக்கு முடிவில்லையே... .. ... ... ... ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு ( ஞாலமித்யாதி ) "ஆலம்பேரிலையன்ன வசம்செய்யும்மமானே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இவரிப்படியித்யாதி)

"ஞாலத்தைப்போனகமாகப்பற்றி" என்றதுக்குபாவம் (இதுநமக்கித்யாதி) போனகம்பற்றி - திருப்போனகமாக ஸ்வீகரித்து. "ஓர்" என்றதுக்குபாவம் (ஒரு

கொறுட்டிலேயித்யாதி) கொறுடு-கபோலம். "ஓர்" என்றதுக்கு வ்யாவர்த்யம் (யசோதேத்யாதி) ரக்ஷகத்வமும் அகடிதகடநாசாமர்த்யமும் பயநிவ்ருத்திஹேதுவன்றோவென்ன (ப்ரளயாபத்திலேயித்யாதி) "ஞாலம்போனகம்பற்றி" என்கையாலே-ரக்ஷகத்வமும், "ஆலம்பேரிலை" என்கையாலே - அகடிதகடநாசாமர்த்யமும் தோற்றுகிறது. "ஆலம்பேரிலை" என்றதால் வ்யாவ்ருத்தி (அங்கொருதொட்டிலித்யாதிவாக்யத்வயம்) "பேரிலை" என்றதுக்கு - மூன்றர்த்தம். ஆலந்தளிரிலே கண்வளர்ந்தானேவென்ன (கதர்வயமித்யாதி) "கதந்வயம்ஸிஸுஸ்ஸேதே லோகேநாஸமுபாகதே । ஸாகாயாம்வடவ்ருக்ஷஸ்ய வஹ்வேக்ஷித்விஸ்மிதஃ" (கதந்வயம்ஸிஸுஸ்ஸேதேலோகேநாஸமுபாகதே । ஸாகாயாம்வடவ்ருக்ஷஸ்ய பல்லவேத்விதிவிஸ்மிதஃ) உணவுக்கீடாக - உண்டதுக்கீடாக. விவரணம் (யதோதைப்பிராட்டியித்யாதி) (இளந்தளிரில்கண்வளர்ந்த) என்றது - திருமொழியில், "மஞ்சாடு" இத்யாதி. தொட்டிலில்பண்ணும் வ்யாபாரமேதென்ன (கிடக்கிலித்யாதி) பெரியாழ்வார்திருமொழி. தொட்டிலில்வளர்த்தினால் தொட்டில்கிழியும்படி யுதையாநிற்குமென்றபடி. "ஞாலம்போனகம்" இத்யுக்தார்த்தத்தை நிகமிக்கிறார் (தனக்குசாத்மியாதவித்யாதி) "அம்மான்" என்றதுக்குபாவம் (ஒருகாபுருஷனுக்கித்யாதி)

"பேர்வதோர்-காலம் - காரிருளூழியொத்துளதால்" என்றந்வயித்தர்த்தம் (உன்தனிமையையித்யாதி) "காரிருள்" காரென்று - கறுப்பாய், மஹாந்தகாரமென்றபடி.

முந்தினவர்த்தத்துக்கு, "கார்" என்று - கறுப்பாய், "எழில்" என்று-தேஜஸ்ஸாய், "கோலம்" என்று - விக்ரஹமாய், கறுத்ததேஜஸ்ஸையுடைய விக்ரஹமென்றபடி. த்விதியார்த்தத்துக்கு, "கார்" என்று - மேகமாய், "எழில்" என்று-அழகாய், "கோலம்" என்றும் - அழகாய், மேகத்தினுடைய வழகுபோலேயிருந்துள்ள வழகென்னுதல். "ஆழும்" என்கிறவர்த்தமானார்த்தம் (சம்சாரபயமித்யாதிவாக்யத்வயம்) இது நித்யமாயிருக்குமோவென்ன (ரக்ஷகனுக்கித்யாதி) விக்ரஹவைலக்ஷண்யம் நித்யமாகையாலே, பரிவும் நித்யமாயிருக்குமென்றபடி.

ஞாலம் போனகமென்றுதொடங்கி, அம்மானே - உன் - காரெழில் - கோலம் - காணலுற்றாழும் கொடியேற்கு - பேர்வதோர் - காலம் - காரிருளூழியொத்துளதா வித்யந்வயஃ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஐந்தாம்பாட்டு.

கொடியார்மாடக்கோளூரகத்தும்புளிங்குடியு
மடியாதின்னேநீதுயின்மேவிமகிழ்ந்ததுதா
னடியாரல்லறவிர்த்தவசைவோவன்றேலிப்
படிதானீண்டுதாவியவசைவோபணியாயே.

### ஆறாயிரப்படி.

(கொடியார்) "அந்தவிழவுதீரவேணும்" என்று ஆஸ்ரிதர்க்காத்மதாநம்பண்ணுகைக்குக் கொடிகட்டிக்கொண்டிருக்கிற திருக்கோளூரிலும் திருப்புளிங்குடியிலும் போய்ப்புக்கவிடத்திலே, தம்மைத்திருக்கண்

ணாலே பார்த்தருளுதல், ஒருவார்த்தை யருளிச்செய்தல், ஒருதிவ்யசேஷ்டிதத்தைப்பண்ணுதல் செய்தருளாதே யொருபடியே கண்வளரக்கண்டவாறே; நீ யொருபடியே கண்வளர்ந்தருளுகிற தாஶ்ரிதவிரோதிநிரஸநஜநிதஶ்ரமத்தாலேயோ, அன்றிக்கே, த்ரைலோக்ய விக்ரமணஜநித ஶ்ரமத்தாலேயோவென்றுகொண்டு, இவனுக்கொரு வ்யஸநமுண்டானதாகசங்கித்து வ்யஸநப்படுகிறார்.................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், திருக்கோளூரிலும் திருப்புளிங்குடியிலும் முசியாதே கண்வளர்ந்தருளுகிறது, ஆஶ்ரிதவிரோதிநிவர்த்தநத்தாலும் த்ரிவிக்ரமாபதாநத்தாலும் வந்த வாயாஸமோவென்கிறார்.

விரோதிகளுமறியலாம்படி, கொடி - கொடிகள். ஆர் - செறிந்த. மாடம் - மாடத்தையுடைய. கோளூர் - திருக்கோளூர்க்கு. அகத்தும் - உள்ளும். பலவிடத்தில் படுக்கைபடுத்தது அலேச்சலின் மிகுதியென்று சங்கிக்கலாம்படி, புளிங்குடியும்- திருப்புளிங்குடியிலும். மடியாது - மீளாதே. இன்னே - ஒருபடிப்படவிப்படி. துயில்மேவி - கண்வளர்ந்தருளினவத்தாலே. நீ - நீ. மகிழ்ந்ததுதான் - உகப்புப்பிறந்திருக்கிறவிது. ஆஶ்ரிதவிரோதிகளான ராவணாதிகளை நிரஸித்து, அடியார் - அவர்கள். அல்லல் - துஃகத்தை. தவிர்த்த - போக்கின. அசைவோ - அலேச்சலாலேயோ. அன்றேல் - அதல்லவாகில். இ - இந்த. படிதான் - பூமியை. நீண்டு - ஒருநாளே வளர்ந்து. தாவிய - அளந்துகொண்ட. அசைவோ - ஆயாசமோ. உன்திருமிடற்றோசையில் வாசியாலே நான் உன்னுயாசத்தின் மிகுதி யறிகைக்காகவும், நொந்தவிடமறிகைக்காகவும், பணியாய் - அருளிச்செய்யவேணும்.

அளந்ததாளைப்பிடித்தல், எய்த்த தோளைப்பிடித்தல் செய்கையிலேயிவர்க்குக்கருத்து. ..................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

ப்ரளயார்ணவத்திலே தனியே கண்வளர்ந்தருளுகிறானென்று பயப்பட்டவர் பயந்தீர, பரிவருமுண்டாய், நிர்ப்பயமான திருக்கோளூர் திருப்புளிங்குடி தொடக்கமான விடங்களிலே கண்வளர்ந்தருளுகிறபடியைக் காட்டிக்கொடுக்க, அதுதானு மிவர்க்கு பயஹேதுவாயிற்று.

( கொடியார்மாடக் கோளூரகத்தும் ) கொடிமிக்க மாடங்களையுடைய திருக்கோளூரிலும். சத்ருக்கள்கிடந்தவிடமறிந்து அபிசரிக்கும்படி கொடிகட்டிக்கொண்டு கிடக்கவேணுமோ. கொடிக்கு பயப்படவல்லாரிவரைப்போலில்லை. கம்ஸபயத்தாலே யொளித்துவளர்ந்தாப்போலேயிருக்கலாகாதோ. இந்தபயமில்லையிறே கீழிற்பாட்டில், அநுகூலப்ரதிகூல விபாகமற ஸம்ஹ்ருதமாய்க் கிடக்கையாலே. ( புளிங்குடியும் ) இதுவுமொருபயஹேது. பலவிடங்களிலும் படுக்கை படுக்கிறது ஶ்ரமத்தின் மிகுதியென்றிருக்கிறார். ( மடியாது ) இடம் வலங்கொள்ளாதே யென்னுதல்; மடியென்று - சோம்பாய், சோம்பாதேயென்னுதல். அதாவது-ந

மக்காக விவன்கிடக்கிருனென்றறிந்து "பரிகைக்கொருத்தரைப் பெற்றிலோம்" என்றிளகாதொழிகை. ( இன்னே ) இப்படியே. "கிடந்ததோர்கிடக்கை" என்னுமித்தனையொழிய, பாசுரமிடப்போகாதிருக்கை. ( நீ துயில்மேவிமகிழ்ந்ததுதான் ) * அவிகாரியாயிருக்கிற நீயொருபடியே கண்வளர்ந்தருளி, அத்தாலே யினியனுகைக்கு ஹேதுவென். இவன்முகத்திலே தெளிவுண்டாயிருந்தது, அதுக்கடி முன்பே யொருஶ்ரம முண்டாகையிறே யென்றிருக்கிறுர்; ஶ்ரமமுடையார்க்கு உறங்கவுறங்க முகந்தெளிந்துவரக்காண்கையாலே.

( அடியாரல்லல்தவிர்த்தவசவே ) திருவடிகளிலே சரணம்புகுந்த விந்த்ராதிகளுக்காக ராவணுதிகளை யழியச்செய்து, அவர்களுடைய துஃகங்களைக்கெடுத்த விளைப்போ. (அன்றேல்) அன்றியே. (இப்படியித்யாதி) அன்றேபிறந் தன்றேவளர்ந்து சுகுமாரமான திருவடிகளைக்கொண்டு காடுமோடையு மளந்துகொள்ளுகையாலே திருவடிகள்நொந்தோ. (பணியாயே) தோள்நொந்தோ, திருவடிகள்நொந்தோ, அருளிச்செய்யாய் தோள்நொந்ததென்னில் தோளைப்பிடிக்க, தாள்நொந்ததென்னில் தாளைப்பிடிக்கவுமருளிச்செய்யவேணும். ஸ்வரசாதங்கொண்டறியலாமென்றுகேட்கிருர். உகந்தருளினவிடங்களிலும் செய்யமுடியாததில்லை,சொல்ல நினையாமலிருக்கிரு னித்தனையென்றிருக்கிருர்........................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு ( கொடியாரித்யாதி. ) "கோளூரகத்தும்புளிங்குடியும்-துயில்மேவிமகிழ்ந்தது" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை ( ப்ரளயார்ணவத்திலே யித்யாதி. )

"கொடியார்" என்று விசேஷிக்கிறவருடைய ஹார்த்தபாவம் ( சத்ருக்களித்யாதிவாக்யத்வயம். ) "கொடியார்மாடம்" என்றதுக்கு ரசோக்தி (கொடிக்கித்யாதி.) கொடியென்று - ஸ்த்ரீக்கும்பேர். கீழிற்பாட்டைப்பற்ற வாசியை யருளிச்செய்கிருர் (இந்தபயமித்யாதி.) இல்லாமைக்கு ஹேதுவருளிச்செய்கிருர் ( அநுகூலேத்யாதி. ) இரண்டுதிருப்பதியில் கண்வளர்ந்தத்தைச் சொல்லுகிறவருடைய பாவம் ( இதுவுமித்யாதி. ) அதெப்படியென்ன ( பலவிடங்களிலுமித்யாதி. )

( இடம்வலங்கொள்ளாதே ) என்கிறவர்க்கு பாவம் - பாடோடிக்கிடப்பதேயென்று விஷண்ணராகிருரொன்று. "சோம்பாதே" என்றதுக்குபாவம் ( அதாவது நமக்காகவித்யாதி. ) இளகாதொழிகை யாவது - எழுந்திராதொழிகையென்றபடி. இன்னபடியென்று சொல்லுகிறதுக்கென்னென்ன ( கிடந்ததோரித்யாதி. ) இனியனுகை நல்லதன்றேவென்ன; அதுக்குபாவம் ( இவன்முகத்திலேயித்யாதி. ) இதெங்கேகண்டோமென்ன ( ஶ்ரமமுடையார்க்கித்யாதி. )

அசைவு - இளைப்பு.

இப்படி - இப்பூமி.

கீழ்வாக்யவிவரணம் ( தோள்நொந்ததென்னிலித்யாதி. ) "பணியாய்"என்றதுக்கு ஹார்த்தபாவமாதல், பாவாந்தரமாதல் (ஸ்வரஸாதமித்யாதி.) ஸ்வரசாத

ம் - ஸ்வரத்தின்தளர்த்தி. ஸாதம் - தளர்த்தி. அர்ச்சாவதாரம் வார்த்தையருளிச்செய்யக் கூடுமோவென்ன (உகந்தருளினவித்யாதி.)..........................................*

# ஆறாம்பாட்டு.

பணியாவமரர்பணிவும்பண்புந்தாமேயா
மணியாராழியுஞ்சங்கமுமேந்துமவர்காண்மின்
றணியாவெங்கோயுலகிற்றவிர்ப்பான்றிருநீல
மணியார்மேனியோடென்மனஞ்சூழவருவாரே.

## ஆறாயிரப்படி.

(பணியாவமரர்) ஸ்வாஶ்ரித சதுர்முகாதி தேவர்களுக்கு ஸ்வேதர சகலஜநாபிவந்த்யத்வ நிரதிசயைஶ்வர்ய ப்ரதனாய், சகலலோகதுஃக நிரஸநார்த்தமாக ஸ்வாத்மவிபூஷண சங்கசக்ராதி திவ்யாயுததரனாய், நிரதிசய ரமணீய நீலரத்நசத்ருஶனாயிருந்த வவனை யாசைப்பட்டுக்கிடீர்? நானிப்பாடு படுகிறதென்கிறார். ..........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நித்யசூரிகளுக் கநுபாவ்யமான நிரதிசயபோக்ய விக்ரஹத்தோடே ப்ரதிகூல பூயிஷ்ட்டமான விஜ்ஜகத்தில் "என்னுகிறதோ" என்றென்னெஞ்சுகலங்கும்படி. வாராநின்றாரென்கிறார்.

"நகிஞ்கரஃ" (நகிங்கரஃ) என்கிறபடியே ஓரவஸ்த்தையிலும், பணியா- ஔபாதிகமாக வாகிலும் வேறொருவர்காலில் பணியவேண்டாதபடி. அமரர் - *அநந்யாதிபதிகளான நித்யசூரிகளுடைய. பணிவும் - ஸ்வரூபப்ரயுக்தமாய் ஸ்வாபாவிகமான பணிவுக்கும். பண்பும் - அவர்கள் ஜ்ஞாநப்ரேமாதி ஸ்வபாவங்களுக்கும். தாமேயாம் - தாமே விஷயமாய்க்கொண்டு. அணி - ஆபரணரூபமான. ஆர் - போக்யதையையுடைய. ஆழியும் - திருவாழியையும். சங்கமும்-திருச்சங்கையும். ஏந்தும்- அவர்களுக்கநுபாவ்யமாம்படி யேந்தியிருக்கும். அவர்காண்மின் - அவர்கிடீர். அப்பரிவரிருக்கச்செய்தே, உலகில் - லோகத்தில். தணியா - ஒருகாலும் தணியாமல்நடக்கக்கடவதாய். வெம் - அதிசயிதபரிதாபஹேதுவான. நோய் - அவித்யாகர்மவாசநாருசி ப்ரக்ருதிசம்பந்தரூபவ்யாதிகளை. தவிர்ப்பான் - களைகைக்காக. திரு - அந்த நித்யசூரிகளுக்கு நித்யாநுபாவ்யமாய் நிரதிசயசௌந்தர்ய சௌகுமார்யாதி சம்பத்தை. ஆர் - உடைத்தான. நீலமணி - நீலரத்நம்போலேயிருக்கிற. மேனியோடு- திருமேனியோடேகூட. "இவ்வடிவழகுக்கென்னதீங்குவருகிறதோ" என்று, என்- என். மனம்-மநஸ்ஸானது. சூழ-ப்ரமிக்கும்படி. வருவார்-சம்சாரத்திலேவருவர்.*

## ஈடு - ஆறாம்பாட்டு.

நீரிங்ஙனேகிடந்து படுகிறதென், சர்வரக்ஷகனன்றோ வவனென்ன; நித்யசூரிகள் பரியவிருக்கக்கடவவன் சம்சாரத்திலே யவ்வடிவோடேவந் துலாவாநின்றால் நானிப்படி படாதேசெய்வ தென்னென்கிறார்.

(பணியாவமரர்) வேறே சிலரைப் பணிய சம்பாவனையில்லாத நித்யசூரிகள். முன்பசேவ்யர் காலிலேகுனிந் தொருநாளிலே யநுகூலித்து, “அழுக்குடம்பெச்சில்வாய்” என்றநுதபித்து, பின்பு வகுத்தார்காலிலே குனிந்தவர்களல்லர். பணித்தல் பணிதல் செய்யாதவர்கள். இத்தால் - முக்தரை வ்யாவர்த்திக்கிறது. (பணிவும்பண்பும்தாமேயாம்) அவர்கள் பணிவுக்கும் ஜ்ஞாநாதிகுணங்களுக்கும் தாமே விஷயமாயிருக்குமவர். (அணியாராழியும் சங்கமுமேந்தும்) சர்வாபரணமும் தானேயாகப்போரும்படியான திவ்யாயுதங்களை தரித்து, நித்யசூரிகளுக்குக் காட்சிகொடுத்தால் அவர்களு மஸ்த்தாநே பயசங்கைபண்ணி மங்களாசாஸநம் பண்ணும்படியாயிற்றிருப்பது. அவர்களுக்கும் நான்பட்டதுபடவேணும். (அவர்காண்மின்) அவர்கிடீர் பயஸ்த்தாநத்திலே பிறக்கிறுர். தமக்கொரு ப்ரயோஜநத்துக்காகத் தான் வருகிறுரோ (உலகில் - தணியாவென்னோய் - தவிர்ப்பான்) (தணியாவெந்நோய்) ஒருநாளும் முடியாததாபத்ரயாதிகள். (திருநீலமணியார்மேனியோடு) நீலமணிபோலே ப்ரமஹரமாய் சுகுமாரமானவடிவோடே. இங்கே வரவேண்டினுலவ்வடிவோடே வரவேணுமோ. (என்மனம்) அந்த சுகுமாரமானவடிவோடே சம்சாரத்திலே யுலாவுகிறுனென்றறிந்த வென்மநஸ்ஸானது. (சூழவருவாரே) சுழன்றுவரும்படிவருகிறவர். தணியாவென்னோய்-தவிர்ப்பான்-உலகில்-வருகிறவொன்றுமாம். ........................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. (பணியாவித்யாதி.) “பணியாவமரர்” என்று தொடங்கி “என்மனஞ்சூழவருவாரே” என்றத்தைக் கடாக்ஷித் தவதாரிகை (நீரிங்ஙனேயித்யாதி.)

இத்தால் வ்யாவ்ருத்தி (முன்பசேவ்யரித்யாதி.) (அழுக்குடம்பெச்சில்வாய்) என்கிறதுக்கு பாவம்; சரீரத்துக்கழுக்காவது - பிறரைவணங்குகை, வாய்க்கெச்சிலாவது - பிறரை ஸ்தோத்ரம்பண்ணுகையென்று. திருக்குறுந்தாண்டகம், “ஆவியை” இத்யாதி. “பணிவும்” என்றதுக்கு தந்த்ரேணார்த்தத்வயம் (பணித்தலித்யாதி.) பணித்தல் - ஸ்தோத்ரம்பண்ணுகை. பணிதல் - வணங்குகை. பணிவுக்கும்-வணங்குகைக்குமென்றபடி. “பண்பு” என்று - நீர்மையாய், ஜ்ஞாநாதி குணங்களுக்குமென்றபடி.

“அணி” என்று - ஆபரணமாய், ஆர்தல் - அமைதலாய், சர்வாபரணமும் தானேயாகப் போரும்படியானவென்று சப்தார்த்தம்.

“வருவார்” என்றத்தைக் கடாக்ஷித்து பாவம் (அவர்கிடீரித்யாதி.)

மேலுக்கவதாரிகை (தமக்கித்யாதி.) சூழ - சுழலவென்றபடி. கீழே “உலகில் - தணியாவென்னோய் - தவிர்ப்பான்” என்றுகூட்டி, இங்கே “உலகில் - வருவார்” என்று கூட்டுகிறுர் (தணியாவென்னோய்தவிர்ப்பானித்யாதி.) ...........*

# ஏழாம்பாட்டு.

வருவார்செல்வார்வண்பரிசாரத்திருந்தவென்
றிருவாழ்மார்வற்கென்றிறஞ்சொல்லார்செய்வதென்
னுருவார்சக்கரஞ்சங்குஞ்சுமந்திங்கும்மோ
டொருபாடுழல்வானோரடியானுமுளனென்றே.

## ஆறாயிரப்படி.

(வருவார்) நானிப்பாடுபடாநிற்கச்செய்தே யவனெழுந்தருளா தொழிகிற தென்னுடையவ்யஸந மறியாமையென்று பார்த்து;

ஸ்வகார்யார்த்தமாகப்போகிறாரும் வருகிறாரும் திருப்பரிசாரத் தேறப்போகிறாராகவும் அங்குநின்று வருகிறாராகவும் நிச்சயித்து, அவர்கள், திருப்பரிசாரத்திலே யெனக்குத்தாயும் தந்தையுமா யென்னைத் தேடிக்கொண்டிருக்கிற வென்றிருவாழ்மார்வற்கு, நிரதிசய தர்சநீயஸுதர்சந சங்காதி திவ்யாயுதங்களைச்சுமந்துகொண் டிந்தலோகத்திலே தனியேயெழுந்தருளும்போது பின்னே சாயையைப்போலே திரிவானோரடியானுமுளனென்று என்றிறஞ்சொல்லார், செய்வதென்னென்கிறார்.

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், கிஞ்சித்கரிக்கைக்குப் பிராட்டியோடே திருப்பரிசாரத்திலேயிருக்கிறவர்க்கு, உமக்குப் பரிவனாயிருப்பா னொருகிங்கரனுண்டென்று ஒருவருஞ் சொல்லுகிறிலரென்று வெறுக்கிறார்.

வருவார் - அங்குநின்றும் வருவார். செல்வார் - இங்குநின்றும் செல்லுவாராகிறவவர்கள். வண் - விலக்ஷணசம்பத்தையுடைத்தான. பரிசாரத்து - திருப்பரிசாரத்திலே. என் - என்னை யடிமைகொள்ளுகைக் கிடாக. இருந்த - எழுந்தருளியிருக்கிற. திருவாழ்மார்வற்கு - ஸ்ரீமானுக்கு. உரு - வடிவழகால். ஆர் - பொருத்தமான. சக்கரம் - திருவாழியையும். சங்கும் - திருச்சங்கையும். சுமந்து - தரித்துக்கொண்டு. இங்கு - இந்தவிபூதியிலே. உம்மோடு - உம்மோடேகூட. ஒருபாடு - பார்ஶ்வவர்த்தியாய்க்கொண்டு. உழல்வான் - திரிவான். ஓர் - அத்விதீயனாயிருப்பானொரு. அடியானும் - அடியானும். உளன் - உளன். என்று - என்று. என் - என். திறம் - இடையாட்டம். சொல்லார்-சொல்லுகிறிலர்கள். வருகிறவர்கள் தம்மை யழைத்துவாராமையாலும், போகிறவர்களொரு மறுமாற்றம்கேளாமையாலும் இவர்கள் வரத்தும் போக்கும் தமக்காகவென்று நினைத்து, சொல்லுகிறிலீரென்கிறார். இவர்கள் சொல்லாதவளவில் அவரறிந்தங்கீகரிக்கைக்கு, செய்வது-செய்யலாவது. என்-ஏதென்று வெறுக்கிறார். ...........................................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

இங்கேவந்து திருப்பரிசாரத்திலே யெழுந்தருளியிருக்க நானுதவப்பெறாதே யவஸந்நனானால், ஓரடியானுமுளனென்று அவனுக்கறிவிப்பாரையும் பெறுகிறிலோமென்கிறார்.

(வருவார்செல்வார்) திருநகரியினின்றும் திருப்பரிசாரத்திலே மஹாபதமாக விசங்காநிற்கும். ஸ்வகார்யத்தாலே த்வரித்துப்போவாரைத் தம்தசையையறிவிக்கப்போகிறார்களென்றும், அங்குநின்றும் வருவாரைத் தம்மையழைக்கவருகிறார்களென்று மிருப்பர். இயக்கமற்றிருக்கிற தன்றுகிடீர். திருப்பரிசாரத்தி லிருப்புக்குப்பரியவேணும். அதுக்குமேல் பிராட்டியோட்டைச் சேர்த்திக்குப்பரியவேணும். "ஹவாஂஸ்துஸஹ வைதெஹ்யா" (பவாம்ஸ்துஸஹவைதேஹ்யா) என்றிளையபெருமாளைப்போலே தொடர்ந்துபோயடிமைசெய்யவேண்டும்படியாயிற் றிங்கிருக்கிறவிருப்பு. (என்றிறஞ்சொல்லார்) சொன்னவார்த்தைகேட்பிப்பாரில்லாமை சொல்லாதொழிகிறாரல்லர்கிடீர். (என்திருவாழ்மார்வற்கு) என் ஸ்வாமிநி ஸந்நிதியாகையாலே சொன்னவார்த்தை விலைச்செல்லுங்கிடீர். (செய்வதென்) இதுக்கென்னாற்செய்யலாவதென். ஸ்வகார்யபரராய்ப் போவர்களாகில், அவர்களங்குப்போனால் சொல்லும்பாசுரமேதென்ன (உருவார்சக்கரமித்யாதி) அழகுமிக்கிருந்துள்ள வாழ்வார்களை சாதரமாகதரித்தென்னுதல், திருமேனிக்கெல்லாம் வேறோராபரணம் வேண்டாதே தானே யாபரணமாகப்போரும்படியான வாழ்வார்களைதரித்து. (இங்கு) பரிவரின்றிக்கேயிருக்கிற சம்சாரத்திலே. (உம்மோடொருபாடுழல்வான்) இடைவிடாதே யொருபார்ஶ்வத்தைப்பற்றித்திரிவான். ஒருபார்ஶ்வத்துக் கிளையபெருமாளுண்டிறே. (ஓரடியானுமுளனென்றே) அநந்யப்ரயோஜநனாயிருப்பா னொருவனுளனென்று. "ஸமஹாத்மா ஸுதுர்லபஃ" (ஸமஹாத்மாஸுதுர்லபஃ) என்கிறபடியே ஒருவரில்லையென்று கைவாங்கியிருப்பர்; அதுவேண்டா, ஒருவனுளனென்று என்னிடையாட்டம் சொல்லுகிறிலர்கள், செய்வதென்... ... ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (வருவாரித்யாதி.) "வண்பரிசாரத்திருந்த வென்திருவாழ் மார்வற்கு - ஓரடியானுமுளனென்று-என்றிறஞ்சொல்லார்" என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (இங்கேவந்தித்யாதி.)

அவனுக்குத் தாமுளரென்றறிவிக்கை தேட்டமானால் "செல்வார்" என்னவமைந்திருக்க, வருவாரைச் சொல்லுவானென்னென்ன (திருநகரியிலித்யாதி.) அதாவது - போவாரும்வருவாருமாய் வழிநடவாநிற்கச்செய்தே, என்றிறஞ்சொல்லாதிருக்கிறார்களென்றபடி. பரிஹாராந்தரம் (ஸ்வகார்யத்தாலேயித்யாதி.) இசங்காநிற்கும் - நடவாநிற்கும். "திருநகரியில்" இத்யாதி முந்தின பரிஹாரவிவரணம் (இயக்கமித்யாதி.) இயக்கம் - வழிநடப்பு. "வண்பரிசாரத்திருந்த" என்றதுக்குபாவம் (திருப்பரிசாரத்திலித்யாதி.) "திருவாழ்மார்வற்கு" என்றதுக்குபாவம் (அதுக்குமேலித்யாதி.) கைங்கர்யப்ரதிசம்பந்தி யொருமிதுநமென்னுமிடம் தோற்றுகைக்காகப் பிராட்டியோட்டைச் சேர்த்தி சொல்லுகிறதென்று பாவாந்தரம் (பவாம்ஸ்தித்யாதி.) புருஷகாரத்வேந பிராட்டியோட்டைச்சேர்த்தி சொல்லுகிறதென்

று மூன்றும்பாவம் ( சொன்னவார்த்தையித்யாதி. ) ஏதத்விவரணம் ( என்ஸ்வாமி நியித்யாதி. )

முந்தினவர்த்தத்துக்கு, "உரு" என்று - அழகு. இரண்டாமர்த்தத்துக்கு, "உரு" என்று - திருமேனி, "ஆர்" என்று - அழகு. "உழல்வான்" என்றவர்த்தமாகார்த்தம் ( இடைவிடாதேயென்றது. ) மற்றைப் பார்ஸ்வத்துக்கோவென்ன (ஒருபார்ஸ்வத்துக்கித்யாதி.) "அடியான்" என்றதுக்குபாவம் (அநந்யேத்யாதி.) "ஓர், உளன்" என்றதுக்கு பாவம் (ஸமஹாத்மேத்யாதி.)

வண்பரிசாரத்திருந்தவென்றுதொடங்கி, மார்வற்கு - உருவாரென்று தொடங்கி, உளனென்று - வருவார்செல்வார் - என்றிறஞ்சொல்லார், செய்வதென் இத்யந்வயஃ........................................................................................*

# எட்டாம்பாட்டு.

என்றேயென்னையுன்னேரார்கோலத்திருந்தடிக்கீழ்
நின்றேயாட்செய்யநீகொண்டருளநினைப்பதுதான்
குன்றேழ்பாரேழ்சூழ்கடன்ஞாலமுழுவேழு
நின்றேதாவியநீள்கழலாழித்திருமாலே.

## ஆறுயிரப்படி.

(என்றேலென்னை) அவன் சர்வஜ்ஞனல்லனோ, அறிந்தருளாமையுண்டோ நினையாமையல்லதென்று பார்த்து;

என்னையுன்னேரார்கோலத் திருந்தடிக்கீழ் நின்றேயாட்செய்யும்படி நீ விஷயீகரித்தருள நினைப்பது தானென்றென்றபேக்ஷித்து, பின்னையுமபேக்ஷிதம் செய்தருளா தொழிந்தவாறே, நானொருபாயாநுஷ்டாநம் பண்ணுமையாலாகாதே யபேக்ஷிதஞ் செய்தருளாதொழிகிறதென்று பார்த்து, உன்னுடைய க்ருபையாலே நிர்ஹேதுகமாக சர்வலோகத்தையு மளந்தருளினப்போலே, அடியேனுடைய வபேக்ஷிதம் செய்தருளாயென்கிறார்..........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அகிலவஸ்து சம்ஶ்லேஷ ஸ்வபாவனான நீ யுன்திருவடிகளிலே நானடிமைசெய்யும்படி யங்கீகரிப்பதென்றென்கிறார்.

ஏழ்குன்று - சப்தகுலபர்வதங்களையும். ஏழ்பார்-சப்தத்வீபங்களையும். சூழ்-சூழ்ந்த. கடல்-அவ்வோ சமுத்ரங்களையும். ஏழ்ஞாலமும்-பூம்யாதியான சப்தலோகங்களையும். முழு-முழுக்க. நின்றே-நின்ற நிலையிலே நின்று. தாவிய-கவடடித்துக்கொண்ட. நீள் - நெடிய. கழல் - திருவடிகளையுடையனாய். ஆழி - அந்த சேஷித்வ சூசகமான திருவாழியையுடையனாய். திருமாலே - ஶ்ரியஃபதியானவனே. என்னை-உனக்கு சேஷபூதனாய்ப் பரிவனாயிருக்கிறவென்னை. உன் - சுகுமாரனாய் போக்ய

பூதனான வுன்னுடைய. ஏர்-அழகு. ஆர்-விஞ்சின. கோலம் - ஆபரணசோபையையு முடைத்தாய். திருந்து-ஸ்வாபாவிக சௌந்தர்ய விசிஷ்டமான. அடிக்கீழ் - திருவடிகளின்கீழே. நின்றே - ஒருகாலும் பிரியாதேநின்று. ஆட்செய்ய - உன்னுடைய ஸ்ரியஃபதித்வ சௌகுமார்யாதிகளுக்கிடாக மங்களாசாஸநம்பண்ணி யடிமைசெய் வேணும்படி. நீ - நீ. கொண்டருளி-உன் திருவுள்ளத்தாலே அங்கீகரித்து. நினைப்பது தான் - இது முழுக்க நிர்வஹிப்பதாக நினைத்தருளுவதுதான். என்று - என்ற யிருக்கிறது.

கொண்டருள நினைப்பதென்றுஞ் சொல்லுவர். என்றேலென்றதில், ஏல் - அசை.......................................................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

பிறனைவிடீர், உன்திருவடிக்கீழே பரிகைக்கு நிலையாளாக வென்னைக் கொள்வதென்றென்று அவன் றன்னைக்கேட்கிறார்.

(என்றே) உம்முடைய கார்யம் செய்கிறோமிறே யென்ன; அது தானென்றென்கிறார். (என்னை) உனக்குப் பரிந்தன்றியுளே னாகாதிருக்கிறவென்னை. (உன்னித்யாதி) உன் அழகு மிக்க வொப்பனை திருந்தின திருவடிகளின் கீழே மங்களாசாசநம் பண்ணியல்லது நிற்கவொண்ணாத திருவடிகளென்கை. (நின்றேயாட்செய்ய) "ஜெ.ஹிமெஷஜாமிெத" (தேஹிமேததாமிதே) என்று ப்ரயோஜநத்தைக் கொண்டுபோகையன்றிக்கே விடாதே யடிமைசெய்ய. (நீ கொண்டருள) நான் கிடந்தானை கண்டேறுகையன்றிக்கே, அடிமை செய்வானென்று திருவுள்ளத்தே கொண்டருள. (நினைப்பதுதான்) (நின்றேயாட்செய்ய - நினைப்பதுதான்) அவன் நினைவுக்கே பல வ்யாப்தியுள்ளது. தம்மபிநிவேச மப்ரயோஜகமென் றிருக்கிறார்.

(குன்றேழித்யாதி) "வண்பரிசாரத்திருந்த" என்று - எழுந்தருளியிருக்கிற விருப்புத்தனக்குப் பரியவேண்டியிருக்க, அதிமாநுஷமான செயலைச்செய்தால் மங்களாசாசநம்பண்ணியே நிற்கவேண்டாவோ. சப்தகுலபர்வதமென்ன, சப்தத்வீபமென்ன, அவற்றைச்சூழ்ந்த சப்தசமுத்ரமென்ன, இப்படி யேழுவகைப்பட்ட பூமியை யடையநின்ற நிலையிலே நின்றளந்துகொண்டருளும்படி நீண்ட திருவடிகளை யுடையையாய், கையுந் திருவாழியுமான ஸ்ரியஃபதியே. சங்கசக்ராதி திவ்யாயுதங்களையுடைய ஸ்ரியஃபதியாய் வைத்து, காடுமோடையுமான பூமியையடைய, நின்ற நிலையிலே சுகுமாரமான திருவடிகளைக்கொண்டளந்த ஸ்ரமந்தீர சிசிரோபசாரம் பண்ணப்பெறும் நாளென்றென்கை. அரியனசெய்யவல்ல நீ, நானுன்றிருவடிகளைக்கிட்டி நின்றடிமை செய்யும்படி நினைத்தருளவேணுமென்றுமாம்.......................................................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (என்றேயித்யாதி.) "அடிக்கீழ்நின்றே யாட்செய்ய நீ கொண்டருள" என்றத்தைக் கடாக்ஷித்தவ தாரிகை (பிறனைவிடீரித்யாதி.)

செய்கிறேமென்றுலொழிய, "என்று" என்று கேட்கக்கூடாமையாலே, அவன் கார்யம் செய்கிறேமென்று திருவுள்ளம்பற்றினமையை யருளிச்செய்கிறார் (உம்முடைய வித்யாதி.) "ஏரார்" இத்யாதியால் வர்ணித்ததுக்குபாவம் (மங்களாசாசநமித்யாதி.) இத்தால் பலிதம் (அவன் நினைவுக்கேயித்யாதி.)

மேலுக்கெல்லாம்பாவம் (வண்பரிசாரத்தித்யாதி.) வாக்யவிவரணம் (சங்கசக்ராதீத்யாதி.) த்ரிவிக்ரமாபதாநத்தை யருளிச்செய்தது பரியவேண்டும் செயலாகையாலே யென்று கீழேயருளிச்செய்தது. பாவாந்தரம் (அரியனவித்யாதி.) அதாவது. திருவுலகளந்தருளின வகடிதம்போலே யென்னையு முன் திருவடிகளிலே யாளாக்கிக்கொள்ளுகையு மகடிதமிறே, இத்தையும் செய்யவேணுமென்றபடி.

குன்றேழென்றுதொடங்கி, திருமாலே - என்னை யுன்னேராரொன்று தொடங்கி, என்றே - கொண்டருள நினைப்பதுதா னித்யந்வயஃ.............................*

---

# ஒன்பதாம்பாட்டு.

திருமானுன்முக்ன்செஞ்சடையானென்றிவர்களெம்
பெருமான்றன்மையையார்றிகிற்பார்பேசியெ
னொருமாமுதல்வாவூழிப்பிரானென்னையாளுடைக்
கருமாமேனியனென்பனென்காதல்கலக்கவே.

## ஆறாயிரப்படி.

(திருமால்)ஆகிலுமென்னை யுள்ளபடியறிந்தேத்தினலல்ல தும்முடைய வபேக்ஷிதம் செய்யக்கடவதென்னென்னில்; திருமால் எம்பெருமானாயிருந்த வுன்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளை சர்வஜ்ஞரான ப்ரஹ்மாதிகள் தாமறியவல்லரோ; இவ்வர்த்த முபபாத்யமோ; ஆனபின்பு, அதிக்ஷுத்ரனான நானறிந்தேத்துகையாவ தென்னென்ன; அங்ஙனேயாகில், அத்விதீயபரமகாரணபூதனே, "காலசக்ரஂஜகச்சக்ரஂயுகசக்ரஂசகேஶவஃ। ஆத்மயோகேநபகவாந்பரிவர்த்தயதேநிஶம்" (காலசக்ரம்ஜகச்சக்ரம் யுகசக்ரம்சகேஶவஃ। ஆத்மயோகேநபகவாந்பரிவர்த்தயதேநிஶம்) என்றுசொன்னப்போலே, சங்கல்பமாத்ரத்தாலே க்ருதத்ரேதாதி சகலயுகப்ரவர்த்தகனே, ப்ராக்ருத க்ஷுத்ரவிஷய ப்ரவணனான வென்னையுங் கூடத் தோற்பித்தடிமையாக்கவல்ல * நிரவதிக ஸௌந்தர்ய ஸௌகுமார்யலாவண்ய யௌவநாத்யநந்த குணநிதியாய், * நீலமேக சத்ருஶமான திவ்யரூபத்தையுடையவனேயென்று சொல்லுவானென்னென்னில்; காதலாலே கலக்குண்டுசொன்னேன், நானறிந்துசொன்னே னல்லேனென்கிறார்... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அதிசயிதஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளு முன்ஸௌகுமார்ய மறியாமையாலே, என்ப்ரேமம்கலக்க நான் பரிவனாய்க் கூப்பிடாநின்றேனென்கிறார்.

திரு-பெரியபிராட்டியார்க்கு. மால்-வல்லபனான வைலக்ஷண்யத்தையுடைய வனே. நான்முகன் - ஸ்ருஷ்டியில் பஹுமுகவ்யாபாரனான ப்ரஹ்மாவும். செஞ்சடையான்-தபஃபரனானருத்ரனும். என்று-என்றுப்ரஸித்தரான. இவர்கள்-இவர்கள். எம்பெருமான்-எனக்குஸ்வாமியாய் சர்வாதிகனானவுன்னுடைய. தன்மையை-சௌந்தர்ய சௌகுமார்யாதியான ஸ்வாபாவிக வைலக்ஷண்யத்தை. அறிகிற்பார்-அறிய வல்லார். ஆர்-ஆர்தான். என்-என்னுடைய. காதல்-ப்ரேமமானது. கலக்க-நெஞ்சைக்கலக்க. ஒரு-அத்விதீயமான. மாமுதல்வா-பரமகாரணபூதனே. ஸ்ருஷ்டமானவாத்மாக்களுக்கு, ஊழி-காலாநுரூபமாக. பிரான் - உபகாரகனானவனே. என்னை - என்னை. ஆளுடை-அடிமைகொண்ட. கரு-ஶ்யாமளமான. மாமேனியன்-விலக்ஷணவிக்ரஹயுக்தனே. என்பன்-என்றுசொல்லாநிற்பன். உன் சௌகுமார்யத்தைப்பாராதே, "மாதுர்யமே!" என்று பிராட்டியஞ்சும்படி ஜகதுத்பாதநத்தைப்பண்ணுவது, உத்பந்நரானசேதநர்க் காபத்துத்தோற்றுங்காலந்தோறு முபகாரகனாய் வ்யாபரிப்பது, என்போல்வாரை யங்கீகரிக்கைக்காக வழகியவடிவைக்கொண்டு வருவதாகப்புக்கவாறே உன்னுடைய சௌகுமார்யத்துக்கஞ்சாநின்றேன்; அவாங்மநஸகோசரமான விந்தசௌகுமார்யத்துக்கு, பேசியென் - என்னபாசுரமிட்டுச்சொல்லுவது... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

நமக்குப்பரிய ப்ரஹ்மாதிகளுண்டாயிருக்க, நீரிங்ஙனஞ்சுகிறதென்னென்ன; அவர்களுந் சௌகுமார்யமறிவர்களோவென்கிறார்.

(திருமால்) திருமாலென்று நிஷ்கர்ஷித்து சம்போதிக்கிறார். நீயும் பிராட்டியுமான சேர்த்திக்கு மங்களாசாஸநம்பண்ணுவர்களோ வவர்கள். (நான்முகன்) ஸ்ருஷ்டிக்குறுப்பான பலமுகங்களையுடையனாய், அதிலே யநந்யபரனானவன். (செஞ்சடையான்) சாதகவேஷந்தோற்ற நிற்கிற ருத்ரன், தன்னபிமதலாபத்திலே யநந்யபரன். (எம்பெருமான்றன்மையை) சர்வேஸ்வரனான வுன்னுடைய சௌகுமார்யத்தை. (ஆரறிகிற்பார்) சிலராலே யறியலாயிருந்ததோ. அநந்யபரராயிருக்கிறவர்களுந்சௌகுமார்யத்தை யறியவல்லர்களோ. அநந்யபரரானாற்றான் தேவருடைய சௌகுமார்யந்தான் சிலராலறியலாமோ. (பேசியென்) இதுசொல்லியென்னப்ரயோஜநமுண்டு. அவர்களைப்பரிவராக்கவோ, உன் சௌகுமார்யத்தை பரிச்சிந்நமாக்கவோ.

அவர்கள் நம்மையறியமாட்டார்களாகி லறிந்தநீர் பேசிக்காணீரென்ன; என்னாற்றான் செய்யலாயிருந்ததோவென்கிறார். (ஒருமாமுதல்வா) விலக்ஷணமான பரமகாரணமானவனே. (ஊழிப்பிரான்) காலோபலக்ஷித சகலபதார்த்தங்களுக்கும் ஸ்வாமியானவனே. (என்னையித்யாதி) புறம்பே யநந்யபரனானவென்னை யநந்யபரனும்படிபண்ணின வடிவையுடையவனே. (என்பன்) இவ்வளவிறே யென்னளவும். சர்வநிர்வாஹகனாய் வடிவழகிலே யென்னைச்சேர்த்துக்கொண்ட விதிறே யென்னைக்கலங்கப்பண்ணிற்று. (என்காதல்கலக்கவே) என்னுடையப்ரேமமானது நான

ஞ்சும்படி கலங்கப்பண்ண, உன்வடிவழகிலும் மேன்மையிலும் கலங்கிச் சொன்னவத்தனைபோக்கி, உன் ஸௌகுமார்யத்தை யெல்லைகண்டுசொன்னேனல்லேன். ப்ரேமாந்தனாய்க்கொண்டு சொன்னேனத்தனைபோக்கி, நெஞ்சொழிந்துசொன்னேனல்லேன். ப்ரயோஜநாந்தரபரரான ப்ரஹ்மாதிகள்பரிவு மூனக்கு சத்ருஸமன்று, ப்ரேமாந்தனான வென்பரிவுமுனக்கு சத்ருஸமன்றென்றதாயிற்று ... ... ... ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (திருமாலித்யாதி) "நான்முகன் செஞ்சடையானென்றிவர்கள் - ஆரறிகிற்பார்" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (நமக்குப்பரியவித்யாதி)

திருமாலும் நான்முகனுமென்கிற ப்ரமநிவ்ருத்யர்த்தமாக, "திருமால்" என்றது - சம்போதநமென்றருளிச்செய்கிறார் (திருமாலென்று நிஷ்கர்ஷித்தித்யாதி) நிஷ்கர்ஷித்து - பிரித்தென்றபடி. "நான்முகன்" என்றுதொடங்கி, "ஆரறிகிற்பார்" என்னுமளவுக்கும்பாவம் (நீயும்பிராட்டியுமித்யாதி) ப்ரஹ்மாவென்னாதே, "நான்முகன்" என்று விசேஷித்ததுக்குபாவம் (ஸ்ருஷ்டிக்கித்யாதி) "செஞ்சடையான்" என்றுவிசேஷித்ததுக்குபாவம் ( சாதகவேஷமித்யாதி ) தன்மை - ஸௌகுமார்யம்.

"ஆரறிகிற்பார்" என்றதுக்குபாவம் (அநந்யபரரானாற்றுனித்யாதி) சப்தார்த்தம் (இதுசொல்லியித்யாதி) விவரணம் (அவர்களையித்யாதி)

"என்பன்" என்றதுக்குபாவம் ( இவ்வளவிறேயித்யாதி ) இவ்வளவிறேயென்னளவுமென்றது - உன்ஸௌகுமார்யத்துக்குத் தகும்படிசொன்னேனல்லேன், கலங்கிச்சொன்னேனென்றபடி. கலங்குகைக்கு ஹேதுவேதென்ன (சர்வநிர்வாஹகனாயித்யாதி) கீழ்வாக்யவிவரணம் ( ப்ரேமாந்தனாயித்யாதி ) இப்பாட்டால் பலித்ததென்னென்ன (ப்ரயோஜநாநதரேத்யாதி)

திருமால் - எம்பெருமானான வுன்தன்மையை - நான்முகனென்றுதொடங்கி, ஆரறிகிற்பார், பேசியென்; என்காதல்கலக்கவே - ஒருமாமுதல்வாவென்றுதொடங்கி, கருமாமேனியனென்பனித்யந்வய꞉... ... ... ... ... ... ... ...*

---

# பத்தாம்பாட்டு.

கலக்கமில்லாநற்றவமுனிவர்களைகண்டோர்
துளக்கமில்லாவானவரெல்லாந்தொழுவார்கள்
மலக்கமெய்தமாகடறன்னைக்கடைந்தானை
யுலக்கநாம்புகழ்கிற்பதென்செய்வதுரையீரே.

## ஆறாயிரப்படி.

( கலக்கமில்லா ) அவனையறிந்தேத்தினீராலோவென்னில்;

அஸ்கலிதஜ்ஞாநராய், நிரதிசயபக்தியுக்தராய், பகவதநுபவைகபோகரான * அயர்வறுமமரர்கள், அவனுடைய கல்யாணகுண மஹோததியினுடைய விக்களைகண்டார், பகவத்பரிசர்யைகபோகரான நித்யசித்

தபுருஷர்கள், அவன்றிருவடிகளில் ஸ்துத்யாதி பரிசர்யைபண்ணுவார், அக்ஷோப்யமஹோததியை க்ஷுபிதமாம்படி கடைந்தருளினவன் பரிசர்யைபண்ணப்படுகிறவன், இப்படியிருக்கிற வவனை நாமுள்ளபடி யறிந்து புகழுகையாவதென். ஆகில் நீர் புகழ்வானென்னென்னில் ; என்காதலென்னைக் கலக்காநின்றால் நான் செய்வதென் ; ஆனபின்பு, உன்க்ருபையாலே யடிமைகொண்டருளவேணுமென்கிறார். ............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், முமுக்ஷுக்களோடு முக்தர்களோடு நித்யசூரிகளோடு வாசியற நமக்குப் பரிவராயிருக்க, நாம் சக்திமான்களாயிருக்க நீரஞ்சவேண்டாவென்ன ; ஆஶ்ரிதஜநஸாமக்ர்யத்தையும் அதிசயித சக்தியோகத்தையு மநுசந்தித்து சமாஹிதராகிறார்.

ப்ரஹ்மபாவநாநிஷ்டராகையாலே, கலக்கம் - சாம்சாரிக ஸ்வபாவங்களாகிறகலக்கம். இல்லா - அற்ற. நற்றவம் - ஜ்ஞாநரூபதபஸ்ஸையுடைய. முனிவர்-சநகாதிமுநிகள். கரைகண்டோர் - "ஸொऽத்⁴வந꞉ பாரமாப்நோதி" (ஸோத்த்வநः பாரமாப்நோதி) என்கிறபடியே சம்சாராத்வாவைக் கரைகண்டமுக்தர். அஸ்ப்ருஷ்டசம்சாரகந்தராகையாலே, ஒருகாலும், துளக்கம் - சலநம். இல்லா - அற்ற. வானவர் - நித்யசூரிகள். எல்லாம் - எல்லாரும். தொழுவார்கள் - பரிவராய்க்கொண்டு தொழுது மங்களாசாஸநம் பண்ணுமவர்கள். மா - அபரிச்சிந்நமான. கடல்தன்னை - சமுத்ரத்தை. மலக்கமெய்த - கலங்கும்படி. கடைந்தானை - கடைந்த சர்வசக்தியுக்தனை. நாம், உலக்க - முடியக்கண்டு. புகழ்கிற்பது - புகழவல்லோமாகையன்றிறே. இவிது. என்செய்வது - என்செய்ததாயிற்று. உரையீர் - சொல்லிகோளென்று. லௌகிகரைப்பார்த்துச் சொன்னாராயிற்று...................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

இவர் பயத்தைப்பரிஹரிக்கைக்காக நமக்கு சநகாதிகள் முக்தர் நித்யசூரிக ளிவர்கள் கிட்டிநின்று பரிமாறுகிறார்கள், நாந்தாமரியசெயல்களும் செய்யவல்லோம் சிலரானபின்பு, நீர் நமக்கஞ்சவேண்டாகாணுமென்ன ; முன்பு பயஹேதுக்களானவைதானே பயநிவ்ருத்திக்குடலாய், அத்தையநுசந்தித் தினியராகிறார். இவர்தமக்கின்னபோ தின்னது பயஹேதுவாம், இன்னபோதின்னது பரிஹாரமாமென்று தெரியாதிறே.

( கலக்கமில்லாநற்றவமுனிவர் ) தங்கள் ஜ்ஞாநத்துக்கு விஷயங்களால்வரும் கலக்கமின்றிக்கே, மஹாதபஸ்ஸுக்களை யுடையராய் மநநசீலரான சநகாதிகள். (கரைகண்டோர்) முக்தர். (துளக்கமில்லாவானவர்) துளக்கம் - நடுக்கம். சம்சாரஸ்பர்ஶமில்லாத நித்யசூரிகள். துளக்கம்-சலநம். அதாவது-சங்கோசம். ( எல்லாந்தொழுவார்கள் ) முமுக்ஷுக்களும் முக்தரும் நித்யசித்தருமான விவர்களடிமை செய்கிறவர்கள். அடிமையாவது - ஸ்வாமிக்கதிசயத்தைப் பண்ணுமதாகையாலே, மங்களாசாஸநமிறே. (மலக்கமித்யாதி) மஹத்தத்த்வமான கடலை க்ஷுபிதமாம்படி கடைந்த பெருமிடுக்கன். பரிகிறவர்கள் தாங்களும் குழைசரக்காம்படி பெருமிடுக்கனென்கை.

(உலக்கவித்யாதி) அவன்படியை நேராகவறியாத நாம் பரிவிலே யிழிந்து முடியப்பேசப்புக்கது, என்செய்தோமாளுேம், சொல்லிகோள். முன்பு தன்மிடுக்கைக்காட்டினவிடங்களில் அத்தை ப்ரதிபத்திபண்ணுதே அதுதன்னையேசொல்ல, இப்போது சமாஹிதமாயற்றது, இப்ப்ரபந்தம் தலைக்கட்டக்கடவதாகையாலேயாதல், ஈப்ஸவரனுடைய ஜீவநாத்ருஷ்டத்தாலேயாதலிறே. ..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (கலக்கமில்லாவித்யாதி) "கடைந்தானை" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (இவர்பயத்தையித்யாதி) முன்பு பயஹேதுக்களானவையென்றது - திருவுலகளந்தருளினது, வடதளசாயித்வம் தொடக்கமானவற்றை. "மலக்கமெய்தமாகடல்தன்னைக்கடைந்தானை"என்றத்தைப்பற்ற (பயநிவ்ருத்திக் குடலாயென்றது) பயஹேதுவானது பயநிவ்ருத்திக்குடலாகக்கூடுமோவென்ன (இவர்தமக்கித்யாதி.)

அர்த்தாந்தரம் (சலநமித்யாதி) "துளக்கம்" என்று - சம்சாரஸ்பர்ஸமாதல், ஜ்ஞாநசங்கோசமாதல். பரிவர்களென்னுதே, "தொழுவார்கள்" என்கிறதென்னென்ன (அடிமையாவதித்யாதி)

பலிதம் (பரிகிறவர்களித்யாதி) குழைசரக்கு - ரக்ஷ்யவஸ்து.

உலக்க - முடிய - முன்பு மிடுக்கைக்காட்ட பயப்பட்டுப்பரிகிற விவரிப்போது சமாஹிதரானதுக்கு ஹேதுவை யிரண்டுவகையாக வருளிச்செய்கிறுர் (முன்பித்யாதிவாக்யத்வயத்தாலே.)

"உரையீர்" என்றது - சந்நிஹித ஸ்ரீவைஷ்ணவர்களைக்குறித்து.

கலக்கமில்லாவென்றுதொடங்கி, தொழுவார்கள் - மாகடல் தன்னை-மலக்கமெய்த - கடைந்தானை, நாம்-உலக்க-புகழ்கிற்பதென்செய்வ துரையீரித்யந்வய:. *

---

# பதினொன்றாம்பாட்டு.

உரையாவெந்நோய்தவிரவருணீண்முடியானை
வரையார்மாடமன்னுகுருகூர்ச்சடகோப
னுரையேய்சொற்றொடையோராயிரத்துளிப்பத்து
நிரையேவல்லார்நீடுலகத்துப்பிறவாரே.

## ஆருயிரப்படி.

(உரையா) துர்வசமாய் காலாக்நி சத்ருஸமாயிருந்த விரஹகர்மத்தாலுள்ள சந்தாபம் தவிரும்படி நிரதிசயவிஷயீகார சூசகமான காருண்யமய சிர:கம்பநத்தாலே தம்மைவிஷயீகரித்த வெம்பெருமானைச் சொன்ன வித்திருவாய்மொழியை வல்லார், * சம்சாரமருகாந்தாரத்தில் பிறவாரென்கிறுர் ..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யஸித்தார்க்கு பலமாக சம்ஸாரநிவ ருத்தியை யருளிச்செய்கிறார்.

உரையா – வாசாமகோசரமாம்படி. "சௌகுமார்யாதிகளுக் கென்னவருகி றதோ" என்று அதிசங்கையைப்பிறப்பித்து, வெம் – பரிதாபஹேதுவான. நோய்-கலக்கமாகிறநோயானது. தவிர-தீரும்படியாக. அருள்-தன்னுடைய விபூதிபூர்த்தி யையும் சக்திபூர்த்தியையுங்காட்டின. நீண்முடியானை – சர்வாதிகசேஷியானவனை. வரை-வரை. ஆர்-செறிந்தாப்போலேயிருக்கிற. மாடம்-மாடங்கள். மன்னு-ஸ்த்திர மாம்படியாயிருக்கிற. குருகூர்-திருநகரிக்கு நிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வா ருடைய. உரை-உக்திப்ரகாரமாய். ஏய்-செறிந்த. சொல்தொடை-சொற்றொடையை யுடைத்தாய். ஓர்-அத்விதீயமான. ஆயிரத்துள்-ஆயிரத்துள். இப்பத்தும்-இப்பத்தை யும். நிரையே-அடைவுபட. வல்லார்-சொல்லவல்லவர்கள். நீடு-விஸ்தீர்ணமாய். உல கத்து-பகவத்விஷயத்துக்குப் பரிவரில்லாத விஸ்ஸம்ஸாரத்திலே. பிறவார்-பிறவார்.

இது - கலித்துறை ...........................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழி யப்யசிப்பார், அவன்தனிமைகண்டு பயப்படும் சம்ஸாரத்தில் பிறவாரென்கிறார்.

(உரையாவெங்நோய்) வாசாமகோசரமாய், அதிக்ரூரமானநோய். தம்மளவில் சாத்மிக்கையன்றிகதே, "பயவிபூதிநாதனுக்கென்வருகிறதோ" என்றஞ்சினநோயிறே. (தவிரவருள்நீண்முடியானை) இது போம்படிக்கீடாகவருளும் ஸ்வபாவனான உபயவிபூதிநாதனை. "இவர்பயம்போம்படி 'உம்முடையவபேக்ஷிதம் செய்கிறோம்' என்று சிர:கம்பநம் பண்ணினான்போலேகாண்" என்றம்மங்கியம்மாள். இவ்வாழ்வாருடைய பயம் நிவ்ருத்தமானபின்பாயிற்று பயவிபூதிக்கும் ரக்ஷகனுய்ச் சூடினமுடியும் நிலைநின்றதாயிற்று. (வரையாரித்யாதி) இவர்பயம் நிவ்ருத்தமானவாறே சம்ருத்தமுமாய் ஸ்த்திரமுமாயிற்றுத் திருநகரியும். (உரையேயித்யாதி) உக்தியால் சேர்ந்தசொற்றொடையையுடைத்தாய் விலக்ஷணமானவாயிரம். (இப்பத்தும் நிரையேவல்லார்) இப்பத்தை யடைவுதப்பாமலப்யசிக்கவல்லார். தமக்குப்பிறந்த கலக்கத்தாலே, இதிலிழிவார்க்கு மடைவுபட வநுசந்திக்கவொண்ணாதென்றிருக்கிறார். (நீடுலகத்துப்பிறவாரே) இப்பூமிப்பரப்பையடைய வநுசந்தித்தால், பரப்பேயாய், சர்வேஶ்வரன்தனிமைக்குப் பரியவொருவரைக் கிடையாத வித்தேசத்திலேபிறவார்கள்; ஒருநாடாக மங்களாசாஸநம்பண்ணுகிறதேசத்திலேபோய் நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்.........................................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (உரையாவித்யாதி) "வல்லார் நீடுலகத்துப்பிறவார்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியித்யாதி)

உரையா - உரைக்கப்போகாதபடியான வென்றபடி. வாசாமகோசரதையே தென்ன (தம்மளவிலித்யாதி) தம்மளவில் சாத்மிக்கை யன்றிக்கேயென்றது - சம்சாரதோஷத்தைக்கண்டு தமக்காக பயப்படுகையன்றிக்கேயென்றபடி. "நீண்முடியான்" என்றதுக்கர்த்தம் (உபயவிபூதிநாதனை யென்று) பரிகிற ப்ரகரணத்திலே திருவபிஷேகத்தைச்சொன்னதுக் கிரண்டுவகையாகபாவம் (இவர்பயமித்யாதி வாக்யத்வயத்தாலே.)

" வரையார்மாடம் - " வரையோடே சாத்ருஶ்யாகாரேண பொருந்தினமாடமென்றபடி. இதுக்குபாவம் (இவர்பயமித்யாதி) மன்னு-ஸ்த்திரமானவென்றபடி.

ஏய்கை-பொருந்துகையாய், சுசப்தங்களாய்ச்சேர்ந்த சப்தசந்தர்ப்பமென்றபடி. நிரையே - அடைவேயென்றபடி. அடைவென்கிறதென், அருமையுண்டோவென்ன (தமக்குப்பிறந்தவித்யாதி)

அநுசந்தித்தால் -விசாரித்துப்பார்த்தாலென்றபடி.

வரையார்மாடமன்னு குருகூர்ச்சடகோபன் - உரையாவெங்நோய் தவிரவருள் நீண்முடியானை - உரையேய்சொற்றொடையித்யாரப்ய, பிறவாரித்யந்வயஃ ...*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

( அங்குமிங்கும். )

ஸ்ரீபூ⁴மீநாயகத்வாத³ரிஸ²ங்க²த⁴ரதயா கல்பஸிந்தௌ⁴ ஸி²ஸு²த்வாத் ஸ்ரீஸ்தா²நே ஸந்நிதா⁴நாத் ஸுரஹிதகரணாத் ஸ்ரீநிவாஸத்வயோகா³த் । விக்ராந்த்யாவிஷ்டபாநாம் வியத³தி⁴பமஹாத்ஸ்பஷ்டஸம்ஸ்ரூஷ்டஹ்ருஷ்டஸ்நாநோ வைகுண்டீ²ஸ்ரீர்த்தா²நாம் விஹரணஸமயே ஸ்ரீயஶோதே³வதாத்வாத் ॥ அசு

( ஸ்ரீபூமீநாயகத்வாத் ) அங்கம்சேரும் பூமகள் மண்மகளாய்மகள் - ல்க்ஷ்மீ பூமீ நீளைகளுக்கு வல்லபனாகையாலும் ; ( அரிஸங்கரதயா ) கனலாழி யரணத்திண் படையேந்திய, ஆழியும் சங்கும் சுமப்பார்தாம் - திருவாழி திருச்சங்குகளாலே விளங்காநிற்கிற திருக்கைகளையுடையனாகையாலும் ; ( கல்பஸிந்தௌஸிஸுத்வாத் ) ஓர்முற்றுருவுருவாகி யாலம்பேரிலையன்ன வசஞ்செய்யும் - ப்ரளயகாலத்திலே பாலனாய்க்கொண் டாலிலைமேலே கண்வளர்ந்தருளுகையாலும் ; (ஸ்ரீஸ்த்தாநேஸந்நிதாநாத்) கொடியார்மாடக்கோளூரகத்தும் புளிங்குடியும் - பதாகைகளாலே பூர்ணங்களான ப்ராஸாதங்களையுடைய திருக்கோளூர் திருப்புளிங்குடி யென்கிற திவ்யதேசங்களிலே சந்நிஹிதனாயிருக்கையாலும் ; (ஸுரஹிதகரணாத்) பணியாவமரர் பணிவும் பண்புந் தாமேயாம் - நித்யசூரிகளுடைய பணிவுக்கும் ஜ்ஞாநாதிகளுக்கும் தானே விஷயமாய் நிற்கையாலும் ; ( ஸ்ரீநிவாஸத்வயோகாத் ) திருவாழ்மார்வற்கு - பெரியபிராட்டியைத் திருமார்விலேயுடையனாகையாலும் ; (விக்ராந்த்யாவிஷ்டபா

நாம்) குன்றேழ்பாரேழித்யாதி-த்ரிவிக்ரமனு யெல்லாலோகங்களையும் திருவடிகளாலே யளக்கையாலும்; (விதிநரதிகமாத்) திருமால் நான்முகனித்யாதி - ப்ரஹ்மருத்ரர்களாலே துர்ஜ்ஞேயனுகையாலும்; (ஸ்வேஷுஸௌலப்யபூம்நா) கலக்கமில்லா நற்றவமுனிவ ரித்யாதி - தன்னை சரணமாக வடைந்தபேரிடத்திலே மிகவும் ஸௌலப்யத்தை யுடையனுகையாலும்; எம்பெருமான் விஹரணசமயத்திலே ஏகாகியாகையாலே, ஆஶ்ரிதர் பரியவேண்டும்படி யத்யந்த போக்யதாசம்பத்தை யுடையனுயிருக்கிருனென்று "அங்குமிங்கும்" என்கிற தசகத்திலே யாழ்வாராலே யறுதியிடப்பட்டதென்கிருர்.......................................................................(அச)

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

அங்கமரர்பேணவவர்நடுவேவாழ்திருமாற்
கிங்கோர்பரிவரிலேயென்றஞ்ச—வெங்கும்
பரிவருளரென்னப்பயந்தீர்ந்தமாறன்
வரிகழற்ருள்சேர்ந்தவர்வாழ்வார். (எ௩)

(அங்கமரர்பேண) இதில் - பரிவரில்லையென்று கலங்கி பரிவருளரென்று தேற்றின பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிருர். எங்ஙனேயென்னில்; "ஓர்கோலநீலநன்னெடுங்குன்றம்வருவதொப்பான்" என்று கீழநுசந்தித்தவனுடைய திவ்யவிக்ரஹவைலக்ஷண்யத்திலே திருவுள்ளம் சென்று, "இப்படி ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களுக்குக் கொள்கலமான விவ்வடிவோடே ப்ரயோஜநாந்தரபரரான தேவர்கள் கார்யம் செய்கைக்காக ப்ரதிகூலர் வர்த்திக்கிற விஸ்ஸம்சாரத்திலே தனியே வந்தவதரித்து சஞ்சரியாநின்ருன், எங்கேயென்னதீங்குவரத்தேடுகிறதோ" என்று இவர் வயிறெரிந்து பயப்பட, "நமக்கு முமுக்ஷுக்களும் முக்தரும் நித்யருமுண்டு, நாந்தாம் கடலைக்குளப்படிபோலே கலக்கவல்ல பெருமிடுக்கராகையாலே நமக்கொருகுறைகளுமில்லை" என்று அவனருளிச்செய்ய, அச்சந்தீருகிற * அங்குமிங்கிலர்த்தத்தை "அங்கமரர்பேண" இத்யாதியாலே யருளிச்செய்கிருர்.

(அங்கமரர்பேண) "ஆங்காரவாரமது" என்னுமாபோலே, தேசமது,தேசிகரவர்கள், பரிவின் மிகுதியது. நித்யவிபூதியிலே * பணியாவமரரான நித்யஸூரிகள் நித்யமங்களாசாஸநம்பண்ண, அவர்கள் நடுவேவாழுகிற ஸ்ரீயஃபதியானசர்வேஶ்வரனுக்கு, அப்படி * பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவா ரிங்கொரு பரிவருமில்லையென்று பயப்பட. அதாவது - "அங்குமிங்கும்" என்றுதொடங்கி "அங்கஞ்சேரும் பூமகள் மண்மகளாய்மகள் சங்குசக்கரக்கையவனென்பர் சரணமே" என்றும், "கனலாழியரணத்திண்படையேந்தியவீசற்காளாயே - மரணம்தோற்றம்வான்பிணிமூப்பென்றிவைமாய்த்தோம்" என்றும், இச்சேர்த்திக்கு மங்களாசாஸநம் பண்ணுதே, ஐஶ்வர்யகாமரு மாத்மாநுபவகாமருமா யிப்படி யந்யபரராய்ப்போரு

கையாலே, * வாளும்வில்லுங்கொண்டு பின்செல்லும்பரிவரொருவருமில்லையென்கிறது. (பரிவரிலையென்றஞ்ச) "உன்கோலம்காரெழில்காணலுற்றாழும்கொடியேற்கே," "திருநீலமணியார்மேனியோ டென்மனம்சூழவருவாரோ" என்றும், "கருமாமேனியனென்பனென்காதல்கலக்கவே" என்றும், "ஆழியும் சங்கும் சுமப்பார்தாம்" என்றும், "யநுராயஸுகுணம் கநித்ரபிடகாதரஃ" (தநுராதாயஸகுணம் கநித்ரபிடகாதரஃ) "ப்ருஷ்டதஸ்துதநுஷ்பாணிர்லக்ஷ்மணோநுஜகாமஹ" (ப்ருஷ்ட்டதஸ்துதநுஷ்பாணிர்லக்ஷ்மணோநுஜகாமஹ) என்னும்படி 'உருவார்சக்கரம்சங்குசுமந்திங்கும்மோ டொருபாடுழல்வானோ ரடியானுமுளனென்றே" என்றும், "என்திறஞ்சொல்லார்செய்வதென்" என்றும், "என்றேயென்னையுன் னேரார்கோலத்திருந்தடிக்கீழ்நின்றேயாட்செய்யநீகொண்டருளநினைப்பதுதான்" என்று - மங்களாசாஸநரூப கைங்கர்யங் கொண்டருள நினைப்பிட்டருளுவதென்றென்று அவனைக்கேட்டும், இப்படி கலக்கத்தாலே யஞ்ச. (எங்கும்பரிவருளரென்ன) இங்கு மங்கு மெங்கும் நமக்குப் பரிவருளரென்ன. அதாவது - "கலக்கமில்லாநற்றவமுனிவர்" என்று தொடங்கி "என்செய்வதுறைவீரோ" என்று - இப்படி நம்மைப் பரிகைக்கு முமுக்ஷுக்களும் முக்தரும் நித்யருமுண்டு, நாந்தாம் மந்தரத்தைக்கொண்டு க்ஷீரஸிந்துவை க்ஷுபிதமாம்படி கடைந்த மஹாபாஹுக்களென்று தன்மிடுக்கைக்காட்ட. (பயந்தீர்ந்தமாறன்வரிகழற்றாள்சேர்ந்தவர்வாழ்வார்) ஆழ்வாரைப்போலே பயமும் பயநிவ்ருத்தியுமின்றிக்கே, ஆழ்வாருடைய, வரியையுடைத்தான வீரக்கழலோடே கூடின திருவடிகளைச் சேர்ந்தவர்கள் நிர்ப்பயராய் வாழப்பெறுவார். ஆழ்வாரிப்பாசுரத்தாலே பயந்தீருகையாலே, இவர்களுக்கு வாழ்வேயாயிருக்கும்..........................................................................(எஙு)

எட்டாம்பத்தில் - மூன்றாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி - எஙு.—பாட்டு - அ0ரு.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## எட்டாம்பத்து.

## நான்காந்திருவாய்மொழி.

### வார்கடா - ப்ரவேஶங்கள்.

#### ஆறாயிரப்படி.

( வார்கடாவருவி ) இப்படி விரஹகர்மாபிதப்தரான வாழ்வாருடைய விடாயைப்போக்கி யருளுகைக்காக, முன்னமே திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையிலே, ஒருதாமரைத்தடாகம் நின்றாப்போலே தான் நின்றருளினபடியைக் காட்டக்கண்டு, ப்ரீதியாலே, சகலஜநமநோநயநஹாரி திவ்யசேஷ்டித சுலபத்வ சௌந்தர்யாதி கல்யாணகுணகண சர்வேஸ்வரத்வங்களைப்பேசி, அந்தத்தாமரைத்தடாக மிருந்தவிடத்தேறச் செல்லவேணுமென்கிறார் ..................................*

#### பன்னீராயிரப்படி.

நாலாந்திருவாய்மொழியில், கீழவனுடைய சௌகுமார்யத்தாலே தனிமைக்கஞ்சின விவருடைய பயந்தீரும்படி பரிவரையும் சக்தியையுங்காட்டி யாஶ்வஸிப்பித்த சர்வேஶ்வரன், "இவரிப்படி யஞ்சிற்று விரோதிபூயிஷ்ட்டதேசமென்று யிருக்கும், நம்முடைய விரோதிநிவர்த்தகத்வத்தையும் ஜகத்ஸ்ருஷ்ட்யாதி சக்தியையுங்காட்டுவோம்" என்று இவர் திருவுள்ளத்திலே ப்ரகாசிப்பிக்க; அவனுடைய அகிலவிரோதி நிவர்த்தகத்வத்தையும், அசேஷ ஜகத்விஷயமான ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரத்தையும், ஆஶ்ரிதாபத்ஸகத்வத்தையும், ஆஶ்ரிதார்த்தமான வதிசயித வ்யாபாரத்தையும், ஆஶ்ரயணீயஸ்த்தலாந்தர விலக்ஷணமான தேசவிசேஷஸ்த்திதியையும், ஆஶ்ரயணீயதா வைலக்ஷண்யத்துக் கடியான சர்வப்ரகாரோபகாரகத்வத்தையும், அநுபாவ்யமான வாபிரூப்யாதிசயத்தையும், ஜகஜ்ஜந்மாதிஹேதுத்வத்தையும், ஸ்ருஷ்ட ஸ்ருஜ்யாதி விபாகமில்லாத சர்வாத்மபாவத்தையும், ஸத்தாவிபூதிஹேதுவான நிருபாதிக சேஷித்வத்தையு மநுசந்தித்து, ஏவம்பூதனான சர்வேஶ்வரன், பரிவரான வைதிகாக்ரேஸரருடைய சம்பத்தைத் தனக்குசம்பத்தாம்படி திருச்செங்குன்றூரிலே யெழுந்தருளிநின்ற வதிசயத்தை யநுசந்தித்து சந்துஷ்டராகிறார்..............................................*

#### ஈடு.

"சர்வேஶ்வரன் சம்சாரிகளுடைய வபேக்ஷையே யாலம்பநமாக சம்சாரத்திலே வந்தவதரித்துத் தனியே யுலாவாநிற்கும், சம்சாரிகளும் தந்தாமபேக்ஷிதங்களைப்பற்றக்கிட்டுமதொழிய விவன்வாசியறிந்து பரிய

க்கடவாரில்லை, என்புகுகிறதோ" என்றஞ்சினவிவர்க்கு, அந்தவச்சந்தேரும்படி "நமக்குப்பரிவருண்டு, ஒருத்தர் பரியவேண்டாதபடியான மிடுக்கும் நமக்குண்டு" என்று தன்படிகளைக்காட்டி சமாதானம்பண்ண சமாஹிதராய்நின்றார் – கீழ்; இதில் – இவராகிறார் ப்ரேமஸ்வபாவராயிருப்பர், * காதல்மையலேறிக்கலங்கி, "முக்தரும் நித்யருமிங்கில்லையே, ஸநகாதிமுமுக்ஷுக்கள் நல்லதபஸ்ஸும் மநநத்யாநமும் விடமாட்டார்கள், கடல்கடைந்தது தேவயோநியிலேயன்றோ" என்றுகலங்குவர். இன்னமிவர்க்கிது மறுவலிடக்கூடுமென்றுபார்த்து, மறுவலிடாதபடி தன்சௌர்யவீர்யாதி குணங்களையும், ஸ்ருஷ்ட்யாத்யத்புதகர்மங்களையும், எதிரிட்டவிரோதி வர்க்கத்தை வேரோடேவாங்கிப் பொகடவல்ல சக்தியையும் காட்டிக்கொடுத்து, அதுக்குமேலே, "அதிசயிதஜ்ஞாநசக்திகராய்த் தனக்குப்பரிவராயிருப்பார் மூவாயிரம் ப்ராஹ்மணருண்டு" என்று காட்டிக்கொடுக்கக்கண்டு க்ருதார்த்தராய், அவன் வடிவழகிலேயும் நெஞ்சுசென்றநுபவித் தினியராகிறார்.

ஸ்ரீவிபீஷணாழ்வான் "ராகவம்ஶரணம்கத:" (ராகவம்ஶரணம் கத:) என்றுவந்து விழுந்தபோது, மஹாராஜர் பெருமாள்பக்கல் ப்ரேமத்தாலேகலங்கி, துணுக்கென்று, "இவன்சொன்னவார்த்தை பெருமாள் திருச்செவியிலே படுமாகில் சாலத்தப்பாம்" என்று, "நாயன்றே, ராவணப்ராதா ராக்ஷஸஜாதி, அவன் புகுரக்கடவனல்லன், என்ன, "இவர் நம்பக்கல் பரிவாலேசொல்லுகிறவார்த்தை, நம்மிடுக்கைக்காட்டவேதெளிவர்" என்றுபார்த்து, "பிஶாசாந்தாநவாந்" (பிஶாசாந்தாநவாந்) இத்யாதியாலே தம்முடைய மிடுக்கைக்காட்டக்கண் டவரச்சந்தீர்ந்து, "கிமத்ரசித்ரம்" (கிமத்ரசித்ரம்) என்றினிய ராஜனைப்போலவும், மல்லயுத்தத்தில் "நஸமம்யுத்தமித்யாஹு:" (நஸமம்யுத்தமித்யாஹு:) என்கிற பார்ப்பவஸ்த்ருடைய பயத்தை, அவர்கள் சந்நிதியிலே க்ருஷ்ணன் மல்லனை யழியச்செய்து தீர்த்தருளினைப்போலவும், தம்முடைய பயத்தைப்போக்கியருள, அத்தாலே க்ருதார்த்தராய், "இனி நமக்கு தாரக போஷக போக்யங்க ளிவனல்லதில்லை" என்று ப்ரீதராய், முன்பழகைக் கண்டு பரிவாலே பீதரானவர், அழகிலே நெஞ்சுசென்றநுபவித்து க்ருதார்த்தராய்த் தலைக்கட்டுகிறார்... ......................... ......... ...............*

## ஜீயர் அரும்பதம்.

வார்கடாவருவிப்ரவேஶ, ஸங்கதிகதநார்த்தம் வ்ருத்தத்தை யநுவதிக்கிறார் (சர்வேஶ்வரனித்யாதி.) சமாஹிதரானல் மீளவு மித்திருவாய்மொழியிலே பயநிவ்ருத்தி பண்ணிக்கொடுப்பானென்னென்ன (இதிலிவராகிறாரித்யாதி.)

"சீர்கொள்" இத்யாதியைப்பற்ற (சௌர்யவீர்யாதீத்யாதி.) "படைத்தளித்தழிக்கும்" இத்யாதியைப்பற்ற (ஸ்ருஷ்ட்யாத்யத்புதேத்யாதி.) "கஞ்சனைத் தகர்த்த," "அசுரர்வன்கையர்வெங்கூற்றை" இத்யாதியைப்பற்ற (விரோதிவர்க்க

த்தையித்யாதி.) "வண்சிவனுமயனும் தானுமொப்பார்" என்றத்தைப்பற்ற (அதிசயிதஜ்ஞாநேத்யாதி.) "மனக்கொள்சீர்," "மூவாயிரவர்" இத்யாதியைப்பற்ற (தனக்குப் பரிவராயித்யாதி.) "திருச்செய்யகமலக்கண்ணும்" இத்யாதியைப்பற்ற (அவன்வடிவழகிலேயுமென்றது.)

அப்படி யவன் தன்சௌர்யாதிகளைக்காட்டி சமாதாநம்பண்ண பயந்தீர்ந்து சமாஹிதராளு ருண்டோவென்ன; இரண்டு த்ருஷ்டாந்தங் காட்டுகிறார் (ஸ்ரீவிபீஷணஸ்த்வானித்யாதி) பெருமாள் உக்தியாலே பயத்தைப் போக்கினார், க்ருஷ்ணன் அநுஷ்டாநத்தாலே பயத்தைப்போக்கினான். "தேனைநன்பாலை" இத்யாதியைப்பற்ற (இனி நமக்கு தாரகேத்யாதி.)

"𑌪𑌿𑌶𑌾𑌚𑌾𑌨𑍍 𑌦𑌾𑌨𑌵𑌾𑌨𑍍 𑌯𑌕𑍍𑌷𑌾𑌨𑍍 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌂 𑌚𑍈𑌵 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌾𑌨𑍍 ।
𑌅𑌙𑍍𑌗𑍁𑌲𑍍𑌯𑌗𑍍𑌰𑍇𑌣 𑌤𑌾𑌨𑍍 𑌹𑌨𑍍𑌯𑌾𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍 𑌹𑌰𑌿𑌗𑌣𑍇𑌶𑍍𑌵𑌰" (பிஶாசாந்தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்யாஞ்சைவராக்ஷஸாந் । அங்குல்யக்ரேணதாந்ஹந்யா மிச்சந்ஹரிகணேஶ்வர) இதி யுத்தகாண்டே அபயப்ரதாநப்ரகரணே ஸுக்ரீவம் ப்ரதிராம:. தத்ரைவ ஸுக்ரீவ:, "𑌕𑌿𑌮𑌤𑍍𑌰 𑌚𑌿𑌤𑍍𑌰𑌂 𑌧𑌰𑍍𑌮𑌜𑍍𑌞 𑌲𑍋𑌕𑌨𑌾𑌥 𑌸𑍁𑌖𑌾𑌵𑌹 । 𑌯𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌾𑌰𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌭𑌾𑌷𑍇𑌥𑌾𑌃 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌾𑌨𑍍 𑌸𑌤𑍍𑌪𑌥𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃." (கிமத்ரசித்ரம்தர்மஜ்ஞ லோகநாதஸுகாவஹ।யத்த்வமார்யம்ப்ரபாஷேதாஸ்ஸத்த்வவாந்ஸத்பதேஸ்த்தித:.)

---

# நான்காந்திருவாய்மொழி
## முதற்பாட்டு.

வார்கடாவருவியானைமாமலையின்மருப்பிணைக்குவடிறுத்துருட்டி
யூர்கொடிண்பாகனுயிர்செகுத்தரங்கின்மல்லரைக்கொன்றுசூழ்பரண்மே
போர்கடாவரசர்புறக்கிடமாடமீமிசைக்கஞ்சனைத்தகர்த்த	[ற்
சீர்கொள்சிற்றாயன்றிருச்செங்குன்றூரிற்றிருச்சிற்றாறெங்கள்செல்சார்வே.

### ஆறாயிரப்படி.

நிஷ்யந்தமாந மதஜலமாகிற ஸரித்தையுடைத்தான குவலயாபீடமாகிற மஹாசலத்தினுடைய தந்தயுகளமாகிற சிகரங்களை முறித்துருட்டி, ஊர்கொள் திண்பாகனுயிர் செகுத்து, கஜதந்தவராயுததராராய், நம்பி மூத்தபிரானும்தானும், கர்வலீலாவலோகிதங்களையுடைய விரண்டுஸிம்ஹங்கள் க்ஷுத்ரம்ருகங்கள் நடுவே புக்காப்போலே, ரங்கமத்யத்திலே போய்ப்புக்கு மல்லரைக்கொன்று, மஞ்சோபரிஸ்த்திதராய், இத:பூர்வம் யுத்தத்தில் பராஜிதரான ராஜாக்கள் த்ரஸ்தராய்க் கெடும்படி யெழப்பாய்ந்து, மஞ்சோந்நதஸ்த்தலஸ்த்தனான கம்ஸனை, * வெண்ணெய்விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டத னோசைகேட்டு விளையாடினாப்போலே தகர்த்த சீர்கொள் சிற்றாயன் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறெங்களுக்கு ப்ராப்யமென்கிறார்.........................................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், குவலயாபீடம் முதலான அகில விரோதிநிராஸகனான சீர் கொள் சிற்றாயன் வர்த்திக்கிற திருச்செங்குன்றூர் நமக்கு நிர்ப்பயமான வாஸ்ரயணீயஸ்த்தலமென்கிறார்.

வார் - பாய்கிற. கடா - மதமாகிற. அருவி - அருவியையுடைய. ஆனை - ஆனையாகிற. மா - பெரிய. மலையின் - மலையினுடைய. மருப்பு - கொம்புகளாகிற. இணை - சேர்ந்த. குவடு - சிகரங்களை. இறுத்து - முறித்து. உருட்டி - அநாயாஸேந ஆனையையுருட்டி. ஊர்கொள் - ஆனை கொம்புமுறிந் திருக்கவும் நடத்திக்கொடுவரவல்ல சிக்ஷையில். திண் - திண்மையையுடையனான. பாகன்-பாகனுடைய. உயிர்-ப்ராணனை. செகுத்து - அழித்து. அநந்தரத்திலே, அரங்கில் - ரங்கமத்யகதரான. மல்லரை - சாணூரமுஷ்டிகராகிறமல்லரை. கொன்று - கொன்று. சூழ்.- ரங்கம்சூழ்ந்த. பரண்மேல் - மச்சுக்களிலே நிற்பாராய். போர் - போரை. கடா - நடத்தக்கடவ. அரசர் - ராஜாக்கள். புறக்கிட - பிறகிட்டுப்போம்படியாக. மாடமீமிசை-உத்துங்கமான மாடத்தில் மேல்நிலத்திலேயிருக்கிற. கஞ்சனை-கம்ஸனை. தகர்த்த-பசளைக்குடமுடைத்தாப்போலே தள்ளிக்குதித் துடைத்துப் பொகட்ட. சீர் - வீரஸ்ரீயை. கொள் - உடையனாய். சிறு - பாலனான. ஆயன் - க்ருஷ்ணனெழுந்தருளி நிற்கிற. திருச்செங்குன்றூரில் - திருச்செங்குன்றூரிலே. திருச்சிற்றாறு - திருச்சிற்றாறானது. எங்கள் - எங்களுக்கு. செல் - சென்று கிட்டுகைக்கு. சார்வு - ஆஸ்ரயணீயஸ்த்தலம்.......................................................................*

## ஈடு - முதற்பாட்டு.

குவலயாபீடம் முதலான ப்ரதிகூலரை நிரசித்த சீர்கொள் சிற்றாயனுடைய திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறெங்களுக்கு நிர்ப்பயமான புகலென்கிறார்.

(வார்கடாவருவியானைமாமலையின்) வாராநின்றுள்ள மதஜலமான வருவியையுடைய வானையாகிற மாமலையினுடைய. கடா-மதம். மதகரமான த்ரவ்யங்களைத் தீற்றிப் பிச்சேற்றி, புகுகிறவாசலிலே நிறுத்தினான், ப்ரமாதத்தாலே வந்ததென்று மாதுலனாய்க் கண்ணநீர்விழவிட்டுத் தானிருப்பானாக. "புகுவாய்நின்றபோ தகம்வீழப்பொருதான்" என்னக்கடவதிறே. (மருப்பிணைக்குவடிறுத்து) மருப்பாகிற விணைக்குவடுகளையிறுத்து. கொம்பாகிற சிகரங்களை யநாயாஸேந முறித்து. அம்மலையிலே யிரண்டுசிகரங்களை யொடித்தாப்போலே. (உருட்டி) கொம்புகளைப்பறித்தவாறே யுளுக்காந்தது, திருவடிகளாலே அநாயாஸேந தள்ளி. (ஊர்கொள்திண்பாகன்) உயிருள்ள பதார்த்தத்தை நடத்துமாபோலே நடத்தவல்லனாயிற்று சிக்ஷாபலத்காலே. திண்ணியனாய் ஆனையை நடத்துகிற பாகன். (உயிர்செகுத்து) அத்தைத் தள்ளினாலு மிவனுயிர்போகாதவன்று அத்தை முடித்ததாகாதுகாணும். (அரங்கின்மல்லரைக்கொன்று) ஆனையின் கொம்புக ளிரண்டையு மிருவருங்கொண்டு ரங்கமத்யத்திலே புக்கவளவிலே, அச்செருக்குப் பொறாமையாலே, யுத்தோந்முகராய் வந்த சாணூரமுஷ்டிகர்களைக்கொன்று. ஆனை திர்யக்காகையாலே

விரகறியாதேபட்டது, அது போயிற்றாகிலும் மல்லருண்டென்று கம்சன் நினைத்திருந்தவர்களை யழியச் செய்தபடி. "ஈஸஂயுக்தமித்யாஹ:" (நஸமம்யுத்தமித்யாஹூ:) என்று பெண்கள்முதலான பார்ப்பவஸ்த்தரடங்கக் கூப்பிட்டு பிதரான சமயத்திலே, அவர்கள் பயமெல்லாம் போம்படி அநாயாஸேந மல்லரைக்கொன்று. (சூழ்பரண்மேல்) சுற்றுமுண்டான மஞ்சத்தின்மேலே நின்ற. (போர்கடாவரசர்புறக்கிட) கெடுபடையை வெற்றியுண்டாம்படிகடாவிப்போருமரசர். "ஸேநாநயவிஸாரத:" (ஸேநாநயவிஸாரத:) என்கிறபடியே தூசித்தலையிலே வெற்றியோடல்லது மீளாதபடி படைபொருத்தி யுத்தத்தை நடத்தவல்ல ராஜாக்கள்முதுகுகாட்டி யோடும்படியாக. (மாடமிமிசை) "துங்கமஞ்சவ்யவஸ்தித:" (துங்கமஞ்சவ்யவஸ்த்திதஃ) என்கிறபடியே, உயர்ந்தமாடத்திலே யிருக்கிற. தனக்கு பயமெவ்வளவுண்டு அவ்வளவு முயர்த்தினுயிற்று மாடத்தை (கஞ்சனைத்தகர்த்த) அவனிருக்கிற விடத்தளவு மெழப்பாய்ந்து, "கஞ்சன்குஞ்சிபிடித்தடித்தபிரான்" என்கிறபடியே - மயிரைப்பிடித்துக் கீழே விழவிட்டு மேலேபாய்ந்து பசளைக்கலம்போலே யுடைத்தான்; "அவஜ்ஞயாஹதம்த்ருஷ்ட்வா க்ருஷ்ணேநமதுரேஸ்வரம்" (அவஜ்ஞயாஹதம்த்ருஷ்ட்வா க்ருஷ்ணேநமதுரேஸ்வரம்) என்கிறபடியே. "கேஸேஷ்வாக்ருஷ்யவிகளத்கிரீடமவநீதலே। ஸகம்ஸம்பாதயாமாஸ தஸ்யோபரிபபாதச." (கேஸேஷ்வாக்ருஷ்யவிகளத் கிரீடமவநீதலே। ஸகம்ஸம்பாதயாமாஸ தஸ்யோபரிபபாதச.) "ராஜத்ரோஹிகளைக்கொல்லும்போது ராஜசிஹ்நங்களை வாங்கிக் கொல்லுமாபோலே, தான்கொடுத்த முடியை வாங்கிக்காண்கொன்றது" என்று அம்மங்கியம்மாள் பணிப்பர்.

(சீர்கொள்சிற்றாயன்) பருவம் நிரம்பாதிருக்கச்செய்தே வீரஸ்ரீயால் குறைவற்றிருக்கிறவன். (திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு) புலி நின்றதூறுபோலே ப்ரதிகூலர் தங்களுக்கஞ்சவேண்டுமூர். (எங்கள்) மஹாராஜர், பெரியாழ்வார், ஸ்ரீவிதுரர், தாம்,பிள்ளையுறங்காவில்லிதாஸர், இங்ஙனொத்தபரிவர். (செல்சார்வே) நிர்ப்பயஸ்த்தாநமென்று புகும்புகல். கீழிவர்க்கோடினபயம் நீங்கிற்றென்னுமிடம் இயல் தழைப்பிலே தெளிந்திருக்கிறபடி கண்டதே.........................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (வார்கடாவித்யாதி.) * வார்கடாவருவிதொடங்கி, "எங்கள்செல்சார்வு" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (குவலயாபீடமித்யாதி.)

வார்தல் - ஒழுகுதல். அருவிபோலே மதம் ப்ரவஹிக்கைக்கு ஹேதுவையருளிச்செய்கிறார் (மதகரமானவித்யாதி.) தீற்றி - புஜிப்பித்து. நிறுத்தினவனுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (ப்ரமாதத்தாலேயித்யாதி.) அப்படி வாசலிலே நிறுத்தினனேவென்ன (புகுவாயித்யாதி) புகுகிறவழியிலே நின்ற குவலயாபீடமானது முறிந்துவிழும்படி பொருதவன் வர்த்திக்கிற தேசமென்றபடி. திருமொழி ஆரும்ப

த்து ஐந்தாந்திருமொழி ஆறும்பாட்டு, "பருவாய்" இத்யாதி. போதகம் - ஆனை. அதெப்படியிருக்கிறதென்ன ( அம்மலையிலேயித்யாதி. ) இது "குவடு" என்றதுக் குபாவம். "உருட்டி" என்றதுக்கு பாவம் ( கொம்புகளையித்யாதி. )

கொம்புகளைப்பறித்துருட்டினு லிவன் நடத்தும்படி யெப்படியென்ன (உயிருள்ளவித்யாதி.) சப்தார்த்தம் (திண்ணியனித்யாதி.) ஆனையைக்கொன்றால் போராதோ, பாகனையும் முடிக்கிறதென்னென்ன ( அத்தைத்தள்ளினாலுமித்யாதி. )

ஆனையையும் பாகனையும் நிரஸித்தவநந்தரம், மல்லர்களை நிரஸிக்கைக்கு நிதாநத்தை யருளிச்செய்கிறார் ( ஆனையினித்யாதி. ) இம்மல்லநிரஸநத்தால் பலித்த ப்ரயோஜநத்தை யருளிச்செய்கிறார் ( ஆனை திர்யக்கித்யாதி. ) கீழ்ச்சொன்ன ப்ரயோஜநத்தை ப்ரகாராந்தரேண வருளிச்செய்யாநின்றுகொண்டு, சப்தார்த்தமுமருளிச்செய்கிறார் ( நஸமமித்யாதி. )

கடா - கடாவுகிற. அவர்கள் யுத்தத்தை நடத்துகிற சாமர்த்யத்தி னுறைப்பை யருளிச்செய்கிறார் ( கெடுபடையையித்யாதி. ) விவரணம் (ஸேநாநயேத்யாதி.) "[illegible]" ( அபியாதாப்ரஹர்த்தாச ஸேநாநயவிஶாரதঃ। அப்ரத்ருஷ்யஶ்சஸங்க்ராமே க்ருத்தைரபிஸுராஸுரைঃ ) இத்யயோத்யாகாண்டே ராமசௌர்யகதநே. "மீமிசையான-மாடம்" என்றதுக்கு ப்ரமாணங் காட்டாநின்றுகொண்டு, அதுக்கர்த்தமு மருளிச்செய்கிறார் (துங்கமஞ்சஇத்யாதி.) மாடத்தை யுயர்த்துவானென்னென்ன ( தனக்கு பயமித்யாதி. ) மஞ்சத்திலிருக்கிறவனை நிரஸித்த ப்ரகாரத்தை விசதமாக்காநின்றுகொண்டு, "தகர்த்த" என்றதுக்கர்த்தம் ( அவனிருக்கிறவித்யாதி. ) பசளைக்கலம் - பச்சைப்பானை. அநாயாஸேந கொன்றதுக்கு ப்ரமாணம் (அவஜ்ஞயேத்யாதி.) மயிரைப்பிடித்துக் கீழேவிழவிட்டு மேலே பாய்ந்து கொன்றதுக்கு ப்ரமாணம் ( கேஶேஷ்வித்யாதி. ( கஞ்சன்குஞ்சி பிடித்தடித்தபிரான் ) கம்ஸனுடைய மயிரைப்பற்றி யடித்த வுபகாரகனித்யர்த்தঃ. திருமொழி மூன்றும்பத்து பத்தாந்திருமொழி மூன்றும்பாட்டு, "உம்பரும்" இத்யாதி. "விகளத்கிரீடம்" என்றதுக்கு ப்ரயோஜநத்தை யாப்தசம்வாதத்தாலே தர்ஶிப்பிக்கிறார் ( ராஜத்ரோஹிகளையித்யாதி. )

"சிற்றயன் - சீர்கொள்" என்றந்வயித்து பாவம் (பருவமித்யாதி.) சூரன் வர்த்திக்கிறவூர் என்றதுக்கு பாவம் ( புலினின்றதுறித்யாதி. )

"எங்கள்" என்ற பஹுவசநத்துக்கு பாவம் ( மஹாராஜரித்யாதி. ) இத்திருவாய்மொழியிலே பயம் நிவ்ருத்தமானதுக்கு நியாமகமேதென்ன ( கீழிவர்க்கித்யாதி. )

"[illegible]" ( மல்லப்ராஶ்நிகவர்க்கஶ்சரங்கமத்யஸமீபகঃ। க்ருதঃ கம்ஸேநகம்ஸோபிதுங்கமஞ்சவ்யவஸ்த்திதঃ ) இத்யாரப்ய, "[illegible]" ( கேஶேஷ்வாக்ருஷ்யவிகளத்கிரீடமவநீதலே । ஸகம்ஸம்பாதயாமாஸ தஸ்யோபரிபபாதச. ) தத்ராவ, "[illegible]" ( ததோஹாஹாக்

ருதம்ஸர்வ மாஸீத்தத்ரங்கமண்டலம் । அவஜ்ஞயாஹ்ருதம்த்ருஷ்ட்வா க்ருஷ்ணேந மதுரோஸ்வரம் ) இதி பஞ்சமேம்ஸே விம்ஸே......................................*

# இரண்டாம்பாட்டு.

எங்கள்செல்சார்வுயாமுடையமுதமிமையவரப்பனென்னப்பன் [ன்
பொங்குமூவுலகும்படைத்தளித்தழிக்கும்பொருந்துமூவுருவனெம்மருவ
செங்கயலுகளுந்தேம்பணைபுடைசூழ்திருச்செங்குன்றூர்த்திருச்சிற்று
றங்கமர்கின்றவாதியானல்லால்யாவர்மற்றென்னமர்துணையே.

## ஆறாயிரப்படி.

( எங்கள்செல்சார்வு ) நமக்கு ப்ராப்யமாய், நமக்குபோக்யமாய், * அயர்வறுமமரர்களதிபதியாய், எனக்கு ஸ்வாமியாய், நிகிலபுவநநிர்மாண த்ராண ஸம்ஹரணாதிலீலனாய், த்ரிமூர்த்திரூபனாய், ப்ரதிகூலஜநதுர்த்தர்ஸனாய், சர்வகாரணமாய், மதமுதிதமீநாகுல மதுமிஸ்ர ஸலில சீதள ஸ்யாமள பஹுள பலாச ஸுரபிகுசும தருநிகர பரிவ்ருதமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங் கமர்கின்றவ னல்லது மற்றெனக்கொரு துணையில்லையென்கிறார்......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அசேஷஜகத்விஷயமான ஸ்ருஷ்ட்யாதி வ்யாபார சமர்த்தனாய்த் திருச்செங்குன்றூரி லெழுந்தருளி யிருக்கிறவனல்ல தெனக்கு நற்றுணையில்லை யென்கிறார்.

எங்கள் - எங்களுக்கு. செல் - சென்றாஸ்ரயிக்கப் படுவதான. சார்வு - புகலிடமாய். புகலிடமாமளவன்றியே, யாம் - நாம். உடை - உடையோமான. அமுதம் - போக்யமுமாய். இமையவர் - அஸ்கலிதஜ்ஞாநரான சூரிகளுக்கு. அப்பன்-உபகாரகனாய். அப்படியே, என் - எனக்கும். அப்பன் - உபகாரகனாய். பொங்கு-சம்ருத்தமான. மூவுலகும் - லோகத்ரயத்தையும். படைத்து-ஸ்ருஷ்டித்து. அளித்து-ரக்ஷித்து. அழிக்கும் - சம்ஹரிப்பானாய். பொருந்து - இதுக்குப்பொருந்தின. மூவுருவன் - மூர்த்தித்ரயத்தையுமுடையனாய். இவ்வாகாரங்களெனக்கு ப்ரகாசிக்கும்படி, எம் - எனக்கு. அருவன் - அந்தராத்மாவாய். அப்படியே முகந்தோன்றாமை நிற்கையன்றியே, கண்கண்டநுபவிக்கும்படி, செம்-இளமையாலே சிவந்த. கயல்-கயல்கள். உகளும் - உகளிக்கும்படி. தேம் - தேன் விஞ்சின. பணைபுடை - மருதநிலத்தாலே. சூழ் - சூழப்பட்ட. திருச்செங்குன்றூர் - திருச்செங்குன்றூரில். திருச்சிற்றாறு - திருச்சிற்றாறாகிற. அங்கு - விலக்ஷணதேசத்திலே. அமர்கின்ற - பொருந்திவர்த்திக்கிற. ஆதியான் - சகல ஸத்தாஹேதுபூதனானவன். அல்லால் - அல்லது. மற்று - வேறு. என் - எனக்கு. அமர் - அநுரூபமான. துணை - சஹாயம். யாவர்-ஆர்தான்.

பணை - நீர்நிலமுமாம்......................................*

## ஈடு-இரண்டாம்பாட்டு.

ஜகத்ஸ்ருஷ்ட்யாதி சமர்த்தனாய்த் திருச்செங்குன்றூரிலேநின்றருளினவனல்ல தெனக்கு நற்றுணையில்லையென்கிறார்.

( எங்கள்செல்சார்வு ) அநுகூலராயிருப்பார்க் கெல்லாமஞ்சவேண்டாதபுகல். ( யாமுடையமுதம் ) புகலேயாய், போக்யவஸ்து வேறே தேடவேண்டாதேயிருக்கை. "எங்கள், யாம்" என்னப்பலருண்டே, * கேசவன்றமர்க்குப் பின்புதனியரல்லரோ. "குன்றமெடுத்தபிரானடியாரொடு-மொன்றிநின்றசடகோபன்" என்று - அவர்களோடொன்றிநின்று சொல்லுகிற சொல்லிறே. ( இமையவரப்பனென்னப்பன் ) நித்யசூரிகளை யடிமைகொண்டாப்போலே யென்னை யடிமைகொண்டவன். குறைவற்றார்க்கும் ஸத்தாஹேதுவாய், குறைவுக்கெல்லையான வெனக்கும் ஸத்தாஹேதுவானவன். (பொங்கித்யாதி) விஸ்த்ருதமான த்ரைலோக்யத்தையு முண்டாக்கி ரக்ஷித்தழிக்குமவன். ( பொருந்துமூவுருவன் ) இச்செயல்களுக்குப் பொருந்தின மூன்றுவடிவை யுடையவன். ப்ரஹ்மாந்தர்யாமியாய் ஸ்ருஷ்டிக்கும், ருத்ராந்தர்யாமியாய் ஸம்ஹரிக்கும், ஸ்வேநரூபேண நின்று பாலநத்தைப் பண்ணும். பொருந்துகையாவது - ரஜஸ்தமஃப்ரசுரரான ப்ரஹ்மாதிகளோடு திவ்யவிக்ரஹத்தோடு வாசியற்றிருக்கை. ( எம்மருவன் ) "அல்லாதார்காரியம் நம்புத்யதீநமாயிருக்குமத்தனையல்லது, நங்காரியமல்லாதார் நினைவின்படியல்லகாணுமிருப்பது" என்றெனக்கறிவித்து, என் பயநிவ்ருத்தியைப்பண்ணி, எனக்கு தாரகனானவன். [ 𑌉𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌨𑌾𑌶𑌾𑌨𑌾𑌂𑌹𑍇𑌤𑍁𑌂𑌹𑍇𑌤𑍁𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ] [ உத்பத்திஸ்த்திதிநாஶாநாமஹேதும்ஹேதுமீஶ்வரம் ] ஸ்வேதர சகலங்களும் தன்னினைவிலேயாய், தானொருவன் நினைவின்படியன்றிக்கே யிருக்கிறபடியைக்காட்டியென்னை தரிப்பித்தவன். ( செங்கயலுகளும் ) யௌவநத்தாலே சிவந்தகயல்கள் களித்துவர்த்திக்கும் தேசம். பரிவரில்லையென்று முன்பே க்லேசித்து, பின்பு * வார்கடாவருவியாய் ப்ரீதராகவேண்டாதே, சகல பதார்த்தங்களும் களித்தேவர்த்திக்கும் தேசமென்கை. ( தேம்பணைபுடைசூழ் ) தேனையுடைத்தான நீர்நிலங்கள்சூழ்ந்தவென்னுதல், மருதநிலத்தாலேசூழப்பட்ட வூரென்னுதல். ( அங்கமர்கின்ற ) அவதாரங்கள்போலே தீர்த்தம்ப்ரசாதியாதே நித்யவாஸம்பண்ணுகிறவூர். (ஆதியான்) சர்வகாரணமானவனென்னுதல், எனக்கு சத்தாஹேதுவானவனென்னுதல். ப்ரஜைக்கு ப்ரத்யாஸந்நமாக வர்த்திக்கும் தாயைப்போலே, என் ஸத்தையை நோக்கிக்கொண்டிருக்கிறவன். ( அல்லால்யாவர்மற்றென்னமர்துணையே) இவனையொழிய வெனக்குச் சேர்ந்த துணையில்லை. அல்லாதார் கழுத்துக்கட்டியாதல்; துணையென்று பேராய், ஆபத்திலேகூட வழுதல் செய்யுமித்தனை.................................................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. ( எங்களித்யாதி. ) "படைத்தளித்தழிக்கும் - திருச்செங்குன்றூரில்" என்றுதொடங்கி, "அல்லால்யாவர்மற்றென்னமர்துணையே" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை ( ஜகத்ஸ்ருஷ்ட்யாதீத்யாதி. )

"எங்கள், யாம்" என்று - மங்களாசாஸநபரரைக் கூட்டி யருளிச்செய்கிறார் (அநுகூலராயித்யாதி.) (புகலேயாய்) இத்யாதிவாக்யத்வயத்துக்கு - உபாயாந்தரங்கள்போலன்றிக்கே, ப்ராப்யப்ராபகங்களிரண்டும் தானேயாயிருக்கையென்று கருத்து. "எங்கள், யாம்" என்ற பஹுவசநத்துக்கு - ஸ்வஸம்பந்திகளையும் கூட்டி யருளிச்செய்கிறுரென்று தாத்பர்யாந்தரம் (எங்கள்யாமித்யாதி வாக்யத்வயம்.) ஏகார்த்தமாதல். இப்போது, "எங்கள்" என்கைக்கு அவர்கள் சந்நிஹிதரோவென்ன (குன்றமெடுத்தவித்யாதி.)

நித்யசூரிகளுக் கநந்தரம் தம்மைச் சொன்னதுக்கு பாவம் (நித்யசூரிகளையித்யாதி.) விவரணம் (குறைவற்றார்க்குமித்யாதி.)

"பொருந்து" என்றதுக்கு - செயல்களோடே சேர்ந்த விக்ரஹமென்றர்த்தம் (இச்செயல்களுக்கித்யாதி.) மூன்றுவடிவையு மிவனுடையனுகையாவதேதென்ன (ப்ரஹ்மாந்தர்யாமீத்யாதி.) கீழே "செயல்களுக்குப்பொருந்தின" என்றருளிச்செய்து, திவ்யமங்களவிக்ரஹம்போலே யப்ருதக்ஸித்தமாகப் பொருந்தின மூவுருவனென்றர்த்தாந்தரம் (பொருந்துகையாவதித்யாதி.)

"மூவுருவன்" என்றவநந்தரம், "எம்மருவன்" என்று - தமக்கு தாரகனென்றதுக்கு பாவம் (அல்லாதாரித்யாதி.) எம்மருவன் - எனக்கந்தராத்மாவானவனென்றபடி. எல்லாவற்றுக்கும் தான் காரணமாய், தனக்கொரு காரணமின்றிக்கேயிருக்குமோவென்னில் (உத்பத்தீத்யாதி.) "பராவரேஶம்ஶரணம் வ்ருணுத்வமஶேஷஸம்ஸாரநிவர்ஹணாய । உத்பத்திஸ்திதிநாஶாநாம் ஹேதும் ஹேதுமீஶ்வரம்" (பராவரேஶம்ஶரணம் வ்ருணுத்வமஸூரார்த்தநம் । உத்பத்திஸ்த்திதிநாஶாநாமஹேதும்ஹேதுமீஶ்வரம்) இதி ப்ரதமேம்ஶே தேவாந் ப்ரதிப்ரஹ்மா. இதுக்கர்த்தம் (ஸ்வேதரேத்யாதி.)

இத்தால்பாவம் (பரிவரில்லையித்யாதி.) மருதநிலம் - நதீதீரம்.

"ஆதியான்" என்றதுக்கு முந்தினவர்த்தம் - "பொங்குமூவுலகும்படைத்து" இத்யாதி அநுவாதம்; த்விதீயார்த்தம் - "எம்மருவன்" என்றதினநுவாதம். த்ருஷ்டாந்தபூர்வகமாக த்விதீயார்த்தவிவரணம் (ப்ரஜைக்கித்யாதி.)

ஆதியானல்லால் - என்னமர்துணை - மற்று - யாவரொன்றந்வயம். வேறில்லையோவென்ன (அல்லாதாரித்யாதி.) ..........................................*

---

# மூன்றாம்பாட்டு.

என்னமர்பெருமானிமையவர்பெருமானிருநிலமிடந்தவெம்பெருமான்
முன்னைவல்வினைகண்முழுதுடன்மாள வென்னையாள்கின்றவெம்பெருமா
றென்றிசைக்கணிகொடிருச்செங்குன்றூரிற்றிருச்சிற்றாற்றங்கரைமீபா[ன்
னின்றவெம்பெருமானடியல்லால்சரணநினைப்பிலும்பிறிதில்லையெனக்கே.

## ஆறாயிரப்படி.

(என்னமர்) பரமசூரி சம்ஶ்லேஷைகபோகனாயிருந்துவைத்து, மத்ஸம்ஶ்லேஷைகபோகனாய், மத்ஸ்வாமியாய், மஹார்ணவமக்னையான

பூமியையெடுத்தருளினுப்போலே ஸ்வவிரஹஜநிதநிரவதிகவ்யஸந மஹார்ணவநிமக்நனுன வென்னே யெடுத்தருளி, ஸ்வவிஷய கைங்கர்யைகபோகப்ரதனுய், தக்ஷிணதிக்பாகபூஷணமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்ருற்றங்கரை மீபால்நின்ற வெம்பெருமானுடைய திருவடிகளல்லது மற்று நினேப்பிலு மெனக்கொரு ப்ராப்யமில்லையென்கிருர். ......... ........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், வராஹரூபியாய் ப்ரளயாபத்திலே பூமியையிடந்தெடுத்து ரக்ஷித்தவன் திருவடிகளொழிய வேறுபாயமில்லையென்கிருர்.

இமையவர்-நித்யசூரிகளுக்கு. பெருமான்-நிர்வாஹகனுப்போலே. என்-எனக்கு. அமர்பெருமான் - அநுரூபநாயகனுய். இருநிலம் - மஹாப்ருதிவியை. இடந்த - ப்ரளயாபத்தி லீடுபடாமலிடந்தெடுத்த. எம்பெருமான் - என்னுடைய நாதனுய். அப்படியே, முன்னே - அநாதியாய். வல் - ப்ரபலமான. வினைகள் - பாபங்கள். முழுது - எல்லாம். உடன் - ஏகோத்யோகத்திலே. மாள - நசிக்கும்படி. என்னை - என்னே. ஆள்கின்ற - அடிமைகொண்டருளுகிற. எம்பெருமான் - பெருமையையுடையனுய். தென்திசைக்கு - தெற்குத்திக்குக்கு. அணி - அலங்காரமாக. கொள் - கொள்ளப்படுவதான. திருச்செங்குன்றூரில் - திருச்செங்குன்றூரில். திருச்சிற்ருற்றங்கரை - திருச்சிற்ருற்றங்கரையின். மீபால் - மேல்பக்கத்திலே. நின்ற-நின்றநிலையழகிலே. எம்பெருமான் - என்னே யடிமையாக்கினவனுடைய. அடி - திருவடிகளை. அல்லால் - ஒழிய. எனக்கு - என்னுடைய. நினேப்பிலும் - மநோரததசையிலும். பிறிது - வேருெரு. சரணம் - புகல். இல்லை - இல்லை. .......................*

## ஈடு - மூன்ரும்பாட்டு.

ஸ்ரீவராஹமாய் ப்ரளயங்கொண்ட பூமியையெடுத்தருளி, திருச்செங்குன்றூரிலே நின்றவனுடைய திருவடிகளல்லது வேறு மநோரதத்திலு மெனக்கு சரணமில்லையென்கிருர்.

(என்னமர்பெருமா னிமையவர்பெருமான்) * அயர்வறுமமரர்களதிபதியாய், எனக்கமர்ந்த ஸ்வாமியாயுள்ளான். நித்யசூரிகள் தனக்குப் பரிவரா யிருக்கிற விருப்பைக் காட்டி, நானஞ்சாதபடிபண்ணி யென்னுடைய சேஷத்வத்தை நிர்வஹித்தவன். (இருநிலமித்யாதி) ப்ரளயங்கொண்ட மஹாப்ருதியை யெடுத்த தன் சாமர்த்யத்தைக் காட்டி யென்னையடிமைகொண்டவன். ப்ரளயங்கொண்ட பூமியோபாதி சர்வரும் தனக்குக் குழைசரக்காயிருக்கிறபடியைக் காட்டித் தம் பயத்தைக் கெடுத்தானென்கை. (முன்னையித்யாதி) ப்ராக்தநமான ப்ரபலகர்மங்களை வாஸனையோடேபோக்கி யென்னை யடிமைகொள்ளுகிற ஸ்வாமி. சௌர்யவீர்யாதிகளைக்காட்டி, கீழெனக்குப் பிறந்த பயமெல்லாம்போம்படி யென்னையடிமைகொண்டவனென்கை. வல்வினையென்கிறது – பக்திபாரவஶ்யத்தையாயிற்று. அதிறே "சர்வசக்திக்கென்வருகிறதோ" என்னும் பயத்தைப் பிறப்பித்தது. (தென்திசையித்யாதி) ஆர்யர்களிகழ்ந்த பூமியான தெற்குத்திக்குக் காபரணமானவூர். (மீபால்நின்றவெம்பெருமான்) மேலைத்தி

க்கில் நிலையு முத்கர்ஷஹேதுவாய், இவர்க்கு பயநிவ்ருத்திக்குடலாயிருக்கிறது. நிகபேக்ஷையாயிறே பரத்வமிருப்பது. ( அடியித்யாதி ) அவன் றிருவடிகளொழிய மற்று ரக்ஷகமாயிருப்பதொருவஸ்து மநோரதத்திலுமில்லை. ...........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு. ( என்னமரித்யாதி. ) "இருநிலமிடந்த" என்று தொடங்கி, "அடியல்லால் - நின்னைப்பிலும் பிறிது - சரண் - இல்லை" என்கிற பதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை ( ஸ்ரீவராஹமாயித்யாதி. )

"இமையவர்பெருமான் - என்னமர்பெருமான்" என்றந்வயித்தர்த்தம் (அயர்வறுமித்யாதி.) இத்தால் பாவம் ( நித்யஸூரிகளித்யாதி. )

"இருநிலமிடந்த" என்கிற பதப்ரயோகத்துக்கு பாவம் ( ப்ரளயங்கொண்டவித்யாதி. )

முழுதுடன் - ஸவாஸநமாக வென்றபடி. அர்த்தாந்தரம் ( சௌர்யவீர்யாதித்யாதி ) த்விதீயார்த்தத்துக்கு, வல்வினையாவதேதென்ன ( வல்வினையென்கிறதித்யாதி. ) அத்தை வல்வினையென்பானென்னென்ன ( அதிறேயித்யாதி. ) த்விதீயார்த்தத்திலே, "முன்னை" என்றது - கீழ்த்திருவாய்மொழியிலென்றபடி.

இதுக்குபாவம் ( மேலைத்திக்கிலித்யாதி. ) அப்படி யுத்கர்ஷஹேதுவோவென்ன ( நிகபேக்ஷையாயித்யாதி. )

" அடியல்லால் - பிறிது - சரணம் நின்னைப்பிலும் - இல்லை " என்றந்வயித்தர்த்த மருளிச்செய்கிறார் ( அவன்றிருவடிகளொழியவித்யாதி. ) ......... ..........*

---

## நான்காம்பாட்டு.

பிறிதில்லையெனக்குப்பெரியமூவுலகுநிறையப்பேருருவமாய்நிமிர்ந்த
குறியமாணெம்மான்குரைகடல்கடைந்தகோலமாணிக்கமென்னம்மான்
செறிகுலைவாழைகமுகுதெங்கணிசூழ்திருச்செங்குன்றூர்த்திருச்சிற்று
றறியமெய்ம்மையேநின்றவெம்பெருமானடியிணையல்லதோரரணே.

### ஆறாயிரப்படி.

( பிறிதில்லை ) நிரதிசய ரமணீயமான ரூபகிங்கரீக்ருத மதாத்மகனாய், சம்வர்த்தித ஸ்வகீய மஹத்ரூப பரிபூர்ணவிஸ்தீர்ணபுவநத்ரயனாய், மதிதமஹாரவ பயோநிதியாய், சௌந்தர்யஸார நீலரத்ந சத்ருஸ திவ்யரூபனாய், மத்ஸ்வாமியாய், பஹுள பலபுஞ்ச கதளீ பூக நாளிகேர ராஜி பரிவ்ருதமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையிலே, ஆஸ்ரிதர்க்குத் தன்னை யுள்ளபடியே யறியலாம்படி நின்றருளின வெம்பெருமானடியிணையல்லதோரரண் பிறிதில்லையென்கிறார். ..........................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதார்த்தமான த்ரிவிக்ரம சமுத்ரமதநரூபமான வதிசயித வ்யாபாரத்தை யுடையவன் திருவடிகளையொழிய வேறெனக்கொரு ரக்ஷகருமில்லையென்கிறார்.

பெரிய - மஹாவகாசமான. மூவுலகும் - த்ரைலோக்யமும். நிறைய-நிறையும்படியாக. பேர் - பெரிய. உருவமாய் - வடிவையுடையனாய்க்கொண்டு. நிமிர்ந்த - வளர்ந்த. குறியமாண் - வாமநப்ரஹ்மசாரியான. எம்மான் - என்ஸ்வாமியாய். குரை - அதிகோஷத்தையுடைத்தான. கடல் - கடலை. கடைந்த - கடைந்த. கோலம் - தர்ஸநீயமான. மாணிக்கம் - ரத்நம்போலே யிருக்கிற வடிவை. என் - எனக்கு ப்ரகாசிப்பித்த. அம்மான் - நாதனாய். செறி - செறிந்த. குலை-குலையையுடைய. வாழை - வாழை. கமுகு - கமுகு. தெங்கு - தெங்குகளின். அணி-நிரைகள். சூழ்-சூழ்ந்த. திருச்செங்குன்றூர் - திருச்செங்குன்றூரில். திருச்சிற்றாறு - திருச்சிற்றாகிற திருப்பதியில் வர்த்திக்கிறவர்கள். அறிய - தன்னை யுள்ளபடியறியும்படியாக. மெய்ம்மையே - யதாவத் ப்ரகாசம்பண்ணி. நின்ற - எழுந்தருளியிருக்கிற. எம்பெருமான் - சர்வேஸ்வரனுடைய. அடியிணை - திருவடிகளை. அல்லது - ஒழிய. பிறிது - வேறு. எனக்கு - எனக்கு. ஓர் - ஏகதேசமும், ஒரு. அரண் - ரக்ஷகர். இல்லை- இல்லை.....................................................................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

மஹாபலியைவென்றும் கடலைக்கடைந்து மாஸ்ரிதராபத்தைப்போக்கித் திருச்செங்குன்றூரிலே நின்றருளினவன்றிருவடிகளல்லது வேறெனக் கரணில்லையென்கிறார்.

(பிறிதில்லையெனக்கு) அவனையொழிய வேறெனக்குரக்ஷகரில்லை. (பெரியமூவுலகும் நிறையப் பேருருவமாய்நிமிர்ந்த) ப்ரஹ்மலோகபர்யந்தமான வாகாசாவகாச மடைய விம்மவளர்ந்த. தொடங்கின கார்யம் வென்ற ப்ரீதிப்ரகர்ஷத்தாலே வளர்ந்தபடி. (குறியமாணெம்மான்) வளருகைக் குடலாகக்கொண்ட வாமநவேஷத்தையும், அர்த்தித்வத்தையுங்காட்டி யென்னை யடிமைகொண்டவன். மஹாபலியை வெல்லுகைக்குக் கொண்ட வடிவைக்காட்டி பயத்தைக் கெடுத்தபடி. (குரைகடல் கடைந்த) மஹாகோஷமெழும்படி கடலைக்கடைந்தவன். (கோலமாணிக்கம்) பெருவிலையனான ரத்நம்போலே யிருக்கிற வழகிய வடிவைக்கொண்டாயிற்றுக் கடலைக்கடைந்தது. (என்னம்மான்) கடல்கடைந்த சாமர்த்யத்தையு மழகையுங்காட்டி யென்னை யடிமைகொண்டவன். (செறிகுலைவாழையித்யாதி) செறிந்த குலையை யுடைத்தான வாழை, அப்படிப்பட்ட கமுகு, தெங்கு, இவற்றின் திரளாலேசூழப்பட்டவூர். ஊர்ச்சிறப்பென்று மரணென்று மிரண்டில்லை. செறிந்த குலைகளாலும் திரண்டு சூழ்ந்திருக்கையாலு முகவாதார்க்குப் புகுரவொண்ணாதிருக்கை. (திருச்சிற்றாறறிய) திருச்சிற்றாற்றிலுள்ளார் "சர்வேஸ்வரன்" என்றறியும்படியாக. * மஞ்சாः க்ரோஸந்திவத். (மெய்ம்மையேநின்ற வெம்பெருமான்) "ஆத்மாநம் மாநுஷம்மந்யே" (ஆத்மாநம்மாநுஷம்மந்யே) என்றும், "அஹம்வோ பாந்தவோஜாதः" (அஹம்வோபாந்தவோஜாதः) என்றும், மறைக்கவேண்டாதபடி பத்தும்பத்தாகநின்ற வென்ஸ்வாமி. (அடியிணையல்லதோரணை) அவன்றிருவடிகளல்லதொரு ரக்ஷகமில்லை. அடியிணையல்லதோரண்—பிறிதில்லையெனக்கு.......................................................*

## ஜீயர் அரும்பதம்.

நான்காம்பாட்டு. ( பிறிதில்லையித்யாதி. ) "பேருருவமாய்" என்றுதொடங்கி, "என்னம்மான் - அடியிணையல்லதோரரண்" என்ற பதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (மஹாபலியையித்யாதி.)

பிறிது - வேறென்றபடி. "அடியிணையல்லது - பிறிது - அரண் - இல்லை" என்றந்வயித்தர்த்தம் ( அவனையொழியவித்யாதி. )

நிமிர்ந்த - விம்மவளர்ந்த. அன்றுபிறந்த முக்த னிப்படி வளரக்கூடுமோவென்ன ( தொடங்கினவித்யாதி. ) "மாண்" என்கையாலே - அர்த்தித்வம். இத்தால் பாவம் ( மஹாபலியையித்யாதி. )

"செறிகுலை" என்றத்தை - கமுகுதெங்குகளோடும் கூட்டுவது. "அணி" என்று - பங்க்தியாய், திரளென்றபடி. பயம் கெடுகிறவிடத்திலே அரணைச்சொல்லுமதொழிய, சிறப்பைச்சொல்லுவானென்னென்ன ( ஊர்ச்சிறப்பென்றுமித்யாதி. ) அரணும் ப்ரகாரமேதென்ன ( செறிந்தவித்யாதி. ) "திருச்சிற்று" என்றால்அங்குள்ளாரைக் காட்டுமோவென்ன ( மஞ்சா இத்யாதி. )

பிறிது - அரண் - இல்லையென்றந்வயம். ......................................*

---

# ஐந்தாம்பாட்டு.

அல்லதோரரணுமவனில்வேறில்லையதுபொருளாகிலுமவனை
யல்லதென்னுவியமர்ந்தணைகில்லாதாதலாலவனுறைகின்ற [கு
நல்லநான்மறையோர்வேள்வியுண்மடுத்தநறும்புகைவிசும்பொளிமறைக்
நல்லநீண்மாடத்திருச்செங்குன்றூரிற்றிருச்சிற்றெனக்குநல்லரணே.

## ஆறாயிரப்படி.

( அல்லதோரரணும் ) மற்றுள்ள திருநகரிகளில் சரண்யனாயிருக்கிறானும் திருச்செங்குன்றூரில் நின்றருளினவனேயல்லனோ, ஆனபின்பு, அவனே யரணென்னும் நிர்ப்பந்தமென்னென்னில்;

அல்லாத திருநகரிகளி லரணாயிருக்கிறவனு மவனில் வேறில்லை, பொருளது, ஆகிலு மென்னெஞ்சவனையல்ல தமர்ந்தணைகில்லாது, ஆதலால், அவனுக்காயதநமாய், பக்தி யுக்த சதுர்வேத விதக்ரேஸரானவர்களுடைய யாகங்களிலே ஹுதமான ஹவிர்க்கந்தி ஹோம தூமத்தாலே திரஸ்க்ருத ககநதல நிகில தேஜஸ்கமாய், தர்ஶநீயாத்யுந்நத ப்ராசாதாலங்க்ருதமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றெனக்கு நல்லரணென்கிறார்.......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அர்ச்சாஸ்த்தலாந்தரங்களு மவனை யொழிந்திராதிருக்கத் திருச்செங்குன்றூரில் நிலையொழிய வென்னெஞ்சு பொருந்துகிறதில்லையென்கிறார்.

அல்லது - திருச்செங்குன்றூரொழிந்த, அல்லாத. ஓரரணும் - அர்ச்சாஸ்த்தலங்களான புகலிடமும். அவனில் - அவனையொழிந்து. வேறு - வேறுயிருப்பது. இல்லை - இல்லை. அது - அதுவே. பொருள் - அர்த்தஸ்திதி. ஆகிலும் - ஆனாலும். "ஹாவொநாந்ய்த்ரகச்சதி" (பாவோநாந்யத்ரகச்சதி) என்கிறகணக்கிலே, அவனை - திருச்செங்குன்றூரில் நிற்கிறவனை. அல்லது - ஒழிய. என் - என். ஆவி-ஆத்மவஸ்து. அமர்ந்து - பொருந்தி. அணைகில்லாது - கிடக்கிறதில்லை. ஆதலால்-ஆகையால். அவன் - அவன். உறைகின்ற - நித்யவாசம்பண்ணும் தேசமாய். நல்ல-ப்ரோமபூயிஷ்ட்டரான. நான்மறையோர் - சதுர்வேதிகள். வேள்வியுள் - யாகாதிகளிலே. மடுத்த - அக்நிமுகத்தில் சமர்ப்பித்த. நறும் - ஹவிர்க்கந்தியான. புகை - தூமமானது. விசும்பு - ஆகாசத்தில். ஒளி - ஆதித்யாதிதேஜஸ்ஸை. மறைக்கும்-மறைக்கும்படியாய். நல்ல - விலக்ஷணமாய். நீள் - ஓங்கின. மாடம் - மாடங்களையுடைத்தான. திருச்செங்குன்றூரில் - திருச்செங்குன்றூரில். திருச்சிற்றாறு - திருச்சிற்றாறனது. எனக்கு - எனக்கு. நல் - நிர்ப்பயமான. அரண் - புகலிடம்.

அன்றியே, கீழ் - அவன்திருவடிகளை யொழிய வுபாயமில்லையென்றாராய், அல்லாத கர்மாத்யுபாயங்களும் தத்ஸம்பந்திகளன்றோ வென்கிறசங்கையிலே; அல்லாத ரக்ஷணோபாயங்களும் ததாஸ்ரயணரூபங்களாகையாலே யவனை யொழிந்திருப்பதொன்றில்லை, அது வேதாந்த சித்தமானவர்த்தம், ஆனாலும் ததேகரக்ஷ்யமான வென்னாத்மாவானது அவ்யவஹிதோபாயமான வவனையொழிந்த ஸத்வாரோபாயங்களி லநுரூப ப்ரவ்ருத்திபண்ணிக் கிட்டமாட்டுகிறதில்லை, ஆதலால் அவன்வர்த்திக்கிற அர்ச்சாஸ்த்தலமே யெனக்குப் புகலிடமென்றாராகவுமாம்.......................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

அல்லாத வுகந்தருளின தேசங்களுமுண்டாயிருக்கத் திருச்செங்குன்றூரிலே நீரதிநிர்ப்பந்தம் பண்ணுகிறதென்னென்ன; அதங்ஙனே யிருக்கச்செய்தேயும் திருச்செங்குன்றூரி லல்லதெனக்கு ஹ்ருதயம் சேர்ந்தணையாதென்கிறார்.

(அல்லதோரரணுமவனில்வேறில்லை) அல்லாத விடங்களு மவனுக்குப் புறம்பாயிருப்பதில்லை.

(அதுபொருள்) அர்த்ததத்த்வமது. (ஆகிலும்) இங்ஙனே யிருந்ததேயாகிலும். (அவனையல்லதென்னாவியமர்ந்தணைகில்லாது) திருச்செங்குன்றூரிலே நின்றருளினவனை யல்லது என்மநஸ்ஸு சேர்ந்தணையாது. ஸ்ரீவைகுண்டநாத னீஸ்வரனல்லாமையும் ப்ராப்தி யில்லாமையுமோ, திருவடி "ஹாவொநாந்ய்த்ரகச்சதி" (பாவோநாந்யத்ரகச்சதி) என்றது; அப்படியே யிவரும். அமர்ந்தணைகை-உள்வெதுப்பற்றுப்பொருந்துகை.

(ஆதலால்) இப்படியாகையால். (அவனுறைகின்ற) அவன் நித்யவாசம்பண்ணுகிற - திருச்செங்குன்றூரொன்றநவ்யம். (நல்லநான்மறையோர்) அநந்யப்ரயோஜநரான ப்ராஹ்மணர். (வேள்வியுள்மடுத்த நறும்புகை) யாகங்களிலே ப்ரவ்ருத்தமான ஹவிர்க்கந்தியான தூமம்.

அநந்யப்ரயோஜநராகி லிவர்களநுஷ்ட்டாநத்துக்கு ப்ரயோஜநமென்னென்னில்; ஸ்வயம் ப்ரயோஜநமாதல், பகவத்ப்ரதிபக்ஷங்களை யழியச்செய்யுமபிசாரம் பலமாதல். எம்பெருமானாரைப்போலேயாயிற்றவ்வூரில் ப்ராஹ்மணரும். ( விசும்பொளிமறைக்கும் ) ஆகாசத்தி லொளியுள்ள வாதித்யாதிகளை மறைக்கு மென்னுதல், விசும்புதன்னி லொளியை மறைக்கு மென்னுதல். ( நல்லநீண்மாடம் ) ஒருகர்மமும் வேண்டா, ஊரரண்தானே ப்ரதிகூலர்க்கு துஷ்ப்ராபமாயிருக்கும். (திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு) "மாடமாமயிலைத் திருவல்லிக்கேணி" என்னுமாபோலே. ( எனக்கு நல்லரணே ) அஸ்த்தானே பயசங்கைபண்ணு மெனக்கு பயநிவ்ருத்தியுண்டாம் தேசமதுவல்லதில்லை. திருச்சிற்றாறென்று - திருப்பதிக்கும்பேர், ஆற்றுக்கும்பேர். ........................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. ( அல்லதோரித்யாதி. ) "ஆகிலுமவனையல்ல தென்னுவியமர்ந்தணைகில்லாது" என்றத்தைக் கடாக்ஷித் தவதாரிகை ( அல்லாதவித்யாதி. )

எங்கும் ப்ராப்தியொத்திருக்க, இங்ஙனருளிச் செய்யலாமோவென்ன (ஸ்ரீவைகுண்டநாதனித்யாதி.)

நன்மையேதென்ன ( அநந்யப்ரயோஜநரித்யாதி. ) அப்படியபிசாரம்பண்ணினாருண்டோவென்ன ( எம்பெருமானாரித்யாதி. ) எம்பெருமானார் க்ருமிகண்டனுக்காக மேல்நாட்டிலே அபிசாரம்பண்ணுவித்த கதை யிங்கே யநுசந்தேயம். எம்பெருமானார் புழுவனுக்காக வபிசரிக்கலாமோவென்ன; "யதாஶக்தி நிக்ருஹ்ணீயாத் தேவதாகுரு நிந்தகாந்" ( யதாஶக்திநிக்ருஹ்ணீயாத் தேவதாகுரு நிந்தகாந் ) என்றிருக்கையாலே அபிசரிக்கலாமென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, விசும்பினுடைய வொளியென்றபடி.

"திருச்செங்குன்றூர்" என்று - பட்டணமாய், "திருச்சிற்றாறு" என்று- திருப்பதியைச் சொல்லுகிறதென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் ( மாடமாமயிலையித்யாதி. ) மயிலை - மயிலாப்பூர். மயிலாப்பூரென்று - படைவீட்டுக்குப்பேர். திருவல்லிக்கேணியென்று - திருப்பதி. திருமொழி இரண்டாம்பத்து மூன்றாந்திருமொழி, "வேதத்தை" இத்யாதி. "திருச்சிற்றாறு" என்று - அங்குத்தை நதியையன்றோ சொல்லுவதென்ன ( திருச்சிற்றாறென்றித்யாதி. )

அல்லதோ ரரணுமென்று தொடங்கி, அணைகில்லாது, ஆதலால் - நல்ல நான்மறையோரொன்று தொடங்கி, நல்லநீண்மாடம் - அவனுறைகின்ற - திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறெனக்கு நல்லரணேயித்யந்வயஃ. ........................................*

---

## ஆறும்பாட்டு.

எனக்குநல்லரணையென்னதாருயிராயிமையவர்தந்தைதாய் தன்னைத்
தனக்குந்தன்றன்மையறிவரியானைத்தடங்கடற்பள்ளியம்மானை
மனக்கொள்சீர்மூவாயிரவர்வண்சிவனுமயனுந்தானுமொப்பார்வாழ்
கனக்கொடிண்மாடத்திருச்செங்குன்றூரிற்றிருச்சிற்றாறதனுட்கண்டேனே.

## ஆறுயிரப்படி.

( எனக்கு நல்லரணை ) எனக்கு நித்யரக்ஷகனுய், எனக்குப்ராணனுய், * அயர்வறுமமரர்களுக்குப் பிதாவாய் மாதாவாய், ஸ்வேநாபிதுரவபோத ஸ்வமஹிம ஸ்வபாவனுய், க்ஷீரார்ணவசாயியாயிருந்த வெம்பெருமானை; சகலமநோஹர கல்யாணகுணவிசிஷ்டராய், தனித்தனியே ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரவஜ் ஜகஜ்ஜந்மஸ்த்திதி சம்ஹார சமர்த்தராய், த்ரிஸஹஸ்ரஸங்க்யா ஸங்க்யாதரான ஜநங்களாலே யத்யாஸ்யமாநமாய், த்ருடதர ப்ராசாத பரிகர்மிதமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றுறதனுள் கண்டேனென்கிறுர். ......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வப்ரகாரோபகாரகனுய், க்ஷீரார்ணவசாயியான சர்வேஶ்வரனை, பரிவரான வைதிகாக்ரேஸரர் வர்த்திக்கிற திருச்செங்குன்றூரிலே காணப்பெற்றேனென்கிறுர்.

எனக்கு - எனக்கு. நல் - நிர்ப்பயமான. அரணை - புகலிடமாய். அவ்வளவன்றியே, எனது - எனக்கு. ஆருயிரை - சத்தாதாரகனுய். நித்யசூரிகள் சத்தைக்கும் வ்ருத்திக்கும் ஹேதுபூதனுகையாலே, இமையவர் - அவர்களுக்கும். தந்தைதாய்தன்னை - தந்தைதாயாயிருப்பானுய். தனக்கும் - சர்வஜ்ஞுன தனக்கும். தன்- தன். தன்மை - பெருமை. அறிவரியானை - அறியவரியனு யிருக்குமவனுய். ஆஶ்ரித ரக்ஷணர்த்தமாக, தடம் - விஸ்தீர்ணமான. கடல் - கடலிலே. பள்ளி - கண்வளர்ந்தருளுமவனுன. அம்மானை - சர்வேஶ்வரனை. மனம் - நெஞ்சிலே. கொள் - கொள்ளப்பட்ட. சீர் - பகவத்குணங்களையுடையரான, மூவாயிரவர் - மூவாயிரவர். வண்- ஜ்ஞாநாதிசம்பத்தை யுடையரான. சிவனும் - ருத்ரனும். அயனும் - ப்ரஹ்மாவும். தானும் - சர்வேஶ்வரனுன தானும். ஒப்பார்-ஒக்கும்படி யோரொருவரோ ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளுக்கு க்ஷமரானவர்கள். வாழ் - "ஜமஉ்வாபாரவஜ்ஜ" ( ஜகத்வ்யாபாரவர்ஜம் ) என்கிறபடியே அதில் தாத்பர்யமற்று பகவதநுபவமாகிற வாழ்ச்சியையுடையராய்க்கொண்டு வர்த்திக்கிறஸ்த்தலமாய். கனம் - செறிவை. கொள்- உடைத்தாய்க்கொண்டு. திண் - ஸ்த்திரமான. மாடம் - மாடங்களை யுடைத்தான. திருச்செங்குன்றூரில் - திருச்செங்குன்றூரில். திருச்சிற்றுறதனுள் - திருச்சிற்றுறுகிற விலக்ஷணதேசத்துக்குள்ளே. கண்டேன் - காணப்பெற்றேன்......................*

## ஈடு - ஆறும்பாட்டு.

நித்யசூரிகளுக்கு சர்வவிதபந்துவுமாய், ப்ரஹ்மாதிகளுக் காஶ்ரயணீயனுய்க்கொண்டு திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற விவனை "தனக்கென்வருகிறதோ" என்றஞ்சவேண்டாதபடி நிர்ப்பயமான திருச்செங்குன்றூரிலே காணப்பெற்றேனென்கிறுர்.

(எனக்குநல்லரணை) "கயவொஸயஜதொஹவதி" ( அதஸோபயங்கதோபவதி ) என்கிறவிஷயத்துக்கு பயப்படுகிற வெனக்கு நிர்ப்பயமான வரணுனவனை. ( எனதாருயிரை ) தன்னுடைய ரக்ஷகத்வத்தைக்

காட்டி யெனக்கு தாரகனானவனை. (இமையவர்தந்தைதாய்தன்னை) அஸ்த்தானே பயசங்கைபண்ணும் நித்யஸூரிகளுக்கு சர்வவிதபந்துவுமானவனை. "சூழ்ந்திருந்தேத்துவர்பல்லாண்டு" என்னக்கடவதிறே. (தனக்குந்தன்றன்மையறிவரியானை) ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனான தன்னாலும் தன்னைப்பரிச்சேதிக்கப்போகாது. முதலிலே பயத்துக்கவகாசமில்லை. ஒருவஸ்துவைப்பரிச்சேதித்து நலியவேணுமே. (தடங்கடல்பள்ளியம்மானை) ஶ்வேதத்வீபவாஸிகளாபிரயிக்கைக்கும், மதுகைடபாதிகளை யழியச்செய்கைக்கும், ப்ரஹ்மாதிகள் பரிகைக்கும் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவனை. (மனக்கொள்சீர்மூவாயிரவர்) பகவத்குணங்களை மநஸ்ஸிலே கொண்டு, "இக்குணிசனுக் கென்வருகிறதோ" என்று அஸ்த்தானே பயசங்கைபண்ணி வர்த்திப்பார் மூவாயிரம் ப்ராஹ்மணருண்டு. அவ்வூரில் ப்ராஹ்மணரு மிவர்கோடியிலேயாயிற்று; "வவெ நியதொ நிழ" (வவந்தேகியதோமுநிம்) என்கிற ஸ்ரீபரத்வாஜமஹாமுநியோடொக்குமவர்கள். தன்னைப்பிரிந்த வன்றுமுதல் ராவணவதம்பண்ணி மீளுமளவும் செல்ல, "இவர்களுக்கென்வருகிறதோ" என்றித்தையேநினைத்திருந்தவனிறே ஸ்ரீபரத்வாஜபகவான். (வண்சிவனுமயனும் தானுமொப்பார்வாழ்) மூவர்செய்யும்கார்யமு மோரொருத்தரேசெய்யவல்லரா்யிருப்பர்கள். அதிகாரிபுருஷர்களி லிவர்களுக்குண்டானவேற்றம். (கனக்கொள்திண்மாடம்) (செறிந்துதிண்ணிதானமாடம்.) இவர்களும்மிகை, ஊரரண்தானே சிலர்க்கு ப்ரவேசிக்கப்போகாது. (திருச்சிற்றாறதனுட்கண்டேனே) பயப்பட்டதேசத்திலே பயம் நிவ்ருத்தமானப்போலே, சம்சாரத்துக்குள்ளே நிர்ப்பயமாயிருப்ப தொருதேசமுண்டாய், அதிலேகாணப்பெற்றேன்......................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. (எனக்கித்யாதி.) "இமையவர்தந்தைதாய்தன்னை - தடங்கடல்பள்ளியம்மானை - மூவாயிரவர் - வாழ் - கனக்கொள்" என்றுதொடங்கி, "கண்டேனே" என்ற பதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (நித்யஸூரிகளுக்கித்யாதி.)

அதஸோபங்கதோபவதி என்கிற விஷயத்துக்கென்றது - தன்பக்கல் மநஸ்ஸைவைத்தாரை நிர்ப்பயமாக்கும் விஷயத்துக்கென்றபடி.

அஸ்த்தானே பயசங்கைபண்ணுவாரோவென்ன (சூழ்ந்திருந்திருந்தித்யாதி.) பலிதம் (முதலிலேயித்யாதி.) அதெப்படியென்ன (ஒருவஸ்துவையித்யாதி.)

திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகைக்கு மூன்று ப்ரயோஜநமருளிச்செய்கிறார் (ஶ்வேதத்வீபேத்யாதி.)

அடியவர்கள் பரிவரோவென்ன, த்ருஷ்டாந்தம் (அவ்வூரிலித்யாதி.)இவர்கோடியிலே யென்றது - ஆழ்வார் கோடியிலே யென்றபடி. த்ருஷ்டாந்தாந்தரம் (வவந்த இத்யாதி.) "முநிம்" என்றதுக்கர்த்தம் (தன்னையித்யாதி.) "வ-ஞ

𑌪𑍂𑌰𑍍𑌣𑍇 𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶𑍇 𑌵𑌰𑍍𑌷𑍇 𑌪𑌞𑍍𑌚𑌮𑍍𑌯𑌾𑌂 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌾𑌗𑍍𑌰𑌜𑌃 । 𑌭𑌰𑌦𑍍𑌵𑌾𑌜𑌾𑌶𑍍𑌰𑌮𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌵𑌵𑌨𑍍𑌦𑍇 𑌨𑌿𑌯𑌤𑍋 𑌮𑍁𑌨𑌿𑌮𑍍" (பூர்ணே சதுர்த்தஶேவர்ஷே பஞ்சம்யாம்லக்ஷ்மணாக்ரஜ:। பரத்வாஜாஶ்ரமம்ப்ராய்ய வவந்தேநியதோமுநிம்) இதியுத்தகாண்டே. இவர்களைக்கண்டவாறே பயம் நிவ்ருத்தமாயிற் றென்னுமிடந் தோன்ற அவர்கள் சக்தியினுறைப்பை யருளிச்செய்கிறார் (மூவர்செய்யுமித்யாதி.) மூவாயிரவரும் மூவருக்கொத்தவர்களென்னாதே, "ஒரொருத்தரோ" என்றதுக்கு பாவமேதென்ன (அதிகாரீத்யாதி.)

இவர்களுக்கு மென்றது - மூவாயிரவரை.

"திருச்சிற்றுறதனுட்கண்டேன்" என்கிறவருடைய பாவம் (பயப்பட்டதே சத்திலேயித்யாதி.) ......................................................................*

## ஏழாம்பாட்டு.

திருச்செங்குன்றூரிற்றிருச்சிற்றுறதனுட்கண்டவத்திருவடியென்றுந்
திருச்செய்யகமலக்கண்ணுஞ்செவ்வாயுஞ்செவ்வடியுஞ்செய்யகையுந்
திருச்செய்யகமலவுந்தியுஞ்செய்யகமலமார்வுஞ்செய்யவுடையுந்
திருச்செய்யமுடியுமாரமும்படையுந்திகழவென்சிந்தையுளானே.

### ஆறாயிரப்படி.

(திருச்செங்குன்றூரில்) திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறதனுள் கண்ட வந்த ரமணீய தாம்ரகமல சத்ருசமான திருக்கண்களும், வித்ருமசத்ருசமான திருப்பவளமும், கமலசத்ருசமான திருவடிகளும், கமலசத்ருசமான திருக்கைகளும், கமலசத்ருசமான திருநாபியும், நிஜபுஜாந்தர மந்திரோந்திரா திவ்யரூப மயூகாபிபூதமாகையாலே சிவந்த தாமரை போலேயிருந்த திருமார்வும், திவ்யபீதாம்பரமும், நிரதிசய தேஜோரூபமான திருவபிஷேகமும், திவ்யமௌக்திகஹாரமும், சங்கசக்ராதி திவ்யாயுதங்களும் திகழ வென்சிந்தையு ளிருந்தானென்கிறார். ...................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அதிசயிதமான வவயவாபரணயுத சோபைகளோடே திருச்செங்குன்றூரிலே யெழுந்தருளியிருக்கிற வென் ஸ்வாமியானவ னென்னெஞ்சுக்குள்ளே நித்யசந்நிஹிதனாகாநின்றா னென்கிறார்.

திருச்செங்குன்றூரில் - திருச்செங்குன்றூரில். திருச்சிற்றாறதனுள் - திருச்சிற்றாற்றில் வர்த்திக்கிற. கண்ட - நான்கண்ட. அத்திருவடி - ஸ்வாமியானவன் செய்ய - சிவந்த. கமலம் - கமலம்போலே யிருக்கிற. திருக்கண்ணும் - திருக்கண்களும். செம் - சிவந்த. வாயும் - திருப்பவளமும். செம் - சிவந்த. அடியும் - திருவடிகளும். செய்ய - சிவந்த. கையும் - திருக்கைகளும். செய்ய - சிவந்த. கமலம் - கம

லத்தையுடைத்தான. திருவுந்தியும் - திருநாபியும். செய்ய - சிவந்ததிருமேனியையுடைய. கமலை - லக்ஷ்மியையுடைத்தான. மார்வும் - திருமார்வும். செய்ய-சிவந்த. உடையும் - திருவுடையாடையும். செய்ய - சிவந்த. திருமுடியும் - திருமுடியும். ஆரமும் - திருவாரமும். படையும் - திவ்யாயுதங்களும். திகழ - விளங்கும்படியாக. என்றும் - என்றும். என் - என். சிந்தை - நெஞ்சகுள்ளே. உளான் - ஆனன்....*

## ஈடு - ஏழாம்பாட்டு.

திருச்செங்குன்றூரிலே நின்றருளின சிர்கொள்சிற்றுயன், தன்னழகோடே மறக்கவொண்ணுதபடி யென்னெஞ்சிலே வந்து புகுந்தானென்கிறூர்.

( திருச்செங்குன்றூரிலித்யாதி ) நிர்ப்பயஸ்த்தாநமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றுற்றிலே காணலாம்படி நின்ற ஸ்வாமி. திருவடி-ஸ்வாமி. ( திருச்செய்யகமலக்கண்ணும் ) அழகியதாய், சிவந்திருப்பதாய், விகாஸம் செவ்விமுதலானவற்றுலே தாமரைபோலேயிருந்த திருக்கண்களும். ( செவ்வாயும் ) நோக்கால் பிறந்த முதலுறவை க்ரயம் செலுத்திக்கொடுக்கும் ஸ்மிதமும். ( செவ்வடியும் ) ஸ்மிதத்துக்குத் தோற்று விழும் திருவடிகளும். (செய்யகையும்) திருவடிகளில் விழுந்தாரை யெடுத்தணைக்கும் திருக்கையும். (திருச்செய்யகமலவுந்தியும்) அணைத்தார்க்கு நித்யாநுபாவ்யமாய், அழகுக் கெல்லையாய், "ஸர்வோத்பத்திஸ்த்தாநம்" ( ஸர்வோத்பத்திஸ்த்தாநம் ) என்று தோற்றும்படி யிருக்கிற திருநாபியும். ( செய்யகமலமார்வும் ) பகவத்ஸம்பந்த மில்லாதார்க்கும் பற்றுசான பிராட்டிக் கிருப்பிடமாகையாலே சிவந்த திருமார்வும். கமலையென்றுமாம். (செய்யவுடையும்) திருமேனிக்குப்பரபாகமாய், பும்ஸ்த்வாவஹமான திருப்பீதாம்பரமும். ( திருச்செய்யமுடியும் ) அப்படி திருமேனிக்குப் பரபாகமாய் பயந்திரும்படிர க்ஷகத்வசூசகமாயிருந்துள்ள திருவபிஷேகமும். ( ஆரமும் ) "பெரியவரைமார்பில் பேராரம்பூண்டு" என்கிறபடியே - திருமார்வுக்குத்தகுதியான திருவாரமும். (படையும்) வினைத்தலையிலாயுதமாய், போகதசையிலாபரணமாயிருந்துள்ள திவ்யாயுதங்களும். ( திகழ ) "ஶோபயந்தண்டகாரண்யம்" ( ஶோபயந்தண்டகாரண்யம் ) என்கிறபடியே விளங்க. ( என்றும்-என்சிந்தையுளானே ) அவனென்றுமொக்க வென்சிந்தையிலே வர்த்திக்கையாலே பயத்துக்கொதுங்கவிடமில்லை. ......................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (திருச்செங்குன்றூரிலித்யாதி.) "திருச்சிற்றுறதனுட்கண்டவத்திருவடி - திருச்செய்யகமலக்கண்ணும்" என்றுதொடங்கி, "திகழ - என்றும்-என்சிந்தையுளானே" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை ( திருச்செங்குன்றூரிலேயித்யாதி. )

கண்ட - காணலாம்படி.

திரு - அழகு. கண்ணுக்கநந்தரம், அதரத்தைச்சொன்னதுக்கு பாவம் (நோக்காலித்யாதி.) அதரத்துக்கநந்தரம், திருவடிகளைச் சொன்னதுக்கு பாவம் (ஸ்மிதத்துக்கித்யாதி.) திருவடிகளுக்கநந்தரம், திருக்கைகளைச்சொன்னதுக்குபாவம் (திருவடிகளிலித்யாதி.) திருக்கைகளுக்கநந்தரம், திருநாபியைச் சொன்னதுக்கு பாவம் (அணைத்தார்க்கித்யாதி.) "செய்யகமலம்" என்றதுக்கிரண்டர்த்தம். கமலம்போலே சிவந்த மார்வென்னுதல்; ஐகாரம் குறைந்துகிடக்கிறதாய், கமலையை யுடைத்தாகையாலே சிவந்தமார்வென்னுதல். திருமார்வுக்குச் சிவப்புக் கூடாதே யென்ன (பகவத்ஸம்பந்தமித்யாதி.) பகவத்ஸம்பந்தமில்லாதார்க்கு மென்றது - பகவத்ஸம்பந்தஜ்ஞாந மில்லாதார்க்குமென்றபடி. பும்ஸ்த்வாவஹமான - புருஷோத்தமத்வாவஹமானவென்றபடி. ஆரம் - பக்கம். "படையும்" என்றது - ஜாத்யேகவசநம். ஆயுதங்களை யழகோடே கூட்டலாமோவென்ன (வினைத்தலையிலித்யாதி.).........*

# எட்டாம்பாட்டு.

திகழவென்சிந்தையுள்ளிருந்தானைச்செழுநிலத்தேவர்நான்மறையோர்
திசைகைகூப்பியேத்துந்திருச்செங்குன்றூரிற்றிருச்சிற்றாற்றங்கரையானை
புகர்கொள்வானவர்கள்புகலிடந்தன்னையசுரர்வன்கையர்வெங்கூற்றைப்[ப்
புகழுமாறறியேன்பொருந்துமூவுலகும்படைப்பொடுகெடுப்புக்காப்பவனே.

## ஆறாயிரப்படி.

(திகழவென்சிந்தையுள்) ஸ்வகுணாநுரக்த சகலபுவந சஞ்சந பரிபாலந சம்ஹ்ருதிலீலனாய், பக்தியுக்த சதுர்முக பசுபதி சதமகஹுதவஹ ப்ரப்ருதி சகலசுரஜந சரண்யனாய், தத்விரோத்யசுரஜந ம்ருத்யுபூதனாய், சதுர்வேத வித்ப்ரவரராய் பரமபுருஷ சரணயுகளாநுராகயுக்தராய் க்ருதாஞ்சலிகளான பௌமசுரராலே சம்ஸ்துயமாந திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையிலே நின்றருளி, என்னெஞ்சிலே தீப்யமாநனாயிருந்தருளினவனை, எத்தைச்சொல்லிப் புகழ்வது, புகழுமாறறியேனென்கிறார்... ... ... ... ... .. ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படி யென்னெஞ்சிலே திகழவிருக்கிற ஜகஜ்ஜந்மாதி காரணபூதனாயிருக்கிறவனைப் புகழும்படி யறிகிறிலேனென்கிறார்.

திகழ-உஜ்ஜ்வலமாம்படி. என்-என். சிந்தையுள்-நெஞ்சுக்குள்ளே. இருந்தானை-இருக்குமவனாய். செழு-விலக்ஷணராய். நிலத்தேவர்-பூமிதேவர்களாய். நான்மறையோர்-நாலுவேதங்களுக்கும் நிர்வாஹகரானவர்கள். திசை-திக்குக்கள்தோறும். கை-கை. கூப்பி-கூப்பி. ஏத்தும்-ஏத்தும்படியான. திருச்செங்குன்றூரில்-திருச்செங்குன்றூரில். திருச்சிற்றாற்றங்கரையானை-திருச்சிற்றாற்றங்கரையிலே வர்த்திக்குமவனாய். பிறர்க்கு மாஶ்ரயணீயதயாவந்த, புகர்-ஔஜ்ஜ்வல்யத்தை. கொள்-உடைய. வானவர்கள்-தேவர்களுக்கு. புகலிடந்தன்னை - ஆஶ்ரயணீயனும் ஸ்வபாவத்தையுடையனாய். அவர்களுக்கு விரோதிகளாய், வன்கையர்-ப்ரபலரான. அசுரர்-அசுரர்க்

கு. வெம் - க்ரூரமான. கூற்றை - ம்ருத்யுவாய். பொருந்து - தன்னோடேப்ருதக்ஸித்தமான. மூவுலகும் - ஜகத்ரயத்தினுடைய. படைப்பொடு - ஸ்ருஷ்டியோடே. கெடுப்புக்காப்பவனே - ப்ரளயரக்ஷணங்களையுடையனானவனே. புகழுமாறு - ஓராகாரத்தாலே வகையறிந்து புகழும்படி. அறியேன் - அறிகிறிலேன்.

காப்பவன் - காப்பினையுடையவன்...... ......................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

இப்படி பூர்ணமாக வநுபவித்த சீர்கொள் சிற்றாயனுடைய விலக்ஷணமான குணங்களிலு மழகிலு மழுந்தி, அவனைப் புகழும்படி யறிகிறிலேனென்கிறார்.

( திகழவென்சிந்தையுளிருந்தானை ) இதுவு மிவர்க்கொருபயநிவ்ருத்திக்குஹேது. தம்நெஞ்சிலேயிருக்கையாலே ஓரரணுக்குள்ளே யிருக்கிறாப்போலே யிருக்கிறதாயிற்று. உகவாதார் நெஞ்சிலேயிருந்த பயமும் போயிற்று. " இனிப்போய்ப் பிறரொருவர் வன்னெஞ்சம்புக்கிருக்கவொட்டேன் வளைத்துவைத்தேன் " என்னுமவர்களிறே. ( செழுநிலத்தேவரித்யாதி ) நாலுவகைப்பட்ட வேதங்களும் கைவந்து விலக்ஷணராய் பூசுரரான வைஷ்ணவர்கள், திக்குக்கள்தோறும் நின்று கைகூப்பி யேத்தாநின்றுள்ள திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையிலே வர்த்திக்கிறவனை. உகவாதார்க்குக் கிட்டவொண்ணாதபடி துர்க்கமான வூரிலே நிற்கிறபடி. ( புகர்கொளித்யாதி ) தங்களையொழிந்தார்க்கெல்லா மாஶ்ரயணீயராகையால்வந்த புகரையுடையரான ப்ரஹ்மாதிகளுக்கு மாபத்துவந்தால் புகலிடமாயுள்ளவனை. ( அசுரர்வன்கையர்வெங்கூற்றை ) மூன்கை மிடுக்கரான வசுரவர்க்கத்துக்கு, அந்தகன் தண்ணீரென்னும்படி வெவ்வியகூற்றமாயுள்ளவனை. ( புகழுமாறறியேன் ) அவனுக்கொரு குறையில்லை, என்குறைதீரப் புகழுவதொரு ப்ரகாரமறிகிறிலேன். புகழாதொழியவும் மாட்டுகிறிலேன். ஆனால் செய்யவடுப்பதென்னென்னில் (பொருந்தித்யாதி) தனக்குவிதேயமான சர்வஜகத்தினுடையவும் ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுமவனென்று திரளச்சொல்லு மத்தனை, பிரித்துவகையிட்டுச் சொல்லப்புக்கால் சொல்லி முடிக்கப்போகாது. ப்ரயோஜகத்திலே சொல்லு மித்தனை... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. ( திகழவித்யாதி. ) " புகழுமாறறியேன் " என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( இப்படியித்யாதி. ) கீழ்ப்பாட்டிலே - சௌந்தர்யத்திலே மக்நரானபடியைச்சொல்லி, அநந்தரம், இப்பாட்டிலே - அவன் குணங்களைச் சொல்லி, "புகழுமாறறியேன்" என்கையாலே (குணங்களிலுமழகிலுமழுந்தி) என்கிறார்.

சிந்தையுளிருந்தானென்னாதே, "திகழ்" என்று விசேஷித்ததுக்குபாவம் (இதுவுமித்யாதி.)அதெப்படியென்ன (தம்நெஞ்சிலேயித்யாதி.) இத்தால்பாவம் (உகவாதாரித்யாதி.) தம் நெஞ்சிலிருந்தால் "உகவாதார்நெஞ்சிலிருந்த பயமும்போயிற்று"

என்கைக்கு நியாமகமேதென்ன (இனிப்போயித்யாதி) இங்குநின்று மினிப்போய்ப் பிறரொருவர் வலியநெஞ்சிலே புக்கிருக்கவொட்டேன், வளைத்துவைத்தேன்-போக வொட்டாதபடி வளைத்துவைத்தேனென்றபடி. திருமொழிஏழாம்பத்து இரண்டாந் திருமொழி ஏழாம்பாட்டு, " மன்னஞ்ச " இத்யாதி.

" நான்மறையோர் - செழுநிலத்தேவர் " என்றந்வயித்தர்த்தம் ( நாலுவகை யித்யாதி. ) இத்தால் பாவம் ( உகவாதார்க்கித்யாதி. )

ப்ரஹ்மாதிகளுக்குப் புகரோதென்ன (தங்களையொழிந்தார்க்கித்யாதி.)

" வெங்கூற்றை " என்று விசேஷித்ததுக்குபாவம் ( அந்தகன் தண்ணீரென் னும்படியென்று. )

அவனுக்கொரு குறையில்லை யென்றது-மங்களாசாசநபரருண்டாகையாலே குறையில்லை யென்றபடி. ஆனால் வெறுமனே யிருக்கிறதுக்கென்னென்ன (புகழா தொழியவுமித்யாதி. )

" திரளச்சொல்லுமத்தனை " என்றதின் விவரணம் ( ப்ரயோஜகத்திலேயித் யாதி. ) ப்ரயோஜகம் - சங்க்ஷேபம்...........................................*

# ஒன்பதாம்பாட்டு.

படைப்பொடுகெடுப்புக்காப்பவன்பிரமபரம்பரன்சிவபிரானவனே
யிடைப்புக்கோருருவுமொழிவில்லையவனேபுகழ்வில்லையாவையுந்தானே
கொடைப்பெரும்புகழாரினையர்தன்னனார்கூரியவிச்சையோடொழுக்க
நடைப்பலியியற்கைத்திருச்செங்குன்றூரிற்றிருச்சிற்றாற்றமர்ந்தநாதனே.

## ஆறாயிரப்படி.

( படைப்பொடு ) பரமோதாரராய், வ்யபதேஸ்யராய், ஸ்வஸத்ருசராய், நிரதிசய சகலவேத தத்த்வார்த்தஜ்ஞராய், ஜ்ஞாநாநுகுணசரித்ரராய், நித்யமநுஷ்டேயமான பஞ்சமஹாயஜ்ஞாதி சகலகர்மகலாபராயிருந்த திவ்யஜநங்களாலே யத்யாஸ்யமாநமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றமர்ந்த நாதன் ; ப்ரஹ்மருத்ரரூபேண, ஸ்வேநரூபேணச, நிகிலஜகத்ஸ்ருஷ்டி ஸ்த்திதி சம்ஹாரஹேதுபூதனாய்,சமஸ்தவஸ்துஜாதாந்தராத்மபூதனாய், சர்வசப்த வாச்யனாயிருக்கும்; இவ்வர்த்தத்தில் ஸ்துதியில்லை, புகழுமாறறியேனென்கிறார்... ... ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸ்ருஷ்ட்யாதி கர்த்ருகர்மவிபாகமில்லாதபடி சர்வாத்மபூதனானவன் திருச்செங்குன்றூரிலே நிற்கிற சர்வஸ்வாமியென்கிறார்.

கொடை - வித்யாதாநாதிகளான வௌதார்யத்தாலே. பெரும் - பெரிய. புகழா - புகழையுடையராய். இனையர் - அநேகராய். தன்னனார் - தான் என்னலாம் படி ஜ்ஞாந சக்த்யாதி பூர்ணரானவர்களுடைய. கூரிய-ஸுக்ஷ்மாவகாஹியான. வி

ச்சையோடு - வித்யையோடேகூடின. ஒழுக்கம் - அநுஷ்ட்டாநத்தையும். நடை - நித்யயாத்ரையான. பலி - பகவதாராதநத்தையும். இயற்கை - ஸ்வபாவமாகவுடைத்தான. திருச்செங்குன்றூரில் - திருச்செங்குன்றூரில். திருச்சிற்றாறு - திருச்சிற்றாற்றிலே. அமர்ந்த - நின்ற. நாதன் - ஸ்வாமியானவன். படைப்பொடு - கெடுப்புக் காப்பவன் - ஜகஜ்ஜந்மஸ்த்தேமலயங்களுக்கு நிர்வாஹகனுயிருக்கும். பரம்பரன் - "ஸூஹாதுவஸூாஹிாமெஷஉ-ூாழ்ஃ" (ப்ரஹ்மாத்யவஸ்த்தாபிரமேஷ்மூர்த்திः) என்கிறபடியே மநுஷ்யாத்யபேக்ஷயாபரரான விந்த்ராதிகளுக்கு மவ்வருகாகையாலே பரःபரனுய்க்கொண்டு. பிரமன்-ஸ்ரஷ்டாவான ப்ரஹ்மாவும். சிவப்பிரான்-ததாத்மகனுய்க்கொண்டு சம்ஹரிக்கையாலே சுத்திகுணயுக்தனுய்க்கொண்டு ஈஶ்வரனன ருத்ரனும். அவனே - தானேயாம்படி ப்ரகாரியாய் நிற்பானுய். இடை - இவர்களிருவர்க்கு மிடையிலே. புக்கு - ரக்ஷகனுய்ப்புகுந்து. ஓர் - ஒரு. உருவும் - பதார்த்தத்தையும். ஒழிவில்லயவனே-ஒழியவிடாதிருக்குமவனுய். இப்படி ஸ்ருஷ்டிசம்ஹாரபாலந கர்த்தாவானவளவன்றியே, யாவையும் - ஸ்ருஜ்யஸம்ஹார்யபால்யமான சமஸ்தபதார்த்தங்களும். தானே - தானேயாம்படி தத்ப்ரகாரவிசிஷ்டனுயிருக்கும். இதில், புகழ்வு-அர்த்தவாதரூபமானஸ்துதி. இல்லை-இல்லை.*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

ப்ரஹ்மாதி சகல ஜந்துக்களுடைய ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுவான் திருச்செங்குன்றூரிலே நின்றருளினவனென்னுமிட மர்த்தவாதமன்று, மெய்யென்கிறார்.

(படைப்பொடித்யாதி) ஸ்ருஷ்டி, சம்ஹாரம், பாலநம், இவையெல்லாம் தன்னதீநமாகவுடையவன். (பிரமபரம்பரன்) மநுஷ்யாதிகளில் விந்த்ராதிகளுக்குண்டான வேற்றம்போலே, அந்த விந்த்ராதிகளிலேற்றமுடையனான ப்ரஹ்மாவாகிற பராத்பரன். (சிவபிரான்) அப்படியே தேவர்களில் தலைவலித்தானுயிருக்கிற ருத்ரன். அவர்களுமிவனிட்டவழக்கு. (இடைப்புக்கித்யாதி) நடுவே புக்கொரு பதார்த்தமும் ஸ்வதந்த்ரமாயிருப்பதில்லை; அடைய ப்ரகாரமாய்த் தான்ப்ரகாரியாயிருக்கும். (யாவையுந்தானே) இங்ஙன் பிரித்துச் சொல்லுகிறதென், சேதநாசேதந விபாகமற வவனதீநம். (புகழ்வில்லை) இதிலர்த்தவாதமில்லை. ப்ரஹ்மாதிகளுக்கு மில்வேற்றங்கள் சொல்லக்கடவது. அது உபசாரம், இவ்விஷயத்தி லர்த்தவாதசங்கையுமில்லை. இப்படி, எல்லாம் ஸ்வாதீநமாம்படியிருக்கிறவனுரென்ன (திருச்சிற்றாறமர்ந்தநாதன்) என்கிறார். (கொடைப்பெரும்புகழார்) அவ்வூரிலுள்ளார், கொடையால்வந்த பெரும்புகழையுடையார். எதிரிகளையும் தாநத்தாலே வசீகரிக்க வல்லராயிருக்கை. தாநமும் ஸாமாதிகளிலேயொன்றிறே. பெரும்புகழாவது-ஜ்ஞாநதாநம். "விஷாூாநம்விஶிஷ்யதெ." (வித்யாதாநம்விஶிஷ்யதே.) (இனையர்) "இன்னார், இன்னார்" என்று ப்ரசித்தராயிருக்குமவர்கள். "விதெஶெஷவிவிவஹ்ராதாஃ" (விதேஶேஷ்வபிவிக்யாதாः) என்று சத்ருதேசத்திலும் ப்ரசித்தரா யிருக்கையாலே, சத்ருக்களங்கேசென்றால் மீளப்போ

காதென்று இங்குவர நினையாதிருக்கை. (எனையர்) என்றுபாடமானபோது, இப்படி யிருப்பா ரநேகரென்கிறது. ( தன்னுனர் ) தன்னோடொத்தவர்கள். அவன்றன்னைப்போலே யதிகரித்த காரியத்தில் வெற்றிகொண்டல்லது மீளாதவர்கள். ( கூரியவிச்சையோ டொழுக்கம் ) சம்யக்ஜ்ஞாநமும், ஜ்ஞாநாநுரூபமான சமாசாரங்களும். எதிரிகளையறிந்து பரிஹரிக்கவல்ல ஜ்ஞாநங்களும், எதிரிகளுக்கு நலிய வவகாசமான ஆசாரவைகல்யமின்றிக்கே யிருக்கையும். இந்த்ரன், திதிகர்ப்பத்தை யழிக்கைக்கு, ஆசாரவைகல்யமிறே அவகாச மாயிற்று. "ஶத்ருதண்டஸ்ஸுவ்ருத்ததா" (ஶத்ருதண்டஸ்ஸுவ்ருத்ததா.) (நடைப்பலி) நித்யமான பகவத்ஸமாராதநம். நடையாகை - நிரந்தரமாகை. ( பலி ) பூஜை. ( இயற்கை ) இதுவே யாத்ரையா யிருக்குமவர்கள். ( திருச்செங்குன்றூரிலித்யாதி ) திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றில் நித்யவாசம்பண்ணுகிற சர்வேஶ்வரன் - படைப்பொடு கெடுப்புக்காப்பவன். ..............................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. ( படைப்பொடித்யாதி. ) "படைப்பொடுகெடுப்புக்காப்பவன் - திருச்சிற்றாறமர்ந்தநாதன் - புகழ்வில்லை" என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை ( ப்ரஹ்மாதீத்யாதி. )

தலைவலித்தானும் - ப்ரதாநனு யென்றபடி. "அவன்" என்றதுக்கர்த்தம் ( அவர்களுமித்யாதி. )

இடைப்புக்கு - ப்ரகாரமான ப்ரஹ்மருத்ரர்களுக்குநடுவேபுக்கு, ஒருருவும் - ஒருபதார்த்தமும், ஒழிவில்லை - ஸ்வதந்த்ரமாயிருப்பதில்லை. "ப்ரஹ்மருத்ரர்களுக்கு நடுவே ரக்ஷகனாய்ப்புகுந்து ஒருபதார்த்தத்தையு மொழியவிடாதிருக்குமவன்" என்றுரையில் சப்தார்த்தம். பின்னை யார் ஸ்வதந்த்ரரென்ன (அடையவித்யாதி.)

பின்னை யெதிலே யர்த்தவாதமென்ன ( ப்ரஹ்மாதிகளுக்குமித்யாதி. )

இத்தால் பாவம் ( எதிரிகளையுமித்யாதி. ) தாநத்தாலே வஶீகரிக்கை ஹீநமன்றோவென்ன (தாநமுமித்யாதி.) இவ்விடத்திலே - "தாநேந த்விஷந்தோ மித்ரா பவந்தி" ( தாநேநத்விஷந்தோமித்ராபவந்தி ) என்றதநுசந்தேயம். அர்த்தாந்தரம் ( பெரும்புகழாவதித்யாதி.) ஜ்ஞாநமாவது - வித்யை. அதுபெரும்புகழோவென்ன ( வித்யாதாநமித்யாதி. ) வித்யாதாநத்தால் வந்த பெரும்புகழென்றபடி "லோகே த்ரீண்யதிதாநாநி கந்யா ப்ருத்வீ ஸரஸ்வதீ । ஏதேஷாமதிதாநாநாம் வித்யாதாநம் விஶிஷ்யதே." ( லோகேத்ரீண்யதிதாநாநி கர்யாப்ருத்வீ ஸரஸ்வதீ । ஏதேஷாமதிதாநாநாம் வித்யாதாநம்விஶிஷ்யதே. ) இத்தால்பாவம் (விதேசேஷ்வித்யாதி.) "விதேஶேஷ்வபி விக்யாதாஸ்ஸர்வதோ புத்தி நிஶ்சயாத் । ஸந்திவிக்ரஹதத்த்வஜ்ஞா: ப்ரக்ருத்யா ஸம்பதந்விதா:" ( விதேஶேஷ்வபிவிக்யாதாஸ்ஸர்வதோபுத்திநிஶ்சயாத் । ஸந்திவிக்ரஹதத்த்வஜ்ஞா: ப்ரக்ருத்யாஸம்பதந்விதா: ) இதி பாலகாண்டே அயோத்யாவர்ணநே. விவரணம் ( அவன்றன்னைப்போலேயித்யாதி. ) இவ்விடத்திலே - "நாவிஜித்ய நிவர்த்ததே" ( நாவிஜித்யநிவர்த்ததே ) என்றதநுசந்தேயம்.

கூரிய - ஸூக்ஷ்மார்த்தாவகாஹியான. விச்சை - வித்யை. ஒழுக்கம் - ஆசாரம். இதுக்குபாவம் (எதிரிகளையு மித்யாதிவாக்யத்வயத்தாலே.) ஆசாரவைகல்யம் நலிகைக்கவகாசமோவென்ன (இந்த்ரனித்யாதி.) ஆசாரமுண்டானால் ஜயிக்கலாமோவென்ன (சத்ருதண்டஇத்யாதி) "ஜ்வரதண்டோபவாஸஸ்ச பார்யா தண்டஃப்ருதக்சயஃ। ஆம்நாயஸ்ஸந்தஸாம் தண்டஃ ஸத்ருதண்டஸ்ஸுவ்ருத்ததா." (ஜ்வரதண்டோபவாஸஸ்சபார்யாதண்டஃப்ருதக்சயஃ। ஆம்நாயஸ்சந்தஸாம்தண்டஃ ஶத்ருதண்டஸ்ஸுவ்ருத்ததா.) நித்யமான பகவத்ஸமாராதநமென்றது - நித்யநைமித்திகாதிகளை. பலி - பலி.

கொடைப்பெரும்புகழானொன்று தொடங்கி, ஒழிவில்லையவனே - யாவையுந் தானே - புகழ்வில்லை யித்யந்வயஃ. ......................................*

## பத்தாம்பாட்டு.

அமர்ந்தநாதனையவரவராகியவர்க்கருளருளுமம்மானை
யமர்ந்ததண்பழனத்திருச்செங்குன்றூரிற்றிருச்சிற்றாற்றங்கரையானை
யமர்ந்தசீர்மூவாயிரவர்வேதியர்கடம்பதியவனிதேவர்வாழ்
வமர்ந்தமாயோனைமுக்கணம்மானைநான்முகனையமர்ந்தேனே.

### ஆறாயிரப்படி.

(அமர்ந்தநாதனை) ஆஶ்ரித ஸம்ஶ்லேஷைக ஸ்வபாவனாய், மம நாதனாய், ஆஶ்ரிதஸமீஹித நிர்வர்த்தகனாய், த்ரிணேத்ர சதுர்முக விபூதிகனாய், கமலதடாக பரிவ்ருதமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையை போக்யபூமியாக வுடையனாய், வேதவித்க்ரேஸர பரமபுருஷசரணாரவிந்த யுகளாநுராக மஹிமாவதாதஹ்ருதயாரவிந்த த்ரிதச சததிவ்ய பூசுரஜநங்கள் வாழ்வமர்ந்தமாயோனை யமர்ந்தேனென்கிறார். ...........*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிருபாதிகசேஷியாகையாலே அவாந்தரசேஷிகளான ப்ரஹ்மருத்ராதிகளுடைய சத்தையும் தானிட்டவழக்காய், தத்ப்ரயோஜநம் ஸ்வயம்ப்ரயோஜநமாம்படி யவர்களுக்கு விபூதிப்ரதனாய்க்கொண்டு திருச்செங்குன்றூரிலேநிற்கிற வாஸ்சர்யபூதனைப் பொருந்தப் பெற்றேனென்கிறார்.

அமர்ந்த - சகலசேதந நிர்வாஹகனென்றால் தகுதியாம்படியான. நாதனை- நிருபாதிகசேஷித்வத்தையுடையனாய். "ஔபாதிகசேஷிகளான, முக்கணம்மானை- மூன்றுகண்ணையுடைய ருத்ரனும். நான்முகனை - சதுர்முகனும். தானும்படி தத்ததந்தராத்மாவாய்க்கொண்டு சத்தாஹேதுபூதனாய், அவரவர் - ஸ்வவிபூதிகளை யர்த்தித்துப் பெறுகிறவவர்கள். அவற்றைப் பெற்றுகக்குமாபோலே, ஆகி - "ஸமேத்ய ப்ரதிநந்த்ய" (ஸமேத்யப்ரதிநந்த்யச) என்று அவர்களோடே ஏகீபவித்துக் கொண்டு. அவர்க்கு - அவர்களுக்கு. அருள்-அபீஷ்டபதப்ரதாநாத்யுபகரணங்களை. அருளுமம்மானை - பண்ணுமவனாய். அமர்ந்த - செறிந்து. தண் - ஶ்ரமஹரமான. பழனம் - நீர்நிலத்தையுடைய. திருச்செங்குன்றூரில் - திருச்செங்குன்றூரில். திரு

ச்சிற்ருற்றங்கரையானை - திருச்சிற்ருற்றங்கரையை வாஸபூமியாகவுடையனுய். அமர்ந்த - பொருந்தின. சீர் - ஆத்மகுணங்களையுடையரான. மூவாயிரவர் - மூவாயிரவராயுள்ள. வேதியர்கள் - வைதிகர்க்கு. தம்பதி - அசாதாரணதேசமாய். அவனிதேவர் - பூசுரரான பாகவதருடைய. வாழ்வு - பகவதநுபவைஸ்வர்ய பூமியாயுள்ளத்தை. அமர்ந்த - அவர்கள் சம்ருத்தியே தனக்கு சம்ருத்தியாம்படி யுகந்து பொருந்திவர்த்திக்கிற. மாயோனை - ஆஸ்சர்யபூதனுனவனை. அமர்ந்தேன் - அநந்ய ப்ரயோஜநனுய்க்கொண்டு பொருந்தப்பெற்றேன்.

வேதியர்கள் தம்பதியாய், அல்லாத பூசுரர்க்கு வாழ்வான திருச்செங்குன்றூரில் திருச்சிற்ருற்றங்கரையானுய், அவர்களை யநுபவிப்பிக்கத் தகுதியான வாஸ்சர்யசேஷ்டிதங்களை யுடையவனை யென்றுமாம்.............................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

சர்வேஸ்வரனுய்வைத்து சகலஜந்துக்களுக்கு மாஸ்ரயணீயனுகைக்காகத் திருச்செங்குன்றூரிலே நின்றருளினவனை யநுபவிக்கப்பெற்றேனென்கிருர்.

( அமர்ந்தநாதனை ) நிருபாதிகசேஷியென்ருல் போரும்படி யிருக்கிறவனை; [ரெெத்ரூரொகுஹிவிநாயெநயெநஸாாஹூநாயுவத்தாஷ] [த்ரைலோக்யமபிநாதேநயேநஸ்யாந்நாதவத்தரம் ] என்கிறபடியே. த்ரைலோக்யத்தையும் பெருமாளுக்குக் கையடைப்பாக்கினுலும், பின்னையும் ரக்ஷ்யம்சுருங்கி ரக்ஷகத்வத்துடிப்பே விஞ்சியிருக்கும் " யெந - நாயெந - நாயுவத்தாஷ - ஸாாகு. " " யேந - நாதேந - நாதவத்தரம் - ஸ்யாத். " ( அவரவராகி ) அர்த்திகள் கிட்டினுல் அவர்கள் தந்தாமுக்கு நல்லராமாபோலே, அவர்களுக்கும் நல்லனுயிருக்குமவன். அவர்கள் " இதுநமக்குவேணும் " என்றிருக்குமாபோலே, " இவர்களுக் கிதுவேணும் " என்றிருக்கை. அங்ஙனன்றிக்கே, அவர்களுக்குப்பெறுகையிலே யர்த்தித்வம், கொடுக்கக்கொள்ளுகையிலே யர்த்தித்வ மிவனுக்கு, பெற்றேமென்னும் ஹர்ஷமவர்களுக்கு, கொடுக்கப்பெற்ரேமென்னும் ஹர்ஷமிவனுக்கு.

( அவர்க்கருளருளும் ) அவர்களபேக்ஷிதங்களைத் தன்பேருகக் கொடுக்கை. கொள்ளுகிறவனுடைய விரப்பைத் தானுடையனுய்க்கொடுக்கை; " ஸஸா்ாநஹிநொஷ்ாஷா ஸமெதுஹிஷாதிநநுஹிவ" ( ஸஸர்வாநர்த்திகோத்ருஷ்ட்வாஸமேத்யப்ரதிநந்த்யச ) என்கிறபடியே. (அம்மானை) சர்வேஸ்வரனை. பூர்ணனையென்னுதல், ப்ராப்தனையென்னுதல். (அமர்ந்ததண்பழனமித்யாதி) சேர்ந்து குளிர்ந்த நீர்நிலங்களையுடைய திருச்செங்குன்றூரில் திருச்சிற்ருற்றங்கரையிலே நின்றருளினவனை. (அமர்ந்தசீர்) சேர்ந்தகுணங்களையுடைய மூவாயிரம் ப்ராஹ்மணர். சேஷித்வத்துக்கவன் தக்கிருக்குமாபோலே, சொன்னசொன்ன வேற்றமெல்லாம் தகும்படி யிருப்பர்கள். ( வேதியர்கள்தம்பதி ) மூவாயிரவரளவன்றிக்கே, ப்ராஹ்மணஜாதிக்காக வாசஸ்த்தாநம். ( அவனிதேவர்வாழ்வு ) பூசுரரா

ன வைஷ்ணவர்களுக்கு ப்ராப்யபூமி. ( அமர்ந்தமாயோனே ) அத்தேசத்திலே நித்யவாசம்பண்ணுகிற வாப்ஸர்யபூதனான சர்வேஸ்வரனே. (மூக்கண்ணம்மானே நான்முகனையமர்ந்தேனே) ப்ரஹ்மாதிகளுடைய சத்தாதிகளுக்கு நிர்வாஹகனானவனே. ப்ரஹ்மருத்ரர்களைப் பலகால் சொல்லுகிறது- இவனுடைய நிர்வாஹகத்வம் தோற்றுகைக்காகவும், நிர்வாஹ்யங்களிலே யொன்றால் நலிவுண்டாகை கூடாதென்கைக்கும். அன்றிக்கே, "அமர்ந்தமாயோன்" என்றுவைத்து, இவர்களைச்சொல்லித்தலைக்கட்டுகையாலே- சமாநாதிக்ருதசப்தங்கள் விசேஷ்யத்திலே பர்யவசிக்கக் கடவதாகையாலே, ப்ரகாரியானவனே, ( அமர்ந்தேனே ) கிட்டப்பெற்றே னென்கிறார். "ஹூதாநிவிஷ்ணு:" (பூதாநிவிஷ்ணு:) இத்யாதிவத். ..................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (அமர்ந்தவித்யாதி.) "அம்மானே - அமர்ந்ததண்" என்று தொடங்கி, "அமர்ந்தேனே" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை ( சர்வேஸ்வரனுயித்யாதி. )

"அமர்ந்த" என்றதுக்கு பாவம் ( உபயவிபூதிக்கும் நிருபாதிகேத்யாதி. ) அமர்ந்த - தகுதியான. "போரும்படி யிருக்கிறவன்" என்றதுக்குப்ரமாணம் (த்ரைலோக்யமிதயாதி) அயோத்யாகாண்டே. "நாதவத்தரம்" என்றதுக்கு - அதிசயத்திலேதரப்ரத்யயமென்று விவக்ஷித்தர்த்தம் ( த்ரைலோக்யத்தையுமித்யாதி. ) இவ்வர்த்தக்ரமேண ஸ்லோகத்துக்கந்வயம் ( யேநநாதேநேத்யாதி. )

அருளையருளுமிடத்தில், அவரவராய்க்கொண்டு அவர்க்குக்கொடுக்குமிதிசப்தார்த்த:. அவரவராய்க்கொடுக்கும் ப்ரகாரத்தை யிரண்டுவகையாக வருளிச்செய்கிறார் ( அர்த்திகளித்யாதி. ) தங்களுக்குத்தாங்க ளபிமாநிகளாய் நல்லராயிருக்குமாபோலே, இவனுமவர்களுக் கபிமாநியாய் நல்லவனுயிருக்குமென்று முந்தினவர்த்தம்; இத்தை விவரிக்கிறார் ( அவர்களிது நமக்கித்யாதி. ) அங்ஙனன்றிக்கே, அவர்களர்த்திகளா யிருக்கிறப்போலே யிவனுமர்த்தியாயிருக்குமென்று விவக்ஷித்து, இருவர்க்குமுண்டான வர்த்தித்வத்தி லவாந்தரபேதத்தை யருளிச்செய்கிறார் ( அவர்களுக்கித்யாதி. ) விவரணம் ( பெற்றோமென்னு மித்யாதிவாக்யத்வயம். ) இவ்வர்த்தத்துக்கு, "அருள்" என்று - அபேக்ஷிதவஸ்து. "அவரவராகி" என்கிறபதத்திற் சொன்ன வர்த்தத்வயத்தையும் விவரியா நின்றுகொண்டு, "அவர்க்கருளருளும்" என்றபதத்துக் கர்த்த மருளிச்செய்கிறார் ( அவர்களபேக்ஷிதங்களை யித்யாதிவாக்யத்வயத்தாலே. ) அர்த்திகள் ஸ்வபாவ மிவனுக்குண்டென்னுமதுக்குப்ரமாணம் (ஸர்வாநித்யாதி.) "ஸுயீய௱ஃகக்ஷ௱ரயாம௰ஹா௱ஹ௱ஜ௶ந:। ஸஸ வ௱நயி௱௶நா௷ஷாவ௰௶த௱௶தி௷௷வ" (அதமத்யமகக்ஷ்யாயாம் ஸமாகம்யஸுஹ்ருஜ்ஜனை: । ஸஸர்வாநர்த்திநோத்ருஷ்ட்வாஸமேத்யப்ரதிநந்த்யச) இத்யயோத்யாகாண்டே. ஸமேத்ய - எதிர்கொண்டு, கீழ் தன்பேறாகக் கொடுக்குமென்றும், தானிரந்துகொடுக்குமென்றும் சொன்ன வர்த்தத்வயத்துக்கும் ஹேது இப்பதமென்னுமிடம்தோன்ற, "அம்மானே" என்றதுக்கு மர்த்தத்வயமருளிச்செய்கிறார் ( பூர்ணனே யித்யாதி வாக்யத்வயத்தாலே. ) அதாவது - அர்த்தியினுடைய வர்த்தித்வ மிவனுக்குண்டாவது நிறையக்கொடுக்கக் கைம்முதலுண்டானலிறே; ஆ

கையாலே, பூர்த்தி யர்த்தித்வத்துக்கு ஹேது: இழவுபேறு தன்னதாம்படியான சம்பந்தம் - தன்பேருகக் கொடுக்கைக்கு ஹேது.

"அமர்ந்தநாதனே, அமர்ந்தசீர் மூவாயிரவர்" என்று சப்தமொத்திருக்கிறதுக்கு பாவம் (சேஷித்வத்துக்கித்யாதி.)

"𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌹𑍍𑌯𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌹𑌕𑌭𑌾𑌵𑍇𑌨 𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑌮𑍍" (நிர்வாஹ்யநிர்வாஹகபாவேந ஸாமாநாதிகரண்யம்) என்று விவக்ஷித்தருளிச்செய்கிறுர் (ப்ரஹ்மாதிகளுடையவித்யாதி.) ப்ரஹ்மாதிகளைப் பலகால் சொல்லுகிறதுக்கிரண்டுப்ரயோஜநம் (ப்ரஹ்மருத்ரர்களையித்யாதி.) "𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌿𑌭𑌾𑌵𑌨𑌿𑌬𑌨𑍍𑌧𑌨𑌂 𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑌮𑍍" (ப்ரகாரப்ரகாரிபாவநிபந்தநம் ஸாமாநாதிகரண்யம்) என்று விவக்ஷித்தர்த்தாந்தரம் (அன்றிக்கேயித்யாதி.) அப்படி சர்வப்ரகாரியோவென்ன, ப்ரமாணம் (பூதாநீத்யாதி.) "𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍍𑌭𑍁𑌵𑌨𑌾𑌨𑌿 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍍𑌵𑌨𑌾𑌨𑌿 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍍𑌗𑌿𑌰𑌯𑍋 𑌦𑌿𑌶𑌶𑍍𑌚। 𑌨𑌦𑍍𑌯𑌸𑍍𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑌾𑌶𑍍𑌚 𑌸 𑌏𑌵 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌦𑌸𑍍𑌤𑌿 𑌯𑌨𑍍𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌚 𑌵𑌿𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌯" (பூதாநிவிஷ்ணுர்ப்புவநாநிவிஷ்ணுர் வநாநிவிஷ்ணுர்க்கிரயோதிஶஶ்ச| நத்யஸ்ஸமுத்ராஶ்சஸஏவஸர்வம்யதஸ்தியந்நாஸ்திசவிப்ரவர்ய) இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே.

அமர்ந்தநாதனுய், அவரவராகி யவர்க்கருளருளு மம்மானுய் - முக்கணம்மானுய், நான்முகனுய் - அமர்ந்தசிரொன்று தொடங்கி, வாழ்வு - அமர்ந்ததண்பழனத் திருச்செங்குன்றூரிற் திருச்சிற்றுற்றங்கரையானே - அமர்ந்தமாயோனே - அமர்ந்தேனே இத்யந்வய:..............................................................................*

---

# பதினொன்றும்பாட்டு.

---

தேனைநன்பாலைக்கன்னலையமுதைத்திருந்துலகுண்டவம்மானை
வானநான்முகனைமலர்ந்ததண்கொப்பூழ்மலர்மிசைப்படைத்தமாயோனை
கோனைவண்குருகூர்வண்சடகோபன்சொன்னவாயிரத்துளிப்பத்தும் [க்
வானின்மீதேற்றியருள்செய்துமுடிக்கும்பிறவிமாமாயக்கூத்தினையே.

## ஆறுயிரப்படி.

(தேனை) மதுமதுரபய:கண்டாம்ருதவத் போக்யபூதனுய், நிகிர்ணசகலலோகனுய், ஸ்வநாபிகமலோத்பூத சதுர்முகனுய், ஆஶ்சர்யபூதனுய், சர்வஸ்வாமியாயிருந்த திருச்செங்குன்றூரில் திருச்சிற்றுற்றங்கரையானை, வண்குருகூர்ச்சடகோபன் சொல்லாயிரத்துள் இப்பத்தும், அருள்செய்து வானின்மீதேற்றி, பின்னை சம்சாரசம்பந்தந்தைப்போக்குமென்கிறுர்.

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழி கற்றூர்க்கு பலமாக, ஜந்மநிவ்ருத்திவிசிஷ்டமான பரமபதப்ராப்தியை யருளிச்செய்கிறுர்.

தேனை - சர்வரஸ சமவாயரூபமான தேனாய். நன் - ஸ்வாபாவிகரஸமான. பாலை - பாலாய். கன்னலை - பர்வந்தோறும் ரஸிக்கும் கரும்புமாய். அமுதை - முடிந்தவுயிரைப் பிழைப்பிக்கு மம்ருதமாய். இப்படி சர்வவித போக்யபூதனாய், திருந்துலகு - விலக்ஷணமஹாலோகம். உண்ட - ப்ராளயத்திலே யழியாதபடி யமுதுசெய்துநோக்கின. அம்மானை - ஸ்வாமியாய். வானம் - ஊர்த்வலோக வாஸியான. நான்முகனை - சதுர்முகனை. மலர்ந்த - விகசிதமாய். தண் - செவ்வியையுடைத்தான. கொப்பூழ்மலர்மிசை - திருநாபீகமலத்திலே. படைத்த - ஸ்ருஷ்டித்த. மாயோனை- ஆஸ்சர்யபூதனாய். கோனை - அத்தாலே நிருபாதிகஸ்வாமியானவனை. வண் - நிரதிசயசம்பத்தையுடைய. குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகராய். வண் - பரமோதாரரான. சடகோபன் - ஆழ்வார். சொன்ன - அருளிச்செய்த. ஆயிரத்துள் - ஆயிரத்துள். இப்பத்தும் - இப்பத்தும். வானின்மீது - பரமபதத்திலே. ஏற்றி - ஏறவிட்டு. அருள் - கைங்கர்யசாம்ராஜ்யமாகிற பகவதங்கீகாரத்தை. செய்து - பண்ணி. பிறவி - சம்சாரசம்பந்தரூப பர்யந்தமாயுள்ள. மாமாயக்கூத்தினை - ஆஸ்சர்யநாடகத்தை. முடிக்கும் - முடித்துவிடும்.

இது - எழுசீராசிரியவிருத்தம்........................................................*

## ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில்-இத்திருவாய்மொழியை யப்யசிப்பார்க்கு, இதுதானே முதலிலே பரமபதத்தேறக்கொடுபோய், பின்னை சம்சாரமாகிற மஹாநாடகத்தை யறுக்குமென்கிறார்.

(தேனையித்யாதி) இவருடைய பயசங்காஹேதுக்கள் சொல்லுகிறது. அவனுடைய ரஸ்யதையிறே யிவரை யஞ்சப்பண்ணுகிறது. எனக்கு சர்வவிதபோக்யனானவனை. "ஸர்வரஸ꞉" (ஸர்வரஸꞋ) என்னக்கடவதிறே. (திருந்துலகுண்டவித்யாதி) மேல் பயநிவ்ருத்தி ஹேதுக்களைச் சொல்லுகிறது. கட்டளைப்பட்ட ஜகத்தை ப்ராளயத்திலே யழியாதபடி திருவயிற்றிலேவைத்து பரிஹரித்தபெரியோனை. (வானமித்யாதி) (கொப்பூழ் - மலர்ந்ததண் - மலர்மிசை - வானநான்முகனை- படைத்தமாயோனை) வானிலே யிருக்கிற சதுர்முகனை, ஸ்ருஷ்ட்யநுகுணமான செவ்வியையுடைய திருநாபீகமலத்திலே ஸ்ருஷ்டித்த வாஸ்சர்யபூதனை. (கோனை) நிருபாதிகசேஷியை. கீழ் ப்ரஹ்மாதிகளுக்குச் சொன்ன வைக்யம் ஸ்வரூபேணவன்று, கார்யகாரணபாவத்தாலே சொல்லிற்றென்னுமிட மிங்கே ஸ்பஷ்டம். ஆபத்ஸகனாய், அழிந்தவற்றை யுண்டாக்கவல்லனாய், ப்ராப்தனாயிருக்குமவனென்கை. (வண்குருகூரித்யாதி) அராஜகமானால் ராஜபுத்ரன்றலையிலே முடியைவைத்து விலங்கு வெட்டிவிடுமாபோலே, இப்பத்துத்தானே முந்துற பரமபதத்தைக் கொடுத்து, பின்னை சம்சாரமாகிற மஹாநாடகத்தையு மறுக்கும்........................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (தேனேயித்யாதி.) "வானின்மீதேற்றி" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியித்யாதி.)

அவனுடைய ரஸ்யதையை வர்ணிக்கிறதுக்குபாவம் (இவருடையவித்யாதி.) அதுவேதென்ன (அவனுடையவித்யாதி.) சப்தார்த்தம் (எனக்கித்யாதி.) இதுக்கு ப்ரமாணம் (சர்வரஸ இத்யாதி.)

(மேல் பயநிவ்ருத்தி) இத்யாதிவாக்யத்திலே, கோனே யென்னுமளவு மிதி சேஷஃ. கீழிற்பாட்டிற்சொன்ன வைக்யநிர்வாஹம் கார்யகாரணபாவேந நிர்ணயித்தருளினாராயிற்றென்கிறார் (கீழ் ப்ரஹ்மாதிகளுக்கித்யாதி.) மூன்றுசப்தத்தாலும் பலித்தவர்த்தம் (ஆபத்ஸகனுயித்யாதி.) "உலகுண்ட" என்றத்தைப்பற்ற (ஆபத்ஸகனுயென்றது.) "படைத்த" என்றத்தைப்பற்ற (அழிந்தவற்றையுண்டாக்கவல்லனுயென்றது.) "கோனே" என்றத்தைப்பற்ற (ப்ராப்தனுயிருக்குமவனென்றது.)

பிறவியை யறுத்தன்றோ வானின்மீதேற்றுவ தென்ன (அராஜகமானுலித்யாதி.)

தேனேயென்றுதொடங்கி, இப்பத்தும் - அருள்செய்து - வானின்மீதேற்றி - பிறவி மாமாயக்கூத்தினை - முடிக்குமித்யந்வயஃ. சம்சாரமாகிற வாஶ்சர்யமான மஹாநாடகத்தையென்று சப்தார்த்தம்..............................................*



# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(வார்கடாவருவி.)

𑌦𑍁𑌰𑍍𑌦𑌾𑌨𑍍𑌤𑍇𑌭𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌭𑌙𑍍𑌗𑌾𑌤𑍍 [illegible] 𑌸𑌾𑌮𑍍𑌯𑌤𑌶𑍍𑌚𑍇𑌤𑌰𑍇𑌷𑌾𑌂
[illegible]
[illegible]
[illegible] (அ௫)

(துர்த்தாந்தேபேந்த்ரபங்காத்) வார்கடாவருவியித்யாதி - மதத்தினுடையமிகுதியாலே யொருவராலும் கிட்டப்போகாத குவலயாபீடத்தின் கொம்பைப்பிடுங்கி சம்ஹரிக்கையாலும்; (ஃபலிலயதயா) செங்கயலுகளும் தேம்பணையித்யாதி- மத்ஸ்யங்கள் களித்துவர்த்திக்கிற நீர்நிலங்களாலே சூழப்பட்ட திருச்செங்குன்றூரிலே யெழுந்தருளியிருக்கையாலும்; (ஸாம்யதஶ்சேதரேஷாம்) இத்தாலே-மூன்று பாட்டிலர்த்தம் சங்க்ரஹிக்கப்படுகிறது. என்னமர்பெருமா னிமையவர்பெருமான்-

சம்சாரத்திலிருக்கிற சேதநர்க்கும் நித்யசூரிகளுக்கும் வாசியற ஸ்வாமியாகையா லும்; பெரியமூவுலகும் நிறையப்பேருருவமாய்நிமிர்ந்த - த்ரைலோக்யமும் பூர்ண மாம்படியாக த்ரிவிக்ரமரூபத்தைக்கொண்டு நிம்நோந்நதவிபாகமற வெங்கும் திரு வடிகளைவைக்கையாலும்; அல்லதோரரணுமவனில்வேறில்லை - தன்னாலேவிநாபூத மான ஸ்த்தலாந்தரமில்லாதபடி வைஷம்யமின்றிக்கே நிற்குமவனாகையாலும்; (ஸ் வாயத்தத்வேந) எனதாருயிரா - தனக்காத்மாந்தரமில்லாதபடி பரமாத்மாவாகை யாலும்; (பாநாச்ச்ரிதஹ்ருதிஸததம்) திருச்செய்யகமலக்கண்ணுமித்யாதி - ஆஶ்ரித ருடைய ஹ்ருதயத்திலே திருக்கண்மலர்முதலான திவ்யாவயவங்களோடேகூட ப்ரகாசிக்கையாலும்; (தேவதத்த்வேஷிஸங்கேமித்ராமித்ரத்வயோகாத்) புகர்கொ ள் வானவர்கள் புகலிடந்தன்னை யசுரர்வன்கையர் வெங்கூற்றை - தேவர்களுக்கு ரக்ஷகனாயும், அசுரர்களுக்கு ம்ருத்யுவுமாகையாலும்; (ஜகதுதயக்ருதேஃ) படைப் பொடுகெடுப்புக்காப்பவன் - ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுகையாலும்; (தேவ தாத்மத்வமுக்யைஃ) முக்கணம்மானை நான்முகனை - ப்ரஹ்மருத்ரர்களுக் கந்தரா த்மாவாய் நிற்கையாலும்; திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற் றெம்பெருமான், ஆஶ்ரிதர் தனக்குப்பரிந்து பயப்படவேண்டாதபடி சமக்ரவிபவனாய்க்கொண்டெழு ந்தருளியிருக்கிறானென்று * வார்கடாவருவியிலே யாழ்வாராலே யத்யவஸிக்கப்ப ட்டதென்கிறார்... ... ... ... ... ... ... ... ... ... ... ... (அ௫)

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

---

வாராமலச்சமினிமால்தன்வலியிணையுஞ்
சீரார்பரிவருடன்சேர்த்தியையும் - பாருமெனத்
தானுகந்தமாறன்றாள்சார்நெஞ்சேசாராயேல்
மானிடவரைச்சார்ந்துமாய். (எ௪)

(வாராமலச்சம்) இதில் - பயம் மறுவலிடாதபடி தன் சௌர்யவீர்யாதிகளை யும், சாபாநுக்ரஹஸமர்த்தர் சஹவாசத்தையுங் காட்டக்கண்டபடி பேசினவாழ்வா ர்பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; இன்னமுமிவர்க்கு நம்பக்கல் பரிவின்கனத்தாலே பயம்மறுவலிடக்கூடுமென்று விசாரித்து, ப்ரதிகூலர் க்குக் கணிசிக்கவொண்ணாதபடி அரணுடைத்தான திருச்செங்குன்றூரிலே, ஸ்ருஷ் டிஸ்த்தித்யாதிகளை நிர்வஹிக்கவல்ல சக்திமான்களாய், சாபாநுக்ரஹ சமர்த்தரா ன மூவாயிரம் ப்ராஹ்மணர்பரிந்துநோக்க, அவர்களும் குழைசரக்காம்படி "விஶா வாநுஷா_நவாநு - சஜ௱ு௸ெஜ௯ண_தாநு௯ந௯ாவி௲நு௯ஸி௱௱ெவஸ்௱ு "
(பிஶாசாந்தாநவாந் - அங்குல்யக்ரேணதாந்ஹந்யாமிச்சந்ஹரிகணேஶ்வர) என்று சௌர்யவீர்யபராக்ரமாதி குணங்களோடே தானெழுந்தருளியிருக்கிறநிலையை சர் வேஶ்வரன் காட்டிக்கொடுக்க, அத்தாலே யச்சங்கெட்டு, அவன்வடிவழகிலே நெ

ஞ்சைவைத்தநுபவித்து ஹ்ருஷ்டராகிற * வார்கடாவருவியிலர்த்தத்தை, "வாராமலச்சமினி" என்றுதொடங்கி யருளிச்செய்கிறுரென்கை.

(வாராமலச்சமினிமால்தன்வலியினையும்) " வார்கடாவருவி " என்றுதொடங்கி, "கஞ்சனைத்தகர்த்தசீர்கொள்சிற்ருயன்" என்னுமளவும்சொன்ன சௌர்யவீர்யாதிகள் முதலான தன்சக்தியோகத்தையும். ( சீரார்பரிவருடன்சேர்த்தியையும் ) அத்தாலே - "அசுரர்வன்கையர்வெங்கூற்றை" என்று - தன்மிடுக்கையும், "நல்ல நான்மறையோர்" என்றும், "மனக்கொள்சீர்மூவாயிரவர் வண்சிவனுமயனும்தானுமொப்பார்வாழ்" என்றும், " அமர்ந்தசீர்மூவாயிரவர் வேதியர்கள் தம்பதியவனிதேவர் வாழ்வமர்ந்தமாயோனை " என்றும் - ஜ்ஞாநாதிகுண பரிபூர்ணராயிருக்கிற மூவாயிரம் ப்ராஹ்மணர் பரியவிருக்கிறவிருப்பையும் தர்ஸியுமென்னதர்ஸித்து."தேம்பணைபுடைசூழ் திருச்செங்குன்றூர்த்திருச்சிற்ருறு" என்றும், "செறிகுலைவாழைகமுகுதெங்கணிசூழ் திருச்செங்குன்றூர்த்திருச்சிற்ருறு" என்றும், "நல்லநீண்மாடத்திருச்செங்குன்றூரில்திருச்சிற்ருறு" என்றும், " கனக்கொள்திண்மாடத்திருச்செங்குன்றூரில் திருச்சிற்ருறு" என்றும், "கூரியவிச்சையோடொழுக்கம் நடைப்பலியியற்கைத் திருச்செங்குன்றூரில் திருச்சிற்ருறமர்ந்தநாதனே" என்றும், இப்படி யரணையுடைத்தானவூரி லிருப்பையு மநுசந்தித்து நிர்ப்பயராய், "திருச்செங்குன்றூரில் திருச்சிற்ருறதனுட்கண்ட வத்திருவடி" என்றுதொடங்கி, "திகழவென்சிந்தையுளானே" என்னும்படி வடிவழகிலே நெஞ்சைவைத்தநுபவித்து ஹ்ருஷ்டராய், "தேனைநன்பாலைக்கன்னலையமுதை" என்று - அவன்ரஸ்யதையையு மநுபவித்து. (தானுகந்தமாறன்) "நின்கோலங்காரெழில் காணலுற்ருழும்" என்று-அழகிலே கலங்கினவர், இப்போது அவ்வழகை யநுபவித்து ஹ்ருஷ்டரானவாழ்வார். (தாள்சார்நெஞ்சே) ஆழ்வார்திருவடிகளை யபாஸ்ரயமாக வாஸ்ரயி, நெஞ்சே. (சாராயேல்) ஆஸ்ரயியாதிருப்புதியாகில். (மானிடவரைச்சார்ந்துமாய்) ப்ரக்ருதிவஸ்யரான மநுஷ்யரை யாஸ்ரயித்து நசித்துப்போ. ஆழ்வார் திருவடிகளி லாஸ்ரயணம் உஜ்ஜீவநஹேது, ததிதராஸ்ரயணம் நாசஹேதுவென்றதாயிற்று.................. (எச)

எட்டாம்பத்தில் - நாலாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி - எச.—பாட்டு - அகசு



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## எட்டாம்பத்து.

## ஐந்தாந்திருவாய்மொழி.

### மாயக்கூத்தா - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(மாயக்கூத்தா) இப்படி யந்ததாமரைத்தடாகமிருந்த திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறேறச் செல்லவேணுமென்று மநோரதித்துப் போக வுத்யோகித்தவர், எம்பெருமானைக் காணப்பெறாத விடாயின்மிகுதியாலே போக க்ஷமரன்றியே, "நான்வர க்ஷமனாகிறிலேன், நீவாராய்" என்று அத்தாமரைத்தடாகத்தைக் கூப்பிட் டழைக்கிறார். ...............*

### பன்னீராயிரப்படி.

அஞ்சாந்திருவாய்மொழியில், கீழ் - திருச்செங்குன்றூரிலே யெழுந்தருளிநிற்கிறநிலையிலே "திருச்செய்யகமலக்கண்ணும்" என்று தொடங்கி, திவ்யாவயவசோபை தொடக்கமானவற்றை ப்ரத்யக்ஷசமானாகாரமாம்படி அந்தரங்கமாக வநுபவித்து ஹ்ருஷ்டரானவர், அவ்வடிவழகோடே பாஹ்ய ஸம்ஶ்லேஷம் பண்ணவேணுமென் றபிசந்திபண்ணிக் கிட்டாமையாலே ஆர்த்தராய்; அவனுடைய வநுபாவ்யமான வாபிருப்யாதிசயத்தையும், ஆர்த்திஹரமான மயிர்முடியையும், ஔதார்ய வைலக்ஷண்யத்தையும், ஆஶ்ரிதோபகாரார்த்தமான அர்ணவசாயித்வத்தையும், ஆபத்ஸகத்வத்தையும், ஆகர்ஷகஸ்வபாவயோகத்தையும், அசேஷஜநஸம்ஶ்லேஷத்தையும், ஆஶ்ரிதபக்ஷபாதத்தையும், ஏகாஶ்ரிதனையே அநேகவிதகிஞ்சித்காரங்கொள்ளும்படியையும், ஆஶ்ரிதசுலபனாய்வைத்து அறியவரியனான நிலையையுமநுசந்தித்து, ஏவம்விதஸ்வபாவனானவனை யதா மநோரதமநுபவிக்கப் பெறாமையாலே யத்யந்தமார்த்தராய் க்லேஶித்த ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார். இப்படி ப்ராவண்யத்தை யீஶ்வரன் தன்பக்கலிலே களிப்பித்தது, அநுபவப்ரதிபந்தகத்தைக் கழிக்கையிலுண்டான கணிசமென்று கருத்து..............................................*

### ஈடு.

கீழிரண்டுதிருவாய்மொழியாலுமாக பகவத்தத்த்வம் பிறராலே யழியப்புகுகிறதென்று வெறுத்தார்; இதில் - தம்முடைய வார்த்தநாதத்தாலே யவனை யழிக்கப்பார்க்கிறார். கீழ்த்திருவாய்மொழியிலே-அவனுக்குப் பரிவருண்டென்று பயமுந்தீர்ந்து வடிவழகையநுபவித்தாராய் நின்றார்; அவ்வழகு, நெஞ்சிலே, "திகழவென்சிந்தையுளிருந்தான்" என்

கிறபடியே யூற்றிருந்து, பாஹ்யசம்ஶ்லேஷாபேக்ஷை பிறந்து, அது பெருமையாலே, "கீழ்ப்பட்டக்லேசங்களுமெல்லாமொன்றுமல்ல, இதிலே யொருகலாமாத்ரம்" என்னும்படி நொந்து, காட்டுத் தீ கதுவினாைப் போலே தப்தராய், தம்மிற்காட்டிலு மாகுலமான கரணங்களையுடையராய், "என்விடாயெல்லாந்தீரும்படி திவ்யாவயவங்களோடேவரவேணும், அழகிய திருவபிஷேகத்தோடே வரவேணும், மேகம்போலே வரவேணும், அழகியவடிவோடேவரவேணும், உதயசமயத்திலாதித்யனைப்போலே பெரியபுகரோடே வரவேணும்" என்றுப்போலே கூப்பிட்டு, பின்னையுமவன்வந்து முகங்காட்டக்காணாமையாலே, நாமிந்த க்லேசத்தோடேமுடிந்துபோமித்தனையாகாதே யென்றிழவோடே தலைக்கட்டுகிறது. ......*

## ஜீயர் அரும்பதம்.

மாய்க்கூத்தாப்ரவேஶே, சங்க்ரஹசங்கதி (கீழிரண்டுதிருவாய்மொழியாலுமித்யாதி.) வெறுத்தாரென்றது - வெறுத்து அவன் சமாதாநம்பண்ண சமாஹிதராணுரென்றபடி.

கதுவினாை - ஸ்பர்ஶித்தாரை. "கண்ணும்வாயுந்துவர்ந்து" என்றத்தைப் பற்ற (தம்மிற்காட்டிலுமித்யாதி.) "கண்கைகால்" இத்யாதிய்யைப்பற்ற (என்விடாயெல்லாமித்யாதி.) "பவளவாயும்காற்ருேளும்" இத்யாதியைப்பற்ற (திவ்யாவயவங்களோடேயென்றது.) "முடிசேர்சென்னி" என்றத்தைப்பற்ற (அழகியவித்யாதி.) "தூநீர்முகில்" என்றத்தைப்பற்ற (மேகமித்யாதி.) "கொண்டல்வண்ண" என்றத்தைப்பற்ற (அழகியவடிவோடேயித்யாதி.) "கருநாயிறுதிக்கும்," "இளநாயிறிரண்டுபோல்" என்றத்தைப்பற்ற (உதயசமயத்திலித்யாதி.) "எங்கேகாண்கேனே" என்றத்தைப்பற்ற (நாமிந்தக்லேசத்தோடேயித்யாதி.)......*

---

# ஐந்தாந்திருவாய்மொழி

# முதற்பாட்டு.

---

மாயக்கூத்தாவாமனாவினையேன்கண்ணாகண்கைகா
றூயசெய்யமலர்களாச்சோதிச்செவ்வாய்முகிழதாச்
சாயற்சாமத்திருமேனிதண்பாசடையாத்தாமரைநீள்
வாசத்தடம்போல்வருவானேயொருநாள்காணவாராயே.

## ஆறாயிரப்படி.

வாமநனும், ஸ்ரீவஸுதேவர் திருமகனும்வந்து திருவவதாரம் பண்ணி, ஆஶ்சர்யமாய் தர்ஶநீயமான திவ்யசேஷ்டிதங்களைப்பண்ணுகிறதடியேனுக்காகவன்றே,பின்னையும் நான் பாக்யஹீநனாகையாலே காணப்பெறுகிறிலேன், அடியேனுடைய கண்களின் விடாய்தீரும்படி யொருநாள்காண, உன்னுடையதிருக்கண் கை கால்கள் தூயசெய்யமலர்களாகவு

ம், சோதிச்செவ்வாய்முகிழதாகவும், உஜ்ஜ்வலமா யாஸ்சர்யமாயிருந்த திருமேனியைக்குளிர்ந்த இலையாகவுமுடையையாய், புண்யகந்தவாஸிதாநந்தநிகந்தராளனுமாயிருந்தநீ, ஒருதாமரைத்தடாகம் நடந்துவருமா போலே வாராயென்று கூப்பிடுகிறார். ......... ... .. .....................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், நிரதிசயாநுபாவ்யமான வடிவழகையுடைய வாமநாதி ப்ராதுர்ப்பாவத்தை யநுசந்தித்து, ஸ்ரமஹரமான பத்மதடாகம்போலே நான்காணும்படி வரவேணுமென்றபேக்ஷிக்கிறார்.

மாயம் - ஆஸ்சர்யரூபமான சேஷ்டிதங்களையும். கூத்தா-மநோஹாரிசேஷ்டிதத்தையுமுடையையாய். வாமநா - மஹாமேருவை மஞ்சாடியாகச்சுருக்கினாப்போலே போக்யமான வாமநவேஷத்தையுடையையாய். வினையேன-யதாமநோரதமநுபவிக்கப்பெறாத பாபத்தையுடையவெனக்கு. கண்ணா - ஆஸந்நனாய்ப்பிறந்து வைத்து அவ்வருகுபட்ட க்ருஷ்ணனானவனாய். கண்-அநுபவிக்கவாசைப்பட்டாரை யங்கீகரிக்கும் திருக்கண்ணும். கை - அபயப்ரதமானதிருக்கையும். கால்-ஆஸ்ரயணீயமானதிருவடிகளும். தூய-அழுக்கற்று. செய்ய-சிவந்து. மலர்களா-அலர்ந்தபூக்களாகவும். சோதி-மந்தஸ்மிதோஜ்ஜ்வலமான. செம்-சிவந்த. வாய்-திருவதரம். முகிழதா-முகுளமாகவும். சாயல்-ஒளியையுடைத்தாய். சாமம்-ஸ்யாமளமான. திருமேனி-திருமேனி. தண்-குளிர்ந்த. பாசடையா-பச்சிலைச்செறிவாகவும். "உத்புல்லபங்கஜதடாகமிவ" (உத்புல்லபங்கஜதடாகமிவ) என்கிறபடியே, தாமரை-அலர்ந்த தாமரைப்பூக்களையுடைத்தாய். நீள் - பெரியதாய். வாசம் - பரிமளோத்தரமான. தடம்போல் - தடாகம்நடக்குமாபோலே. வருவானே - வருமவனே. ஒருநாள்-ஒருநாள். காண - காணும்படியாக. வாராய் - வந்தருளவேணும் ... ... ... ... *

## ஈடு - முதற்பாட்டு.

என்விடாயெல்லாந்தீரும்படி, ஒருதாமரைத்தடாகம்போலே வந்து தோற்றி யருளவேணுமென்கிறார்.

(மாயக்கூத்தா) ஆஸ்சர்யங்களையும் மநோஹாரிசேஷ்டிதங்களையுமுடையவனே. இந்த்ரனுடைய விரப்புத் தலைக்கட்டுகைக்காக அன்றே பிறந்தன்றேவளர்ந் தன்றேயிரப்பிலே யதிகரிக்கையும், மஹாபலி யஜ்ஞவாடத்தளவும் தர்ஸநீயமாம்படி நடந்து சென்று "மாவலி" என்றுப் போலே முக்தஜல்பிதங்கள் முதலான மநோஹாரி சேஷ்டிதங்களையு முடையவனே. நடந்துசென்றநடை, வல்லாராடினாப்போலே யிருக்கிறதாயிற்றிவர்க்கு. (வாமநா) இரந்து மிரந்தவர்க் கீகையே ப்ரயோஜநமாயிருக்கிறவன்கிடீர், தன்னைக்காண்கையே ப்ரயோஜநமா யிருக்கிற வென்னையிரப்பாளனாக்கி யிரங்காதிருக்கிறான். (வினையேன்கண்ணா) ஸ்ரீவாமநனாய்வந்தவதரித்த திந்த்ரனுக்கானாப்போலே, க்ருஷ்ணனாய்வந்தவதரித்தது தமக்காகவென்றிருக்கிறார். அவதாராந்தரங்களிற்காட்டில் க்ருஷ்ணாவதாரத்திலண்ணிமையாலே சொல்லுகிறார். சர்வசாதாரணனுடைய வவதாரமாகையாலே, உகந்தவர்களுக் கெல்லாம் "எனக்கு" என்னலாயிருக்

கையாலே சொல்லுகிறு ரென்றுமாம். வினையேனென்கிறது - பல்லிலே பட்டுத்தெறித்தாப்போலே, அவதாரத்துக்குப் பிற்பட்டபடியாலே சொல்லுகிறுர். (கண்கைகால்தூயசெய்யமலர்களா) கிட்டினரோடு முதலுறவுபண்ணும் கண், நோக்குக்குத்தோற்றவர்களை யணைக்கும்கை, ஸ்பர்ஶத்துக்குத் தோற்றுவிழுந் திருவடிகள்; அங்கேகிடந்து தலையெடுத்தநுபவிக்குமதாய்க் கண்டபோதே விடாய்தீரும்படி ஶ்யாமமான திருமேனிக்குப் பரபாகமான நிறத்தையுடைத்தான தாமரைப்பூவாக. (சோதிச்செவ்வாய்முகிழதா) புகரையுடைத்தாய்ச்சிவந்திருக்கிற திருவதரமானது, அதில் முகுளமாக. "அவாக்யநாதரঃ" (அவாக்யநாதரঃ) என்கிற தத்த்வமாகையாலே, காம்பீர்யாதிசயத்தாலே, ஸ்மிதம் விகாஸோந்முகமான வளவாயிறேயிருப்பது; ஆகையாலே - முகுளமென்கிறது. (சாயற்சாமத்திருமேனிதண்பாசடையா) ஒளியையுடைத்தாய் ஶ்யாமமானதிருமேனி, குளிர்ந்தபச்சிலையாக, "புருஷঃ புண்டரீகாபঃ" (புருஷঃ புண்டரீகாபঃ) "அக்கமலத்திலைபோலும்" என்கிறபடியே. (தாமரைநீள்வாசத் தடம்போல் வருவானே) பரப்புமாறத் தாமரைமலர்ந்திருப்பதாய், ஏகார்ணவத்தை யொருதடாகமாக்கினப்போலே பரந்திருப்பதாய், அப்பரப்படங்க பரிமளத்தாலே நிரம்பி யிருப்பதொரு தடாகம் நடந்து வருமாபோலேயாயிற்று, பரிமளம் முன்பே யலையெறியவரும்போ திருப்பது. "ஸர்வகந்தঃ" (ஸர்வகந்தঃ) என்னக்கடவதிறே. (வருவானே) வரும்ஸ்வபாவனே. முன்பு தன்பக்கல் வரும்படியை யுபகாரஸ்ம்ருதியாலே சொல்லுகிறுர். (ஒருநாள்) "ஒருக்கால்நாக்குநனைக்க" என்பாரைப்போலே. (காண) வந்தால் கொள்ளும் ப்ரயோஜநம், காணுமிதுவே. ஒருதேசவிசேஷத்திலும் சதா தர்ஶநத்திலேயிறே யந்வயம். அப்பேறு பெறும்படி. (வாராயே) அத்தலையாலே வரக் காணவிருக்கு மவரிறே; "தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்" (தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதேதநூம்ஸ்வாம்) என்கிறபடியே. தாம் கிட்டிக் காணுமது ஸ்வரூபவிரோதமென்றிருக்கிறுர். ........................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (மாயக்கூத்தாவித்யாதி.) "தாமரைநீள்வாசத்தடம்" இத்யாதியைப்பற்ற வவதாரிகை (என்விடாயித்யாதி.)

வ்யதிகரணசமாசமாக்கியர்த்தம் (ஆஶ்சர்யங்களையுமித்யாதி.) ஆஶ்சர்யமேது, மநோஹாரிசேஷ்டிதங்க ளேதென்ன (இந்த்ரனுடையவித்யாதி.) நடையை, "கூத்து" என்பானென்னென்ன (நடந்துசென்றவித்யாதி.) நடை - உக்த்யாதிகளுக்கு முபலக்ஷணம்.

ஆர்த்தி ப்ரகரணத்திலே, "வாமனு" என்று சம்போதிக்கிறதுக்கு பாவம் (இரந்துமித்யாதி.)

எல்லார்க்குமொவ்வாதோ, "வினையேன்கண்ணு" என்கிறதென்னென்ன (ஸ்ரீவாமநனுமித்யாதி.) அவதாராந்தரங்களிருக்க, இவ்வவதாரத்தை "ஓஜூழ" (மதர்த்தம்) என்பானென்னென்ன (அவதாராந்தரங்களிலித்யாதி.) "எல்லார்க்குமொவ்வாதோ" இத்யாதி சங்கைக்கு பரிஹாராந்தரம் (சர்வசாதாரணனித்யாதி.) அண்ணிமை - சாமீப்யம். என் கண்ணுவென்னவமைந்திருக்க, "வினையேன்" என்றதுக்கு பாவம் (வினையேனென்கிறதித்யாதி.)

"கண், கை, கால்" என்கிற க்ரமத்துக்கு பாவம் (கிட்டினுரோடித்யாதி.) "செய்ய" என்றதுக்கு பாவம் (அங்கேகிடந்தித்யாதி.)

மலவொன்ணுதே, "முகிழ்" என்றதுக்கு பாவம் (அவாக்யநாதரஇத்யாதி.)

சாய் - ஒளி. பாசு - பசுமை. அடை - இலே. திருமேனி பச்சிலேபோலேயிருக்குமோவென்ன, ப்ரமாணம் (புருஷஇத்யாதி) "ஸ்ரு ஹூாகஉஒமஹூாஹொ ரூஜூகாஷாஹ்ஷஸஹிஹஃ । வ-ரூஷஃவ-ணுரீகாஸஃரூஎவஂதகூஊூ தூநஃ." (ப்ரஹ்மாகமலகர்ப்பாபோருத்ரகாலாக்நிஸந்நிபஃ । புருஷஃபுண்டரீகாபஃரூபம்தத்பரமாத்மநஃ.) அத்ர, புண்டரீகசப்தேந - புண்டரீகபலாசா உச்யந்தே.

வாசம் - பரிமளம். "தாமரைநீள்" என்றதுக்கர்த்தம் (பரப்புமாறவித்யாதி.) அந்த நீட்சியை யுத்ப்ரேக்ஷிக்கிருர் (ஏகார்ணவத்தையித்யாதி.) அப்படிவாசமுண்டோவென்ன (சர்வகந்தஇத்யாதி.) இப்போது வாராதிருக்க, "வரும் ஸ்வபாவன்" என்கிறதென்னென்ன (முன்பித்யாதி.)

ஒருநாள்போருமோவென்ன (ஒருக்காலித்யாதி.) அநுபவிக்கவென்ணுதே, "காண" என்றதுக்கு பாவம் (வந்தாலித்யாதி.) ஆனல் காண்கைபோருமோ, அநுபவிக்கவேண்டாவோவென்ன (ஒருதேசமித்யாதி.) தாம்போகிறதுக்கென்னென்ன (அத்தலேயாலேயித்யாதி.) அவன்காட்டக் காணவேணுமோவென்ன, ப்ரமாணம் (தஸ்யைஷஇத்யாதி.) "காணவாராய்" என்றதுக்கு பாவாந்தரம் (தாம்கிட்டியித்யாதி.) ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

---

## இரண்டாம்பாட்டு.

காணவாராயென்றென்றுகண்ணும்வாயுந்துவர்ந்தடியே
ஞணிநன்ஞட்டலமந்தாலிரங்கியொருநாணீயந்தோ
காணவாராய்கருநாயிறுதிக்குங்கருமாமாணிக்க
நாணன்மலேபோல்சுடற்சோதிமுடிசேர்சென்னியம்மானே.

### ஆருயிரப்படி.

(காணவாராய்) காணவாராயென்றென்று கூப்பிட்டுக் கண்ணும் வாயும் துவர்ந்து, நானிப்பாடுபடச்செய்தேயும் நீவாராதொழிந்தவாறே யுன்னே நிர்க்ருணனென்று லோகத்தார் சொல்லுகிருஞென் றடியேன்லஜ்ஜித்து, உன்னேக் காணப்பெற்று சம்ருத்தமான விந்நாட்டிலே நானெருவனு முன்னேக் காணப்பெறுதேகிடந் தலமந்தால், என்பக்கலிலே க்ரு

பைபண்ணி, ஜாஜ்வல்யமான நீலாளக பந்த பந்துரோத்தமாங்கனாய்; நீல ஜ்யோதிர்மயதிவ்யரூபனாய், உத்யந்நீல கபஸ்திமாலி விலஸிதமாய், புஷ்பஹாஸ சுகுமாரமாயிருப்பதொரு கருமாணிக்கமலை நடந்துவருமாபோலே காணவாராயென்கிறார். ........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தர்ஸநீயமான மயிர்முடியையுடைய நீ, என் க்லேஸந்தீரக்கண்டநுபவிக்கும்படி வந்தருளவேணுமென்கிறார்.

கரு - கறுத்த. நாயிறு - ஆதித்யன். உதிக்கும் - உதித்துக்கிளம்பியிருப்பதாய். மா - மஹத்தான. கருமாணிக்கம் - நீலரத்நமாய். நாள் - செவ்வியழியாதபடி. நல் - தர்ஸநீயமான. மலைபோல் - பர்வதம்போலே. சுடர் - பரம்புகிறசுடரையுடைத்தான. சோதி - தேஜஸ்ஸையுடைய. முடி - மயிர்முடியோடே. சேர் - சேர்ந்த. சென்னி - உத்தமாங்கத்தையுடைய. அம்மானே - ஸ்வாமியானவனே. காண-உன் வடிவழகைக்காணும்படி. வாராய் - வரவேணும். என்றென்று - என்று பலகாலும் பார்த்துக்கூப்பிட்டு. கண்ணும் - பார்க்கிறகண்ணும். வாயும் - கூப்பிடுகிறவாயும். துவர்ந்து - பசையறவுலர்ந்து. நாணி - நம்மபேக்ஷை யெங்ஙனே பலப்ராப்தையாயிற்றென்று லஜ்ஜித்து. நல் - ஸ்வாபிமதம்பெற்றுகந்திருக்கிற. நாடு - நாட்டிலே. அடியேன் - சேஷத்வம் நிரூபகமான நான். அலமந்தால் - இப்படி யலமந்தால். ஒருநாள் - ஒருநாள். இரங்கி - க்ருபைபண்ணி. நீ - க்ஷணமும் பிரியவொண்ணாதவழகையுடைய நீ. காண - காட்சியாகிற ப்ரயோஜநத்தைப் பெறும்படி. வாராய்-வருகிறிலை. அந்தோ! - ஐயோ!.

ஆசைப்பட்டுக் கூப்பிட்டாலும் முகங்காட்டவரலாகாதோ..................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

என்விடாய் கெடும்படி அழகியமயிர்முடியுடனே வந்து தோற்றியருளவேணுமென்கிறார்.

( காணவாராயென்றென்று ) ஒருக்கால் "காணவாராய்" என்றால் வரக்காணாவிட்டால், ஆறியிருக்கவல்லரன்றே; பின்னையும் "காணவாராய், காணவாராய்" என்பராயிற்று. ( கண்ணும் வாயுந் துவர்ந்து ) எங்ஙனேவருமென்றறியாமையாலே, திக்குக்கள் தோறும் பார்த்துக்கண் பசையறவுலர்ந்தது. "கண்ணநீர்கைகளாலிறைக்கும்" என்னும் தசையும் கழிந்தது. கூப்பிட்டு வாயும்பசையறவுலர்ந்தது. (அடியேன்நாணி) அத்தலையிலவத்யம் நம்மதாம்படியான சம்பந்தமுடைய நான்லஜ்ஜித்து. இவனை நாட்டாரென்சொல்லுகிறார்களென்று லஜ்ஜித்தென்னுதல்; (ப்ரயோஜநார்த்தியாய்க் கூப்பிடுகையன்றியே, முறையறிந்து காண்கைக்குக் கூப்பிட்ட நமக்குத்தன்படி யழகிதாயிருந்ததென்று லஜ்ஜித்தென்னுதல். (நன்னாடு) * அநந்தக்லேஸபாஜநமாகையாலே விபரீதலக்ஷணையாதல்,விஷயாநுபவத்தாலே களித்துவர்த்திக்கும் தேசமென்னுதல். பிள்ளான், "எம்பெருமானைப்பெற் றநுபவிக்கும் நாடுகாண்" என்னுமாம், "இல்

லையாகில் கூப்பிடார்களோ" என்று. (அலமந்தால்) தடுமாறினல். (இரங்கி) உனக்கபேக்ஷையில்லாவிட்டால் பாரார்த்தத்துக்கிரங்கவேண்டாவோ. ருஷிகளுக்குள்ள வாந்ருஶம்ஸ்யமுமில்லையோ. (ஒருநாள்) பலநாள் வேணுமென்கிறேனே. (நீ) கண்டுகொண்டு நிற்கவேண்டும்படி வைலக்ஷண்யத்தையுடைய நீ. (அந்தோ!) உன் வைலக்ஷண்யமறியாதொழிந்தால், என்னார்த்தியுமறியாதொழிவதே!. (காணவாராய்) ப்ரயோஜநார்த்தியாயழைக்கிறேனே.

(கருநாயிறுதிக்கும்) கறுத்திருக்கிற வாதித்யனுதிக்கிற. (கருமாமாணிக்கநாணன்மலைபோல்) அவ்வாதித்யனுதிக்கிற வுதயகிரியிருக்கிறபடி. நீலமாய்ப் பெருவிலையனான ரத்நபர்வதம்போலே. (நாணன்மலை) "நாட்பூ" என்னுமாபோலே, அபிநவமாய் தர்ஶநீயமானமலை. "கருமாமாணிக்கம் – நன்மலைமேல் - கருநாயிறுதிக்கும் - பொழுது – போல் - முடிசேர்சென்னியம்மான்" என்றுகூட்டுவது. நாள் – பொழுது. (சுடர்ச்சோதிமுடி) மிக்க புகரையுடையமயிர்முடி. (கருநாயிறுதிக்கும்) என்கிற த்ருஷ்டாந்தபலத்தாலே, முடியென்று - மயிர்முடியாகிறது. (சேர்சென்னி) அதுக்காஶ்ரயமான திருமேனி ரத்நபர்வதம்போலேயாயிற்றிருப்பது. (அம்மானே) சர்வேஶ்வரனே. சம்சாரிமுக்தனுய்ச்சென்றால், தாபஹரமாக வவனுக்குச் செய்வது திருக்குழலைப்பேணுமத்தனை. "கேஶவ꞉க்லேஶநாஶந꞉" (கேஶவꞈக்லேஶநாஶநꞈ) என்றிறேயிருப்பது. *

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (காணவாராயித்யாதி "கருநாயிறுதிக்கும் - சுடர்ச்சோதிமுடி" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (என்விடாயித்யாதி)

திரியவும் "காணவாராய்" என்கிறதென்னென்ன (ஒருக்காலித்யாதி) கண்ணும்வாயும் துவருகைக்குஹேது வருளிச்செய்கிறார் (எங்ஙனேவருமித்யாதிவாக்யத்வயத்தாலே) இத்தால்பாவம் (கண்ணுநீரித்யாதி) (கூப்பிட்டு) இத்யாதிவாக்யம் (எங்ஙனேவரும்) இத்யாதிவாக்யத்தோடேகூட்டு.

"நாணி" என்றதில் முந்தின வர்த்தாநுகுணமாக "அடியேன்" என்றதுக்கர்த்தம் (அத்தலையிலவத்யமித்யாதி) "அடியேன்" என்றதுக்கும் "நாணி" என்றதுக்குமர்த்தாந்தரம் (ப்ரயோஜநார்த்தியாயித்யாதி) ஆக, லஜ்ஜாஹேதுவிரண்டு. "நன்றுடு" என்றதுக்கு மூன்றர்த்தம் (அநந்தக்லேசேத்யாதிவாக்யத்ரயத்தாலே, இரண்டாமர்த்தம் - சம்சாரிகளபிப்ராயத்தாலே. விஷயாநுபவத்தாலே - சப்தாதிவிஷயாநுபவத்தாலே. அதெப்படியென்ன (இல்லையாகிலித்யாதி) "அலமந்தால், இரங்கி" என்றதுக்குபாவம் (உனக்கித்யாதி) பாரார்த்தத்துக்கிரங்கினவர்களுண்டோவென்ன (ருஷிகளுக்கித்யாதி) ருஷிகளுக்குள்ளவென்றது - பிராட்டிக்கிரங்கின வால்மீகியைக்கடாக்ஷித்து. "நீ" என்றதுக்கு - "காணவாராய்" என்றதுக்கநுகுணமாகவர்த்தம் (கண்டுகொண்டித்யாதி) "அந்தோ!" என்றதுக்கு ஹார்த்தபாவம் (உன்வைலக்ஷண்யமித்யாதி)

"கருமாமாணிக்கமலை" என்று வர்ணிக்கிறதுக்குபாவம் (அவ்வாதித்யனித்யாதி) நாட்பூ - அப்போதலர்ந்தபூ. அர்த்தாந்தரம் (கருமாமாணிக்கமித்யாதி) முந்

தினவர்த்தத்துக்கு, நாணனென்று - முழுச்சொல்லாய், அதுக்கர்த்தம் - அபிநவமாய், அத ஏவதர்ஶநீயமானமலேயென்றபடி. கருமாமாணிக்கநாணன்மலேயில்-கருநாயிறுதிக்குமாபோலேயிருக்கிற - முடிசேர்சென்னியம்மானென்றபடி. இரண்டாமர்த்தத்துக்கு, “ நாள், நல் ” என்று பிரித்து, காளென்று - பொழுதாய், “ கருமாமாணிக்கம் - நன்மலேமேல் - கருநாயிறுதிக்கும் - பொழுது - போல் - முடிசேர்சென்னியம்மான் ” என்றந்வயிப்பது. “முடி” என்ருல் - மயிர்முடியென்கைக்கு நியாமகமேதென்ன (கருநாயிறித்யாதி) மயிர்முடிக்காஶ்ரயம் - உத்தமாங்கமாய், அதிருமேனியி லேகதேசமாகையாலே (அதுக்காஶ்ரயமானதிருமேனி) என்கிருராதல், “ சென்னி ” என்று - விக்ரஹத்துக்கு முபலக்ஷணமாதல். மயிர்முடியைச்சொன்னதுக்குபாவம் (சம்சாரியித்யாதி) அப்படி தாபஹரமோவென்ன, ப்ரமாணம் (கேசவ இத்யாதி) “ 𑌨𑌰𑌕𑍇 𑌪𑌚𑍍𑌯𑌮𑌾𑌨𑌸𑍍𑌤𑍁 𑌯𑌮𑍈𑌃 𑌪𑌰𑌿𑌭𑌾𑌷𑌿𑌤𑌃। 𑌕𑌿𑌂 𑌤𑍍𑌵𑌯𑌾 𑌨𑌾𑌰𑍍𑌚𑌿𑌤𑍋 𑌦𑍇𑌵𑌃 𑌕𑍇𑌶𑌵𑌃 𑌕𑍍𑌲𑍇𑌶𑌨𑌾𑌶𑌨𑌃 ” (நரகேபச்யமாநஸ்துயமைꣳபரிபாஷிதஃ, கிம்த்வயாநார்ச்சிதோதேவஃகேஶவஃக்லேஶநாஶநஃ.)

கருமாமாணிக்கம்-நன்மலேமேல்-கருநாயிறுதிக்கும்-நாள்- போலேயிருக்கிற சுடர்ச்சோதிமுடிசேர்சென்னியம்மானே-காணவாராயென்றென்றுதொடங்கி, நீயந்தோ! காணவாராயித்யந்வயஃ... ... ... ... ... ... ... ... ... ...*

## மூன்றாம்பாட்டு.

முடிசேர்சென்னியம்மாநின்மொய்பூந்தாமத்தண்டுழாய்க்
கடிசேர்கண்ணிப்பெருமானேயென்றென்றேங்கியழுதக்காற்
படிசேர்மகரக்குழைகளும்பவளவாயுநாற்றேளுந்
துடிசேரிடையுமமைந்ததோர்தூநீர்முகில்போற்றேன்ருயே.

### ஆருயிரப்படி.

(முடிசேர்) நிரதிசயபரிமள துளஸீலளித தாமான வளகபாரத்தையுடையவனே யென்றென்றேங்கி யழுதக்கால், கர்ணபாச ஸுஸம்ஶ்லிஷ்ட மகரகுண்டல வித்ரும ஸத்ருஶாதர சதுர்ப்பாஹுதநுதர மத்ய சோபிதமாய், விமலஸலில பரிபூர்ணமாயிருப்பதொரு பயோதம்போலே வந்து தோன்றுகிறிலே யென்கிருர். .................. ......................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆபரணவயவசோபையையுடைய காளமேகம்போலே யுன்னுடைய ஔதார்யம் ப்ரகாசிக்கும்படி வந்துதோற்றவேணுமென்கிருர்.

முடி - உபயவிபூதிநாதத்வத்தால்வந்த வாதிராஜ்யத்துக்கு ஸூசகமான திருவபிஷேகத்தோடு. சேர்-பொருந்தின. சென்னி-திருமுடியையுடைய. அம்மா-ஸ்வாமியானவனே. நின்-உனக்கசாதாரணமாய். மொய்-செறிந்த. பூ-தர்ஶநீயமாய். தாமம்-ஒளியையுடைத்தாய். தண்-குளிர்ந்த. துழாய்-திருத்துழாயாகிற. கடிசேர்-பரிம

ளோத்தரமான. கண்ணி-மாலையையுடைய. பெருமானே-சர்வாதிகனானவனே. என்றென்று-என்றென்று. ஏங்கி-பொருமி. அழுதக்கால்-அழுதால். படி-வடிவுக்கு. சேர்-சேர்ந்த. மகரக்குழைகளும்-திருமகரக்குழைகளும். பவளம்-பவளம்போன்ற. வாயும்-திருவதரமும். நால்-நாலு. தோளும்-திருத்தோளும். துடிசேர்-துடிபோலேயிருக்கிற. இடையும்-இடையுமுடைத்தாம்படி. அமைந்தது-சமைந்த. தூ - நிர்மலமான. நீர்-நீர்மையாலே பூர்ணமாய். ஓர்-அபூதபூர்வமாயிருப்பதொரு. முகில்போல்-மேகம்போலே உன்னுடைய உபகாரகத்வம் ப்ரகாசிக்கும்படி. தோன்றாய் - தோன்ற வேணும் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஈடு - மூன்றாம்பாட்டு.

தெளிந்தநீரைப்பருகின காளமேகம்போலே ப்ரமஹரமான வடிவோடே யென்னார்த்திதீரவந்து தோற்றவேணுமென்கிறார்.

(முடிசேர்சென்னியம்மா) ஆதிராஜ்யஸூசகமான திருவபிஷேகம் சேர்ந்த சென்னியையுடைய சர்வேஸ்வரனே. (நின்மொய்பூந்தாமத்தண்டுழாய்) தகுதியாய்ச்செறியத் தொடுக்கப்பட்டு மநோஹரமாய் ஒளியையுடைத்தாய் ப்ரமஹரமாய்,நாட்செல்ல நாட்செல்லப் பரிமளம் மிக்குச் செல்லுகிற திருத்துழாய்மாலையையுடைய சர்வேஸ்வரனே. (என்றென்று) ஒருக்கால்சொல்லி யாறியிருக்கிறேனாய்த் தானாறியிருக்கிறாயோ. (ஏங்கியழுதக்கால்) பொருமியழுதக்கால். என்னழுகைக்குரலில் தளர்த்தியைக்கேட்டால் சடக்கெனவந்து கொடுநிற்கவேண்டாவோ. (படிசேர்மகரக்குழைகளும்) படியாய்ச்சேர்ந்தவென்னுதல், படியிலேசேர்ந்தவென்னுதல். ஸ்வபாவமாய்க்கொண்டு சேர்ந்தவெனனுதல், திருமேனியிலே சேர்ந்தவென்னுதல். ''படிகண்டறிதியே'' என்னக்கடவதிறே. (பவளவாயும்) பந்தமெல்லாந்தோற்றும் திருப்பவளமும். (நாற்றோளும்) அணைக்கைக்குக் கல்பகதருப்பணைத்தாப்போலே நாலுதோளும். (துடியித்யாதி) துடிபோலேயிருந்த விடையுமாய்க்கொண்டு சமைந்ததொரு முகில்போலேயாயிற்று வடிவிருப்பது. இவ்விசேஷணங்கள் கேவலம் முகிலுக்கில்லாமையாலே யபூதோபமை. (தூநீர்முகில்) தெளிந்தநீரைமுகந்தமுகில். அகவாயிற்றண்ணளியெல்லாம் வடிவிலேகாணலாம்படிவந்து தோற்ற வேணும்....................................................................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு (முடிசேரித்யாதி) '' தூநீர்முகில்போல்தோன்றாயே '' என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (தெளிந்தநீரையித்யாதி)

''முடிசேர்'' என்று விசேஷித்ததுக்குபாவம் (ஆதிராஜ்யேத்யாதி.)

நின்-உனக்குத்தகுதியாய். தாமம்-ஒளி. ''சேர்'' என்கிற வர்த்தமானார்த்தம் (நாட்செல்லவித்யாதி)

இத்தால்பாவம் (என்னழுகையித்யாதி)

உக்தார்த்தத்வயவிவரணம் (ஸ்வபாவமாயித்யாதி வாக்யத்வயம்) "படி" என்றால் - திருமேனியைக்காட்டுமோவென்ன (படிகண்டித்யாதி) திருப்பவளத்தைச்சொல்லுகிறதுக்குபாவம் (பந்தமெல்லாமித்யாதி) "நாற்றோள்" என்றதுக்கு பாவம் (அணைக்கைக்கித்யாதி) "தூநீர்முகில்போல்தோன்றாய்" என்றதுக்குபாவம் (அகவாயிலித்யாதி) துடி - வாத்யவிசேஷம்.

முடிசேர்சென்னியம்மா, நின் மொய்பூந்தாமத்தண்-கடிசேர்-துழாய் - கண்ணிப்பெருமானேயென்றுதொடங்கி யந்வயம் இங்கு த்ருஷ்டாந்தமில்லாமையாலே, "முடி" என்று - திருவபிஷேகம்... ... ... ... ... ... ... ... ... ...*

# நான்காம்பாட்டு.

தூநீர்முகில்போற்றோன்றுநின்சுடர்கொள்வடிவுங்கனிவாயுந்
தேனீர்கமலக்கண்களும்வந்தென்சிந்தைநிறைந்தவா
மாநீர்வெள்ளிமலைதன்மேல்வண்கார்நீலமுகில்போலத்
தூநீர்க்கடலுட்டுயில்வானேயெந்தாய்சொல்லமாட்டேனே.

## ஆறாயிரப்படி.

(தூநீர்) விமலஸலில பரிபூர்ணமாயிருப்பதொரு பயோதம்போலேயிருந்த வுன்னுடைய வுஜ்ஜ்வலமான திருவடிவும், கனிவாயும், மகரந்தநிர்ப்பரமாய் * கம்பீராம்பஸ்ஸமுத்பூதமாய் * ஸம்ம்ருஷ்டநாளமாய் * ரவிகரவிகஸிதமான புண்டரீகதளம்போலேயிருந்த திருக்கண்களும், நயநகோசரமன்றியே வந்தென் சிந்தைநிறைந்து வ்யஸநகரமாகிறபடி சொல்லநிலமல்லவென்கிறார் ....................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதார்த்தமாக க்ஷீரார்ணவத்திலே கண்வளர்ந்தருளுகிற வுன் வடிவழகென்னெஞ்சிலே நிறைந்தபடி சொல்லமாட்டுகிறிலேனென்கிறார்.

மா-பெரிய. நீர்-நீருக்குள்ளேகிடக்கிறதொரு. வெள்ளிமலைதன்மேல்-வெள்ளிமலையின்மேலே. வண்-உதாரமான. கார்-கார்காலத்தில். நீலமுகில்போல - காளமேகம்போலே. தூ-வெளுத்த. நீர்-நீரையுடைய. கடலுள்-க்ஷீரார்ணவத்திலே. ஓங்கினதிருவரவணையின்மேலே, துயில்வான்-கண்வளர்ந்தருளுகிற. எந்தாய்-என்ஸ்வாமியானவனே. தூ-தெளிந்த. நீர்-நீராலேபூர்ணமான. முகில்போல்-மேகம்போலே. தோன்றும்-ப்ரகாசியாநிற்கிற. நின்-உன்னுடைய. சுடர்-ஒளியை. கொள் - உடைத்தான. வடிவும்-வடிவும். கனி - பக்வபலம்போலேயிருக்கிற. வாயும் - திருவதரமும். தேன்நீர்-மதுஜலத்தையுடைய. கமலம்-கமலம்போலே ஸ்ரமஹரமான. கண்களும்-திருக்கண்களும். வந்து-இங்கேவந்து. என்-என். சிந்தை-நெஞ்சு. நிறைந்தவா-நிறைந்தபடி. சொல்லமாட்டேன்-பாசுரமிட்டுச்சொல்லமாட்டுகிறிலேன்.

தேனீர்கமலம்-தேனை ஸ்வபாவமாகவுடைய கமலமென்றுமாம். வெள்ளிமலையென்கிற த்ருஷ்டாந்தபலத்தாலே திருவரவணை அத்யாஹார்யம். அன்றியே, ஸ்

லாக்யமான நீர்மையையுடைய வெள்ளிமலையென்று - ஓங்கின க்ஷீரார்ணவத்துக்கு த்ருஷ்டாந்தமாகவுமாம்... ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஈடு - நான்காம்பாட்டு.

உன்னுடைய வடிவழகுவந்தென்மநஸ்ஸிலே நிறைந்து நலிகிற படி யென்னால் பேசிமுடிகிறதில்லையென்கிறார்.

(தூநீர்முகில்போல்தோன்றும்) கண்டபோதே விடாய்கெடும்படி யான வர்ஷுகவலாஹகம்போலே யாயிற்றுத்தோன்றுவது. (நின்சுடர் கொள்வடிவும்) சுத்தஸத்த்வமயமாகையாலே நிரவதிகதேஜோரூபமான விக்ரஹத்துக்கு, அன்னலும் துன்னலுமாய்த்திரண்ட மேகத்தையொப் பாகச்சொல்லவொண்ணாதிறே. * ஒண்சுடர்க்கற்றையிறே. (கனிவாயும்) கண்டபோதேநுகரலாம் கனிபோலேயிருக்கிறவாயும். (தேனீர்கமலக்க ண்களும்) தேனுகிற நீரையுடைத்தான தாமரைப்பூப்போலேயிருந்தகண் களும். இத்தால் - செவ்வியைநினைக்கிறது. தேனினுடைய நீர்மையையு டைய கண்களென்றுமாம். அதாவது-கண்ணாலேபருகலாயிருக்கை. (வ ந்தென்சிந்தைநிறைந்தவா) வந்தென்சிந்தைநிறைந்தவா - சொல்லமாட் டேனென்றந்வயம். இதரவிஷயங்களநுபவித்துவிட்டால் விஸ்மரிக்கலா யிருக்கும், இவ்விஷயமநுபவித்துப் போநின்றாலும் நெஞ்சிலேயூற்றி ருக்கும். (மாநீர்வெள்ளிமலைதன்மேல்) மிக்கநீர்வெள்ளத்தே யொருவெ ள்ளிமலையின்மேலே. (வண்கார்நீலமுகில்போல) உதாரமாய்க்கறுத்து நெய்த்திருப்பதொருமுகில் படிந்தாப்போலேயென்னுதல், உதாரமாய்க் கார்காலத்தில் முகில்படிந்தாப்போலேயென்னுதல். (தூநீர்க்கடலுள்து யில்வானே) சுத்தஜலத்திலே திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தரு ளுகிறவனே. வெள்ளிமலையென்கிற த்ருஷ்டாந்தபலத்தாலே தார்ஷ்டாந் திகத்திலு மழைத்துக்கொள்ளுமித்தனை. (எந்தாய்) கீழ்ச்சொன்ன வை லக்ஷண்யமில்லையாகிலும் விடவொண்ணாத ப்ராப்தியிருக்கிறபடி. (எந்தா ய்-வந்தென்சிந்தைநிறைந்தவா-சொல்லமாட்டேன்) மநஸ்ஸில் ப்ரகாசம் க்லேஶஹேதுவாகாநின்றது, இதுக்கொரு பாசுரமறிகிறிலேன். விரஹத சையில் குணாநுசந்தாநம் க்லேஶத்துக்குடலாமத்தனையிறே. தூநீர்க்கட லுள் துயில்வானென்று - "காணவேணும்" என்னுமபேக்ஷையில்லாதா ர்க்கு முற்பாடனாய்வந்து சாய்ந்தபடிசொல்லுகிறது ....................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (தூநீரித்யாதி) "சுடர்கொள்வடிவும் கனிவாயும்-கண்களும்-சிந்தைநிறைந்தவா - சொல்லமாட்டேன்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (உன் னுடையவித்யாதி)

" தூநீர்முகில் " என்றுவிசேஷித்ததுக்குபாவம் ( கண்டபோதேயித்யாதி ) 'முகில்போல்" என்று த்ருஷ்டாந்தம்சொன்னால், " வடிவும் " என்னாதே, " சுடர்

கொள்" என்றுவிசேஷிக்கிற தென்னென்ன (சுத்தசத்வேத்யாதி) அன்னல் - பு கை. துன்னல்-சிறுதிவலை. "நிரவதிகதேஜோரூபம்" என்றதுக்குப்ரமாணம் (ஒண்சுடரித்யாதி.)

"தேனீர்கமலக்கண்" என்கிறத்தால்பலிதம் (இத்தாலித்யாதி) தேனுகிறநீ ரென்றபோது, செவ்வியைச்சொல்லுகிறது; தேனினுடைய ஸ்வபாவத்தையுடைய கண்ணென்றபோது, போக்யதையைச்சொல்லுகிறது. நிறைந்தவா - நிறைந்தப்ரகாரம். விஶ்லேஷதசையிலே "நிறைந்தவா" என்கிறதென்னென்ன (இதரவிஷயங்களித்யாதிவாக்யத்வயம்.)

"கார், நீலம்" என்றதுக்கர்த்தம் (கறுத்துநெய்த்தென்று) "கார்" என்றதுக்கர்த்தாந்தரம் (கார்காலத்திலென்று)

திருவநந்தாழ்வானுக்கு வாசகசப்தமில்லையேயென்ன (வெள்ளிமலையென்கிறவித்யாதி) சப்தார்த்தம் (மநஸ்ஸிலித்யாதி) மநஸ்ஸிலே ப்ரகாசிக்கிறது க்லேஶஹேதுவோவென்ன (விரஹதசையிலித்யாதி) சமுத்ரசாயித்வகதநப்ரயோஜநமேதென்ன (தூநீர்க்கடலுளித்யாதி)

மாநீர் வெள்ளியென்றுதொடங்கி, எந்தாய் - தூநீர்முகில்போலென்றுதொடங்கி, நிறைந்தவா - சொல்லமாட்டேனித்யந்வயঃ ... ... ... ... ... ... *

## ஐந்தாம்பாட்டு.

சொல்லமாட்டேனடியேனுன்றுளங்குசோதித்திருப்பாத
மெல்லையில்சீரிளநாயிறிரண்டுபோலென்னுள்ளவா
வல்லலென்னுமிருள்சேர்தற்குபாயமென்னேயாழிசூழ்
மல்லைஞாலமுழுதுண்டமாநீர்க்கொண்டல்வண்ணனே.

### ஆறாயிரப்படி.

( சொல்லமாட்டேன் ) ப்ரளயகால சகல சலில பரிபூர்ணமான மேகத்தின் நிறம்போலேயிருந்த திருநிறத்தையுடையவனே; உன்னுடைய நிரதிசயதீப்தியுக்தமான திருவடிகள், நிரதிசயதேஜோமயமாய் நிரவதிகசௌந்தர்யநிதியாயிருப்ப திளநாயிறிரண்டுபோலே யென்னுள்ளேவிளங்குகிறபடி மறக்கவும் முடிகிறதில்லையென்கிறார்.........................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆபத்ஸகனான வுன்றிருவடிகள், பாலாதித்யர்கள்போலேயென்னெஞ்சிலே ப்ரகாசியாநின்றதுகள் ; கிட்டி யநுபவிக்கப் பெறாமல் க்லேசியாதபடி மறக்க விரகேதோவென்கிறார்.

ஆழி - சமுத்ரத்தாலே. சூழ் - சூழப்பட்ட. மல்லல் - பெரிய. ஞாலம் - ஜகத்தை. முழுது - எல்லாம். உண்ட-ப்ரளயங்கொள்ளாமல் வயிற்றிலேவைத்து. மா-நிரம்பின. நீர் - நீரையுடைத்தான. கொண்டல் - காளமேகம்போலே யிருக்கிற. வண்ணனே - வடிவையுடையனானவனே. அடியேன்-உன்னுபத்ஸகத்வத்துக்குத் தோற்றடிமைப்பட்ட நான். என்னகவாயில் ப்ரகாசத்துக்கு, சொல்லமாட்டேன் - பாசு

ரமிட்டுச் சொல்லமாட்டுகிறிலேன். உன் - உன்னுடைய. துளங்கு - விளங்குகிற: சோதி - தேஜஸ்ஸையுடைத்தான. திருப்பாதம் - திருவடிகளானவை. எல்லையில் - அளவிறந்த. சீர் - அழகையுடைய. இளநாயிறு - பாலாதித்யர்கள். இரண்டுபோல் - இருவரைப்போலே. என் - என். உள்ளவா - உள்ளேயாகாநின்றன. இப்படி ப்ரகாசியாநிற்க, கண்டு கிட்டி யநுபவிக்கப் பெறுமல் க்லேசியாதபடி, அல்லல் - து:கரூபம். என்னும் - என்னலாம்படியான. இருள் - மறப்பாகிறவிருளை. சேர்தற்கு - கிட்டுகைக்கு. உபாயம் - வழி. என்னே - ஏது. சொல்லவேணும். ஆந்தரமாக ப்ரகாசிக்கச்செய்தே, பாஹ்யசம்ஶ்லேஷம் கிடையாதொழிவதில் மறக்கை யுத்தேஶ்யமென்று கருத்து. பூர்வோத்தரங்களான பாட்டுக்க ளார்த்திஸூசகமாகையாலே யிதுக்குமிதுவேபொருள்...............................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

உன்னுடையவழகு என் ஹ்ருதயத்திலே ஸ்ம்ருதிவிஷயமாய் நலியாநின்றது, இது மறக்க வொருவிரகு சொல்லவேணுமென்கிறுர்.

(சொல்லமாட்டேன்) என் ஹ்ருதயத்திலேநின்று நலிகிறபடிக்குப் ப்ரசுரமிடப்போகிறதில்லை. (அடியேன்) சம்பந்தத்தாலே தவிரமாட்டுகிறிலேன். (உன்துளங்கித்யாதி) அதேதென்ன; விளங்காநின்றுள்ள வொளியையுடைய வுன்திருவடிகள். (எல்லையித்யாதி) அளவிறந்த வழகையுடைய பாலாதித்யர்களிருவரைப்போலே யென் ஹ்ருதயத்தேநின்று நலிகிறபடி. பாலாதித்யர்களென்கிறது – கண்ணாலே பருகலாயிருக்கையாலும், பாதிக்கத்தொடங்கின வித்தனையென்றுதோற்றுகையாலும். (இளநாயிறு) என்னை பாதிக்க பாதிக்க விளமைமிகுகிறபடி. (என்னுள்ளவா- சொல்லமாட்டேன்.

(அல்லலித்யாதி) "உன்னைக்காட்டாதே யருமைப்படுத்தப்பார்த்தாயாகில், நாட்டார் 'தண்ணிது' என்கிற வஜ்ஞாநம் வருவதோ ருபாயமேதோ" என்றருளிச்செய்வர் பட்டர்; இப்போது மறந்து பிழைக்கலாமென்னுமத்தாலே. "திருவடிக ளென்ஹ்ருதயத்திலே ப்ரகாசியாநிற்க, து:காத்மகமா மஜ்ஞாநம் வருகைக் குபாயமுண்டோ" என்னுமம்மாள். உண்டாகி லுண்டுடுத்துத் திரியலாமே நாட்டாரோபாதி. ( ஆழியித்யாதி ) கடல்சூழ்ந்த மஹாப்ருதிவியை யெல்லாம் ப்ரளயத்திலே நசியாமே வயிற்றிலே வைத்து ரக்ஷித்த பரமோதாரனே. ஆழிசூழ்மல்லைஞாலம் முழுதுண்டமாநீயென்று – ஏகார்ணவமாய், அத்தைப்பருகின மேகம்போலே யிருக்கிற வடிவையுடையவ னென்னுதல். மல்லை ஞாலம்-மஹாப்ருதிவி...............................................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (சொல்லமாட்டேனித்யாதி) "உன்துளங்குசோதித்திருப்பாதம் - என்னுள்ளவா, அல்லலென்னுமிருள் சேர்தற்குபாயமென்னே" என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (உன்னுடையவித்யாதி)

“இரண்டுபோலென்னுள்ளவா - சொல்லமாட்டேன்” என்றந்வயாநுகுணமாகவர்த்தம் (என்ஹ்ருதயத்திலேயித்யாதி) ஆனால் விடுகிறதுக்கென்னென்ன (சம்பந்தத்தாலேயித்யாதி.)

அதேதென்னவென்றது - மாட்டாதப்ரகாரமேதென்னவென்றபடி. சீர்-அழகு. “இளநாயிறு” என்றதுக்குபாவம் (பாலாதித்யர்களித்யாதி) பாவாந்தரம் (என்னைபாதிக்கவித்யாதி)

“அல்லலென்னுமிருள்செய்தற்குபாயமென்னே” என்றதுக்கு ஹார்த்தபாவம் (உன்னைக்காட்டாதேயித்யாதி.) “உபாயமேதோ” என்று அவனைக் கேட்கிறுரென்று பட்டர்நிர்வாஹம்; இப்பக்ஷத்தில், “அல்லல்” என்று - தண்மை. அஜ்ஞாநத்தை ப்ரார்த்திக்கைக்கு ஹேதுவருளிச்செய்கிறுர் (இப்போதித்யாதி.) “என்னுள்ளவா” என்றத்தைக்கூட்டி, “அல்லல்” என்றதுக்கர்த்தாந்தரம் (திருவடிகளித்யாதி.) உபாயமுண்டோ, இல்லையே என்று - பிரிநிலையேகாரமாக அம்மாள் நிர்வாஹம்; இப்போது, “அல்லல்” என்று - துக்கம். உண்டானுலோவென்ன (உண்டாகிலித்யாதி.)

“முழுதுண்ட” என்றது - முந்தின வர்த்தத்தில், ஈஶ்வரனுக்கு விசேஷணம்; இரண்டாமர்த்தத்தில், * மாநீர்க்கு விசேஷணம்.

ஆழிசூழென்றுதொடங்கி, கொண்டல்வண்ணனே - உன்துளங்குசோதியென்றுதொடங்கி, என்னுள்ளவா - அடியேன் - சொல்லமாட்டேன் - அல்லலென்னுமிருள்செய்தற் குபாயமென்னே யித்யந்வயः.......................................*

---

# ஆறும்பாட்டு.

கொண்டல்வண்ணாகுடக்கூத்தாவினையேன்கண்ணாகண்ணாவென்
னண்டவாணாவென்றென்னையாளக்கூப்பிட்டழைத்தக்கால்
விண்டன்மேற்றான்மண்மேற்றான்விரிநீர்க்கடற்றான்மற்றுத்தான்
றொண்டனேனுன்கழல்காணவொருநாள்வந்துதோன்றாயே.

## ஆறாயிரப்படி.

(கொண்டல்வண்ணா) மேகஶ்யாமளனே, அசேஷ மநோநயநஹாரி திவ்யசேஷ்டிதங்களையுடையவனே, பாக்யஹீநனானவென்னுடைய கண்ணா, கண்ணா என்று என்னை யடிமைகொண்டருளுகைக்காகக் கூப்பிட்டழைத்தக்கால், திருநாட்டில் நின்றுதல், பூமியிலுள்ளதிருநகரிகளில் நின்றுதல், திருப்பாற்கடலில் நின்றுதல், ஒருதூணில்நின்றுதல், தொண்டனேனுன்கழல்காண வொருநாள்வந்து தோன்றாயென்கிறுர்............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆகர்ஷகமான சௌந்தர்யசேஷ்டிதாதிகளிலே யகப்பட்டுக்கூப்பிட்டாலேதேனு மொருமுகத்தாலே வந்து தோன்றவேணுமென்கிறுர்.

கொண்டல் - ஸ்ரமஹரமான காளமேகம்போன்ற. வண்ணா - வடிவையுடையவனே. அவ்வழகேயன்றியே, குடக்கூத்தா - மனோஹாரிசேஷ்டிதமானகுடக்கூத்தையுடையவனே. வினையேன்-அத்தைக்கண்டநுபவிக்கப்பெறாத பாபத்தையுடைய வெனக்கு. கண்ணா - த்ருஷ்டிபூதனானவனே. கண்ணா - ஆஸ்ரிதபவ்யனாகைக்காக க்ருஷ்ணனானவனே. என் - எனக்கு ப்ராப்யபூதனாகைக்காக. அண்டவாணா - பரமபதநிர்வாஹகனாயிருக்கிறவனே. என்று-என்று பலகாலு முன்ஸ்வபாவங்களைச்சொல்லி. என்னை - என்னை. ஆள - அடிமைகொள்ளுகைக்காக. கூப்பிட்டு - என்னார்த்யதிசயத்தாலே கூப்பிட்டு. அழைத்தக்கால் - அழைத்தக்கால். காளமேகம்போலே, விண்டன்மேல்தான் - பரமபதத்தில் நின்றுதல். மண்மேல்தான் - அவதாரங்களுக்கு மர்ச்சைகளுக்கும் ஸ்த்தலமான பூமியில்நின்றுதல். விரிநீர்க்கடல்தான் - அவதாரகந்தமான க்ஷீரார்ணவத்தில் நின்றுதல். மற்றுத்தான் - அந்தராத்மாவாய் நிற்கிற வகவாயில் நின்றுதல். தொண்டனேன் - அதிசபலனான நான். உன் - உன். கழல்-திருவடிகளை. காண - காணும்படியாக. ஒருநாள் - ஒருநாள். வந்து - வந்து. தோன்றாய் - தோன்றவேணும். ..............................................................*

## ஈடு - ஆறும்பாட்டு.

உன்னுடைய ஸௌந்தர்யாதிகளை நினைத்து "காணவேணும்" என்று கூப்பிடுகிற நான்காணும்படி யேதேனுமோரிடத்திலேவந்து தோற்றியருளவேணுமென்கிறார்.

(கொண்டல்வண்ணா) காணவே விடா யாறும்படியான வடிவையுடையவனே. (குடக்கூத்தா) மனோஹாரியான சேஷ்டிதத்தையுடையவனே. (வினையேன்கண்ணாகண்ணா) எனக்கு த்ருஷ்டிபூதனான க்ருஷ்ணனே. (வினையேன்) கண்ணை யிழந்திருக்கும்படியான பாபத்தைப் பண்ணினேன். (என்னண்டவாணாவென்று) என்னை விஷயீகரிக்கைக்காக அண்டாதிபதியானவனே. கல்யாணகுணயோக மாஸ்ரிதார்த்தமா யிருக்குமாபோலே, விபூதியோகமும் தமக்காகவென்றிருக்கிறார். (என்னையாள) ஒரு ப்ரயோஜநாந்தரத்துக்காக வழைக்கிறேனோ, என்னை நித்யகைங்கர்யங்கொள்ளவேணுமென்றன்றோவழைக்கிறது. (கூப்பிட்டழைத்தக்கால்) க்ரமப்ராப்தி சஹிக்கவல்லேனாய்த்தான் தாழ்க்கிறாயோ. என்னார்த்தநாதங்கேட்டால் "க்ரமத்திலேவருகிறோம்" என்றாறியிருக்கலாயிருந்ததோ. (விண்டன்மேல்தான்) * மாநீர்க்கொண்டல் சஞ்சரிக்கு மாகாசத்திலே தோற்றவுமமையும். (விண்டன்மேல்தான்) பரமபதத்திலிருக்கிற விருப்போடேவந்து தோற்றவுமாம். (மண்மேல்தான்) அவதரித்துத்தோற்றவுமாம். (விரிநீர்க்கடல்தான்) க்ஷீராப்தியில் கண்வளர்ந்தருளுகிறபடியே வந்து தோற்றவுமாம். (மற்றுத்தான்) தூணிலேவந்து தோற்றினாப்போலே யாதல், ஆனைக்குவந்து தோற்றினாப்போலே யாதல் தோற்றவுமாம். (தொண்டனேன்) உன்றிருவடிகளில் கைங்கர்யத்தில் சபலனான நான். (உன்கழல்காண) எனக்கு ஜீவநமான திருவடிகளைக்காண. (ஒருநாள்வந்துதோன்றாயே) "பலநாள்வேணும்" என்று நிர்ப்பந்திக்கிறேனோ; என்சத்தை கிடக்கைக்கு ஒருநாள்வந்து தோற்றியருளவேணும். *

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு. (கொண்டலித்யாதி.) "கொண்டல்வண்ணு" இத்யாதிகளையும், "வந்துதோன்ருய்" என்றத்தையும் கடாக்ஷித்தவதாரிகை (உன்னுடையவித்யாதி.)

"கொண்டல்வண்ணு" என்றதுக்கு பாவம் (காணவேயித்யாதி.) வினையேதென்ன (கண்ணேயித்யாதி.) தம்மை விஷயீகரிக்கைக்காகவோ விபூதியோகமென்ன (கல்யாணகுணயோகமித்யாதி.)

"கூப்பிட்டழைத்தக்கால்" என்கிற புநருக்திக்குபாவம் (க்ரமப்ராப்தியித்யாதி.) ஏதத்விவரணம் (என்னுர்த்தநாதமித்யாதி.) யத்வா, "அழைத்தக்கால்" என்றதுக்கும் "கூப்பிட்டு" என்றதுக்கும் க்ரமேணபாவத்வயம் (க்ரமப்ராப்தியித்யாதிவாக்யத்வயமும்) என்னுதல்.

அர்த்தாந்தரம் (பரமபதத்திலித்யாதி.)

ஒருநாளமையுமோவென்ன (என்சத்தையித்யாதி.) ........................*

---

# ஏழாம்பாட்டு.

வந்துதோன்ருயன்றேலுன்வையந்தாயமலரடிக்கீழ்
முந்திவந்தியானிற்பமுகப்பேகூவிப்பணிகொள்ளாய்
செந்தண்கமலக்கண்கைகால்சிவந்தவாயோர்கருநாயி
றந்தமில்லாக்கதிர்பரப்பியலர்ந்ததொக்குமம்மானே.

## ஆருயிரப்படி.

(வந்துதோன்ருய்) * ஆதாம்ர சீதள சரோருஹ சத்ருசமான நயந பாணி பாத வதநங்களையுடைத்தாய், நிரவதிக தீப்தியுக்தமாயிருப்பதொரு கருநாயிறுபோலே யிருந்த நீவந்து தோன்ருய்; அன்றேல், * அநாலோசிதவிசேஷாசேஷ லோகசரண்யமாய், * லோகவிக்ராந்தமா யிருந்த வுன்றிருவடிமலர்களின்கீழே, உன்றிருவுள்ளத்தி லபேக்ஷிதமான கைங்கர்யத்தை நீயருளிச்செய்வதற்கு முன்பே யறிந்து செய்யக்கடவனுய்ச் சமைந்துநிற்க முகப்பே கூவிப்பணிகொள்ளாயென்கிருர். ........... .....*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அசேஷஜநசம்ஶ்லேஷ ஸ்வபாவனுய், அதிரமணீயமான சௌந்தர்யத்தையுடையையா யிருக்கிற நீ, என்முன்னேவந்து தோன்றுதல், உன் முன்னே யழைத் தடிமைகொள்ளுதல் செய்யவேணுமென்கிருர்.

செம் - சிவந்து. தண்-குளிர்ந்த. கமலம் - தாமரைபோலேயிருக்கிற. கண்-கண்ணேயும். கை - கையையும். கால் - காலையும். சிவந்த - சிவந்த. வாய் - வாயையுமுடைத்தாயிருப்பது. ஓர் - ஒரு. கருநாயிறு - நீலநிறமானநாயிருனது. ஆயிரமெ

ன்கிறவளவன்றியே, அந்தம் - முடிவு. இல்லா - இல்லாத. கதிர் - கதிரை. பரப்பி- பரப்பி. அலர்ந்ததொக்கும் - விஸ்தீர்ணமானுப்போலே யிருக்கிற. அம்மானே-வடி வழகையுடைய ஸ்வாமியே. வந்து - அவ்வழகோடே வந்து. தோன்ருய்- தோன்ற வேணும். அன்றேல் - அந்தநினைவன்ருகில். வையம் - சகலஜகத்தையும். தாய - வ ளையாமல் சம்ஶ்லேஷித்த. மலர் - விகஸிதமான தாமரைபோலே யிருக்கிற. அடிக் கீழ் - திருவடிகளின்கீழே. முந்தி - முற்பாடனுய்க்கொண்டு. யான் - நான். வந்து- வந்து. நிற்ப - தரித்து நிற்கும்படியாக. உன் - உன். முகப்பே - திருமுன்பே. கூவி- அழைத்து. பணி - அடிமை. கொள்ளாய் - கொண்டருளவேணும்..................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

இங்கேவந்து தோற்றியருளுதல், அது திருவுள்ளமல்லவாகி லங் கேயழைத் தடிமைகொள்ளுதல் செய்தருளவேணுமென்கிருர்.

( வந்துதோன்ருய் ) என் கண்வட்டத்திலே வந்து தோன்றவே ணும். * தந்தைகாலில் விலங்கறவந்து தோன்றியதோன்றலையிறே-வந்து தோன்ருயென்கிறது. (அன்றேல்) என்னூர்த்தியைப்பார்த் துன்னுடைய க்ருபையாலே வந்து முகங்காட்டப் பார்த்திலையாகில். உன் பூர்த்தியையு மென்சிறுமையையும் பார்த்து முகங்காட்டப் பார்த்திலையாகிலென்றுமா ம். ( உன்வையந்தாயமலரடி ) வசிஷ்ட்டசண்டாலவிபாகம் பாராததிரு வடிகள். ( மலரடி ) ஒரு செவ்விப்பூவைக்கொண்டாயிற்றுக் காடுமே டையுமளந்தது. ( மலரடிக்கீழ்முந்திவந்துயான்நிற்ப ) நிரதிசயபோக்ய மான திருவடிகளின்கீழே முற்பாடனுய் வந்து நிற்கும்படியாக. ( முகப் பே ) கண்வட்டத்திலே. ( கூவிப்பணிகொள்ளாய் ) சோற்றையிட்டுப் பணிகொள்ளாய். "ப்ரியதாமிதிமாம்வத" ( க்ரியதாமிதிமாம்வத ) என் று கண்முகப்பே யடிமைகொண்டருளவேணும். குணஜ்ஞாநத்தாலேதரி த்திருக்கும் ஸ்ரீபரதாழ்வான் ப்ரக்ருதி யல்லேன் ; "ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ" ( ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ ) என்னு மிளையபெருமா ள் ப்ரக்ருதியான வென்னை யடிமைகொண்டருளவேணும். "வழுவிலாவ டிமைசெய்யவேண்டும்" என்றும், "நின்னலாலிலேன்" என்றும், இட்டு வைத்தவிடத்தில் கிடக்கமாட்டேன். "நன்றுமஞ்சுவன் நரகம்நானடை தல்" என்னுமவரிறே. ( செந்தணித்யாதி ) சிவந்து குளிர்ந்த தாமரை போலே, கண்ணையும் கையையும் காலையுமுடையனுய், சிவந்த வாயையு முடையனுய், நீலமான நிறத்தையுடையனுயிருப்பா னோராதித்யன், "ஸ ஹஸ்ரம்" என்ருெரு ஸங்க்யையின்றிக்கே யளவிறந்த கிரணங்களைப் பர ப்பிக்கொண்டு விகஸிதமானுப்போலே வந்து தோன்றவேணும். ( அம் மானே ) உன்மேன்மையைப் பார்த் தங்கேயழைத் தடிமைகொள்ளுதல், உன்னுடைமை நசியாமைக்கு த்வரையுண்டாகி லிங்கேவந்தடிமைகொள் ளுதல்செய்தருளவேணும்..................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (வந்துதோன்றாயித்யாதி.) "வந்துதோன்றாயன்றேல்-உன்முகப்பே கூவிப்பணிகொள்ளாய்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை (இங்கேயித்யாதி.)

தோன்றாய் - தோன்றவேணும். "வந்துதோன்றாய்" என்கைக்குமுன் பார்க்குவந்து தோன்றினேனென்ன (தந்தைகாலிலித்யாதி) திருமொழி. தோன்றல்-முதலி. ப்ரதாநனென்றபடி. "அன்றேல்" என்றதுக்கு பாவத்வயம் (என்னார்த்தியையித்யாதிவாக்யத்வயம்.)

"வையம்" என்ற வசேதந சமாதிக்கு பாவம் (வசிஷ்ட்டேத்யாதி.) முற்பாடனுயென்றது - "ஸஹம்ஸர்வம்கரிஷ்யாமி" (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) என்று முற்பாடனுயென்றபடி. "கூவி" என்றதுக்கு பாவம் (சோற்றையித்யாதி.) கீழ்-மிடற்றோசை போக்யமாகையாலே "கூவிப்பணிகொள்ளவேணும்" என்றருளிச்செய்து, ப்ராப்தமாகையாலும் கூவிப்பணிகொள்ளவேணுமென்று பாவாந்தரம் (க்ரியதாமித்யாதி.) "பணிகொள்ளாய்" என்று நிர்ப்பந்திக்கிறதென், குணஜ்ஞாநத்தாலே தரித்திருக்கவொண்ணுதோவென்ன (குணஜ்ஞாநேத்யாதி.) இளையபெருமாள் ப்ரக்ருதியானபடி யெப்படியென்ன (வழுவிலாவித்யாதி.) அப்படியிட்டுவைத்தவிடத்தில் கிடக்கமாட்டாரோவென்ன (நன்றுமஞ்சுவனித்யாதி.)

கிரணஸ்த்தாநே - அவயவங்கள்.

"அம்மான்" என்றதுக்கு - பரத்வமும், ஸ்வாமித்வமு மென்றர்த்தத்வயம் (உன்மேன்மை யித்யாதி வாக்யத்வயத்தாலே.)

செந்தண்கமலமென்று தொடங்கி, அம்மானே - வந்துதோன்றாயன்றேலென்றுதொடங்கி, பணிகொள்ளா யித்யந்வயஃ. அவதாரிகையிலே, அங்கேயழைத்தடிமைகொள்ளுதலென்றது - "முந்திவந்து யான் நிற்கும்படிபண்ணி முகப்பே" என்கையாலே (அங்கேயழைத்து) என்றதர்த்தாத்ஸித்தம். ... ... ... ... ...*

## எட்டாம்பாட்டு.

ஒக்குமம்மானுருவமென்றுள்ளங்குழைந்துநாணுளுந்
தொக்கமேகப்பல்குழாங்கள்காணுந்தோறுந்துலைவன்னுன்
றக்கவைவர்தமக்காயன்றீரைம்பதின்மர்தாள்சாயப்
புக்கநற்றேர்தனிப்பாகாவாராயிதுவோர்பொருத்தமே.

### ஆறாயிரப்படி.

(ஒக்குமம்மான்) உன்றிருமேனியோடொக்குமென்று தொக்கமேகப்பல்குழாங்கள் காணுந்தோறும் நாணுளுமுள்ளங்குழைந்துதுலைவன்னான், உன்னைமறந்திருக்கவொட்டுகிறதில்லை யிந்தமேகங்கள்; உன்றிருவடிகளையே ப்ராப்யமும் ப்ராபகமுமென்றிருக்கு மைவர்க்கு சேஷபூத

ஞய், அன்றீரைம்பதின்மர்தாள் சாயப்புக்கநற்றேர்த் தனிப்பாகா, அத்தேனை யிங்ஙனேநிறுத்திக்கொண்டுவாராய், இதுவோ வுன்னுடைய ப்ரணயித்வமென்கிறூர்... ... ... ... ... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், போலிகண்டு நான் க்லேஶியாநிற்க, ஆஶ்ரிதபக்ஷபாதியான நீவந்து தோன்றுகிறிலையென்கிறூர்.

அம்மான் - ஸ்வாமியானவன். உருவம்-வடிவழகு. ஒக்கும்-ஒக்கும். என்று-என்று. உள்ளம்-நெஞ்சு. குழைந்து-சிதிலமாய். நாள்நாளும் - நாடோறும். தொக்க-திரண்ட. மேகம்-மேகங்களினுடைய. பல்-பல. குழாங்கள் - சமூஹங்களை. காணுந்தோறும் - காணும்பொழுதெல்லாம். நான்-நான். தலைவன்-க்லேசியாநிற்பன். தக்க-நீயெல்லாவுறவுமாம்படியான தக்கோர்மையையுடைய. ஐவர்தமக்கு-பாண்டவர்களைவர்க்கும். ஆய்-ஏவலாளாய்க்கொண்டு. அன்று-பாரதயுத்தம் ப்ரவ்ருத்தமானவன்று. ஈரைம்பதின்மர்-அவர்களுக்கெதிரிகளான நூற்றுவரும். தாள்சாய - காலற்றுப்போம்படி. புக்க - ஸேநாமத்யத்திலேப்ரவேசித்த. நல் - உன்னதிஷ்ட்டாநத்தாலே ஶ்லாக்யமான. தேர்-தேருக்கு. தனிப்பாகா-ரதியான வவனுன்முதுகின்கீழே யொதுங்கும்படி யத்விதீயசாரதியானவனே. வாராய் - அவ்வழகோடேவருகிறிலை. இதுவோ-இதுவோ. பொருத்தம்-ஆஶ்ரிதவிஷயத்தில் பொருத்தமிருந்தபடி ... ... *

## ஈடு - எட்டாம்பாட்டு.

உனக்குப்போலியான மேகதர்ஶநத்தாலே நோவுபடாநிற்க, வந்துமுகங்காட்டுகிறிலை; இதுவோ வுன்சங்கஸ்வபாவமென்கிறூர்.

(ஒக்குமம்மானுருவமென்று) “ சர்வேஶ்வரன்வடி விதரவிஸஜாதீயம் ” என்று புத்திபண்ணுகிற்கச்செய்தே, * தூமஜ்யோதிஸ்ஸலிலமருதாம் சமூஹமானமேகத்தை சத்ருஶமென்று ப்ரமிப்பர். (உள்ளங்குழைந்து) இது தோற்புரையன்றியே, அகவாய் சிதிலமாய். (நாணாளும்) இந்தசைதில்யம் காதாசித்கமன்றிக்கே. இடைவிடாமல்செல்லுகை. (தொக்கமேகப்பல்குழாங்கள்) மேகசகலங்களுக்கிடையார்; திரண்டமேகசமூஹங்களைக் காணுந்தோறும். (நாணாளும்-தலைவன்) தர்மிலோபம் பிறக்கிறதுமில்லை, ஜீவித்திருக்கவும் பெறுகிறிலேன். (நான்) மேகதர்ஶநம் நாட்டார்க்காஶ்வாஸஹேதுவிறே.

(தக்கவைவர்) என்ன மேகதர்ஶநத்துக்கிடைந்து பாண்டவர்களை நோக்கிற்று. “பந்துக்கள்ஜீவிக்கவேணும், எங்களுக்கு மைந்துகுடிக்காடமையும்” என்னுந் தக்கோர்மையுடையவைவர். (தமக்காய்) “ ரதம்ஸ்தா வய ” (ரதம்ஸ்த்தாபய) என்னும்படி கையாளாய். (அன்று) அவர்கள் தனியரானவன்று. (ஈரைம்பதின்மர்தாள்சாய) “ பந்துக்கள் ஜீவிக்கில் ஜீவியோம் ” என்ற நூற்றுவரும் காலறும்படியாக. (புக்க) தூசித்தலையிலேபுக்க. (நற்றேர்) இவனை சாரதியாகவுடைத்தாகையாலே அதிஶ்லாக்யமானதேர். (தனிப்பாகா) தனியே நிர்வாஹகனானவனே. ரதியைக்காண்

றிலர். " நகாங்க்ஷெவிஜயாக்ருஷ்ண " (நகாங்க்ஷேவிஜயம்க்ருஷ்ண) என்றவனேச்சேமம் சாத்திவைத்து வ்யாபரிக்கையாலே, சாரதியையாயிற்றிவர்காண்கிறது. (வாராய்) "ஸேநயோருபயோர்மத்யே ரதம்ஸ்தாபய" ( ஸேநயோருபயோர்மத்யேரதம்ஸ்த்தாபய ) என்ன, உபயசேனையின் நடுவே தேரைநிறுத்தினநீ, அத்தேரை யிம்மேகங்களின்நடுவே நடத்தினலாகாதோ. ஐவருமாய், எதிரிகள் சங்க்யாதருமானாலோவுதவலாவது; தனியனுமாய், மேகசமூஹங்க ளசங்க்யாதமானா லுதவலாகாதோ. (இதுவோபொருத்தம்) ஆஸ்ரிதரோடு முன்பு நீ பொருந்திப்போந்தபடி யிதுவோ. ஆஸ்ரிதர்க்காக தூத்யசாரத்யங்கள்பண்ணியும், "ஆயுதமெடேன்" என்றாயுதமெடுத்தும், பகலையிரவாக்கியும் பக்ஷபதித்தது பொய்யோ. "நாராயணகதாமிமாம்" என்றவனும் கைக்கூலிகொண்டு புலமைபாடினனாகாதேயென்கிறார். இப்போது தமக்குதவி லவைமெய்யாவதென்றிருக்கிறார். ( வாராய் ) எனக்கிதெல்லாம் வேணுமோ, முகங்காட்டவமையாதோ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (ஒக்குமித்யாதி) "தொக்கமேகம்" என்றுதொடங்கி, "தலைவன்நான் - வாராய், இதுவோபொருத்தம்" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (உனக்கித்யாதி)

"ஒக்கும்" என்றதுக்குபாவம் (சர்வேஶ்வரனித்யாதி) "யஜ்ஜ்யோதிஸ்ஸலிலமருதாம் ஸந்நிபாதஃக்வ மேகஸ்ஸந்தேஶார்த்தாஃக்வ படுகரணைஃ ப்ராணிபிஃப்ராபணீயாஃ । இத்யௌத்ஸுக்யாதபரிகணயந் குஹ்யகஸ்தம் யயாசே காமார்த்தா ஹி ப்ரக்ருதி க்ருபணாஶ்சேதநாசேதநேஷு" (ஜ்யோதிஸ்ஸலிலமருதாம் ஸந்நிபாதஃக்வமேகஸ்ஸந்தேஶார்த்தாஃக்வபடுகரணைஃ ப்ராணிபிஃப்ராபணீயாஃ । இத்யௌத்ஸுக்யாதபரிகணயந் குஹ்யகஸ்தம்யயாசே காமார்த்தாஹிப்ரக்ருதி க்ருபணாஶ்சேதநாசேதநேஷு ) இதிமேகசந்தேஶே. இதுவென்றது - மேகசமூஹதர்ஶநத்தால்வந்த துஃகமென்றபடி.

தலைவன் - தலையாநிற்பன். க்லேசியாநிற்பனென்றபடி. "தலைவன்" என்கிறவர்த்தமாநார்த்தம் (தர்மிலோபமித்யாதிவாக்யத்வயம்) "நான்" என்றதுக்கு-லௌகிகவ்யாவ்ருத்தியென்றுவிவக்ஷித்து, மேகதர்ஶநத்தில் நாட்டார்க்கிருக்கும்படியை யருளிச்செய்கிறார் (மேகதர்ஶநமித்யாதி) (ஆஶ்வாஸஹேதுவிறே) இதின்றியே நோவுபடுகிறானென்றபடி.

"தக்கவைவர்" இத்யாதிக்குஹார்த்தபாவம் (என்னமேஹேத்யாதி) "தக்கவைவர்" என்றதுக்கர்த்தம் (பந்துக்களித்யாதி) குடிக்காடு-குப்பம். தக்கோர்மை-நன்மை. "ஆய்" என்றதுக்கர்த்தம் (ரதமித்யாதி) "ஸேநயோருபயோர்மத்யே ரதம்ஸ்தாபய மேச்யுத" (ஸேநயோருபயோர்மத்யேரதம்ஸ்த்தாபயமேச்யுத) இத்யாதி கீதாஸூப்ரததமே.

* தேருக்கு நன்மையேதென்ன (இவனையித்யாதி) ரதியிருக்க, சாரதிக்குத் தனிமையேதென்ன ( ரதியையித்யாதி ) அதுக்குஹேதுவேதென்ன ( நகோங்க்ஷஇத்

யாதி) "நகாங்க்ஷெவிஜயங்க்ருஷ்ணநவாராஜ்யம்ஸுகாநிச। கிந்நோராஜ்யெநகோவிந்தகிம்போகைர்ஜீவிதேநவா" (நகாங்க்ஷேவிஜயம்க்ருஷ்ணநச ராஜ்யம்ஸுகாநிச। கிந்நோராஜ்யேநகோவிந்தகிம்போகைர்ஜீவிதேநவா) இதிகீதா ஸுப்ரதமே. "தேர்த்தனிப்பாகாவாராய்" என்றதுக்கு ஹார்த்தபாவம் (சேநயோரித்யாதி) பாண்டவர்களில் தமக்குண்டான வ்யாவ்ருத்தியை யருளிச்செய்கிறுர் (ஐவருமாயித்யாதிவாக்யத்வயத்தாலே.)

விவரணம் (ஆஶ்ரிதர்க்காகவித்யாதி) புராணஸ்தமான வாஶ்ரிதபாரதந்த்ர்யம்பொய்யாகக்கூடுமோவென்ன (நாராயணகதாமிமாமித்யாதி) "நமோபகவதேதஸ்மைவ்யாஸாயாமிததேஜஸே। யஸ்யப்ரஸாதாத்வக்ஷ்யாமிநாராயணகதாமிமாம்" (நமோபகவதேதஸ்மைவ்யாஸாயாமிததேஜஸே। யஸ்யப்ரஸாதாத்வக்ஷ்யாமிநாராயணகதாமிமாம்.) புலமை - கவி. ஆனலது மெய்யாவதெப்போதென்ன (இப்போதித்யாதி) வாராய் - வருகிறிலே. பாவாந்தரம்(எனக்கித்யாதி)

தொக்கமேகப்பல்குழாங்கள் காணுந்தோறும் - அம்மானுருவம் - ஒக்கும் - என்றுள்ளங்குழைந்து, நாணும் - நான்-துலைவன்; தக்கவைவரொன்றுதொடங்கி, தனிப்பாகா - இதுவோபொருத்தம் - வாராயித்யந்வயঃ... ... ... ... ... *

---

# ஒன்பதாம்பாட்டு.

இதுவோபொருத்தமின்னழிப்படையாயேறுமிருஞ்சிறைப்புள்
ளதுவேகொடியாவுயர்த்தானேயென்றென்றேங்கியழுதக்கா
லெதுவேயாகக்கருதுங்கொலிம்மாஞாலம்பொறைதீர்ப்பான்
மதுவார்சோலையுத்தரமதுரைப்பிறந்தமாயனே.

## ஆறுயிரப்படி.

(இதுவோபொருத்தம்) திருவாழியை மின்னுகவுடைய திவ்யரூபமாகிற நீலமேகத்தையுடையவனே, ஆஶ்ரிதருடைய வாபத்துக்குதவ வருகைக்கீடான பெரியதிருவடியை திவ்யவாஹநமாகவுடையவனே, இதுவோமுடிந்ததென்றென் றேங்கியழுதக்கால், ஆஶ்ரிததுঃகாஸஹிஷ்ணுவாகையாலே தத்துঃகஹேதுபூதபூபார நிர்ஹரணார்த்தமாக, மதுவார்சோலையுத்தர மதுரைப்பிறந்த வாஶ்சர்யபூதனே, நீயெதுவாகநினைத்திருக்குமென்கிறுர்... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதரை அநேகவித கைங்கர்யங்கொள்ளும் ப்ரகாரத்தை நினைத்துக்கூப்பிட்டால், ஆஶ்ரிதவிரோதி நிரசநார்த்தமாக வவதரித்தவனென் னினைத்திருக்கிறுனேவென்கிறுர்.

மின் - ஒளியாலே யாபரணமாம்படியான. ஆழி - திருவாழியை. படையாய்-ஆயுதமாகவுடையவனே. ஏறும்-வாஹநமான. இரு-பெரிய. சிறை-சிறகையுடையனை. புள்ளதுவே - பெரியதிருவடிதன்னையே. கொடியா - கொடியாக. உயர்த்தா

னே-எடுத்தவனே. இதுவோ-இதுவோ. பொருத்தம்-அவர்களளவிலும் பொருத்தமிருக்கும்படி. என்றென்று - என்றுபலகாலுஞ்சொல்லி. ஏங்கி - பொருமி. அழுதக்கால்-அழுதக்கால். இ-இந்த. மாஞாலம் - மஹாப்ருதிவியின். பொறை - பாரத்தை. தீர்ப்பான் - போக்குகைக்காக. மது-மது. வார்-ப்ரவாஹியான. சோலை-சோலையையுடைய. உத்தரமதுரை-வடமதுரையிலே. பிறந்த-சர்வேஸ்வரத்வ சூசகமான சிஹ்நங்களோடேயவதரித்த. மாயன் - ஆஶ்சர்யபூதனானவன். என் கண்ணநீர் மாறவருவதாக நினைத்திருக்கிறானோ, இப்படி அழுதேபோவனென்று நினைத்திருக்கிறானோ, எதுவேயாக - எதாகவோ. கருதும்-திருவுள்ளம்பற்றுவது... … … … … *

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

அந்திமதசையில் ஸ்வர்க்கத்தேறப்போன விவர்கள்நிற்கிறார், திருவாழியாழ்வான்முதலான நித்யரோடும் பொருத்தமிதுவோவென்று ஸ்வகதமாக விசாரிக்கிறார். இருந்ததேகுடியாக ரக்ஷிக்கவந்தக்ருஷ்ணன், தன்னைக்காண்கையே தேட்டமான வெனக்கென்செய்தருளுமென்று நினைக்கிறாராகவுமாம்.

(இதுவோபொருத்தம்) இப்படிகூப்பிட்ச்செய்தேயும் வரக்காணாமையாலே கண்ணுஞ்சுழலையிட்டு, மீண்டும் (இதுவோபொருத்தம்) என்கிறார். (மின்னாழிப்படையாய்) மேகத்திலே மின்னினாப்போலே, ஆஶ்ரித விரோதிநிரஸநசீலமான திருவாழியைப்படையாகவுடையவனே. அத்திருவாழியைக்கொண்டென்னுடைய ப்ரதிபந்தகத்தின்மேலே வ்யாபரித்தாலாகாதோ. (ஏறுமித்யாதி) ஏறக்கடவ பெரியசிறகையுடையபுள்ளானது தன்னையே த்வஜமாக வெடுத்தவனே. ஆஶ்ரிதனையெல்லா வடிமையுங்கொள்ளுமவனன்றோ. (என்றென்றேங்கியழுதக்கால்) இப்பாசுரம்மாறாதே பொருமிப்பொருமியழாநின்றால். ( எதுவேயாகக்கருதுங்கொல் ) இக்கூப்பீட்டுக்கு முகங்காட்டநினைக்கிறானோ, கூப்பிட்டேபோவானென் றிருக்கிறானோ. இக்கூப்பீட்டுக்கவன்றிருவுள்ளமெங்ஙனே புண்படுகிறதோவென்றுமாம். (இம்மாஞாலம்பொறைதீர்ப்பான்) இம்மஹாப்ருதிவியினுடைய பாரத்தைப்போக்குகைக்காக. (மதுவார்சோலை) மதுஸ்யந்தியான சோலையையுடைய. (உத்தரமதுரை) வடமதுரையிலே, சத்ருக்களான கம்சாதிகள் நடுவேபிறந்தமாயனே. ஆவிர்ப்பவிக்கையன்றியே, "[Grantha script]" (ததஸ்சத்வாதஸேமாஸே) என்கிறபடியே கர்ப்பவாஸம்பண்ணிப்பிறந்த வாஶ்சர்யபூதனே. " [Grantha script] " (பூபாரநிரஸநம்) என்கிறவ்யாஜத்தாலே இதரஸஜாதியனாய்வந்தவதரித்தாஶ்ரிதவிரோதிகளைப்போக்கும் ஸ்வபாவனானவன், நங்கூப்பீட்டுக்கென்னினைத்திருக்கிறானென்கை... … … … … … … … …*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (இதுவோவித்யாதி) "மின்னாழிப்படையாய்-புள்ளதுவே கொடியாவுயர்த்தானே - இதுவோபொருத்தம்" என்றவற்றைக்கடாக்ஷித் தவதாரி

கை (அந்திமதசையிலித்யாதி) " மின்னுழிப்படையாய் " என்றுதொடங்கி, "கொடியாவுயர்த்தானே - இதுவோபொருத்தம் - என்றென்றேங்கியழுதக்கால் - இம்மாஞாலம்" என்றுதொடங்கி, "பிறந்தமாயனே - எதுவேயாகக்கருதுங்கொல்" என்றந்வயம் விவக்ஷிதம். அன்றிக்கே, " இம்மாஞாலம் " என்றுதொடங்கி, " பிறந்தமாயனுன - மின்னுழிப்படையாய் " என்றுதொடங்கி, " எதுவேயாகக்கருதுங்கொல் " என்றந்வயவிவக்ஷயாஸங்கத்யந்தரம். ( இருந்ததேயித்யாதி ) இப்பக்ஷத்தில், "இதுவோபொருத்தம்" என்றது - அநுவாதம். ஸ்வகதமாகவென்றது - யோஜநாத்வயத்துக்குமொக்கும். இரண்டாம்யோஜனை - " எதுவேயாகக்கருதுங்கொலிம்மாஞாலம் " இத்யாதிபதங்களைக்கடாக்ஷித்து. இருந்ததேகுடியாக - எல்லாரையுமொக்க. "மாயனே" என்றவேகாரம் - ஈற்றசை.

த்விதீயயோஜநாநுகுணமாகவர்த்தம் (இப்படிகூப்பிடவித்யாதி.)

இத்தால்பாவம் (அத்திருவாழியையித்யாதி.)

வாஹநத்வ த்வஜத்வங்கள் சொன்னதுக்குபாவம் (ஆஶ்ரிதரையித்யாதி) "அதுவேகொடியாவுயர்த்தானே" என்றது-எல்லாவடிமைக்குமுபலக்ஷணமென்றபடி.

இரண்டாமவதாரிகைக் கநுகுணமாகவர்த்தம் (இக்கூப்பீட்டுக்குமுகமித்யாதி) மூந்தினவவதாரிகைக்கநுகுணமாகவர்த்தம் (இக்கூப்பீட்டுக்கித்யாதி.)

"பொறை" என்று - பாரத்தைலக்ஷிக்கிறது. "உத்தரமதுரா" என்றதுக்கு பாவம் (சத்ருக்களானவித்யாதி) " மாயன் " என்றதுக்குபாவம் (ஆவிர்ப்பவிக்கையித்யாதி) பலிதம் (பூபாரேத்யாதி.)

இதுவோபொருத்தம், மின்னுழிப்படையாயென்றுதொடங்கி, அழுதக்கால்-இம்மாஞாலமென்றுதொடங்கி, மாயனே-எதுவேயாகக்கருதுங்கொலித்யந்வயஃ. *

# பத்தாம்பாட்டு.

பிறந்தமாயாபாரதம்பொருதமாயாநீயின்னே
சிறந்தகாழிநீர்வான்மண்பிறவுமாயபெருமானே
கறந்தபாலுணெய்யேபோலிவற்றுளெங்குங்கண்டுகொ
ளிறந்துநின்றபெருமாயாவுன்னையெங்கேகாண்கேனே.

## ஆறுயிரப்படி.

(பிறந்தமாயா) சாதுபரித்ராணார்த்தமாகவும், துஷ்க்ருத்விநாசார்த்தமாகவும் ஶ்ரீமதுரையிலே பிறந்தருளின வாஶ்சர்யபூதனே, நீ யிப்படி சர்வத்ரஸங்கிஹிதனுயிருந்துவைத் துன்னைக்காட்டியருளுகிறிலை, இனியுன்னை யெங்கேகாண்கேனென்கிறுர் ... ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவதார ப்ரயுக்த சௌலப்யத்துக்குப்பிற்பட்டு, அகவாயில் நிலையு மதீந்த்ரியமானு லெங்கேகாண்பதென்முர்த்தராகிறுர்.

பிறந்த - " சுஜொவிஸநு " ( அஜோபிஸந் ) என்கிறபடியே அஜஹத்ஸ்வபாவனுய்க்கொண்டவதரித்த. மாயா-ஆஶ்சர்யபூதனுய். ஆஶ்ரிதார்த்தமாக, பாரதம்-

*மஹாபாரதயுத்தத்தைப்பண்ணுமிடத்தில். பொருதமாயா - “ஆயுதமெடேன்” என்ருயுதமெடுத்தல், பகலையிரவாக்குதல் முதலான வாஸ்சர்யசேஷ்டிதங்களைச்செய்து நடத்தினவனே. நீ-நீ. இன்னே-இப்படி சுலபனுயிருக்கச்செய்தே. சிறந்த-ஜகத் தேதுத்வத்தால்வந்த சிறப்பையுடைய. கால்தீநீர்வான்மண் - பஞ்சபூதங்களையும். பிறவும்-மற்றுமுள்ள பௌதிகபதார்த்தங்களையும். ஆய-ப்ரகாரமாகவுடைய. பெருமானே-சர்வாதிகனுய். “ வுூதஎிவவயஸிநிமஹஏஜ ” (க்ருதமிவபயஸிநிகூடம்) என்கிறகணக்கிலே, கறந்த-கறந்த. பால்-பாலுக்கு. உள்-உள்ளில். நெய்யேபோல்-நெய்போலே. மதித்துக்காண்பார்க்கொழிய, கண்டுகொள்-காண. இறந்து-அரிதாம்படி. இவற்றுள்-இப்பதார்த்தத்துக்குள்ளில். எங்கும்-எல்லாவிடத்திலும். நின்ற-நின்ற. பெருமாயா-அத்யாஸ்சர்யபூதனுனவனே. உன்னை - இப்படி யதீந்த்ரியனுன வுன்னை. எங்கே-எவ்விடத்திலே. காண்கேன்-காணக்கடவேன் ... ... ... ...**

## ஈடு - பத்தாம்பாட்டு.

*அவதாரத்துக்குப் பிற்பாடனுய், அந்தர்யாமித்வம் கண்ணுக்கவிஷயமானபின்பு, உன்னை நானெவ்விடத்தே காண்பதென்கிருர்.*

(பிறந்தமாயா) அகர்மவஸ்யனுய்வைத்து, அப்ராக்ருத திவ்யசம்ஸ்த்தாநத்தை யிதரஸஜாதீயமாக்கி வந்தவதரித்த வாஸ்சர்யபூதனே. (பாரதம்பொருதமாயா) பிறந்தாப்போலே யிருப்பதொன்ருயிற் றிவ்வாஸ்சர்யமும். சத்யப்ரதிஜ்ஞனுனவ னசத்யப்ரதிஜ்ஞனுன வாஸ்சர்யம். “ ஆயுதமெடேன் ” என்ருயுதமெடுக்கையும், பகலையிரவாக்குகையும். ( நீயின்னே ) நீயிப்படி சுலபனுயிருக்கச்செய்தே. (சிறந்தவித்யாதி) காரணமான ப்ருதிவ்யாதிபூதங்களுக்கும். (பிறவும்) தத்கார்யமான தேவாதிபதார்த்தங்களுக்கு மாத்மாவான சர்வேஸ்வரனே. காற்றுக்குச்சிறப்பாவது-காரணத்வ மொத்திருக்க தாரகத்வத்தால்வந்தவேற்றம். (கறந்தவித்யாதி) கண்ணுலேகாண்கிற பாலினுள்ளே நெய்யுண்டாயிருக்கக் காணவரிதானுப்போலே, சகலபதார்த்தங்களிலும்நின்று வைத்துக் காணவொண்ணுதபடி நிற்கிற வத்யாஸ்சர்யபூதனே. ப்ரஹ்மவிதுபநிஷத்து, “ ஏவாஊெநகவணூாநாம் கூீரஸ்யெகவணுதா । கூீரவதுஸ்யதிஜூாநம் ஷிஜிநஸுூஏவாஂயமா ॥ வுூதஎிவவயஸிநிமஹஏஜூஂஹஏெதஹஏெதவவஸதிவிஜூாநஜ । ஸததஂஊெநுதவ்யஂஊநஸாஊநாநஹஏெதந ॥ ஸவூஹஏதாயிவாஸஂயஜூஏெதஷுவவஸத்யவி । ஸூாநுஹ்ராஹகெவுநதஉஸ்ஂவாஸுஜெவஇதி ” (கவாமநேகவர்ணுநாம்கூீரஸ்யத்வேகவர்ணதா । கூீரவத்பஸ்யதிஜ்ஞாநம்லிங்கிநஸ்துகவாம்யதா ॥ க்ருதமிவபயஸிநிகூடம் பூதேபூதேசவஸதிவிஜ்ஞாநம் । ஸததம்மந்தேதவ்யம்மநஸாமந்தாநபூதேந ॥ ஸர்வபூதாதிவாஸம் யத்பூதேஷுசவஸத்யபி । ஸர்வாநுக்ராஹகத்வேநததஸ்ம்யஹம்வாஸுதேவஇதி ) என்கிறபடியே. (கறந்தபால்) காலத்தாலும் மதநாதியாலுந் தோற்றுகிறநெய், கறந்தகாலத்தில்தோற்ருதிறே. உன்பக்கலிலே ந்யஸ்தபரனுகையாகிற சம்ஸ்காரத்தாலல்லது காணவரி

யையென்கை. (உன்னையெங்கேகாண்கேனே) பரமபதத்தில் காட்சிக்கு சரீரசம்பந்தமறவேணும். அவதாரத்துக்குப்பிற்பாடனேன், அர்ச்சாவதாரம் நான் நினைத்தபடிகிடையாது, அந்தர்யாமித்வம் கண்ணுக்குவிஷயமன்று, இனி இவ்விழவோடேமுடிந்துபோ மித்தனையாகாதே ... *

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (பிறந்தமாயாவித்யாதி) "பிறந்தமாயா" இத்யாதியையும், "கண்டுகொளிறந்துநின்ற பெருமாயாவுன்னையெங்கேகாண்கேன்" என்றத்தையும் கடாக்ஷித்தவதாரிகை (அவதாரத்துக்கித்யாதி)

அவதாரத்தி லாஶ்சர்யமேதென்ன (அகர்மவஶ்யனுமித்யாதி)

பாரதம்பொருகையி லாஶ்சர்யமேதென்ன (சத்யப்ரதிஜ்ஞனவித்யாதி) அசத்யப்ரதிஜ்ஞனபடியெப்படியென்ன (ஆயுதமித்யாதி) காரணத்வமொத்திருக்கவென்றது - பூதாந்தரங்களோபாதி காரணத்வ மொத்திருக்கவென்றபடி.

"கண்டுகொளிரந்துநின்ற" என்றது - கண்டுகொள்ளுகையை யதிக்ரமித்துநின்றவென்றபடி. பாலுக்குள்ளே நெய்யிருக்குமாபோலே, அந்தர்யாமியாயிருக்குமோவென்ன (கவாமித்யாதி) ஜ்ஞாநமென்றது - ஜ்ஞாநஸ்வரூபனானவாத்மாவை. லிங்கிந: - தேஹிந:. தேவாதிசரீரபேதங்களையுடையவர்களென்றபடி. கவாம்யதா- கோக்களுக்கெப்படி வர்ணபேதவிசிஷ்டசரீரபேதங்கள், அப்படியே தேவாதிசரீரபேதங்கள். "வ்யாதிவைவயவிநிம-ஸஂஹ-ூ-தெஷ-ூ-தெவஸதிவிஜ்ஞாநழ்" என்றமாத்ரமே யிவ்விடத்துக்குவேண்டுவது. விஜ்ஞாநம் - பரமாத்மா. "ஸவ ஹ-ூ-தாயிவாஸஂயசு" (ஸர்வபூதாதிவாஸம்யத்) என்று - தத்புருஷனிலர்த்தத்தையும், "ஹ-ூ-தெஷ-ுவஸதெவி" (பூதேஷுசவஸத்யபி) என்று - பஹுவ்ரீஹியிலர்த்தத்தையும் சொல்லுகிறது. "தஜஸ்யெ) ஹழ்" (ததஸ்ம்யகம்) என்று- உபாஸகன்வார்த்தை, பாலென்னாதே, "கறந்தபால்" என்று விசேஷித்ததுக்கு பாவம் (காலத்தாலுமித்யாதி) (மதநாதி) என்கிறவாதிசப்தத்தாலே - மதநபூர்வபாவியான ஆதஞ்சநத்தைச்சொல்லுகிறது. (தோற்றுதிறே) அதுக்காகவிசேஷிக்கிறதென்றபடி. "ஊூாநஹ-ூ-தெந-ஊநஸா-ஸததஂஊநெூதவ)ழ்" (மந்தாநபூதேந- மநஸா-ஸததம்மந்தேதவ்யம்) என்றதுக்கர்த்தம் (உன்பக்கலிலேயித்யாதி)

பரத்வத்தையு மர்ச்சாவதாரத்தையுங்கூட்டி, உக்தத்தை நிகமிக்கிறார் (பரமபதத்திலித்யாதி)... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

---

# பதினொன்றாம்பாட்டு.

---

எங்கேகாண்கேனின்றுழாயம்மான்றன்னையானென்றென்
றங்கேதாழ்ந்தசொற்களாலந்தண்குருகூர்ச்சடகோபன்
செங்கேழ்சொன்னவாயிரத்துளிவையும்பத்தும்வல்லார்க
ளிங்கேகாணவிப்பிறப்பேமகிழ்வரொல்லியுங்காலையே.

## ஆறாயிரப்படி.

( எங்கேகாண்கேன் ) எங்கேகாண்கே னீன்றுழாயம்மான்றன்னை யானென்றென் றங்கே ப்ரவண மநஸ்கராய், ப்ரேமார்த்ர விஹ்வலமான சொற்களாலே அந்தண்குருகூர்ச்சடகோப னார்ஜவோபேதமாகச்சொன்ன வாயிரத்து ளிவ்வைபத்தும் வல்லார்கள், இந்த லோகத்திலே யிஜ்ஜந்மத்திலே யெல்லாருங்காண வெம்பெருமானை யெப்போதும் காணப்பெற்று மகிழ்வரென்கிறார். ........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக, சம்சாரத்திலே சதா பகவதநுபவலாபத்தை யருளிச்செய்கிறார்.

ஈன் - நிரதிசயபோக்யமான. துழாய் - திருத்துழாய்மாலையையுடைய. அம்மான்றன்னை - சர்வேஶ்வரனை. யான் - இப்படி யார்த்யதிசயத்தையுடைய நான். எங்கே - எங்கே. காண்கேன் - காணக்கடவேன். என்றென்று - என்று பலகாலுஞ் சொல்லி. அங்கே - அவனுடைய போக்யதையிலும் சேஷித்வத்திலும். தாழ்ந்த-ப்ரவணமான. சொற்களால் - சொற்களாலே. அம் - தர்ஶநீயமாய். தண் - ஶ்ரமஹரமான. குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வார். பகவத்ஸ்வபாவங்களை ப்ரதிபாதிக்குமிடத்தில், செங்கேழ் - ஆர்ஜவத்தை யுடைத்தாய்க்கொண்டு போரும்படி. சொன்ன - அருளிச்செய்த. ஆயிரத்துள் - ஆயிரத்துக்குள்ளே. இவையும்பத்தும் - இவைபத்தையும். வல்லார்கள் - பாவவ்ருத்தியோடே யப்யசிக்கவல்லவர்கள். இங்கே - இந்தபூமியிலே. காண - எல்லாரும் காணும்படி. இப்பிறப்பே - இஜ்ஜந்மத்திலே. எல்லியுங்காலை - ராத்ரிந்திவ மிடைவிடாதபடி. மகிழ்வர்-பகவதநுபவஜநிதாநந்தத்தை யுடையராவர்கள்.

எல்லி - ராத்ரி.

இது - அறுசீராசிரியவிருத்தம். ........................................................*

## ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழிவல்லார், தாம்பட்ட துஃகம்படாதே, இஹலோகத்திலே யிஜ்ஜந்மத்திலே யவனைப்பெற்று நிரந்தரமாக சுகிப்பரென்கிறார்.

( ஈன்றுழாயம்மான்றன்னையான் - எங்கேகாண்கேன் ) ஐஶ்வர்யசூசகமான திருத்துழாய் மாலையையுடைய சர்வேஶ்வரனைக் கண்டல்லது தரிக்கமாட்டாதபடி சபலனான நானெங்கே காணக்கடவேன். ( என்றென்று ) பரத்வாதிகளைப் பெறாத நானுன்னை நிரந்தரமாகச்சொல்லி. ஒருக்கால்சொல்லி "ஆசையையாவிஷ்கரித்தோமிறே" என்றாறியிருக்கிறாரல்லரோ, லாபத்தளவும் சொல்லுமித்தனையிறே. ( அங்கேதாழ்ந்தசொற்களால் ) தோளும், தோள்மாலையிலும், அந்தசேஷித்வத்திலும் ப்ரவணமான சொற்களாலே. ( அந்தண்குருகூர்ச்சடகோபன் ) "'உபதிஷ்டாம்ஸர்வேஷாம்'ஸர்வேவ்யாதயஃ' ( உபநிஷ்டந்துமாம்ஸர்வேவ்யாதயஃ) என்கிறபடியே, இவ்வாற்றாமைக்கெல்லா மாடல்கொடுத்தவாழ்வார்" என்று

ளவந்தார் நிர்வாஹம். ( செங்கேழ்சொன்ன ) மநோவாக்காயங்களேக ரூபமாய்ச்சொன்ன வாயிரத்திலு மிப்பத்தையும். ( வல்லார்கள் ) அப்ய சிக்கவல்லார். ( இங்கேயித்யாதி ) இஹலோகத்திலே யிஜ்ஜந்மத்திலே திவாராத்ர விபாகமின்றிக்கே பகவதநுபவம் பண்ணி மகிழப்பெறுவர். "ஆளக்கூப்பிட்டழைத்தக்கால்" என்று – கூப்பிடவந்து முகங்காட்டா தவவத்யத்தை, இப்பத்தை யப்யசித்தவர்களோடே கடுகவந்து முகங்காட்டித் தீருமாயிற்றீஶ்வரன்; பார்யையோடே வெறுப்புண்டானு லவள்ப க்கல் முகம்பெறுகைக்காக ப்ரஜைகளை ஶ்லாகிப்பாரைப்போலே. ......*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் ( எங்கேகாண்கேனித்யாதி. ) "இவையும்பத்தும்வல்லார்களிங்கே- இப்பிறப்பே மகிழ்வரெல்லியுங்காலையே" என்ற பதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை ( இத்திருவாய்மொழியித்யாதி. )

ஈன் - இனிதானவென்றபடி. "அம்மான்" என்று - சேஷித்வம். வீப்ஸை யேதென்ன ( ஒருக்காலித்யாதி. )

"அங்கேதாழ்ந்த" என்றதுக்கர்த்தம் ( தோளுமித்யாதி. ) "அங்கே" என்று - "ஈன்றுழாயம்மான்" என்றத்தை பராமர்ஶிக்கிறது. ஆழ்வார் ஐ:கிதராயிருக்க, "அந்தண்குருகூர்" என்னலாமோவென்ன ( உபதிஷ்டடந்த்வித்யாதி. ) அதாவது - "கர்மபலமென்றுதல், க்ருபாபலமென்றுதல்" இத்யாதிப்படியே சலியாதிருக்கையாலே, ஊரும் தழைத்த தென்றபடி. "உப திஷ்ஹ-ாோஂஸவெூ வ்யாயய:ப-ூஸஞ்ிதா: । சுநுணொஹஂமிஷ்யாமி தவிஷோ:வாஂவஜூ" ( உபதிஷ்டடந்துமாம்ஸர்வே வ்யாதய:பூர்வஸஞ்சிதா: । அக்ருணோஹம்கமிஷ்யாமி தத்விஷ்ணோ:பரமம்பதம் ) இதி மஹாபாரதே பீஷ்ம:. ஆடல்கொடுத்த - இடங்கொடுத்த. "செங்கேழ்" என்று - முழுச்சொல்லாய், செவ்விதாகவென்றபடி.

"இங்கே - இப்பிறப்பே - எல்லியுங்காலையும் - காண - மகிழ்வர்" என்றந்வயித்தர்த்தம் ( இஹலோகத்திலேயித்யாதி. ) இவர்க்கு பகவதநுபவம் கிடையாதிருக்க, இப்பத்தை யப்யசித்தார்க்குக் கிடைக்கக் கூடுமோவென்ன ( ஆளக்கூப்பிட்டித்யாதி. ) இதுக்கு த்ருஷ்டாந்தம் ( பார்யையோடேயித்யாதி. )

ஈன்றுழாயம்மான்றன்னை யான் - எங்கேகாண்கேன் - என்றென்று, அங்கே தாழ்ந்தவென்று தொடங்கி எல்லியுங்காலையும் - மகிழ்வரித்யந்வய:..............*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( மாயக்கூத்தாவாமநு. )

ஶ்ருஶ்வெூஹாநித்கவா ஷூ-லஹகூ-டதயா ஷுாமிதாஷுளஶயிகவா ஜீஊ-ஞதஶூாஊஜ-கவாஹீ தஸ-ஜஹதயாவஜஸ-ஞவெூாவமாஜாக । ஸாஶூாதுாணு-ஸ-ஞஜெநா ஶவநிஹாஶஹுதெ ஶஜுராதுகூயொமா ஜீவாவெக்ஷாவஹ்ருதீகெஷாஹவதிதஜவஜெந ஸ்ரீவதிமெஷூதூஷாணி॥ அசு

(ஆஶ்சர்யேஹாந்விதத்வாத்) மாயக்கூத்தாவாமனு - ஆஶ்சர்யங்களாய் மநோஹாரிகளான சேஷ்டிதங்களை யுடையனுகையாலும்; (ரூபமகுடதயா) சுடர்ச்சோதிமுடிசேர் சென்னியம்மானே - நிரவதிக தேஜோயுக்தமான திருவபிஷேகத்தையுடையனுகையாலும்; (ஸ்வாமிதா) முடிசேர்சென்னியம்மா - அத்திருவபிஷேகத்தாலே சர்வஸ்வாமித்வந்தோற்ற நிற்கையாலும்; (அப்தௌஶயித்வாத்) தீர்நீர்க்கடலுள்துயில்வானே - பரிசுத்தமான பயோநிதியிலே கண்வளர்ந்தருளுகையாலும்; (ஜீமூதஶ்யாமளத்வாத்) மாநீர்க் கொண்டல் வண்ணனே - நீலமேகநிபமான திருநிறத்தை யுடையனுகையாலும்; (ச்ரிதஸுலபதயா) கொண்டல்வண்ணுகுடக்கூத்தா - க்ருஷ்ணனுயவதரித் தாச்ரிதர்க்கு சுலபனுயிருக்கையாலும்; (பத்மஸூர்யோபமாங்காத்) செந்தண் கமலக் கண் கை காலித்யாதி - செந்தாமரைப்பூப்போலே யிருக்கிற திருக்கண்மலரையும், திருக்கைகளையும், திருவடிகளையும், நிரவதிக கிரணோஜ்ஜ்வல நீலசூர்யநிபமான திருமேனியையு முடையனுகையாலும்; (ஸாரத்யாத்பாண்டுஸூநோ:) தக்கவைவர்தமக்காயித்யாதி - ஆச்ரிதனுனவர்ஜுநனுக்கு சாரத்யத்தைப் பண்ணுகையாலும்; (அவநிபரஹ்ருதே:) இம்மாஞாலம் பொறைதீர்ப்பான் - வடமதுரையிலேவந்தவதரித்து பூமியினுடைய பாரத்தை ஹரிக்கையாலும்; (அந்தராத்மத்வயோகாத்) கறந்தபாலுள் நெய்யேபோ லிவற்றுளெங்கும் கண்டுகொள் - க்ஷீரத்திலே க்ருதமிருக்கிறுப்போலே, எல்லாவஸ்துக்களிலு மாத்மதயா நிற்கையாலும்; எம்பெருமான் ரக்ஷிக்குமிடத்தில் சேதநருடைய வபேக்ஷாப்ரதீக்ஷனுயிருக்கிறுனென்று "மாயக்கூத்தா" என்கிறதஸகத்திலே மாறனருளிச் செய்தானென்கிறுர். ... ... ... ... ... ... ... ... ... .. (அசு)

---

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

மாயன்வடிவழகைக்காணுதவல்விடா
யாயதறவிஞ்சியழுதலற்றுந் - தூயபுக
ழுற்றசடகோபனோமொன் றிநிற்கும்போதுபக
லற்றபொழுதானதெல்லியாம். (எடு)

(மாயன்வடிவழகை) இதில் - அவனுடைய வழகை யநுபவியாமலழுதவாழ்வார், ஆர்த்யதிசயசூசக சூக்தியை யநுவதித்தருளிச்செய்கிறுர். எங்ஙனேயென்னில்; கீழ் ப்ரஸ்துதமான வநுபவம் மாநஸாநுபவமாத்ரமாய், பாஹ்யசம்ஶ்லேஷயோக்யமல்லாமையாலே மிகவும் நோவுபட்டு, காட்டுத்தீ கதவிஞைப்போலே பரிதப்தசித்தகாத்ரராய், அவயவசோபை, ஆபரணசோபை, ஒப்பனையழகு, இவற்றுக்காஶ்ரயமான விக்ரஹம், இவற்றினுடைய வைலக்ஷண்யத்தைப் பலபடியாக வர்ணித்துக்கொண்டு பெருங்கூப்பீடாகக் கூப்பிடுகிற * மாயக்கூத்தனிலர்த்தத்தை, "மாயன்வடிவழகை" இத்யாதியாலே யருளிச்செய்கிறுனென்கை.

(மாயன்வடிவழகை) சௌந்தர்யசீலாதிகளா லாஶ்சர்யமான விவன் விக்ரஹசௌந்தர்யாதிகளை, "[Grantha text]" (கர்மாபிதப்தா:பர்ஜந்யம் ஹ்லாதயந்தமிவப்ரஜா:) என்னும்படி யநுபவிக்க. (காணுதவல்விடாயாய்) "கனைகழல்காண்பதென்றுகொல்கண்களே" என்றும், "மெ

ய்கொள்ளக்காணவிரும்புமென்கண்களே" என்றும், இப்படி பாரிப்பையுடையகண்களின் விடாய்தீரப் பருகப்பெறுமையாலே - ப்ரத்யக்ஷமாகக் காணப்பெறுமையாலே, மிக்கவிடாயையுடையராய். (அதறவிஞ்சி) * காணவாராயென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்து பசையற்று, "கிழில்விடாயெல்லாம் குளப்படி" என்னும் படி கடல்போலே அதபிவ்ருத்தமாய். அத்தாலே (அழுதலற்றும்) பிறந்தவிடாய் தீரவந்து கலவாமையாலே பாலனைப்போலே யழுது, அடைவுகெடக்கூப்பிடும். அதாவது - "வாசத்தடம்போல்வருவானேயொருநாள்காணவாராய்" என்றும், "கருமாமாணிக்கநாணன்மலைபோல் சுடர்ச்சோதிமுடிசேர் சென்னியம்மானே - இரங்கியொருநாள்நீயந்தோகாணவாராய்" என்றும், "முடிசேர் சென்னியம்மா" என்று தொடங்கி "பெருமானேயென்றென்றேங்கியழுதக்கால் படிசேர்மகரக்குழைகளும்" என்றுதொடங்கி "தூநீர்முகில்போல்தோன்றாயே" என்றும், "ஆளக்கூப்பிட்டழைத்தக்கால் - தொண்டனேனுன்கழல்காண வொருநாள்வந்துதோன்றாயே" என்றும், "முகப்பேகூவிப்பணிகொள்ளாய்" என்றும், "நற்றேர்த்தனிப்பாகா வாராயிதுவோபொருத்தம்" என்றும், "இருஞ்சிறைப்புள்ளதுவே கொடியாவுயர்த்தானே - உன்னையெங்கேகாண்கேனே" என்றும், இப்படி "கதாத்ரக்ஷ்யாமிராமஸ்ய வதநம்புஷ்கரேக்ஷணம்" (கதாத்ரக்ஷயாமிராமஸ்ய வதநம்புஷ்கரேக்ஷணம்) என்னும்படி. (அழுதலற்றுந்தூயபுகழுற்ற) சௌந்தர்யாதிகளை யநுபவிக்கப்பெறுமையாலே யழுதலற்றும் புகழையுடையராய். இதரவிஷயாலாபத்தாலே க்லேசிக்கை அயஶஸ்ஸாய், பகவதலாபத்தாலே க்லேசிக்கை ஶ்லாக்யமான யஶஸ்ஸாயிறேயிருப்பது. (தூயபுகழுற்றசடகோபனை நாமொன்றிநிற்கும்போதுபகல்) இப்படியான யஶஸ்ஸையுடையரான வாழ்வாரை நாமநந்யப்ரயோஜநராய்க்கிட்டி நின்றநுபவிக்குங்காலம், பகலாயிருக்கும். * பராங்குஶாதித்யஸந்நிதியிறே. (அற்றபொழுதானது) அவனுடையவநுபவ விச்சேதகாலமானது. (எல்லியாம்) சம்சாரமாகிற காளராத்ரியாம்... ... ... ... ... ... ... ... ... ... ... ... (எரு)

எட்டாம்பத்தில் - ஐந்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி - எரு.—பாட்டு - அஉஎ.

---

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## எட்டாம்பத்து.

## ஆறந்திருவாய்மொழி.

### எல்லியும் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

( எல்லியும்காலையும் ) எம்பெருமானென்னுடைய விடாயெல்லாந் தீரும்படி யருள்செய்தருளினன். .................................*

### பன்னீராயிரப்படி.

ஆறாந்திருவாய்மொழியில், இப்படி யநுபவாபிநிவேசத்தாலே யத்யந்தமார்த்தராய்க் கூப்பிட்ட விவ்வாழ்வாருடைய வார்த்தி தீருகைக்காக "இவருடைய சகலவிரோதிகளையும்போக்கி சம்ஶ்லேஷிப்போம்" என்றீஶ்வரன் திருக்கடித்தானத்திலே யாஸந்நமாக வந்து சந்நிஹிதனானபடியை ப்ரகாசிப்பிக்க; அவனுடைய வாஸக்திநிதாநமான சேஷித்வத்தையும், அசேஷவிரோதிநிவர்த்தகமான சாமர்த்யத்தையும், பராக்ரமசைக்ர்யத்தால் வந்த வீரஸ்ரீயோகத்தையும், ஆந்தரவிரோதிநிவர்த்தகமான அந்தஃப்ரவேசத்தையும், ப்ரத்யாஸக்திக்கடியான ப்ராப்யதேசவர்த்தித்வத்தையும், அவனிலுமவன்தேசம் விரோதிநிவர்த்தகமென்னுமிடத்தையும், தேசஸ்ம்ருதிமாத்ரமே துஃகநிவர்த்தகமென்னுமிடத்தையும், ஆஸந்நதேசத்தினுடையவசாதாரண்யத்தையும், அர்ச்சாந்தர ஸ்த்தலத்திலும் சந்நிஹிதனென்னுமிடத்தையும், ஆஸந்நதேசஸ்த்திதி அந்தஃப்ரவேசார்த்தமென்னு மிடத்தையு மநுசந்தித்து, நெஞ்சிலேவந்து புகுந்து தம்முடைய விரோதியைப்போக்கி யநுபவிப்பதாக வத்யாஸந்நனான வவனுடைய வபிநிவேசத்தைக்கண்டு தமக்குப் பிறந்த ஹர்ஷத்தை யருளிச்செய்கிறார். .................................*

### ஈடு.

* மாயக்கூத்தனில், ஆழ்வார், தமக்கோடின விடாய்பேச்சுக்கு நிலமாகையாலே பேசினர்; ஈஶ்வரனுக்கோடினவிடாய் பேச்சுக்குநிலமல்லாமையாலே பேசிற்றில்லை. "𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌂𑌮𑌾𑌸𑌾𑌨𑍍𑌨𑌜𑍀𑌵𑌿𑌷𑍍𑌯𑍇" ( ஊர்த்வம் மாஸாந்நஜீவிஷ்யே ) என்றித்தலையில் விடாய்; "𑌨𑌜𑍀𑌵𑍇𑌯𑌂𑌕𑍍𑌷𑌣𑌮𑌪𑌿" ( நஜீவேயம்க்ஷணமபி ) என்றிறே யத்தலை யிருப்பது. * "மாயக்கூத்தனிவர்க்கோடினவிடாய்க் குதவப்பெற்றிலோம்" என்னுமத்தாலேதப்

தனுய், ஆகுலனுய், பிற்பாட்டுக்கு "ஹ்ரீரோஷாஹிமமாதுலா" (ஹ்ரீ ரோஷாஹிமமாதுலா) என்கிறபடியே லஜ்ஜித்து, "இனிநாம்கடுகெமுகங் காட்டில் ப்ரீதியாலே யுடைகுலைப்படுவர், ப்ரீதியை சாத்மிப்பித்துளரா க்கிப் பரிமாறவேணும்" என்று, பதினாலாண்டு பிரிவாலே நொந்த ஸ்ரீப ரதாழ்வானை தரிப்பித்து முகங்காட்டுகைக்காகத் திருவடியைப் போகவி ட்டு, ஸ்ரீபாரத்வாஜபகவானுச்ரமத்திலே யிருந்தாப்போலவும்; பாண்டவ ர்களுக்காகத் தூதுபோகிறபோது, ப்ரேமபரவசரான விதுராதிகள் ப்ரீதி யை யகஞ்சுரிப்படுத்தி முகங்காட்டுகைக்காக, "குஶஸ்தலே நிவஸதி ஸ ச ப்ராதரிஹேஷ்யதி" (குஶஸ்த்தலேநிவஸதிஸசப்ராதரிஹேஷ்யதி) என்கிறபடியே-குசஸ்த்தலத்திலே விட்டுக்கொண்டிருந்து, பிற்றைநாள் ஹஸ்திநபுரத்திலே யெழுந்தருளினுப்போலவும்; தம்மோடே சம்ச்லே ஷோந்முகனுன சர்வேச்வரன், தம்முடைய ப்ரீதியை சாத்மிப்பித்துத் தம்மோடே கலக்கைக்காகத் திருக்கடித்தானத்திலே யெழுந்தருளியிருந் து, தம்பக்கல்பண்ணுகிற வ்யாமோஹத்தை யநுசந்தித்தினியராய், அத் தைப்பேசி யநுபவிக்கிருர். கீழிற்றிருவாய்மொழியில் வ்யஸந ஹேதுவா ன நினைவுதானே யிப்போதுஜ்ஜீவநமாம்படி பண்ணினுன். * செறுவாரு ம் நட்பாகுவரிறே செங்கோனருள்பெற்றவாறே. ......................*

## ஜீயர் அரும்பதம்.

எல்லியும்காலையும் ப்ரவேசே, தம்முடையவிடாய் சொன்னுப்போலே யவ னுடைய விடாயையும் சொல்லவேண்டாவோவென்ன (மாயக்கூத்தனிலித்யாதி) அ ப்படி யதிசயித்திருக்குமோவென்ன (ஊர்த்வமித்யாதி)சங்கதி (மாயக்கூத்தனிலித் யாதி) ஆகுலனுய் - கால்பாவாதவனுயென்றபடி. இப்படி வ்யஸநாதிசயத்தையுடை யவனுகையாலே (மாயக்கூத்தனில்) என்றுகூட்டுவது. கீழேயப்படி விடாய்த்தவ ரை பூர்ணமாக வநுபவிப்பியாதே, திருக்கடித்தானத்திலேவந்து நிற்கிறதுக்கு ஹே துவேதென்ன (இனிநாமித்யாதி) இவ்விடத்திலே - "நாளைவதுவை" என்கிறத்தை யருளிச்செய்வர். வதுவை-விவாஹம். அதாவது - இன்றுவதுவையென்னுதே, "நா ளைவதுவை" என்றது - ப்ரீதிசாத்மிக்கைக்காகவென்றபடி. ஒருஸ்த்ரீ, தாரித்ர்யத் தாலே நொந்திருக்க, புத்ரன், தேடிக்கொண்டுவந்த தநராசியை முன்னேசொரிய, ப்ரீதியாலே வாராநிற்கச்செய்தே, ப்ரீதி தலைமண்டையிட்டு முடிந்தாளென்கிற லௌகிககதையை யருளிச்செய்வர். "சாத்மிப்பித்துளராக்கிப் பரிமாறவேணும்" என்றதுக்குத்ருஷ்டாந்தம் (பதினுலாண்டித்யாதி)

கீழேயும் குணநுசந்தாநமாயிருக்க, அங்கே துःகமும், இங்கேப்ரீதியு மாவா னென்னென்ன (கீழிற்றிருவாய்மொழியிலித்யாதி) இதுகூடுமோவென்ன (செறு வாருமித்யாதி) திருவிருத்தம், "சேமம்" இத்யாதி. செறுவார் - பாதகர். நட்பா குவர்-உறவாவர்கள். "உபப்லவாதிஹக்ஷத்த உபயாதோ ஜநார்த்தநः। குஶஸ்தலே நிவஸதி ஸ ச ப்ராதரிஹேஷ்யதி" (உபப்லவாதிஹக்ஷத்த உபயாதோ ஜநார்த்தநः। குஶஸ்தலேநிவஸதிஸசப்ராதரிஹேஷ்யதி) ... ... ... ... ...*

# ஆறாந் திருவாய்மொழி

## முதற்பாட்டு.

எல்லியுங்காலையுந்தன்னைநினைந்தெழ
நல்லவருள்கணமக்கேதந்தருள்செய்வா
னல்லியந்தண்ணந்துழாய்முடியப்பனூர்
செல்வர்கள்வாழுந்திருக்கடித்தானமே.

### ஆறாயிரப்படி.

ஒருவன்செய்தருளினபடியே யென்றென்றுநினைத்துக் கிடக்கும் படி யருள்செய்தருளினன்; அவ்வருள் தானேதென்றால்; முன்னம் திருக்கடித்தானத்திலேவந்து புகுந்தருளினனென்கிறார்... ...... ............*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், நமக்கு நிரதிசயோபகாரம்பண்ணவந்த சர்வசேஷியானவன் தேசம் திருக்கடித்தானமென்கிறார்.

எல்லியும்காலையும்-ராத்ரிதிவாவிபாகமில்லாதபடி. தன்னை - உபகாரகனானதன்னை. நினைந்து-ஸ்மரித்து. எழ - உஜ்ஜீவிக்கும்படியாக. நிர்ஹேதுகமாகையாலே, நல்ல-விலக்ஷணமான. அருள்கள்-ஆகமநாஸக்த்யந்தஃப்ரவேசவிரோதி நிவர்த்தநாநுபவங்களுக்கடியான நிரவதிகக்ருபைகளை. "தாரேன்பிறர்க்குன்னருளென்னிடைவைத்தாய்" என்கிறகணக்கிலே, நமக்கே-நமக்கே யசாதாரணமாக. தந்து - தந்து. மேலுமிடைவிடாமல், அருள்-அருள். செய்வான் - செய்வானாய். "தாமத்தண்டுழாய்க்கடிசேர் கண்ணிப்பெருமான்" என்றிவராசைப்பட்டாப்போலே, அல்லி-பூந்தாரையுடைத்தாய். அம்-தர்ஶநீயமாய். தண்ணம்-குளிர்ந்த. துழாய்-திருத்துழாய் மாலையாலே யலங்க்ருதமான. முடி-திருமுடியையுடைய. அப்பன்-சேஷியாயுள்ளவுபகாரகனானவனுடைய. ஊர்-அசாதாரணதேசம். செல்வர்கள்-பகவத்கைங்கர்யசம்பத்தையுடையரான பாகவதரானவர்கள். வாழும்-அநுபவாவிச்சேதத்தாலே யாநந்திகளாய் வர்த்திக்கிற. திருக்கடித்தானம்-திருக்கடித்தானமாம் ... ... ... ...*

### ஈடு - முதற்பாட்டு.

என்னுடையவார்த்திதீர்த்தருளுவான் சர்வேஶ்வரனே, அவனூர் திருக்கடித்தானமென்கிறார்.

(எல்லியுங்காலையுமித்யாதி) திவாராத்ர விபாகமின்றிக்கே யெல்லாக்காலத்திலு முபகாரகனான தன்னைநினைத்துஜ்ஜீவிக்கும்படி. (நல்லவருள்கள்) என்குற்றமாதல், தன்சார்வஜ்ஞ்யமாதல்பாராதே, தன்பேறாகப்பண்ணினவருள். * மாயக்கூத்தனில் விடாய்க்கருளினனென்றிருக்கிறிலர். (நமக்கேதந்தருள்செய்வான்) "பலரடியார்முன்பருளிய" என்கிறபடியே, நித்யசூரிகளும் தாம்பெற்றபேறு பெற்றிலரென்றாயிற்று நினைத்திரு

ப்பது. (அல்லியந்தண்ணந்துழாய்முடி) கீழ்த்திருவாய்மொழியிலே- "மொய்பூந்தாமத்தண்டுழாய்க்கடிசேர்கண்ணிப்பெருமானே" என்றிவ ராசைப்பட்டபடியே காட்டிக்கொடுத்தான். (ஊர்) இப்படி யுபகாரகனு னவன் வர்த்திக்கையாலே நமக்கு ப்ராப்யபூமி திருக்கடித்தானமென்கிறு ர். (செல்வர்கள்வாழும்) * மாயக்கூத்தனும் * எல்லியுங்காலையுமாகவே ண்டாதே, அநுபவத்தோடே காலங்கழிக்கிறவர்கள். "லக்ஷ்மணோலக்ஷ்மி ஸம்பந்ந:" (லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்ந:) என்கிறபடியே யிருப்பார்சிலர்.

எல்லியுமித்யாதி - அப்பனுனவனூரொன்னுதல்; செல்வர்கள்வாழும் - ஊர் - திருக்கடித்தானமென்னுதல்; அல்லியந்தண்ணந்துழாய் முடியப்பன் - நல்லவருள்கள் நமக்கேதந்தருள்செய்வானென்னுதல் .....*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (எல்லியுமித்யாதி.) "நமக்கேதந்தருள்செய்வான் - அப்பன், ஊர் - திருக்கடித்தானம்" என்றத்தைக்கடாக்ஷித் தவதாரிகை (என்னுடையவித்யாதி.)

"அப்பன்" என்றத்தைப்பற்ற (உபகாரகனென்றது) எழ - எழும்படி. உஜ்ஜீவிக்கும்படி. * அருளுக்குநன்மையேதென்ன (என்குற்றமாதலித்யாதி) "தன்பேருக" என்கிறதென், கீழில்விடாய்க்காகவன்றேவென்ன (மாயக்கூத்தனிலித்யாதி) "நமக்கே" என்றவவதாரணார்த்தம் (பலரடியாரித்யாதி)

தண்ணம் - முழுச்சொல்லு. குளிர்த்தி.

"வாழும்" என்கிறவர்த்தமாநார்த்தம் (மாயக்கூத்தனுமித்யாதி) அநுபவம் சம்பத்தோவென்ன (லக்ஷ்மணோலக்ஷ்மீத்யாதி)

செல்வர்கள்வாழும் திருக்கடித்தானம் - எல்லியும் காலையு மென்றுதொடங்கி, அப்பனூரொன்னுதல்; அன்றியே, எல்லியும் காலையுமென்றுதொடங்கி, அப்பனதாய் - செல்வர்கள் வாழும் - ஊர் - திருக்கடித்தானமென்னுதல்; அன்றிக்கே, அல்லியந்தண்ணந்துழாய்முடியப்பன் - எல்லியும் காலையும் தன்னை நினைந்தெழ நல்லவருள்கள் நமக்கே தந்தருள்செய்வான் - அவனூர் செல்வர்கள் வாழும் திருக்கடித்தானமென்னுதல்; இது அவதாரிகாநுகுணம். ..........................................*

---

# இரண்டாம்பாட்டு.

---

திருக்கடித்தானமுமென்னுடைச்சிந்தையு
மொருக்கடுத்துள்ளேயுறையும்பிரான்கண்டீர்
செருக்கடுத்தன்றுதிகைத்தவரக்கரை
யுருக்கெடவாளிபொழிந்தவொருவனே.

## ஆறுயிரப்படி.

(திருக்கடித்தானமும்) பின்னையும் செய்தருளுகிறுன்.

திருக்கடித்தானத்தையு மென்னெஞ்சையுமொக்கத் தனக்கிருப்பிடமாகக் கொண்டருளினன். அவனென்னில்; செருக்கடுத்தன்றுதிகைத்தவரக்கரை யுருக்கெடவாளிபொழிந்த வத்விதீயன் கண்டீரென்கிறார். *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அசேஷவிரோதிநிவர்த்தநசமர்த்தனான சக்ரவர்த்திதிருமகன், திருக்கடித்தானத்தையு மென்னெஞ்சையு மொருபடிப்பட நினைத்து வர்த்திக்கு முபகாரசீலனென்கிறார்.

வரபலபுஜபலங்களாலே, செரு-யுத்தத்திலே. கடுத்து-செருக்குமிஞ்சி. அன்று - நீரிலேநெருப்பெழுந்தாப்போலே சீற்றம்விளையும்படி பெருமாளுக்கபராதம்பண்ணினவன்று. திகைத்த-ஆளைவெல்லலாமென்று ப்ரமித்த. அரக்கர்-ராவணதிராக்ஷசர். உரு-உருவம். கெட - அழிந்துசிந்நமாம்படிக்கீடாக. வாளி - சரவர்ஷத்தை. பொழிந்த-வர்ஷித்த. ஒருவன்கண்டீர்-ஏகவீரனானவன்கிடீர். திருக்கடித்தானமும். திருக்கடித்தானமாகிற திருப்பதியையும். அப்படி அபிமதமான, என்னுடை - என் - சிந்தையும்-நெஞ்சையும். ஒருக்கடுத்து-ஒருமைப்படப்பிடித்து. உள்ளே-இரண்டுக்குள்ளே. உறையும்-வர்த்திக்கிற. பிரான்-மஹோபகாரகன்.

இரண்டையுமொக்கப்பிடித் தென்னுள்ளேவர்த்திக்கிறவனென்றுமாம் ... *

## ஈடு - இரண்டாம்பாட்டு.

என்பக்கல் வருகைக்கு ப்ரதிபந்தகங்களையும் தானேபோக்கி,திருக்கடித்தானத்திலு மென் ஹ்ருதயத்திலுமொக்க வபிநிவேசித் தென்னுள்ளே வர்த்தியாநின்றானென்கிறார்.

( ஒருக்கடுத்து ) ஒருங்கவடுத்து. அதாகிறது - ஒக்க நினைக்கை. திருக்கடித்தானத்தையு மென்ஹ்ருதயத்தையு மொக்கவிரும்பி. (உள்ளேயுறையும்) மநஸ்ஸிலே நித்யவாசம்பண்ணாநின்றான். விரோதிசெய்ததென்னென்ன; அது ராக்ஷசர் பட்டதுபட்டது ( செருக்கடுத்து ) யுத்தகண்டேநிவர்த்தித்து. ( அன்று ) “ நநமேயம் ” ( நநமேயம் ) என்றவன்று. ( திகைத்தவரக்கரை ) சக்ரவர்த்திதிருமகனை வெல்லலாமென்று நினைத்த மதிகேடரான ராக்ஷசரை. ( உருக்கெட ) “ ஹிஷம்ஹிஷம்ஸமெரா ஜூம். ” ( சிந்நம்பிந்நம்ஸரைர்த்தக்தம். ) (வாளிபொழிந்த) “ ஸரவஷ் ஂவவஷ ஹ ” ( ஸரவர்ஷம்வவர்ஷஹ ) என்கிறபடியே. ( ஒருவன் ) ஏகவீரனானவன். ......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. ( திருக்கடித்தானமித்யாதி. ) “ செருக்கடுத்தன்று ” என்றுதொடங்கி, “ உள்ளேயுறையும்பிரான்கண்டீர் ” என்கிற பதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை ( என்பக்கலித்யாதி. )

சப்தார்த்தம் ( திருக்கடித்தானத்தையுமித்யாதி. )

உத்தரார்த்தமநுசந்தித்து, பூர்வார்த்தமநுசந்திப்பது.

திகைத்த - ப்ரமித்த. உரு - சரீரம். சப்தஸ்வாரஸ்யம் (சரவர்ஷமித்யாதி. " தடுதாராமொஹாதெஜாய நூாராயவீரூவாநு । ஊஷாராக்ஷஸ மெஸநூ்ஂதஹுரவஷ-ஂவவஷ-ஹ " (ததோராமோமஹாதேஜாதநுராதாயவீர்யவாந் । த்ருஷ்ட்வாராக்ஷஸஸைந்யம் தச்சரவர்ஷம்வவர்ஷஹ) இதி யுத்தகாண்டே..........................*

---

## மூன்றாம்பாட்டு.

ஒருவரிருவரோர்மூவரெனநின்
றுருவுகரந்துள்ளுந்தோறுந்தித்திப்பான்
றிருவமர்மார்வன்றிருக்கடித்தானத்தை
மருவியுறைகின்றமாயப்பிரானே.

### ஆறாயிரப்படி.

(ஒருவர்) பின்னையுமொருவரா யிருவராய் மூவராய்த்தோன்றி, உருவுதெரியாதபடி வந்து வாளிபொழிந்தவனென்று அவன் செயலையே யநுபவித்து, அதுக்குமேலே, இன்று திருக்கடித்தானத்திலு மென்னெஞ்சிலும் பிராட்டியோடே கூடவந்து புகுந்தருளினானென்கிறார். ......*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், பராக்ரமசைக்ர்யத்தாலே வீரஸ்ரீவிசிஷ்டனானவன், திருக்கடித்தானத்திலே சந்நிஹிதனாய், எனக்கு போக்யபூதனாயிராநின்றானென்கிறார்.

மூலபலநிரஸநத்தில் பராக்ரமசைக்ர்யத்தாலே, ஒருவர் - ப்ரதமமொருவராய். இருவர் - பின்னையிருவராய். மூவரென - பின் மூவரென்னும்படி. நின்று-நின்று. ஓர் - அத்விதீயமான. உருவு - ரூபம். கரந்து - இலக்குக் குறிக்கவொண்ணாதபடி இந்த்ரியாவிஷயமாய்க்கொண்டு. உருக்கெட வாளிபொழிந்த வொருவனானவனந்த வீரஸ்ரீயோடே வந்தானென்னும்படி, திரு - லக்ஷ்மியை. அமர்மார்வன்-திருமார்பிலே யுடையனாய்க்கொண்டு. திருக்கடித்தானத்தை - திருக்கடித்தானத்தை. மருவி - பொருந்தி. உறைகின்ற - நித்யவாசம் பண்ணுகிற. மாயப்பிரான் - ஆஶ்சர்யோபகாரகனாய். உள்ளுந்தோறும் - நினைக்குந்தோறும். தித்திப்பான் - இனியனாகாநின்றான்..........................*

### ஈடு - மூன்றாம்பாட்டு.

பிராட்டியோடுகூடத் திருக்கடித்தானத்திலே நித்யவாசம்பண்ணுகிற வாஶ்சர்யபூதனான வுபகாரக னநுசந்திக்குந்தோறு மினியனாகாநின்றானென்கிறார். (ஒருவரித்யாதி) வாளிபொழிந்தபடி யெங்ஙனேயென்ன; இங்ஙனேயென்கிறார்.

(ஒருவரிருவரோர்மூவரெனநின்றுருவுகரந்து) ஒருவராய்த்தோன்று, இருவராய்த்தோன்று, மூவராய்த்தோன்று, பின்னை யிந்த்ரியார்த்த ஸம்யோகமில்லாதபடி சாரிகைவந்து. ஒருவரிருவரோர்மூவரென நின்றுருவுகரந்து - செருக்கடுத்தன்று திகைத்தவரக்கரை யுருக்கெட்வாளிபொழிந்தவொருவன் - திருக்கடித்தானமு மென்னுடைச்சிந்தையு மொருக்கடுத்துள்ளேயுறையும்பிரான் கண்டீரென்று கீழிற்பாட்டோடேயந்வயமாகக்கடவது. (திருவமர்மார்வன்) "நகஶ்சிஞாவராய்தி" (நகஸ்சிந்நாபராத்யதி) என்னும் பிராட்டியோடேகூட்வாயிற்று வந்தது. (திருவமர்மார்வன் திருக்கடித்தானத்தை மருவியுறைகின்ற மாயப்பிரான்-உள்ளுந்தோறுந்தித்திப்பான்) பெரியபிராட்டியார் நித்யவாஸம்பண்ணுகிற திருமார்வையுடையனாய், திருக்கடித்தானத்தை மருவியுறையாநின்றுகொண்டு என்பக்கலிலே யாஶ்சர்யமாம்படி ப்ரவணனானவன், அநுஸந்திக்குந்தோறும் புதியனாயினியனாகாநின்றான். ...................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு. (ஒருவரித்யாதி.) "திருவமர்மார்வன்" என்றுதொடங்கி, "மாயப்பிரான் - உள்ளுந்தோறுந்தித்திப்பான்" என்றவற்றை யநுஸந்தித்தவதாரிகை (பிராட்டியோடித்யாதி.) "ஒருவரிருவரோர்" இத்யாதிக்கர்த்தம் (வாளிபொழிந்தவித்யாதி.)

உருவுகரந்து சாரிகைவந்தவேகம், சக்ஷுரிந்த்ரியத்தாலே விக்ரஹம் க்ரஹிக்கப்போகாதென்றபடி. சாரிகைவந்து - அதிவேகத்துடனே சாரிவந்து. "உருவுகரந்து" என்னுமளவும் கீழ்ப்பாட்டோடேயந்விதம்.

"திருவமர்மார்வன் - பிரான் - உள்ளுந்தோறும் தித்திப்பான்" என்று - தனியேவாக்யம். பாட்டுக்குறைக்கு மந்வயம் (திருவமர்மார்வனித்யாதி.) சப்தார்த்தம் (பெரியவித்யாதி.)...................................*

## நான்காம்பாட்டு.

மாயப்பிரானெனவல்வினைமாய்ந்தற
நேசத்தினானெஞ்சநாடுகுடிகொண்டான்
றேசத்தமர்திருக்கடித்தானத்தை
வாசப்பொழின்மன்னுகோயில்கொண்டானே.

## ஆறாயிரப்படி.

(மாயப்பிரான்) இவன் திருக்கடித்தானத்தைக் காட்டிலு மென்னெஞ்சிலே, வல்வினைகள் தீரும்படி ஸ்நேஹத்தைப் பண்ணிக்கொண்டு குடியாக விருந்தருளினானென்கிறார். ...................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், திருக்கடித்தானத்தை வாசஸ்த்தாநமாக ஸ்வீகரித்தவன், என்னுடைய ப்ரபலபாபங்களைப் போக்குகைக்காக நெஞ்சுக்குள்ளே நித்யவாசம்பண்ணு நின்றனென்கிறார்.

தேசம் - நிரதிசயதேஜஸ்விகளான. அமரர் - ஸூரிகளுக்கு ப்ராப்யமாய். வாசம் - பரிமளோத்தரமான. பொழில் - பொழில். மன்னு - சேர்ந்த. திருக்கடித்தானத்தை - திருக்கடித்தானத்தை. கோயில் - கோயிலாக. கொண்டான் - கொண்ட. மாயப்பிரான் - ஆஶ்சர்யோபகாரகனானவன். என - என்னுடைய. வல் - ப்ரபலமான. வினை - பாபங்கள். மாய்ந்தற - நசித்துப்போம்படியாக. நேசத்தினால் - என்பக்கல் சங்காதிசயத்தாலே. நெஞ்சம் - என்னெஞ்சாகிற. நாடு-விஸ்தீர்ணபூமியை. குடி - தனக்குக் குடியிருப்பாக. கொண்டான் - கொண்டான். ....................*

## ஈடு - நான்காம்பாட்டு.

திருக்கடித்தானத்தைப் பகலிருக்கைமாத்ரமாகக்கொண்டு, சங்காதிசயத்தாலே யென்னெஞ்சையே நிரந்தரவாசஸ்த்தாநமாகக் கொண்டானென்கிறார்.

( மாயப்பிரான் ) ஆஶ்சர்யமான குணசேஷ்டிதங்களையுடைய வுபகாரகன். ( எனவல்வினைமாய்ந்தற ) தன்னைப் பிரிந்து நான்பட்டக்லேசமெல்லாம் நசித்துப்போம்படி. * மாயக்கூத்தனில் * காணவாராயென்றென்று கண்ணும்வாயும் துவர்ந்து பட்டவிடாயெல்லாம் வாஸனையோடேபோம்படி. (நேசத்தினால்) தானென்பக்கல்பண்ணின சங்கத்தாலே. ( நெஞ்சநாடு ) ஸம்ஶ்லேஷவிஶ்லேஷங்களாலே யொரு த்ரிபாத்விபூதி போலே யாக்கினனையிற் றிவர்திருவுள்ளத்தை. ( குடிகொண்டான் ) ஸபரிகரமாக நித்யவாசம்பண்ணுநின்றான் ; * அரவத்தமளிப்படியே. (தேசத்தமரர்திருக்கடித்தானத்தை) நித்யாநுபவம் பண்ணுகையா லுண்டான தேஜஸ்ஸையுடைய நித்யஸூரிகளுக்கு ப்ராப்யமானதிருக்கடித்தானத்தை. ( வாசப்பொழில்மன்னு ) வாசத்தையுடைய பொழிலோடேகூடின. தேசத்தமரர் திருக்கடித்தானத்தை - கோயில்கொண்டான் - நேசத்தினால் நெஞ்சநாடுகுடிகொண்டான். ........................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு. ( மாயப்பிரானித்யாதி. ) “ திருக்கடித்தானத்தை - கோயில்கொண்டான் - நேசத்தினால் நெஞ்சநாடுகுடிகொண்டான் ” என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை ( திருக்கடித்தானத்தையித்யாதி. ) பகலிருக்கை - பகலுக்கோலக்கமிருக்கை.

கீழில் திருவாய்மொழியி லார்த்திக் கநுகுணமாக வர்த்தம் ( தன்னைப்பிரிந்தித்யாதி. ) ஏதத்விவரணம் ( மாயக்கூத்தனிலித்யாதி. ) அணுவான நெஞ்சு நாடாம்படியென்னென்ன ( ஸம்ஶ்லேஷேத்யாதி. ) இருந்தானென்னுதே, “ குடிகொண்டான் ” என்றதுக்கு பாவம் ( ஸபரிகரமாகவித்யாதி. ) இதுக்கு ப்ரமாணம் ( அரவத்தமளிப்படியேயென்று. )

தேஜஸ்ஸேதென்ன ( நித்யாநுபவமித்யாதி. )

மாயப்பிரானென வல்வினைமாய்ந்தற - வாசப்பொழில்மன்னு - தேசத்தமரர் திருக்கடித்தானத்தை - கோயில்கொண்டான் - நேசத்தினல் நெஞ்சநாடு குடிகொண்டானித்யந்வயஃ.......................................................................*

# ஐந்தாம்பாட்டு.

கோயில்கொண்டான்றன்திருக்கடித்தானத்தைக்
கோயில்கொண்டானதனேடுமென்னெஞ்சகங்
கோயில்கொடெய்வமெல்லாந்தொழவைகுந்தங்
கோயில்கொண்டகுடக்கூத்தவம்மானே.

## ஆறாயிரப்படி.

( கோயில்கொண்டான் ) அங்குமிங்குமா யிருந்தருளுகை யன்றியே, ஸ்நேஹாதிசயத்தாலே திருக்கடித்தானத்தையுங்கொண்டு, என்னெஞ்சினுள்ளே புகுந்தருளினனென்கிறார்...........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ராப்யமான பரமபதத்திலே வர்த்திக்கிறவன், திருக்கடித்தானத்தோடே யென்னெஞ்சை வாசஸ்த்தாநமாகக் கொண்டானென்கிறார்.

கோயில்கொள் - விலக்ஷணவிமாநோபேதரான. தெய்வமெல்லாம் - நித்யஸூரிகள். தொழ - தொழும்படியாக. வைகுந்தம் - ப்ராப்யதேசபரமபதத்தை. கோயில் - வாசஸ்த்தாநமாக. கொண்ட - உடையனாய். ஆஸ்ரிதார்த்தமாக வவதரித்து, குடக்கூத்த - குடக்கூத்தாடுகிற மநோஹாரிசேஷ்டிதத்தை யுடைய. அம்மான்-க்ருஷ்ணனான ஸ்வாமியானவன். திருக்கடித்தானத்தை - திருக்கடித்தானத்தை. தன் கோயில் - தனக்கஸாதாரணதேசமாக. கொண்டான் - ஸ்வீகரித்துக்கொண்டு. அதனேடும் - அதுதன்னேடே. என் - என். நெஞ்சகம் - நெஞ்சையும். கோயில் - தனக்குக் கோயிலாக. கொண்டான் - கொண்டான்...........................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

என்பக்கல் ப்ரேமாதிசயத்தாலே திருக்கடித்தானத்தோடே கூட வென்ஹ்ருதயத்திலே புகுந்தருளினனென்கிறார்.

( கோயில்கொண்டானித்யாதி ) திருக்கடித்தானத்தைத் தனக்கஸாதாரணமான கோயிலாகக்கொண்டான். ( கோயிலித்யாதி ) "செருப்புவைத்துத் திருவடிதொழுவாரைப்போலே யாகவொண்ணாது" என்று, திருக்கடித்தானத்தோடே கூடவந் தென்னெஞ்சிலே புகுந்தருளினன். (கோயில்கொளித்யாதி) ஒரோ கோயில்களுண்டாயிருக்குமிறே, திருவடி, திருவநந்தாழ்வான், சேனைமுதலியா ரிவர்களுக்கு ; அவர்கள்தொழும்படி ஸ்ரீவைகுண்டத்தைத் தனக்குக் கோயிலாகக்கொண்ட ஸர்வேஶ்வரன்,

க்ருஷ்ணனுய்வந் தவதரித்துக் குடக்கூத்தாடி – அந்தப்ரமமாறும்படி திருக்கடித்தானத்தை-கோயில்கொண்டான்; அத்தோடேகூட வென்ஹ்ருதயத்தை – தனக்குக் கோயிலாகக்கொண்டான் ; "அழகியபாற்கடலோடும்" என்கிறபடியே. திருக்கடித்தானத்தில் நிலே யென்னைப் பெறுகைக் காகையாலே, சாத்யம் கைப்பட்டால் சாதநத்தி லிழிவாரில்லையாயிருக்க, "என்னைப்பெற்ற தத்தேசத்திலே நிற்கையாலே" என்று அத்தேசத்தோடே வந்துபுகுந்தான். ......................................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (கோயிலித்யாதி.) "அதனேடுமென்னெஞ்சகம் - கோயில்கொண்டான்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (என்பக்கலித்யாதி.) "திருக்கடித்தானத்தோடே யிவர்ஹ்ருதயத்திலே புகுருகைக்கு ஹேது - 'இவரைப்பெற்றதிவ்வூரிலே நிற்கையாலேயன்றே' என்று - இவர்பக்கலாதராதிசயத்தாலே" என்னுமிடந்தோன்ற (என்பக்கல் ப்ரேமாதிசயத்தாலே) என்கிறார்.

தன் – தனக்கு.

"அதனேடும்" என்றதுக்கு பாவம் (செருப்புவைத்தித்யாதி.)

திருக்கடித்தானத்தோ டென்னெஞ்சைக் கோயிலாகக் கொள்ளக்கூடுமோ வென்ன (அழகியவித்யாதி.) திருக்கடித்தானத்தோடேகூட விவர் திருவுள்ளத்திலே யிருக்கிறதுக்கு பாவமேதென்ன (திருக்கடித்தானத்திலித்யாதி.)

கோயில்கொளென்று தொடங்கி, கூத்த வம்மான் - திருக்கடித்தானத்தை-தன் - கோயில்கொண்டான் ; அதனேடுமென்னெஞ்சகம் – கோயில்கொண்டானித்யந்வயஃ. ..............................................................*



# ஆறம்பாட்டு.

கூத்தவம்மான்கொடியேனிடர்முற்றவு
மாய்த்தவம்மான்மதுசூதவம்மானுறை
பூத்தபொழிற்றண்டிருக்கடித்தானத்தை
யேத்தநில்லாகுறிக்கொண்மினிடரே.

## ஆறுயிரப்படி.

(கூத்தவம்மான்) இஸ்ஸம்ருத்தியெல்லாம் திருக்கடித்தானத்தையாப்ரயித்ததினுலே வந்ததென்னும் ப்ரீதியாலே, மது கைடபாதி ப்ரதிகூலநிரஸநம் பண்ணினுப்போலே, ஸ்வகியகுணசேஷ்டிதா விஷ்காரத்தாலே ஸ்வவிஸ்லேஷஜநிதமான வென்னுடைய துஃகத்தைப் போக்கியருளினவ னுறைகின்ற திருக்கடித்தானத்தை யேத்த வாருங்கோளென்று ஸ்ரீவைஷ்ணவர்களை யழைத்துக்கொண்டு, அவர்களோடேகூட வேத்திபுஜிக்கிறார். ..............................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், விரோதிநிரஸநஸ்வபாவனானவன் வர்த்திக்கிற தேசந்தானே விரோதியைப்போக்குமென்கிறார்.

கூத்த - மநோஹாரிசேஷ்டிதங்களாலே. அம்மான் - லோகத்துக்கு ஸ்வாமியாய். கொடியேன் - "காணவேணும்" என்று பலகாலும் நிர்ப்பந்தித்துக் கூப்பிட்ட கொடுமையையுடைய வென். இடர் - நெஞ்சுதுஃகத்தை. மாய்த்த - போக்கி. அம்மான் - அடிமைகொண்டவனாய். ஆஶ்ரிதவிரோதியை, மதுசூதன் - மதுவையழித்தாப்போலே யழிக்கும். அம்மான் - ஸ்வாமியானவன். உறை - வர்த்திக்கும் தேசமாய். பூத்த - புஷ்பசம்ருத்தமான. பொழில் - பொழிலையுடைய. தண்-குளிர்ந்த. திருக்கடித்தானத்தை - திருக்கடித்தானத்தை. ஏத்த - ஸ்தோத்ரம்பண்ணினவளவிலே. இடர் - துஃகங்கள். முற்றவும் - எல்லாம். நில்லா - நிலைகுலைந்துபோம். குறிக்கொண்மின் - இத்தைக் குறிக்கொள்ளுங்கோள்.... ......... ....... ...........*

## ஈடு - ஆறும்பாட்டு.

தம்முடைய ப்ரீதிப்ரகர்ஷத்தாலே, திருக்கடித்தானத்தை யெல்லாருமாஶ்ரயியுங்கோளென்கிறார்.

(கூத்தவம்மான்) மநோஹாரியான சேஷ்டிதங்களையுடைய சர்வேஶ்வரன். (கொடியேன்) மஹாபாபியான வென்னுடைய. (இடர்முற்றவும்மாய்த்தவம்மான்) தன்னைப்பிரிந்து நான்பட்ட க்லேசத்தையெல்லாம் வாஸனையோடேபோக்கின வென்ஸ்வாமி. (மதுசூதனித்யாதி) ப்ரதிகூலநிரஸந ஸ்வபாவனான சர்வேஶ்வரன் நித்யவாசம்பண்ணுகிற தேசம். (பூத்தபொழில்) அவன் நித்யவாசம்பண்ணுகையாலே நித்யவசந்தமானபொழில். கடாக்ஷவர்ஷம் மாறிலிறே பூமாறுவது. பரமஹரமான திருக்கடித்தானத்தை. (ஏத்தநில்லா—இடர்) இனியத்தைச்செய்ய, இடரானது "நமக்கிதுதேசமன்று" என்று * சும்மெனாதேகைவிட்டோடும். (குறிக்கொண்மின்) இத்தை "ஓலக்கவார்த்தை" என்றிராதே, புத்திபண்ணுங்கோள். ..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. (கூத்தவம்மானித்யாதி.) "குறிக்கொண்மின்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (தம்முடையவித்யாதி.) இதில் பரோபதேசம் பண்ணுகைக்கடி யருளிச்செய்கிறார் (தம்முடைய ப்ரீதிப்ரகர்ஷத்தாலே யெனறு.)

அவன் நித்யவாஸம்பண்ணினால் நித்யவசந்தமாகவேணுமோ வென்ன (கடாக்ஷவர்ஷமித்யாதி.) "பூத்தபொழில்" என்கையாலே - போக்யதையாலேயேத்தினாரென்று கருத்து. போக்யதையாலே யேத்தினா லிடர்போமோவென்ன (இனியத்தையித்யாதி.) சும்மெனாதே - மூச்சுவிடாதே.

கூத்தவம்மானித்யாரப்ய, ஏத்த - இடர் - நில்லா, குறிக்கொண்மினித்யந்வயஃ.......................................................................*

## ஏழாம்பாட்டு.

கொண்மினிடர்கெடவுள்ளத்துக்கோவிந்தன்
மண்விண்முழுதுமளந்தவொண்டாமரை
மண்ணவர்தாந்தொழவானவர்தாம்வந்து
நண்ணுதிருக்கடித்தானநகரே.

### ஆறாயிரப்படி.

(கொண்மின்) கோவிந்தனுடைய மண் விண் முழுதுமளந்தவொண்டாமரையை மண்ணவர் தாம்தொழுகிறபடியைக் காண்கைக்காக, வானவர் தாம்வந்து நண்ணுதிருக்கடித்தான நகரை நினையுங்கோள், இடர் கெடுமென்கிறார்... ... ... ... ... ... ... ... ... ... ...*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடைய தேஶஸ்ம்ருதிமாத்ரமே விரோதிநிவர்த்தகமென்கிறார்.

கோவிந்தன்-சர்வசுலபனான வௌஜ்ஜ்வல்யத்தை யுடையவனுடைய. மண்-பூமியையும். விண்-ஊர்த்வலோகத்தையும். முழுதும் - ஒன்றொழியாமல். அளந்த-அளந்துகொண்ட. ஒண் - நிரதிசயபோக்யமான. தாமரை - திருவடித்தாமரைகளை. மண்ணவர்-பூமியிலுள்ளார். தாம் - தங்களுக் கசாதாரணபோக்யமென்று. தொழ-தொழாநிற்க. வானவர்-நித்யாநுபவம்பண்ணுகிற பரமபதவாஸிகள். தாம் - தாங்களும். வந்து-சீலாதிக்யமநுபவிக்கைக்குவந்து. நண்ணு-ப்ராபிக்கும்படியான. திருக்கடித்தானம்-திருக்கடித்தானமாகிற. நகரை-நகரத்தை. இடர்-துஃகமெல்லாம். கெட-போகும்படியாக.உள்ளத்து-நெஞ்சிலே. கொண்மின்-கொள்ளும்படிபாருங்கோள்.

### ஈடு - ஏழாம்பாட்டு.

உங்கள் துஃகநிவ்ருத்திக்கு, ஏத்தவேண்டா, திருக்கடித்தானத்தை நெஞ்சாலேநினைக்க வமையுமென்கிறார்.

(கொண்மினித்யாதி) உங்கள் சமஸ்ததுஃகங்களும் போம்படியான திருக்கடித்தானத்தை மநஸ்ஸாலே நினையுங்கோள். (கோவிந்தன்) சர்வசுலபனானவனுடைய. (மண்விண்முழுதுமளந்தவொண்டாமரை) ஒரு தாமரைப்பூவைக்கொண்டாயிற்று பூம்யந்தரிக்ஷங்களை யளந்துகொண்டது. (மண்ணவர்தாந்தொழ) இடக்கைவலக்கையறியாத பூமியிலுள்ளார் தொழ. பரமபதம் நித்யர்க்கேயாயிருக்குமாபோலே, உகந்தருளினதேசம் சம்சாரிகளுக்கேயாயிருக்கை. (வானவரித்யாதி) சம்சாரிகளுக்கு முகங்கொடுத்துக்கொடுநிற்கிற நீர்மையை யநுசந்தித்து, நித்யசூரிகளும் வந்துகிட்டுகிறதேசத்தை – கொண்மினிடர்கெடவுள்ளத்து. இங்குள்ளாரங்குப்போவது மேன்மையையநுபவிக்க; அங்குள்ளாரிங்குவருவது சீலகுணாநுபவம்பண்ணுகைக்கு.... ... ... ... ... ... ... ... ...*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (கொண்மினித்யாதி) "இடர்கெடவுள்ளத்து-கொண்மின்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (உங்களித்யாதி)

சப்தார்த்தம் (உங்கள்சமஸ்தேத்யாதி)

அளந்ததிருவடிகளென்னுதே, "தாமரை" என்று விசேஷித்ததுக்கு பாவம் (ஒருதாமரையித்யாதி) இத்தால்பாவம் (பரமபதமித்யாதி)

சம்சாரிகளுக்காயிருக்கிறவிடத்திலே வானவர்வருவானென்னென்ன (சம்சாரிகளுக்கித்யாதி) இங்குள்ளாரங்கும், அங்குள்ளாரிங்கும் வருகிறதேதுக்காகவென்ன (இங்குள்ளாரங்கித்யாதி)

கோவிந்தன் மண் விண்முழுதும் என்றுதொடங்கி, நகரா - இடர்கெடவுள்ளத்து - கொண்மினித்யந்வய:... ... ... ... ... ... ... ... ... ... *



# எட்டாம்பாட்டு.

தானநகர்கடலைச்சிறந்தெங்கெங்கும்
வானிந்நிலங்கடன்முற்றுமெம்மாயற்கே
யானவிடத்துமென்னெஞ்சுந்திருக்கடித்
தானநகருந்தனதாயப்பதியே.

## ஆறாயிரப்படி.

(தானநகர்கள்) இப்படி திருக்கடித்தானத்தை யநுபவித்து, பின்னையும் தன்திறத்துச்செய்தருளின நன்மையைச்சொல்லுகிறார்.

உம்முடையநெஞ்சும், திருக்கடித்தானமு மெம்பெருமானுக்கிருப்பிடமாகச்சொன்னீர், வானிந்நிலங்கடல்முற்றும் அவனுக்கிருப்பிடமல்லவோவென்னில்; அங்ஙனேயாகிலு மென்னெஞ்சும் திருக்கடித்தானமு மவனுக்குப்பிறந்துடைய திருநகரியாயிருக்குமென்கிறார்.........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பரமபதாதி சர்வப்ரதேசத்திலும் ஶ்லாக்யமான ஸ்த்தாநங்களுண்டாயிருக்க, என்னெஞ்சும் திருக்கடித்தானமு மவனுக்கசாதாரண தேசமாகாநின்றதென்கிறார்.

வான்-பரமபதம். இ-இந்த. நிலம்-பூமி. கடல் - க்ஷீரார்ணவங்களாகிற. எங்கெங்கும்-எல்லாவிடத்திலும். தானம்-ஆவாஸஸ்த்தாநமான. நகர்கள் - நகரங்கள். முற்றும்-முற்றவும். தலை-தலைப்பட்ட. சிறந்து-சிறப்பையுடைத்தாய்க்கொண்டு. எம்மாயற்கே-எனக்காஶ்சர்யபூதனானவனுக்கே. ஆனவிடத்தும் - ஆயிருக்கச்செய்தேயும். என்-என்னுடைய. நெஞ்சும்-நெஞ்சும். திருக்கடித்தானம்-இங்கிருக்கைக்காகவந்து ஸந்நிஹிதனான திருக்கடித்தானமாகிற. நகரும்-நகரமும். தன-தனக்கு. தாயம்-தாயப்ராப்தமான. பதியே-அசாதாரணதேசமா யிராநின்றது... ... ... ... *

## ஈடு - எட்டாம்பாட்டு.

அவனுக்கு விலக்ஷணமானநகரங்கள் பலவுமுண்டாயிருக்கச்செய்தேயும், என்னுடையநெஞ்சையும் திருக்கடித்தானத்தையும் தாயப்ராப்தமான ஸ்த்தாநமாகவிரும்பியிருக்குமென்கிறார்.

(தானநகரித்யாதி) (வானிந்நிலங்கடல்-எங்கெங்கும் - தலைச்சிறந்த-தானநகர்கள்-முற்றுமெம்மாயற்கேயானவிடத்தும்) மேலில் லோகங்களிலும், பூமியிலும், கடலிலும், கண்டவிடமெல்லாம் மிகவும் ஶ்லாக்யமான விருப்பிடமான நகரங்கள்முற்றும், என்பக்கலிலே யபிநிவிஷ்டனான வாஶ்சர்யபூதனுக்கு. (ஆனவிடத்தும்) ஆயிருக்கச்செய்தேயும், என்னெஞ்சும் திருக்கடித்தானநகரும் தனக்கு தாயப்ராப்தமான ஸ்த்தாநமாகவிரும்பியிராநின்றான் .. ... ... ... .. ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (தானநகர்களித்யாதி) "தலைச்சிறந்த - தானநகர்கள்-திருக்கடித்தானநகரும் தனதாயப்பதியே" என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (அவனுக்கித்யாதி.)

"வான், இந்நிலம்" என்றுபதபேதம். தலைச்சிறந்த- (மிகவும்ஶ்லாக்யமான.)

எம்மாயற்கு - வானிந்நிலங்கடல் - எங்கெங்கும் - தலைச்சிறந்த - தானநகர்கள் - முற்றும் - உண்டானவிடத்திலும், என்னெஞ்சும் திருக்கடித்தானநகரும் தனதாயப்பதியே யித்யந்வயஃ. ... ... ... ... ... ... ... ... ... ... *

---

# ஒன்பதாம்பாட்டு.

தாயப்பதிகடலைச்சிறந்தெங்கெங்கு
மாயத்தினுன்மன்னிவீற்றிருந்தானுறை
தேசத்தமரர்திருக்கடித்தானத்து
ளாயர்க்கதிபதியற்புதன்றானே.

## ஆறாயிரப்படி.

(தாயப்பதிகள்) எல்லாமவனுக்குத் தாயப்பதிகளன்றோவென்னில்; அதப்படியேயாகிலும் திருக்கடித்தானமென்று லவன்றிருவுள்ளம் விழுந்துகிடக்கும்படி யாஶ்சர்யமென்கிறார்... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், திருக்கடித்தானத்திலே நித்யவாஸம்பண்ணுகிற வாஶ்சர்யபூதக்ருஷ்ணன்றானே யல்லாத ஸ்த்தலங்களிலுமிருந்தானென்கிறார்.

தேசம்-தேஜஸ்விகளான. அமரர்-நித்யஸூரிகளுக்கு ப்ராப்யமான. திருக்கடித்தானத்துள்-திருக்கடித்தானத்துள்ளே. உறை-வர்த்திக்குமவனாய். ஆயர்க்கு-கோ

பர்களுக்கு. அதிபதி-நிரவதிகஸ்வாமியான. அற்புதன்றன் - ஆஶ்சர்யகுணசேஷ்டிதங்களையுடையவன்றன். தாயம்-அசாதாரணமான. பதிகள்-அர்ச்சாஸ்த்தலங்கள். எங்கெங்கும்-எல்லாவிடத்திலும். தலை-தலைப்பட்ட. சிறந்து-ஶீலாதிகுணசம்பத்தையுடையவனுய்க்கொண்டு. மாயத்தினுல்-ஆஶ்சர்யசௌந்தர்யாதி விக்ரஹகுணவிசிஷ்டனுய். மன்னி-பொருந்தி. வீற்று-பரவ்யூஹாதிகளிற்காட்டில் தன்னுடையவ்யாவ்ருத்திதோன்றும்படியாய். இருந்தான்-இருந்தவன்... ... ... ... ... ... *

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

அல்லாததிருப்பதிகளு மெல்லாமவனுக் கப்படியேயன்றேவென்னில்; அதப்படியேயாகிலும் "என்றேடேகிட்டுகைக் குறுப்பானநிலம்" என்று திருக்கடித்தானத்திலே யத்யபிநிவிஷ்டனுனென்கிருர்.

(தாயப்பதிகளித்யாதி) (தலைச்சிறந்த - தாயப்பதிகள் – எங்கெங்கும்) மிகவும் விலக்ஷணமாய்ப் பழையதாய்வருகிற ஸ்த்தாநங்களெங்கும். (மாயத்தினுல்) அபிநிவேசத்தாலேயென்னுதல், இச்சையாலேயென்னுதல். "மாயாவயுநம்ஜ்ஞாநம்" (மாயாவயுநம்ஜ்ஞாநம்) (மன்னிவீற்றிருந்தான்) விரும்பி, தன்னைஶ்வர்யமெல்லாந்தோற்றும்படி யிருந்தருளினவன். ஐஶ்வர்யத்தால்வந்த வேறுபாடுதோற்ற விருந்தவனென்றுமாம். (உறை) நித்யவாசம்பண்ணுகிற. (தேசத்தமரர்) தேஜஸ்ஸையுடைய நித்யஸூரிகளுக்கு ப்ராப்யபூமியான திருக்கடித்தானத்துள். (ஆயர்க்கதிபதி) கோபஸஜாதீயனுய்வந்தவதரித்து, அவர்களில் தலைவனுனவன். (அற்புதன்) ஆஶ்சர்யமானபடிகளையுடையவன். உகந்தருளின தேசங்களெல்லாவற்றிலும் விருப்பமுண்டாகிலும், என்னை லபிக்கைக்காகத் திருக்கடித்தானத்திலே, தன்மேன்மையும் நீர்மையுமெல்லாம் ப்ரகாசிக்கநின்றுனென்கை... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (தாயப்பதிகளித்யாதி) "எங்கெங்கும் - தலைச்சிறந்த-தாயப்பதிகளாயிருக்கச்செய்தேயும் - திருக்கடித்தானத்திலே - மாயத்தினுல் - வீற்றிருந்தான்" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (அல்லாதவித்யாதி) அப்படியேயன்றேவென்றது - தாயப்ராப்தமன்றேவென்றபடி.

"மாயம்" என்றுல் - இச்சையைக்காட்டுமோவென்ன (மாயாவயுநமித்யாதி) "வீற்றிருந்தான்" என்றுமுழுச்சொல்லாய், (ஐஶ்வர்யமெல்லாம் தோற்றும்படியிருந்தான்) என்னுதல்; "வீற்று" என்றுபிரித்து, (வேறுபாடுதோற்றவிருந்தான்) என்னுதல்.

பாட்டுக்குபலித்தபாவம் (உகந்தருளினவித்யாதி)

தலைச்சிறந்த - தாயப்பதிகள் - எங்கெங்கும் மாயத்தினுலென்றுதொடங்கி, தேசத்தமரர் திருக்கடித்தானத்துள் - உறை - ஆயர்க்கதிபதியற்புதன்றனே யித்யந்வயः... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

# பத்தாம்பாட்டு.

அற்புதனாராயணனரிவாமன
னிற்பதுமேவியிருப்பதென்னெஞ்சக
நற்புகழ்வேதியர்நான்மறைநின்றதிர்
கற்பகச்சோலைத்திருக்கடித்தானமே.

## ஆறாயிரப்படி.

(அற்புதன்) இப்படி திருநாடு, திருப்பாற்கடல் தொடக்கமாகவுள்ள திருநகரிக ளெல்லாவற்றிலு மத்யந்த மபிமதமாயிருந்த திருக்கடித்தானத்திலே நிற்பது மேவியிருப்பதென்னெஞ்சகமென்கிறார்.........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆசந்நமான திருக்கடித்தானத்தில் நிற்கிற தென்னெஞ்சிலே பொருந்தி வர்த்திக்கைக்காக வென்கிறார்.

அற்புதன் - அநுபாவ்யமான வாஸ்சர்யசேஷ்டிதங்களையுடையனாய். நாராயணன் - அதுக்கநுரூபமான சம்பந்தத்தையுடையனாய். அரி - அநுபவவிரோதிநிரஸநசீலனாய். வாமனன் - அர்த்தியாய்வந் தநுபவிப்பிக்குமவன். மேவி-பொருந்தி. இருப்பது - இருப்பது. என் - என். நெஞ்சகம் - நெஞ்சுக்குள். நிற்பது - அதுக்குறுப்பாகவந்து நிற்பது. நற்புகழ் - அநந்யப்ரயோஜநத்வப்ரதையையுடையரான. வேதியர் - வைதிகருடைய. நால் - நாலு. மறை - வேதங்களும். நின்று - நின்று. அதிர் - முழங்கும்படியாய். கற்பகம் - கல்பகமயமான. சோலை - சோலையையுடைத்தான. திருக்கடித்தானம் - திருக்கடித்தானம். ....................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

என்னைப்பெறுமளவும் திருக்கடித்தானத்திலே நின்றான், என்னைப்பெற்றபின்பு நிற்பது மிருப்பது மென்னெஞ்சிலே யென்கிறார்.

(நாராயணன்) தன்னுடைமையை விட்டுக்கொடாதவத்ஸலன். (அரி) ஆஸ்ரிதவிரோதிநிரஸநசமர்த்தன். (வாமனன்) தன்னைச் சிறுக விட்டு ஆஸ்ரிதருடைய சர்வாபேக்ஷிதங்களையும் முடிக்குமவன். (அற்புதன்) இப்படிகளாலே யாஶ்சர்யபூதன். (நற்புகழித்யாதி) அநந்யப்ரயோஜநனென்னும் புகழையுடைய வைதிகராலே யுச்சரிக்கப்பட்ட நாலு வேதங்களாலும் முழங்காநின்றுள்ள கல்பகவநத்தையுடைய திருக்கடித்தானத்திலே - அவன்நிற்பது, மேவியிருப்பதென்னெஞ்சகமென்னுதல்; திருக்கடித்தானத்து - நாராயணன் அரிவாமனன் – அற்புதன்-நிற்பதும்-என்னெஞ்சகம், மேவியிருப்பதும் - என்னெஞ்சகமென்னுதல். திருக்கடித்தானமென்று - ஸப்தம்யர்த்தே ப்ரதமை..............................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. ( அற்புதனித்யாதி. ) "சோலைத்திருக்கடித்தானத்து - நாராயணன் - நிற்பதும் மேவியிருப்பதென்னெஞ்சகம்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை ( என்னைப்பெருமளவுமித்யாதி. )

வாத்ஸல்யாதிகளா லாஸ்சர்யபூதனென்கைக்காக, நாராயணனுதி சப்தங்களுக்கு வ்யாக்யாநம்.

வேதியர்புகழுக்கு நன்மையாவது - அநந்யப்ரயோஜநத்வம் ; அத்தை யருளிச்செய்கிறார் ( அநந்யேத்யாதி. ) நான்மறை நின்றதிராநின்றுள்ளதுமாய், கற்பகச்சோலையையுமுடைய திருக்கடித்தானத்திலே. திருக்கடித்தானமென்று - ப்ரதமையாயிருக்க, சப்தமியாகச் சொல்லுவா னென்னென்ன ( திருக்கடித்தானமித்யாதி. ) இரண்டாமந்வயம் - நற்புகழ்வேதியரொன்றுதொடங்கி, மேலே வ்யாக்யாநத்தி லிருந்தபடியே. ........................................................................*

---

# பதினொன்றாம்பாட்டு.

சோலைத்திருக்கடித்தானத்துறைதிரு
மாலைமதிட்குருகூர்ச்சடகோபன்சொற்
பாலோடமுதன்னவாயிரத்திப்பத்து
மேலைவைகுந்தத்திருத்தும்வியந்தே.

## ஆறாயிரப்படி.

( சோலை ) சோலைத்திருக்கடித்தானத்துறை திருமால் கவிக்கு ப்ரதிபாத்யன். மதிள்குருகூர்ச்சடகோபன் கவிபாடுகிறானுறு லிவையெங்ஙனேயிருக்கிறன. இவைவல்லாரை, எம்பெருமா னொருக்ஷணம் பிரியில் தரிக்கமாட்டானென்கிறார்........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக பரமபதப்ராப்தியை யருளிச்செய்கிறார்.

சோலை - சோலைகளையுடைய. திருக்கடித்தானத்து-திருக்கடித்தானத்திலே. உறை - நித்யவாசம்பண்ணுகிற. திருமாலை - ஸ்ரீயஃபதியைப்பற்ற. மதிள் - அரணான மதிளையுடைய. குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வாருடைய. சொல்-சொல்லாய். வாச்யவாசக சம்ஸ்லேஷத்தி லினிமையாலே, பாலோடமுதன்ன - பாலுமமுதுங் கலந்தாப்போலே யிருக்கிற. ஆயிரத்து - ஆயிரந்திருவா

ய்மொழியில். இப்பத்தும் - இப்பத்தும். மேலை-உத்துங்கதேசமான. வைகுந்தத்து- பரமபதத்திலே. இத்திருவாய்மொழியில் சம்பந்தமுடையாரை, வியந்து - உகந்து. இருத்தும் - ப்ரதிஷ்ட்டிதராக்கும்.

இது - கலிவிருத்தம். ......................................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழி கற்றவர்களை, இது தானே திருநாட்டிலே கொடுபோய் விடுமென்கிறார்.

( சோலையித்யாதி ) ப்ரமஹரமாய் தர்ஶநீயமான சோலையையுடைய திருக்கடித்தானத்திலே நித்யவர்சம்பண்ணுகிற ஸ்ரியஃபதியை. (மதிட்குருகூர்) சாம்சாரிகதுரிதங்களுக்குப் புகவொண்ணாத வரணையுடைய திருநகரி. ( சடகோபன்சொல் ) "ரகுவரசரிதம்முநிப்ரணீதம்" (ரகுவரசரிதம்முநிப்ரணீதம்) என்னுமாபோலே. பாலோடமுதன்னவாயிரமென்னுதல், பாலோடமுதன்ன - இப்பத்தென்னுதல். வாச்யவாசகங்களுடைய சேர்த்தியிருக்கிறபடி. பாலென்கிறது - சோலைத்திருக்கடித்தானத்துறை திருமாலை ; அமுதென்கிறது - சடகோபன் சொல்லென்கிற வாசகத்தை. இது - ஆளவந்தார் நிர்வாஹம். ( இப்பத்தும்-வியந்து-மேலைவைகுந்தத்திருத்தும் ) "சம்சாரத்திலே யித்தை யப்யசிப்பானொருவனுண்டாவதே !" என்று விஸ்மயப்பட்டு, சர்வாதிகமான பரமபதத்திலே கொடுபோய்வைக்கும். * மாயக்கூத்தனில் விடாய் நடையாடாத தேசத்திலேவைத்து, ஒருநாளும் பிரியாத வநுபவத்தைக் கொடுக்கும்.*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் ( சோலையித்யாதி. ) "மேலைவைகுந்தத்திருத்தும்வியந்தே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( இத்திருவாய்மொழியித்யாதி. )

சோலைக்குண்டான சைத்ய சௌந்தர்யங்களைப்பற்ற ( ப்ரமஹரமாய் தர்ஶநீயமானவென்றது. )

"மதிள்" என்றதுக்குபாவம் ( சாம்சாரிகேத்யாதி. ) "திருமாலை-சடகோபன்" என்கையாலே பாவம் ( ரகுவரேத்யாதி. )

அன்ன - சத்ருஶமான. * இப்பத்துக்கு விசேஷணமானதிலே யொருசௌகர்யமுண்டென்கிறார் ( வாச்யேத்யாதி. ) இத்தை விவரிக்கிறார் ( பாலென்கிறதித்யாதிவாக்யத்வயத்தாலே. ) ப்ரகரணாநுகுணமாக விவரிக்கிறார் ( மாயக்கூத்தனிலித்யாதி. ) இத்திருவாய்மொழியால் - பாடிவீடுபெற்றபடி சொல்லுகிறது. இத்திருவாய்மொழியில் அதிஷ்ட்டாநதேவதையான வெம்பெருமானுஸ்சர்யப்பட்டென்றபடி. ......................................................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

( எல்லியும்காலேயும். )

பாதத்வாச்ச்ரீதுளஸ்யாச் ச்ரிதஹ்ருதிசயநாச் ச்ரீவத்ஸவக்ஷஸ்ஸ்வபாவா
தாஸ்சர்யோபக்ரியத்வாத் ஸுரகணபஜநாத் வைரிவித்வம்ஸகத்வாத் । கோ
விந்தத்வாதசேஷாபிமதவிஷயதோ பீஷ்டஸச்சித்தகத்வாத் ஸர்வாகாராத்புத
த்வாத் ஸ்வபதவிதரணே ஸக்தமூசே சடாரி: ॥ (அஎ)

( பாதத்வாச்ச்ரீதுளஸ்யா ) அல்லியந்தண்ணந்துழாய்முடி - தர்ஸநீயமான திருத்துழாய்மாலேயாலே யலங்க்ருதனு யிருக்கையாலும் ; ( ஸ்ரிதஹ்ருதிஸயநாத் ) என்னுடைச்சிந்தையு மொருக்கடுத் துள்ளேயுறையும்பிரான் - ஆஸ்ரிதருடைய ஹ்ருதயத்திலே நித்யவாசம்பண்ணுமவனுகையாலும் ; ( ஸ்ரீத்தவக்ஷஸ்கபாவாத் ) திருவமர்மார்வன் - பெரியபிராட்டியார் பொருந்திவர்த்திக்கிற திருமார்வை யுடையனுகையாலும் ; ( ஆஸ்சர்யோபக்ரியத்வாத் ) மாயப்பிரானென - ஆஸ்சர்யமாக வுபகரிக்குமவ னுகையாலும் ; ( ஸுரகணபஜநாத் ) கோயில்கொள் தெய்வமெல்லாம் தொழ - நித்யசூரிகளாலே நிரந்தரம் சேவிக்கப்படுகையாலும் ; ( வைரிவித்வம்ஸகத்வாத் ) மதுசூதவம்மானுறை - விரோதிநிரஸந ஸ்வபாவனுகையாலும் ; ( கோவிந்தத்வாத் ) உள்ளத்துக்கோவிந்தன் - சர்வசுலபனுகையாலும் ; ( அஸேஷாபிமதவிஷயதோபீஷ்டஸச்சித்தகத்வாத் ) வானிந்நிலங்கடலித்யாதி - பரமவ்யோமக்ஷீரார்ணவாதிகளேக்காட்டிலு மாஸ்ரிதருடைய மநஸ்ஸை யத்யந்தாபிமதஸ்த்தாநமாக வுடையனுகையாலும் ; ( ஸர்வாகாராத்புதத்வாத் ) ஆயர்க்கதிபதியற்புதன்ருனே-சர்வப்ரகாரத்தாலு மாஸ்சர்யபூதனுகையாலும் ; சர்வப்ரகாரத்தாலு மென்கிற வித்தை விவரணம்பண்ணுகிறது - " அற்புதன்நாராயணனரிவாமனன் " என்று மேலிற்பாட்டு ; தன்னுலே ஸ்ருஷ்டமான நாரத்தைத் தான் வாஸமாகவுடையனுவது - விருத்தங்களான விரண்டுவடிவைக்கொண்டு விரோதியை நிரஸிப்பது, சிறுகாலேக்காட்டிப் பெரியகாலாலே யளப்பது, இப்படிகளால் திருக்கடித்தானத் தெம்பெருமானுஸ்ரிதர்க்கு ஸ்வபதவிதரணத்திலே ஸக்தனு யிருக்கிருனென்று " எல்லியுங்காலேயும் " என்கிற தசகத்திலே யாழ்வாரருளிச்செய்தா ரென்கிருர். ............(அஎ)

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

---

எல்லிபகனடந்தவிந்தவிடாய்தீருகைக்கு
மெல்லவந்துதான்கலக்கவேணுமென - நல்லவர்கள்
மன்னுகடித்தானத்தேமாலிருக்கமாறன்கண்
டிந்நிலேயைச்சொன்னுனிருந்து. (எகூ)

(எல்லிபகல்நடந்த) இவர்விடாய்தீர வடுத்தணித்தாக வந்திருந்து, பின்பி வருடனே கலந்தபடி பேசின வாழ்வார்பாசுரத்தை யநுவதித் தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; இவருடைய பெருவிடாய் கெடும்படி யிவரோடே வந்து கலந்து சம்ஶ்லேஷிக்கக் கோலி, அடுத்தணித்தாகத் திருக்கடித்தானத்திலே வந்திருந்து, தம்பக்கலிலே யத்யபிநிவிஷ்டனா யிருக்கிறபடியை யவன் காட்டிக்கொடுக்க அத்தை யநுசந்தித்து ஹ்ருஷ்டராகிற * எல்லியுங்காலையிலர்த்தத்தை, "எல்லிபகல்" என்றுதொடங்கி யருளிச்செய்கிறாரென்கை.

(எல்லிபகல்நடந்த விந்தவிடாய் தீருகைக்கு மெல்லவந்து தான் கலக்கவேணுமென) ராத்ரிந்திவமநுவர்த்தித்த வார்த்தி சமிக்கைக்கு, மந்தகதியாய்வந் தநுபவிக்கவேணுமென்று நினைத்து; முந்தற "ஹாஜாஶ்ரமங்கவா" (பரத்வாஜாஶ்ரமம்கத்வா) என்னுமாபோலே. (நல்லவர்கள்மன்னுகடித்தானத்தேமாலிருக்கமாறன்கண்டு) "நற்புகழ்வேதியர்நான்மறைநின்றதிர்கற்பகச்சோலைத்திருக்கடித்தானம்" என்றும், "செல்வர்கள்வாழும்திருக்கடித்தானம்" என்றும், "தேசத்தமரர்திருக்கடித்தானம்" என்றும், அங்குற்றைக் கநுகூலரானவர்கள் நித்யவாஸம்பண்ணும் திருக்கடித்தானத்திலே, தம்மை விஷயீகரிக்க சர்வேஶ்வரன் வந்திருக்க, அவ்விருப்பைக்கண்ட வாழ்வார். (இந்நிலையைச்சொன்னனிருந்து) அதாவது- "திருக்கடித்தானமுமென்னுடைச்சிந்தையு மொருக்கடுத்துள்ளே யுறையும்பிரான்" என்றும், "உள்ளுந்தோறும்தித்திப்பான் திருவமர்மார்வன் திருக்கடித்தானத்தை மருவியுறைகின்றமாயப்பிரான்" என்றும், "தேசத்தமரர்திருக்கடித்தானத்தை வாசப்பொழில்மன்னுகோயில்கொண்டானே" என்றும், "நேசத்தினல்நெஞ்சநாடுகுடிகொண்டான்" என்றும், "கோயில்கொண்டான்றன்திருக்கடித்தானத்தைக் கோயில்கொண்டானதனேடுமென்னெஞ்சகம்" என்றும், "என்னெஞ்சும்திருக்கடித்தானநகரும் தனதாயப்பதியே" என்றும், "அற்புதன்நாராயணனரிவாமனன்நிற்பது - கற்பகச்சோலைத்திருக்கடித்தானம் - மேவியிருப்பதென்னெஞ்சகம்" என்றும், "இப்படியிங்குற்றையிருப்புத் தம்மைவிஷயீகரிக்கைக்கு" என்றும், இஸ்ஸ்வபாவத்தைப் பொருந்தி யிருந்தருளிச்செய்தாரென்கை. அவன்வரவாற்றலே *மாயக்கூத்தனில் விடாய்தீர்ந்து, பொருந்தியிருந்தருளிச்செய்தாரென்கை.........(எசு)

எட்டாம்பத்தில் - ஆறுந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி - எசு.—பாட்டு - அ௬அ.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## எட்டாம்பத்து.

## ஏழாந்திருவாய்மொழி.

### இருத்தும் - ப்ரவேஶங்கள்.

### பன்னீராயிரப்படி.

ஏழாந்திருவாய்மொழியில், திருக்கடித்தானத்திலே யெழுந்தருளியிருந்தசர்வேஶ்வரன், தம்முடைய திருவுள்ளத்திலே சமஸ்தவிரோதிகளும் கழியும்படி புகுந்து பரிபூர்ணமாக வெழுந்தருளி யிருக்கக்கண்டு ; அவன்தானே யர்த்தியாய்ப் புகுந்தபடியையும், அவனுடைய விரோதிநிவர்த்தகத்வத்தையும், அஜ்ஞாந தமோநிரஸநத்தையும், அதுக்கடியான அத்யுஜ்ஜ்வல விக்ரஹயோகத்தையும், ஸுஸ்த்திரஸ்த்திதியையும், அத்தால் பிறந்த வவயவசோபையையும், அவ்வழகினுடைய வநுபாவ்யத்வாதிசயத்தையும், நிர்ஹேதுகோபகாரத்தையும், அதிசயிதோபகாரத்தினுடைய வநுசந்தேயத்வத்தையும், நித்யாநுபாவ்யபரத்வத்தையுமநுசந்தித்து, ஏவம்பூதனான சர்வேஶ்வரன் தன்றிருவுள்ளத்தில் புகுந்திருக்கிற வதிசயிதவ்யாமோஹத்திலே விஸ்மிதராய், "இதுப்ரமமோ, மாயாதிவிகாரமோ" என்று சங்கித்து, நம்மளவில் விப்ரலம்பியானென்று தெளிந்து, "இதோருபகாராதிசயமே !" என்று அத்யந்தம் ஹ்ருஷ்டராகிறார். ....................................................................................*

### ஈடு.

இத்திருவாய்மொழியிற் பேற்றுக்கு க்ருஷிபண்ணினபடி கீழடைய ; மேல் - இப்பேற்றுக்கு வேலியாயிருக்கிறது. இத்திருவாய்மொழிதன்னில் செய்கிறதென்னென்னில் ; தாமநாதிகாலம் புத்திபூர்வகமாகப்பண்ணிப்போந்த ப்ராதிகூல்யங்களை யடையவிஸ்மரித்து, ஆநுகூல்யம் பிறந்தபின்பு ப்ராமாதிகமாக வுண்டானவற்றைக் காணுக் கண்ணிட்டு, தம்முடையபேற்றுக்குத் தாமேயத்நித்து, தமக்குப்பிறந்த விடாய்தீரும்படி சம்ஶ்லேஷித்து, இதுதானிவர்க் குபகரித்தானு யிருக்கையன்றிக்கே தன்பேறுயிருக்கிறபடியை யநுசந்தித்து, "தானேயர்த்தியாய்த் தன்பேறுக வந்துகலந்தவனை நாமிரப்பாளராய்க் கூப்பிட்டவிட மென்செய்தோ மானேம்" என்று லஜ்ஜித்து, "ஒருசம்சாரிசேதநன்பக்கலிலே சர்வேஶ்வரன்பண்ணும் விஷயீகாரமிருக்கும்படியேயிது!" என்றுவித்தராய் ; [ராவணாஹயெடிதெலஸதொராவணாநுஜஃ] [ ராகவேணுபயேதத்

தேஸங்கதோராவணநுஜ: ] என்று ராவணன் பின்பிறந்த நாம் ரகுகுலத்திலுள்ளார்க் காளாகப் புகாநின்றேமோ வென்றிருந்தவன், பெருமாள் பாடுநின்று மருளப்பாடிட்டு வந்தவாறே, "என்னையே யிப்படிகைக்கொண்டருளுவது, அவன் பின்பிறந்த தண்மை யெங்கேபோயிற்று" என்று, வேரற்றமரம்போலே, கூடவந்த நால்வரோடும் திருவடிகளிலேவிழுந்து தறைப்பட்டாப்போலவும்; ராமகுணங்கள் நடையாடாத வசோகவநிகையிலே திருவடிபோய்ப்புக்கு, "ஸம்ஸ்ரவேமதுரம்வாக்யம்" ( ஸம்ஸ்ரவேமதுரம்வாக்யம் ) என்று, பிராட்டியுளளாம்படி ராமநாமசங்கீர்த்தநத்தைப்பண்ண, "இங்கிலத்திலிது பரிமாறுவதொன்றல்ல, [ கிம்நுஸ்யாச்சித்தமோஹோயம்பவேத்வாதகதிஸ்த்வியம்। உந்மாதஜோவிகாரோவாஸ்யாதியம்ம்ருகத்ருஷ்ணிகா ] [ கிம்நுஸ்யாச்சித்தமோஹோயம்பவேத்வாதகதிஸ்த்வியம் । உந்மாதஜோவிகாரோவா ஸ்யாதியம்ம்ருகத்ருஷ்ணிகா ] என்று இது சித்தமோஹத்தால் வந்ததோ, வாதகதியோ, உந்மாதஜவிகாரமோ, ம்ருகத்ருஷ்ணிகையோ" என்று பலபடிகளைச்சங்கித்து, "முன்னேநின்றுவார்த்தைசொல்லாநின்றான், இதுகேட்டு நாம் விக்ருதராகிறமையுமுண்டு, ஆனபின்பு இதுமெய்யாமித்தனை" என்று ஸ்ரீஜநகராஜன்திருமகள்தெளிந்து ஹ்ருஷ்டையானாப்போலவும்; இவரும், "இதுவும்ப்ரமஸ்வப்நாதிகளிலேயொன்று" என்று சங்கித்து, "அங்ஙனல்ல, மெய்" என்று தெளிந்து ப்ரீதராய், "நமக்கத்வேஷத்தைப் பிறப்பித்து, ஆபிமுக்யத்தையுண்டாக்கி, தன்னாலல்லது செல்லாமையைப் பிறப்பித்து, தன் மேன்மைபாராதே யிப்படி தாழநின்று வந்து கலந்து பரிமாறுவதே!, இதென்ன வாஸ்ரிதபாரதந்த்ர்யம்!, இதென்னநீர்மை!" என்று அவன்படிகளை யநுசந்தித்து ஹ்ருஷ்டராகிறார். ................................*

## ஜீயர் அரும்பதம்.

இருத்தும் வியந்துப்ரவேஶே, * மாயக்கூத்தனில் விடாய்தீரக் கலந்த கலவியாலுண்டான வித்திருவாய்மொழியில் ப்ரீதி வாசாமகோசரமென்று விவக்ஷித்து, கீழும் மேலும் ப்ரீதியுண்டாயிருக்க விதுக்காதிக்ய மேதென்ன வருளிச்செய்கிறார் ( இத்திருவாய்மொழியிலித்யாதி வாக்யத்வயத்தாலே. ) வேலியாயிருக்கிறதென்றது - வர்த்தகமாயிருக்கிறதென்றபடி.

வாசாமகோசரமான ப்ரீதியை யுபபாதிக்கைக்காக, தத்விஷயசங்கையை யநுவதிக்கிறார் ( இத்திருவாய்மொழிதன்னிலித்யாதி. ) "எதிர்சூழல்புக்கு" என்றத்தைக் கடாக்ஷித்து ( தம்முடையபேற்றுக்கித்யாதி. ) "என்னுளிருள்தானறவீற்றிருந்தான்" என்றத்தைப்பற்ற ( தமக்குப்பிறந்தவிடாயித்யாதி. ) "இருந்தான்கண்டுகொண்டு" என்றத்தைப்பற்ற ( இதுதானிவர்க்கித்யாதி. ) "அருத்தித்தெனைத்தோர்பலநாளழைத்தேற்கு" என்றத்தைக் கடாக்ஷித்து ( தானேயர்த்தியாயித்யாதி. ) "என்றன்கருத்தையுறவீற்றிருந்தான்" என்றத்தைப்பற்ற ( ஒருசம்சாரிசேதநனித்யாதி. ) பகவதங்கீகாரத்தாலே யீடுபட்டமைக்கு த்ருஷ்டாந்தம் ( ராகவேணேத்யாதி ) "விபீஷணோமஹாப்ராஜ்ஞோபூமிம்ஸமவலோகயந்" ( வி

பீஷண்ணேமஹாப்ராஜ்ஞோபூமிம்ஸமவலோகயந்) இத்யுத்தரார்த்தம். "ஸந்த:" (ஸந்நத:) என்றதிலே நோக்கு. சங்கித்துத் தெளிந்ததுக்கு த்ருஷ்டாந்தம் (ராமகுணங்களித்யாதி.) "மருள்தானீதோ மாயமயக்குமயக்கே" என்றத்தைப்பற்ற (இவருமித்யாதி.) "மாயமயக்குமயக்கான்" என்றத்தைப்பற்ற (அங்ஙனல்ல மெய்யென்று தெளிந்தென்றது.) "வைத்தேன்மதியால்" என்றத்தைப்பற்ற (நமக்கத்வேஷத்தையித்யாதி.) "ஏவம்பஹுவிதாம்சிந்தாம் சிந்தயித்வாமஹாகபி:। ஸம்ஶ்ரவேமதுரம்வாக்யம் வைதேஹ்யாவ்யாஜஹாரஹ," (ஏவம்பஹுவிதாம்சிந்தாம்சிந்தயித்வாமஹாகபி:। ஸம்ஶ்ரவேமதுரம்வாக்யம் வைதேஹ்யாவ்யாஜஹாரஹ,) "கிஞ்சஸ்யாச்சித்தமோஹோயம்" (கிந்நுஸ்யாச்சித்தமோஹோயம்) இத்யாதி, சுந்தரகாண்டே. ...........................................*

---

## ஏழாந்திருவாய்மொழி

# முதற்பாட்டு.

இருத்தும்வியந்தென்னைத்தன்பொன்னடிக்கீழென்
றருத்தித்தெனைத்தோர்பலநாளழைத்தேற்குப்
பொருத்தமுடைவாமனன்றான்புகுந்தென்றன்
கருத்தையுறவீற்றிருந்தான்கண்டுகொண்டே.

### ஆறாயிரப்படி.

(இருத்தும்வியந்து) இப்படியென்னெஞ்சிலே புகுந்தருளுகிறான், நான் தன்னைப்பிரிந்து பட்டபாடெல்லா மொன்றன்றென்னும்படி தானென்னைப்பிரிந்து வ்யஸநப்பட்டு * ஒருவண்ணமென்னைக்கண்டுகொண்டு புகுந்து பரிபூர்ணனாயிருந்தருளினான், ஒருவனுடைய ப்ரணயித்வமிருக்கும்படியென், இவனையாகாதே நான், "இதுவோபொருத்தம்" என்றுசொல்லிற்றென்கிறார் ...........................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், நானர்த்தியாய்க்கூப்பிட்டழைத்த விடாயெல்லாந்தீரும்படி தானர்த்தியாய், என்னெஞ்சிலே பெறாப்பேறுபெற்றானாகப்புகுந்திருந்தானென்கிறார்.

என்னை - தன்னையொழியச்செல்லாமையையுடையேனானவென்னை. என்ப்ராவண்யாதிசயத்தைக்கண்டு, வியந்து-விஸ்மிதனாய். தன் - தன்னுடைய. பொன்-நிரதிசயபோக்யமான. அடிக்கீழ்-திருவடிகளின்கீழே. இருத்தும் - இருத்தும். என்று-என்று. அருத்தித்து-அர்த்தித்து. எனைத்தோர்-அநேககாலம். பலநாள்-ஒருபடிப்பட நாள்தோறும். அழைத்தேற்கு-அழைத்துக்கூப்பிட்டவெனக்கு. தான்-தான். பொருத்தம்-ப்ராவண்யம். உடை-உடையனான. வாமனன் - வாமனனாய்க்கொண்டு. புகுந்து-மஹாபலியஜ்ஞவாடத்துக்குப்போனாப்போலே தானேவந்துபுகுந்து. என்றன்-என்னுடைய. கருத்தை-அர்த்தித்வவிசிஷ்டமானநெஞ்சிலே. உற-சுஸ்த்திரமா

ம்படிக்கிடாக. வீற்று-என்னிலும் தனக்குப்பிறந்த வபிசிவேஷ வ்யாவ்ருத்திதோற்றும்படி. பெறுப்பேறுபெற்றுப்போலே, கண்டுகொண்டு-பூர்ணவலோகநம்பண்ணிக்கொண்டு. இருந்தான்-இருந்தான் .................................................*

## ஈடு - முதற்பாட்டு.

இத்திருவாய்மொழியில் தமக்குண்டானலாபத்தை சங்க்ரஹேண வருளிச்செய்கிறார்.

(என்னைத்தன்பொன்னடிக்கீழ்-வியந்து-இருத்தும்-என்று) தன் வாசியறியாதே சப்தாதிவிஷயங்களிலே யக்யபரனானவென்னை, ப்லாக்யமான தன்றிருவடிகளின்கீழே, "'ஸமஹாத்மா ஸுதுர்லபः' (ஸமஹாத்மாஸுதுர்லபः) என்று கைவாங்கியிருக்கும் சம்சாரத்திலே நம்மையபேக்ஷிப்பானொருவனுண்டாவதே!" என்று விஸ்மயப்பட்டு, இனியொருநாளும் பிரியாதபடியிருத்தியடிமைகொள்ளும். இத்தால்-ப்ராப்ய ப்ராபகங்களைச்சொல்லுகிறது. தன்பொன்னடிக்கீழென்று- ப்ராப்யஸ்வரூபம்சொல்லிற்று; இருத்துமென்று - ப்ராபகனுமவனேயென்றது. (வியந்து - இருத்தும்) தன்பேறாகவிருத்தும். (அருத்தித்து) சேதநனவாசிக் கித்தனையும்வேணுமிறே. (எனைத்தோர்பலநாள்) "நாளும்" என்றத்தைச் சொல்லுகிறார். (அழைத்தேற்கு) "என்னையாளக்கூப்பிட்டழைத்தக்கால்" என்றத்தைச்சொல்லுகிறார். "இவன் ப்ரணயித்வத்தையறியாதே, தாழ்த்தானாகவும், நாமபிநிவிஷ்டரர்கவும் நினைத்துக்கூப்பிட்டென்னகார்யஞ்செய்தோமென்கிறார்காண்" என்னும் பிள்ளான். (அழைக்கவுங்கூடமாட்டாத விவனையோநாமழைத்தது) அத்தலையில் ப்ரணயித்வத்தையநுஸந்தித்தால், அர்த்தித்வமேதொடங்கி மிகையாயிறேயிருப்பது; * எழுதுமென்னுமிது மிகையாயிறேயிருப்பது. (பொருத்தமுடை) இப்படி பொருத்தமுடையவனையே "இதுவோபொருத்தம்" என்றது. (வாமனன்) நானர்த்தித்தவிடமென்செய்தேனானேன். தன்னுடைமைபெறுகைக்குத்தானிரப்பாளனானவனை. (தான்புகுந்து) என்னைத்தான்பெறுகைக்கர்த்தியாய்வந்துபுகுந்து. (என்றன்கருத்தையுற) "தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே" என்ற வென்னினைவைத்தான்கைக்கொண்டான். (வீற்றிருந்தான்) இவரைப்பெற்ற வத்தாலுண்டானவேறுபாடு வடிவிலேதோற்ற க்ருதக்ருத்யனாயிராநின்றான். (கண்டுகொண்டே) மஹாவ்யாதியைத்தப்பின புத்ரனை மாதாபிதாக்கள் பார்த்துக்கொண்டிருக்குமாபோலே, * மாயக்கூத்தனில் விடாய்க்குத்தப்பினவனென்று பார்த்துக்கொண்டிராநின்றான் ... ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (இருத்துமித்யாதி.)

விஸ்மயஹேதுகதநமுகேநார்த்தம் (ஸமஹாத்மேத்யாதி.) இப்படி சொன்னத்தால் பலிதத்தை யருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதி.) சொல்லும்ப்ரகாரமே

தென்ன (தன்பொன்னடிக்கீழித்யாதிவாக்யத்வயம்.) "வியந்து" என்றதுக்கு பாவம் (தன்பேருகவித்யாதி.)

அருத்தித்து - அர்த்தித்து. தன்பேருகவிருத்திஞலர்த்திக்கிறதென்னென்ன (சேதநனுனவித்யாதி.) * மாயக்கூத்தனில் "நாணும்" என்றத்தை யநுபாஷிக்கிறதென்கிருர் (நாணுமித்யாதி.) கீழுக்கெல்லாம் பாவம் (இவன் ப்ரணயித்வத்தையித்யாதி.) அநுதபிக்கிறதென், அர்த்திக்கவேண்டாவோவென்ன (அத்தலையித்யாதி.) "அர்த்தித்வம்மிகை" என்னுமிதுக்கு ப்ரமாணம் (எழுதுமென்னுமித்யாதி.)

"பொருத்தமுடை" என்றதுக்குஹார்த்தபாவம் (இப்படியித்யாதி) "வாமனன்" என்றதுக்குஹார்த்தபாவம் (நானர்த்தித்தவித்யாதிவாக்யத்வயம்) (தன்னுடைமை) இத்யாதிவாக்யாநந்தரம் (நானர்த்தித்த) இத்யாதிவாக்யமநுஸந்தேயம்.

"என்றன்கருத்தையுற -" என்னுடையப்ரார்த்தநாரூபமான நினைவைத்தானுற்றென்றபடி. என்னினைவைத்தான் கைக்கொண்டானென்றது - நான் தனக்கேயுறுப்பாக விநியோகப்பட வென்னுமாபோலே, தானெனக்கேயுறுப்பாக விநியோகப்படவேணுமென்றபிசந்திபண்ணிஞனென்றபடி. "கண்டுகொண்டு" என்றதுக்கு பாவம் (மஹாவ்யாதியித்யாதி)

என்னைத் தன்பொன்னடிக்கீழ்-வியந்து-இருத்தும்- என்றருத்தித்தனைத்தோரென்றுதொடங்கி, என்றன்கருத்தையுற-கண்டுகொண்டு-வீற்றிருந்தானித்யந்வய:. *



## இரண்டாம்பாட்டு.

இருந்தான்கண்டுகொண்டெனதேழைநெஞ்சாளுந்
திருந்தாதவோரைவரைத்தேய்ந்தறமன்னிப்
பெருந்தாட்களிற்றுக்கருள்செய்தபெருமான்
றருந்தானருடானினியானறியேனே.

### ஆறாயிரப்படி.

(இருந்தான்) என்னுள்ளேபுகுந்தருளுகிறுன்; என்னுடைய சர்வகரணங்களு மிக்குணமல்லது மற்றொருகுணமறியாததொருபடி யிருந்தருளினன்; ஆதலால், "இதின்மேலில்லை" என்னும்படி பண்டெனக்குச் செய்தருளினவருளை யோரருளாகமதியேனென்கிருர்.................. *

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், விரோதியான விந்த்ரியங்கள் பலக்ஷயம்பிறக்கும்படி யென்னெஞ்சிலெழுந்தருளியிருந்த வுபகாரத்துக்களவறிகிறிலேனென்கிருர்.

எனது-என்னுடைய. ஏழை-சபலமான. நெஞ்சு - நெஞ்சை. தாங்களிட்டவழக்காம்படி, ஆளும் - ஆண்டுகொண்டுபோருவதாய். திருந்தாத - அநியாம்யதயா. ஓர்-அத்விதீயமான. ஐவரை-ஐந்திந்த்ரியங்களும். தேய்ந்து-க்ஷயித்து. அற-முடியும்

படியாக. மன்னி-சுஸ்த்திரமாம்படி நெஞ்சிலேபுகுந்து. கண்டுகொண்டு - நிதியெடுத்துக்கண்டுகொண்டிருப்பாரைப்போலே. இருந்தான்-பேராமலிருந்தவன். பெரு-பெரிய. தாள்-தாளையுடைத்தான. களிற்றுக்கு-களிற்றுக்கு. அருள்செய்த - ஒருமுதலையால்வந்த க்லேசத்தைத்தீர்த்தருள்செய்த. பெருமான்-சர்வாதிகன். தான் - தான். தரும்-அவனுக்குபகரிக்கும். அருள்தான்-உபகாரம். இனி-என்னளவிலருளைக்கண்ட பின்பு. யான், அறியேன்-ஓரருளாகவறிகிறிலேன்.

ஐந்திந்த்ரியங்களாகிற முதலையிலே யநாதிகாலமகப்பட்ட வெனக்கு நீபண்ணின விந்தவுபகாரத்துக் கது சத்ருஶமன்றென்றுகருத்து.........................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

என்னுடையவிந்த்ரியவஶ்யதையைத் தன்னழகாலேதவிர்த்து, என்னைவிஷயீகரித்த வுபகாரத்தோடொவ்வாது ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய வாபந்நிவாரணமுமென்கிறுர்.

(இருந்தான்கண்டுகொண்டு) தரித்ரன், நிலாபமுண்டானல் பார்த்துக்கொண்டிருக்குமாபோலே, பார்த்தபடியே யிராநின்றுன். "அந்யோந்யமபிவீக்ஷந்தௌ நத்ருப்திமுபஜக்மது:" (அந்யோந்யமபிவீக்ஷந்தௌநத்ருப்திமுபஜக்மது:) என்கிறபடியே சொல்ல எதிர்த்தலையானதம்மைக் காண்கிறிலர். (எனதேழைநெஞ்சாளும்) கண்டதெல்லாவற்றிலும் சபலமாயிருக்கிற வென்னெஞ்சை, அதுவே பற்றுசாக விந்த்ரியங்கள் பொதியெடுக்கத்தொடங்கிற்று. ஒரு ப்ரபலனைப்பற்றுதே நடுவேநின்றவாறே பணிகொள்ளத்தொடங்கிற்று. (திருந்தாத) சர்வசக்தியான சர்வேஶ்வரனாலு மநாதிகாலம் திருத்தப்போகாதபடியிறே யிவற்றின் வன்மையிருப்பது. (ஓரைவரை) இனியிப்படி யோரைவரைத்தேடப்போகாது. இவற்றுல்பட்ட நலிவின்மிகுதியாலே சொல்லுகிறுர். (தேய்ந்தறமன்னி - இருந்தான்) கண்ணுக்கிலக்கான ப்ராக்ருதவிஷயங்களில் பற்றுநேராக க்ஷயிக்கும்படி, தன் வடிவழகைக் காட்டிக்கொண்டு புகுந்திருந்தான். விஷயாந்தரங்களிலும் வடிவழகிலேயிறே யிவன் துவக்குண்டிருப்பது. ராஜாக்கள், சத்ருக்களை யாசநபலத்தாலே வெல்லுமாபோலே, "இருப்பாலே யிந்த்ரியங்களை வெல்லவேணும்" என்று வந்து புகுந்திருந்தான். * போதரோயென்று சொல்லிப் புந்தியிற்புகுந்து தன்பாலாதரம்பெருகவைத்தவழகனிறே.

(பெருந்தாளித்யாதி) பெரியதாள்களையுடைய களிற்றுக்கருளின சர்வேஶ்வரன். வடிவில் கனமும் நோவில் பாடாற்றவொண்ணுமைக் குடலென்கை. (பெருமான் - தான் - தரும் - அருள்தான்) தருமருள்—தந்தவருள். "தரும்" என்கிறவிது - காலத்ரயத்திலும் சொல்லலாயிருக்கையாலே சொல்லுகிறுர். ஆஶ்ரிதர்க்குச் செய்ததும் தமக்குச்செய்ததாகவிறே யிவர்நினைத்திருப்பது. (இனியானறியேன்) எனக்குதவினபின்

பு, நானத்தை யொன்றாக நினைத்திரேன். ஆனை நோவுபட்டது ஆயிரம்வ த்ஸரம், அகப்பட்ட பொய்கை பரிச்சிந்நம், முதலையொன்று; எனக்குக் காலமநாதி, அகப்பட்டது சம்சாரார்ணவத்திலே, முதலையஞ்சு; இத்தை மீட்டுக்கொண்ட மஹாகுணத்துக் கதொருகுணமாயற்றதோ. ஸ்ரீகஜேந்த் ராழ்வான்பக்கல் பண்ணினவருளையிட்டு, புறம்புள்ளாரை வ்யாவர்த்தித் தார்; தமக்குப்பண்ணின வருளையிட்டு அதுதன்னை வ்யாவர்த்திக்கிறார் *

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (இருந்தானித்யாதி.) "திருந்தாதவோரைவரை" என்றுதொடங்கி, "அருள்தானினியானறியேன்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (என்னுடையவித்யாதி.)

"கண்டுகொண்டு - இருந்தான்" என்றதுக்கு த்ருஷ்டாந்தபூர்வகமாகபாவம் (தரித்ரனித்யாதி.) "அவன்கண்டுகொண்டு - இருந்தான்" என்றத்தைச் சொல்லுகிறதென் தாம் பார்த்துக்கொண்டிருந்தத்தைச் சொல்லாதேயென்ன (அந்யோந்யமித்யாதி) "[illegible]" (ததஸ்ஸப்ரீதமநஸௌதாவுபௌ கபிராகவௌ । அந்யோந்யமபிவீக்ஷந்தௌ நத்ருப்திமுபஜக்மது:) இதி கிஷ்கிந்தா காண்டே. "அவன்கண்டுகொண்டு - இருந்தான்" என்கையாலே - எதிர்த்தலையான தம்மைக்காண்கிறிலரென்றபடி. விவரணம் (ஒருப்ரபலனையித்யாதி.) நடுவேநின்றவாறேயென்றது - விஷயசபலனாய் நடுவே நின்றவாறேயென்றபடி. இந்த்ரியங்களைத் திருத்தப்போகா ததினுறைப்பை யருளிச்செய்கிறார் (சர்வசக்தீத்யாதி.) ஐந்தென்னாதே, "ஐவர்" என்றதுக்கு பாவம் (இவற்றால்பட்டவித்யாதி.) தேய்ந்தற - நிஶ்ஶேஷமாம்படியாக. குணங்களிருக்க வடிவழகைக் காட்டுவானென்னென்ன (விஷயாந்தரங்களிலுமித்யாதி.) "மன்னி - இருந்தான்" என்றதுக்குபாவம் (ராஜாக்களித்யாதி.) அழகாலே யிந்த்ரியவஶ்யதையைப் போக்கிக்கொண்டு புகுந்திருந்தானென்றதுக்கு ப்ரமாணம் (போதரேயித்யாதி) இங்கே போரீர் என்று சொல்லி, ஹ்ருதயத்திலே புகுந்து தன்பக்கலாதரம் பெருகும்படி வைத்த வழகையுடையவனுரித்யர்த்த:. திருமாலை, "சூதனாய்" இத்யாதி.

"களிறு" என்னாதே, "பெருந்தாள்" என்று விசேஷித்ததுக்குபாவம் (வடிவிலித்யாதி.) "தரும்" என்றால் - தந்தவென்று பூதார்த்தவாசக மாமோவென்ன (தருமென்கிறவித்யாதி.) கொடுத்தவென்னாதே, "தரும்" என்பானென்னென்ன (ஆஶ்ரிதர்க்கித்யாதி.) அருள்தான் - அருள்தன்னையென்றபடி. "இனி" என்றதுக்கு பாவம் (எனக்குதவினவித்யாதி.) எனக்குதவினவென்றது - இந்த்ரியவஶ்யதையைப் போக்கினத்தை. நினையாமைக்கு வாசியேதென்ன (ஆனையித்யாதி.)

எனதேழையென்று தொடங்கி, தேய்ந்தறமன்னி - கண்டுகொண்டு - இருந்தான் - இனியான் - பெருந்தாட்களிற்றுக் கருள்செய்தபெருமான் - தான் - தரும் - அருள்தான் - அறியேனித்யந்வய:. ......................................................*



# மூன்றாம்பாட்டு.

அருடானினியானறியேனவனென்னு
ளிருடானறவீற்றிருந்தானிதுவல்லாற்
பொருடானெனின்மூவுலகும்பொருளல்ல
மருடானீதோமாயம்மயக்குமயக்கே.

## ஆறாயிரப்படி.

(அருள்தான்) என்னுள்ளேயிருந்தருளின விவ்வருளல்லது மற்றோரருளை நானொரருளாகமதியேன், அவனு மென்னுள்ளேயிருந்தருளின விவ்விருப்பல்லது மற்று லீலோபகரணமான வண்டங்களையும் திருநாட்டையும் மொருபொருளாகமதியானென்று, இப்படி யெம்பெருமானுக்குத் தம்பக்கலுள்ள வபிநிவேஶத்தைப்பேசி, தம்முடைய நிகர்ஷத்தை யநுசந்தித்து, ஏவம்வித பகவதபிநிவேஶ விஷயத்வ ரூபசம்பத்தான தெனக்கு சம்பவியாது, என்னுடைய ப்ரமமாதல், அவனென்னை ப்ரமிப்பித்தானாதலல்ல திதுகூடாதென்கிறார்.............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்னுடைய வவித்யாதிரூபமான விருள்போம்படி யென்னெஞ்சிலே புகுந்திருந்தான், இதவனுக்கதிசயித புருஷார்த்தமா யிராநின்றது, இத்தை யிப்போதுபகாரமென்று நினைத்திருக்கிறிலேன்; இது ப்ரமமோ, மாமாயமோவென்கிறார்.

அவன் - என்பக்கலிலே யத்யந்தாபிநிவிஷ்டனானவன். என்னுள் - என்னெஞ்சுக்குள்ளான. இருள்தான் - அஜ்ஞாநாதிதமஸ்ஸெல்லாம். அற - போம்படி. வீற்று - பெரிய மேன்மையோடே. இருந்தான் - இருந்தான். அவனுக்கு, இது - இவ்விருப்பு. அல்லால் - ஒழிய. பொருள்தான் - வேறுபுருஷார்த்தம். எனில் - உண்டோவென்னில். மூவுலகும் - த்ரிவித சிதசிச்சேஷத்வமும். பொருளல்ல - ஒருபொருளாயிருக்கிறதில்லை. இதசம்பாவிதமாகையாலே, இனி - இனி. இத்தை, அருள்தான் - ஓர்உபகாரமாக. யான், அறியேன் - நினைத்திருக்கிறிலேன். ஈதுதான் - இதுதான். மருளோ - என்ன ப்ரமமோ. அவன்றான், மாயம் - ஆஶ்சர்யமான. மயக்கு - ப்ராமகசேஷ்டிதங்களாலே. மயக்கே - ப்ரமிப்பிக்கிறபடியோ........................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

அவாப்த சமஸ்தகாமனான சர்வேஶ்வரன், தன்பக்கலிப்படி வ்யாமோஹம் பண்ணுகை கூடாததொன்றென்று சங்கித்து, இவ்வநுபவம் ப்ரமாதிகளிலே பிறந்ததோவென்கிறார்.

(அருள்தானினியானறியேன்) என்னுடைய விந்த்ரிய வஶ்யதையத்தவிர்த்த விதுதன்னையு மிப்போதொன்றாக நினைத்திரேன். எத்தைப்பற்றவென்னில் (அவனித்யாதி) அவன், என்னுடைய ஹ்ருதயத்தி லஜ்ஞாநாந்தகாரமெல்லாம் போம்படி பெறுப்பேறுபெற்றானாய், அவ்வேறுபாடுதோற்ற விராநின்றான்; இனியெனக்கு வேறொன்றுதோற்

றுமோ. ( இதுவல்லாலித்யாதி ) இதுக்குத் திருமாலையாண்டான் பணிக்கும்படி - "நாட்டார், ஐஶ்வர்யங்களில் தலையாகச்சொல்லுவது-த்ரைலோக்யைஶ்வர்யத்தையிறே; அதுவுமெனக்கொரு சரக்கல்லவென்கிறார்." என்று. எம்பெருமானாரருளிச்செய்யும்படி - "என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்தெழுந்தருளியிருக்கிற விருப்பொழிய, * வீற்றிருந்தேழுலகுந்தனிக்கோல்செல்ல விருக்குமிருப்பையும் தனக்கைஶ்வர்யமாக நினைத்திருக்குமோவென்றுபார்த்தால், அதுவுமொரு சரக்காக நினைத்திருக்கிறிலன்" என்று; இதுவே ப்ரகரணத்துக்குச்சேருவது. ( மருள்தானீதோ ) ஒருசம்சாரி சேதநனைப்பெற்று சர்வேஶ்வரனிப்படி யிருந்தானென்னுமது கூடுவதொன்றன்று, இது வென்னறிவுகேட்டாலே சொல்லுகிறேனோ. ( மாயமயக்குமயக்கே ) அன்றிக்கே, அவன் தன்னுடைய வாஶ்சர்யமான ப்ரமசாதநங்களையிட்டு ப்ரமிப்பித்தானோ. நெடுநாள் ப்ரக்ருதியையிட் டறிவுகெடுத்தான், இப்போது தன் வ்யாமோஹத்தாலே யென்னை ப்ரமிப்பித்தான்.................................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு ( அருள்தானித்யாதி ) "மருள்தானீதோ" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை ( அவாப்தேத்யாதி )

வேறொன்றுதோற்றுமோ வென்றது - இந்த்ரிய வஶ்யதையைப்போக்கினதுவுமோரதிசயமாய்த் தோற்றுமோ வென்றபடி.

"இதுவல்லால் - மூவுலகும் - பொருள்தானெனில் - பொருளல்ல" என்றந்வயம். இன்னார்க்குப்பொருளல்ல வென்னுமையாலே நிர்வாஹத்வயம் ( இதுக்கித்யாதி ) "இதுவல்லால் - * மாயக்கூத்தனில் விடாய்தீரக்கலந்த விவனை யநுபவித்திருக்குமதொழிய, மூவுலகும் பொருள்தானெனில் - த்ரைலோக்யைஶ்வர்யமோ மைஶ்வர்யமோவென்றுபார்த்தால், பொருளல்ல - அதெனக்கோரைஶ்வர்யமாய்த் தோற்றுது" என்று ஆளவந்தார் நிர்வாஹத்துக்கு சப்தார்த்தம். "என்னுடைய ஹ்ருதயத்திலே யிருக்குமதொழிய, சர்வலோகேஶ்வரனு யிருக்கையு மைஶ்வர்யமுவென்றுபார்த்தால், அதவனுக்கைஶ்வர்யமல்ல" என்று எம்பெருமானார் நிர்வாஹத்துக்கு சப்தார்த்தம். இன்னார்க்குப்பொருளல்ல வென்னுமையாலே - எனக்குப் பொருளல்ல, ஈஶ்வரனுக்குப்பொருளல்லவென்றபடி. ஈஶ்வரவ்யாமோஹகதந ப்ரகரணமாகையாலே சேருமென்றபடி.

"ஈது - மருள்தான் - ஓ -" இதென்னுடைய ப்ராந்தியோவென்று சப்தார்த்தம். ப்ராந்தியாவானென், யதார்த்தமாக வொண்ணாதோவென்ன ( ஒரு சம்சாரீத்யாதி )

"மாய மயக்கு -" ஆஶ்சர்யமான ப்ரமசாதநம். அவனெப்போதும் ப்ரமிப்பிக்குமோ வென்ன ( நெடுநாளித்யாதி )

அவனென்னு ளிருள்தா னறவீற்றிருந்தான் - இனி - அருள்தான் - யானறியேன்; இதுவல்லால் - மூவுலகும் - பொருள்தானெனில் - பொருளல்ல; ஈது - மருள்தான் - ஓ, மாயமயக்கு மயக்கே யித்யந்வய:..........................................*

## நான்காம்பாட்டு.

மாயமயக்குமயக்கானென்னைவஞ்சித்
தாயனமரர்க்கரியேறெனதம்மான்
றூயசுடர்ச்சோதித்தனதென்னுள்வைத்தான்
றேசந்திகழுந்தன்றிருவருள்செய்தே.

### ஆறாயிரப்படி.

(மாயமயக்கு) நிரவதிக வாத்ஸல்ய சௌசீல்யத்தையுடையனு யிருந்தவனே, என்னுடைய நிகர்ஷத்தைப்பார்த்து, என்றிறத்துப் பொய் ச்செய்தருளான்; ஆதலால், ஹேயப்ரத்யநீகமானவன் றிருவடிவை யெ ன்னுள்ளே சர்வலோகமுமறியும்படி மெய்யேவைத்தருளினுனென்கிறுர்.

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், விலக்ஷண தேஜோரூபமான விக்ரஹத்தை யெனக்குள்ளேவைத் தான், ஆதலால், என்னை ப்ரமிப்பியானென்கிறுர்.

ஆயன் - அறிவில்லாத விடையர்க்கு ஸஜாதியனுய்க்கொண்டு பவ்யனுய். அ மரர்க்கு - அறிவுடைய சூரிகளுக்கு. அரியேறு - அபரிச்சேத்யமான மேன்மையை யுடையனுய். எனதம்மான் - இந்த பரத்வசௌலப்யங்களை யெனக்கு ப்ரகாசிப்பித் த வென் ஸ்வாமியானவன். தேசந்திகழும் - தேசப்ரசித்தமாம்படியான. தன்-தன். திரு - அசாதாரணமான. அருள் - க்ருபையை. செய்து - நிர்ஹேதுகமாகப்பண்ணி. தனது - தனக்கசாதாரணமாய். தூய-நிர்மலமாய். சுடர்-அத்யுஜ்ஜ்வலமாய். சோதி- தேஜோமயமான திவ்யவிக்ரஹத்தை. என் - என்னுடைய. உள்-நெஞ்சுக்குள்ளே. வைத்தான் - ப்ரதிஷ்ட்டிதமாம்படி வைத்தான். ஆதலால், என்னை - தன்னையொழி யவறியாதவென்னை. வஞ்சித்து - அநாஸ்ரிதனைச் செய்யுமாபோலே வஞ்சித்து. மா யமயக்கு - தன்னுடைய வாஸ்சர்ய ப்ரமசாதநங்களாலே. மயக்கான் - ப்ரமிப்பி யான்.......................................................................................*

### ஈடு - நான்காம்பாட்டு.

அவனென்னை ப்ரமிப்பித்தானல்லன், என்னுள்ளேகலந்தருளினு னே; இதிலொரு சம்சயமில்லை யென்கிறுர்.

(என்னைவஞ்சித்து - மாயமயக்குமயக்கான்) அநாஸ்ரிதரான து ர்யோதநாதிகளைக்குறித்து, "ஆயுதமெடேன்" என்றுயுதமெடுத்தும், ப கலை யிரவாக்கியும் வஞ்சித்தானித்தனையல்லது, பாண்டவர்கள் விஷயத்தி லத்தைச்செய்தானே; ஆகையால், தனக்கே பரமான வென்னைவஞ்சித் து, ஆப்ºசர்யமான ப்ரமசாதநங்களாலே ப்ரமிப்பியான். ஹேதுவென் னென்ன (ஆயனமரர்க்கரியேறெனதம்மான்) நித்யசூரிகளுக்கு மவ்வ ருகான வேற்றத்தையுடையனுய்வைத்து, க்ருஷ்ணனுய் வந்தவதரித்து, என்னுடைய சேஷத்வத்தை நிர்வஹித்த பரமாப்தன்—என்னைவஞ்சித்து-

மாயமயக்குமயக்கான்: ஆறுலிப்பேறு வந்தபடிதானென்னென்ன (தேச ந்திகழும் தன்றிருவருள்செய்து – தூயசுடர்ச்சோதித் தனதென்னுள் வைத்தான்) லோகமெல்லாமறியும்படி யென்பக்கலிலே நிர்ஹேதுக க்ருபையைப்பண்ணி. (தன்றிருவருள்) புறம்பொருவர்க்கின்றிக்கே தனக்கே யசாதாரணமானவருள். ஹேய ப்ரத்ய நீகமாய், விலக்ஷண தேஜோரூபமாய், சுத்தசத்த்வமயமாய், தனக்கேயசாதாரணமான வடிவை யென்னுள்ளேவைத்தான். தானநந்யசாத்யனென்னும்படியைக் கொண்டென்னுள்ளே ப்ரகாசிப்பித்தான்; "தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்" (தஸ்யைஷஆத்மா விவ்ருணுதே தநூம்ஸ்வாம்) என்கிற படியே..........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு. (மாயமித்யாதி.) "மாயமயக்குமயக்கா - னதென்னுள்ளவைத்தான்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (அவனென்னையித்யாதி.)

"என்னைவஞ்சித்து - மாயமயக்குமயக்கான்" என்கிற தென்னவுறைப்புக் கொண்டென்ன; அவனுடைய வாஶ்ரிதபாரதந்த்ர்யத்தை யநுசந்தித் தென்கிறார் (அநாஶ்ரிதரானவித்யாதி.)

விலக்ஷணதேஜோரூபதைக்கு ஹேது - சுத்தஸத்த்வமயத்வம்.

திகழுகை - ப்ரகாசமாய், அறியும்படியென்றபடி. ஈஶ்வரன் வைக்கவேணுமோவென்ன (தானநந்யேத்யாதி.) "அநந்யசாத்யன்" எனென்னுமதுக்கு ப்ரமாணம் (தஸ்யைஷஇத்யாதி.)

அமரர்க்கரியேறு - ஆயன் - எனதம்மான் - தேசந்திகழும்திருவருள்செய்து-தூயசுடர்ச்சோதித் தனதென்னுள்வைத்தான்; ஆகையால், என்னைவஞ்சித்து-மாயமயக்கு மயக்கானித்யந்வயঃ..........................................................*



# ஐந்தாம்பாட்டு.

திகழுந்தன்றிருவருள்செய்துலகத்தார்
புகழும்புகழ்தானதுகாட்டித்தந்தென்னுட்
டிகழுமணிக்குன்றமொன்றேயொத்துநின்றான்
புகழும்புகழ்மற்றெனக்குமோர்பொருளே.

## ஆறாயிரப்படி.

(திகழும்) லோகமெல்லா மறியும்படி யென்னுள்ளே யிருந்தருளினவத்தனையேயோ, இப்புகழையே லோகமெல்லாம் புகழும்படியாகவுமிருந்தருளினான்; இருந்தருளுகிறான்; தன்னுடைய வுத்கர்ஷத்தையுமென்னுடைய நிகர்ஷத்தையும்பார்த்து, "நானத்தைவிட்டகலுகிறேன்" என்னும் பயத்தாலே, நான் தன்னைவிட்மாட்டாதபடியாகத் தன்னழகை

க்காட்டி யென்னை வசிகரித்துக் கொண்டருளின புகழல்லது மற்று அவ னுடையபுகழை யொருபுகழாக மதியேனென்கிறார். ......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்னெஞ்சுக்குள்ளே யசலப்ரதிஷ்ட்டிதனாய்க்கொண்டு நின்றான், இதொழிய வேறொன்றை யவனுக்குப் புகழாக நினைத்திருக்கிறிலேனென்கிறார்.

திகழும் - நிர்ஹேதுகமாயும் நிரவதிகமாயு மிருக்கையாலே யிரண்டு தலைக்கு மௌஜ்ஜ்வல்யாவஹமான. தன், திருவருள் - திருவருளை. செய்து - பண்ணி. உலகத்தார் - லோகத்தார். புகழும் - இதுகண்டு புகழுகிற. அது - அந்த. புகழ் - ப்ரசித்தமானபுகழையும். தான் - தான். காட்டித்தந்து - எனக்கு ப்ரகாசிப்பித்து. என்னுள் - எனக்குள்ளே. திகழும் - விளங்காநிற்கிறது. ஒன்று-ஒரு. மணிக்குன்றமொத்து - மாணிக்கமலைபோலே. நின்றான் - நின்றான். எனக்கு-எனக்கு. இந்நிலையொழிய, மற்று - மற்று. புகழும் - அவனைப்புகழுகிற. புகழும் - புகழானதுவும். ஓர்- ஒரு. பொருளே - பொருளாயிருக்கிறதோ.........................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

“ஒருவர்பெறும்பேறே!” என்று லோகமடையக்கொண்டாடும்படி யென்னுள்ளே வந்து நின்றருளினான், அத்தால்வந்த புகழையல்லதிவனுடைய மற்றுள்ள புகழையு மொன்றாக மதியேனென்கிறார்.

(திகழுந்தன்றிருவருள்செய்து) பிறருடைய பரிச்சின்னமானவருள்போலன்றிக்கே, இரண்டுதலைக்கும் நிறமாம்படியான தன்க்ருபையை யென்பக்கலிலே பண்ணி. (உலகத்தாரித்யாதி) என்னுடையபேற்றைக் குறித்து லோகத்தார்பண்ணும் ஸ்தோத்ரத்தைத் தான்காட்டித்தந்தான். “பாலேய்தமிழரிசைகாரர்பத்தர்பரவுமாயிரம்” என்றுலோகமாகக்கொண்டாடும்படிபண்ணுகை. “ஐளஉ-நீவாஸிவ௵ஷணாநி தள கூஃபீ௵ வளவாவிஹோஅவஹிநள” (இமௌமுநீபார்த்திவலக்ஷணாந்விதௌ குஶீலவௌசாபிமஹாதபஸ்விநௌ) என்றாப்போலே நாடாகப்புகழாநின்றது. (என்னுளித்யாதி) என்னுள்ளே வந்து புகுந்து, பெறாப்பேறுபெற்றானாய், நிலைபெற்றுப் புகருடையனாய்க் கால்வாங்கிப்போகமாட்டாதே, விளங்காநின்ற வொரு ரத்நபர்வதம்போலேநின்றான்.

(புகழும்புகழ்) என்னுள்ளேநின்ற விம்மஹாகுணத்தை யல்லது, மற்றுள்ள புகழை யொருபுகழாகமதியேன். என்னுடைய விந்த்ரியவஶ்யதையைப் போக்கினானென்று நான்சொன்ன விதொருசரக்காகநினைத்திரேன். .....................................................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (திகழுமித்யாதி.) “உலகத்தார்புகழும்புகழ்தானதுகாட்டித்தந்தென்னுள் - நின்றான்; புகழும்புகழ் மற்றெனக்குமோர்பொருள்” என்கிற பதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (ஒருவரித்யாதி.)

"தன்றிருவருள்" என்றதுக்கு பாவம் (பிறருடையவித்யாதி.) "திகழும்" என்றத்தைப்பற்ற (இரண்டுதலைக்குமித்யாதி.) இரண்டுதலைக்கும் நிறமாம்படியெ ன்றது - நிர்ஹேதுகமாகையாலே, அவன் நைரபேக்ஷ்யத்துக்கு மிவன் பாரதந்த்ர்ய த்துக்கும் நிறமாம்படியென்றபடி.

"புகழும்புகழ் -" கொண்டாடும் கொண்டாட்டம். என்னுடைய பேற்றைக் குறித்து - என்னைக்கொண்டு திருவாய்மொழி பாடுகையாகிற பேற்றைக்குறித்தென் றபடி. காட்டித்தருகையாவதென்னென்ன (பாலேய்தமிழரித்யாதி.) ப்ரபந்தத்தை ஶ்லாகித்தபேருண்டோவென்ன (இமௌமுநீ இத்யாதி) "इमौ मुनी पार्थिवलक्षणान्वितौ कुशीलवौ चैव महातपस्विनौ । ममापि तद्भूतिकरं प्रवक्ष्यते महानुभावं चरितं निबोधत" (இமௌமுநீபார்த்திவலக்ஷணாந்விதௌ குஶீலவௌசாபிமஹாதபஸ்விநௌ। மமாபிதத்பூதிகரம்ப்ரவக்ஷ்யதே மஹாநுபாவம்சரிதம்நிபோதத) இதி பாலகாண்டே. ப்ரபந்தத்தைக் கொண்டாடின விதுபாடினபேரை ஶ்லாகித்ததுக்கு முபலக்ஷணம்; ஸ்ரீராமாயணத் தையும், அத்தைப்பாடின குசலவர்களையும் கொண்டாடினுப்போலேயென்று - இவ் வாக்யத்துக்குக் கருத்து.

"திகழும்" என்றத்தைப்பற்ற (பெருப்பேறுபெற்ருனுயென்றது.) நிலைப் பெற்றுக் கால்வாங்கிப் போகமாட்டாதேயென்றது - "குன்றம்" என்றத்தைப்பற் ற. "மணி" என்றத்தைப்பற்ற (புகருடையனுயென்றது.)

மற்றுள்ள புகழ்வதேதென்ன (என்னுடையவித்யாதி.)

மற்று - புகழும்புகழ்-எனக்குமோர்பொருளே என்றந்வயம். ஓர்பொருளே- ஒருபொருளாயிருக்கிறதோ. உலகத்தார் புகழும்புகழைத் தான்காட்டித்தந்தென்ற ந்வயிப்பது..................................................................................*

---

# ஆறம்பாட்டு.

---

பொருண்மற்றெனக்குமோர்பொருடன்னிற்சேர்க்கத்
தருமேற்பின்னையார்க்கவன்றன்னைக்கொடுக்குங்
கருமாணிக்கக்குன்றத்துத்தாமரைபோற்
றிருமார்வுகால்கண்கைசெவ்வாயுந்தியானே.

## ஆறுயிரப்படி.

(பொருள்மற்றெனக்கும்) தானுகிற சம்பத்தையொழிய வேறே சிரியதொருசம்பத்தை யெனக்குத்தந்தால், நிரவதிக சௌந்தர்யசம்பத் தையுடையனுன தன்னை வேறுகொள்வாரில்லையென்று, இப்படி தன்னை யெனக்கு போக்யமாகத்தந்தருளினனல்லனிறே, என்பக்கலுள்ள வபிநி வேஶமிறே யென்கிறுர் ... ... ... ... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்னகவாயிலேநின்ற வுபகாரத்தாலே, நிரதிசயசௌந்தர்ய விசிஷ்டனுனவன் தன்னை யொருவர்க்குக்கொடுக்கவொண்ணும லெனக்குத்தந்தா னேவென்கிறுர்.

எனக்குத்தன்னைத்தந்தவித்தாலே, கருமாணிக்கக்குன்றத்து - கருமாணிக்கமலையின்மேலே. தாமரைபோல்-தாமரைக்காடலர்ந்தாற்போலே செவ்விபெற்ற. திருமார்வு-திருமார்பும். கால்-திருவடிகள். கண்-திருக்கண்கள். கை-திருக்கைகள். செ-சிவந்த. வாய்-திருவதரம். உந்தியான்-திருவுந்திகளையுடையனானவன். மற்று-மற்றுமுள்ள. பொருள்தன்னில்-புருஷார்த்தங்கள்தன்னிலே. எனக்கும் - எனக்கும். ஓர்-ஒரு. பொருள்-புருஷார்த்தத்தை. சீர்க்க-சீர்க்க. தருமேல்-தந்துவிட்டானாகில். பின்னை-பின்னை. அவன்-அவன். தன்னை-நிரதிசயபுருஷார்த்தபூதனானதன்னை. ஆர்க்கு-ஆருக்கு. கொடுக்கும்-கொடுப்பான்.

புறம்புகொள்வாரில்லாமல் மறந்தானல்லனே; க்ருபாகார்யமென்றுகருத்து.*

## ஈடு - ஆறும்பாட்டு.

எனக்குத்தன்னையொழிய வேறொன்றைத்தந்துவிட்டால், புறம்பு தன்னைவேறொருவர்கொள்வாரில்லாமை யெனக்குத்தந்தானே, என்பக்கலபிநிவேசத்தாலே தந்தருளினானென்கிறார்.

(பொருளித்யாதி) (பொருள்தன்னில்-மற்றெனக்குமோர்-பொருள்-சீர்க்கத்தருமேல்) புருஷார்த்தவர்க்கத்திலே வேறேகனத்ததொருபுருஷார்த்தத்தை, தருமேல்-தந்துவிட்டால். ( பின்னையார்க்கவன் தன்னைக்கொடுக்கும் ) பின்னையிப்பொருள் கடிதாகக் கைக்கொள்வாருண்டோ. என், கைக்கொள்வாரில்லையோவென்னில் (கருமாணிக்கமித்யாதி) இவ்வேப்பங்குடிநீரைப்புறம்பு ஸ்வீகரிப்பாருண்டோ. (கருமாணிக்கக்குன்றத்து) ஆஶ்ரயத்துக்குத்ருஷ்டாந்தம். (தாமரைபோல்) அவயவசோபைக்குத்ருஷ்டாந்தம். (திருமார்வு) புருஷகாரமானபிராட்டி யெழுந்தருளியிருக்கிறமார்வு. (கால்) அச்சேர்த்திக்குத்தோற்றுவிழும் திருவடிகள். (கண்) திருவடிகளிலேவிழுந்தாரைக் குளிரநோக்கும்கண், அவர்களை யெடுத்தணைக்கும்கை, இன்சொல்லுச்சொல்லும் திருவதரம், அவர்களுக்கநுபாவ்யமான திருவுந்தி. "உந்திமேலதன்றே" என்னக்கடவதிறே......*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (பொருளித்யாதி) "பின்னையார்க்கவன் தன்னைக்கொடுக்கும்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (எனக்கித்யாதி) இப்பாட்டு ப்ரீத்யதிசயத்தாலே க்ஷேபோக்தியேயாகிலும், ஸ்வபாவார்த்தத்திலே யவதாரிகையென்று கண்டுகொள்வது.

அர்த்தாநுகுணமாக வந்வயம் (பொருள்தன்னிலித்யாதி) மற்று-வேறென்றபடி. புருஷார்த்தவர்க்கத்தில் வைத்துக்கொண்டு, வேறெனக்குக் கனத்தபுருஷார்த்தத்தைத்தந்து விட்டாலென்று சப்தார்த்தம்.

கடிதாக-சீக்ரமாக.

வேப்பங்குடிநீரொன்று - வ்யதிரேகலக்ஷணயா, போக்யதையைக்காட்டுகிறது. வேப்பங்குடிநீர் - வேப்பஞ்சாறுகஷாயம். உண்டோவென்றது-இல்லையோவென்றபடி. "குன்றம்" என்றது-அவயவங்களுக்காஶ்ரயமான விக்ரஹத்துக்கு த்ருஷ்டாந்தமென்றபடி.

திருவுந்தியநுபாவ்யமென்னு மதுக்கு ப்ரமாணம் (உந்திமேலதன்றேவித்யாதி.)

கருமாணிக்கமென்றுதொடங்கி, உந்தியானே - பொருள்தன்னில்வைத்துக் கொண்டு - எனக்கு - மற்றுமோர் - பொருள் - சேர்க்கத்தருமேல், பின்னையார்க்கவன்தன்னைக்கொடுக்கு மித்யந்வயஃ. "பின்னையார்க்கவன்தன்னைக்கொடுக்கும்" என்றஸ்வரத்தாலே-கொள்வாரில்லாமல் தந்தானே, அன்றே. தன்க்ருபையாலே தந்தானென்றபடி... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

# ஏழாம்பாட்டு.

செவ்வாயுந்திவெண்பற்சுடர்க்குழைதன்னொ
டெவ்வாய்ச்சுடருந்தம்மின்முன்வளாய்க்கொள்ளச்
செவ்வாய்முறுவலோடெனதுள்ளத்திருந்த
வவ்வாயன்றியானறியேன்மற்றருளே.

## ஆறுயிரப்படி.

(செவ்வாயுந்தி) இன்னமு மிவ்வபிநிவேசத்தையே விஸ்தரிக்கிறது.

என்னோடு கலந்தருளின கலவியாலுள்ள நிரவதிகப்ரீதியாலே,திருப்பவளத்தினழகையும், மற்றுமுள்ள திவ்யாவயவ திவ்யபூஷணகதமான நிரவதிகதேஜஸ்ஸையுமெல்லாம் விளங்குகொடுவைத்து,என்முன்னே திருமுகத்தினொளி வெள்ளம்பெருகிப் புறப்படும்படியாகச் செவ்வாய்முறுவலோ டெனதுள்ளத்திருந்த வவ்வபிநிவேசகுணமல்லது மற்றொருகுணத்தை குணமாக மதியேனென்கிறார். ...............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இவ்வழகோடே யென்னுள்ளே முறுவல் செய்திருக்கிற விருப்பொழிய வேறோராகாரத்தையு மறிகிறிலேனென்கிறார்.

செ - சிவந்த. வாய் - வாய். செ - சிவந்த. உந்தி - திருநாபி. வெண் - வெளுத்த. பல் - திருமுத்து. சுடர் - ஒளியையுடைத்தான. குழை - திருமகரக்குழை. தன்னொடும் - இவற்றோடேகூட. எவ்வாய்-எல்லாவவயவங்களினுடைய. சுடரும்-ஒளியும். தம்மில் - தம்மில்தாம். முன் - முற்பட்டு. வளாய்க்கொள்ள - சூழ்ந்துகொள்ள. திருவுள்ளத்தி லுகப்புக்கு ப்ரகாசகமாம்படி. செ - சிவந்த. வாய்-திருப்பவளத்தின். முறுவலோடு - முறுவலோடே. எனது - என். உள்ளத்து-நெஞ்சுக்குள்ளே. இருந்த - இருந்த. அ - அந்த. வாய் - ப்ரகாரத்தை. அன்றி - ஒழிய. மற்று - வேறொரு. அருள் - ஆகாரத்தையும். யான், அறியேன் - நினைக்கிறிலேன்....*

## ஈடு - ஏழாம்பாட்டு.

அவன் தம்மோட்டைக் கலவியாலே ஹ்ருஷ்டனாய், அது தன்பேறாக முறுவல்செய்த திருப்பவளத்தை யநுபவித்து ப்ரீதராகிறார்.

(செவ்வாயித்யாதி) சிவந்ததிருவதரம், திருவுந்தி, வெளுத்ததிருமுத்து, புகரையுடைத்தான திருமகரக்குழை, இவற்றோடே கூட. (எவ்வாய்ச்சுடரும்) மற்றுமெவ்விடத்துமுண்டான தேஜஸ்ஸும். வாய்—இடம். (தம்மில்முன்வளாய்க்கொள்ள) ஒன்றுக்கொன்று "நான், நான்" என்று தம்மில்தாம் முற்பட்டு வளைத்துக்கொள்ள. அஹமஹமிகையாய் முற்பட்டு வளைத்துக்கொள்ளவென்னுதல், முற்பட்டென்னைவளைத்துக்கொள்ளவென்னுதல். (செவ்வாய்முறுவலோடெனதுள்ளத்திருந்த) "அவாக்யநாதரஃ" (அவாக்யநாதரஃ) என்றிருக்கக்கடவ தத்வம், இவனைப்பெற்று "இதுதன்பேறு" என்றுதோற்ற முறுவல்செய்திருந்தபடி. பூவலரும்போதெங்குமொக்க வொருசெவ்விபிறக்குமாபோலே, திவ்யாவயவங்கள்தோறு மொருவிக்ருதிபிறக்கும்படியாயிற்று ஸ்மிதம்பண்ணிற்று. (அவ்வாயன்றி) அவ்விடமன்றி. ஸ்மிதம் பண்ணிக்கொண்டிருந்த விருப்பல்லது. "காந்தஸ்மிதா" (காந்தஸ்மிதா) என்று ஸ்வரூபத்தைச்சொல்லி, "ஜாதஹாஸா" (ஜாதஹாஸா) என்றதிறே, அப்போதை ஹர்ஷத்தாலுண்டான விக்ருதியென்னுமிடந்தோற்ற. மற்றுண்டானவருளை நானறியேன். இதுவேயமையும், மற்றொன்று வேண்டாவென்கை. ..........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (செவ்வாயித்யாதி.) "செவ்வாய்முறுவலோடு" இத்யாதிகளைக் கடாக்ஷித்தவதாரிகை (அவனித்யாதி.)

மற்றுமெவ்விடத்துமுண்டானவென்றது - சமுதாயசோபை. "நான்நானென்று தன்னில் தான் முற்பட்டு வளைத்துக்கொள்ள" என்றத்தை யிரண்டுவகையாகவருளிச்செய்கிறார் (அஹமஹமிகை யித்யாதி வாக்யத்வயத்தாலே.) முந்தினவர்த்தத்துக்கு, "தம்மில்முன்" என்று முழுச்சொல்லு ; தன்னில் தான் முற்பட்டு, பரஸ்பரம் வளைத்துக்கொள்ள வென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, "தம்மில்,முன்" என்றிரண்டுபதம் ; தங்களிலே முன்பு ஆழ்வாரை வளைத்துக்கொள்ள வென்றபடி. முன் - முன்பே.

"செவ்வாய்முறுவல்" என்றதுக்கு பாவம் (அவாக்யநாதரஇத்யாதி.) முறுவலின் ஸ்வபாவகதநம்பண்ணுகிறார் (பூவலருமித்யாதி.)

"அவ்விடமன்றி" என்றதின் விவரணம் (ஸ்மிதம்பண்ணியித்யாதி.) "செவ்வாய்" என்றும், "செவ்வாய்முறுவல்" என்றும் புநருக்தமன்றோவென்ன (காந்தஸ்மிதேத்யாதி.) அப்படியே, செவ்வாயென்று - ஸ்வரூபகதநமாய், செவ்வாய் முறுவலென்று - இவனைப்பெற்ற ப்ரீதியாலே வந்த ஸ்மிதத்தைச் சொல்லுகிறதென்றபடி. இத்தால் பலிதம் (இதுவேயமையுமித்யாதி.) "அஸ்மிந்மயாஸார்த்தமுதாரஶீலா ஶிலாதலே பூர்வமுபோபவிஷ்டா। காந்தஸ்மிதா லக்ஷ்மண ஜாதஹாஸா த்வாமாஹ ஸீதா பஹுவாக்யஜாதம்" (அஸ்மிந்மயாஸார்த்தமுதாரஶீலா ஶிலாதலேபூர்வமுபோபவிஷ்டா। காந்தஸ்மிதால்க்ஷ்மணஜாதஹாஸா த்வாமாஹஸீதாபஹுவாக்யஜாதம்) இத்யாரண்யகாண்டே லக்ஷ்மணம்ப்ரதிராமஃ.*

# எட்டாம்பாட்டு.

அறியேன்மற்றருளென்னையாளும்பிரானார்
வெறிதேயருள்செய்வர்செய்வார்கட்குகந்து
சிறியேனுடைச்சிந்தையுண்மூவுலகுந்தன்
னெறியாவயிற்றிற்கொண்டுநின்றொழிந்தாரே.

## ஆறாயிரப்படி.

(அறியேன்மற்றருள்) இப்படியபிநிவிஷ்டனாய்க்கொண்டு தன்னுடைய சர்வைஶ்வர்யத்தோடுங்கூட வென்னுள்ளே புகுந்திருந்தருளுகைக்கு ஹேதுவென்னென்றால்; ஒருஹேதுவின்றியே வெறிதேசெய்தருளினானென்கிறார்... ... ... ... ... ... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், க்ஷுத்ரனானவென்னெஞ்சிலே பூர்ணராய்க்கொண்டுவந்து புகுந்துநின்றவர்தாம், உபகரிக்க நினைத்தார்க்கு நிர்ஹேதுகமாக வுபகரிப்பராகாதே யென்கிறார்.

மற்று-வேறொன்றை. அருள்-உபகாரமாக. அறியேன் - நினைத்திருக்கிறிலேன். என்னை-என்னை. ஆளும்-அடிமைகொண்ட. பிரானார் - மஹோபகாரகரானவர். செய்வார்கட்கு-தாமுபகரிக்கநினைத்தார்க்கு. வெறிதே - நிர்ஹேதுகமாக. உகந்து-உகந்து. அருள்-உபகாரத்தை. செய்வர்-பண்ணுவர். எங்ஙனேயென்னில், சிறியேனுடை-அதிக்ஷுத்ரனானவென். சிந்தையுள் - நெஞ்சிலே. மூவுலகும்-ஜகத்ரயத்தையும். நெறியா - ரக்ஷ்யரக்ஷகபாவமாகிறமுறைதப்பாதபடி. தன்வயிற்றில் - தமக்குள்ளே. கொண்டு-கூடக்கொண்டு. நின்றொழிந்தார்-நின்றுவிட்டார்.

ஆதலாலென்றுகருத்து ........................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

அவன்தம்மோடேவந்து கலக்கைக்கடி யவன்க்ருபையென்கிறார்.

(அறியேன்மற்றருள்) வேறருளுமறியேன். (என்னையாளும்பிரானார்) என்னையடிமைகொள்ளுகிற வுபகாரகரானவர். (வெறிதேயருள்செய்வர்) நிர்ஹேதுகமாக க்ருபைபண்ணுவர். ஆருக்கென்னில் (செய்வார்கட்கு) "யமேவைஷ வ்ருணுதே" (யமேவைஷவ்ருணுதே) என்று தாம் விஷயீகரிக்க நினைத்தார்க்கு. தாந்தாமொன்று செய்வார்க்கென்னில், "வெறிதே" என்னக்கூடாதிறே. ஆனாலு மொருஹேதுவேண்டாவோ வருளுக்கென்னில் ; உகப்பாயிற்றுஹேது. "ப்ரியதம ஏவ ஹிவரணீயோ பவதி" (ப்ரியதம ஏவஹிவரணீயோபவதி) என்னக்கடவதிறே. ருசியுண்டானாலும், இவன்சேதநனானவாசிக்கு - சைதந்யப்ரயுக்தமான ஸ்வபாவமாகக்கொள்ளுமித்தனையல்லது, பேற்றுக்கு சாதநமாகச்சொல்லவொண்ணாதிறே.

நிர்ஹேதுகமாகவருள விப்படியெங்கேகண்டீரென்ன; புறம்புதேடிப்போகவேணுமோ (சிறியேனுடைச்சிந்தையுள்) அத்யல்பனாயிருக்கிற வென்னுடைய ஹ்ருதயத்தினுள்ளே. (மூவுலகுமித்யாதி) உடையவனுடைமையைநோக்குவது முறையாலேயாயிருக்குமிறே. தம்முடையரக்ஷ்யவர்க்கத்தை முறையிலேநோக்குகிறவர், என்னுடைய ஹ்ருதயத்திலே பொருந்தி முறைகெடப்பரிமாறுகின்றார். தம்மைச்சிறுமைக்கெல்லையாக நினைத்தபடியாலே முறைகேடாய்த்தோற்றுகின்றதாயிற்றிது. அவனிவரை மூவுலகுக்கு மவ்வருகாக நினைத்திராநின்றான்; இவர், தம்மை மூவுலகுக்கு மில்வருகாக நினைத்திராநின்றார் ..............................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (அறியேனித்யாதி) "வெறிதேயருள்செய்வர்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (அவன் தம்மோடேயித்யாதி)

"செய்வார்கட்கு" என்று - சாதநத்தை யநுஷ்டிப்பார்க்கென்றாலோவென்ன (தாந்தாமித்யாதி) உகப்பென்றது - ஈஶ்வரனுடைய வுகப்பென்றபடி. ஈஶ்வரனுகப்பே விஷயீகாரஹேதுவென்னுமதுக்கு ப்ரமாணம் (ப்ரியதமஇத்யாதி) கேவலநிர்ஹேதுகமென்னலாமோ, ருச்யாதிகள் சாதநமானாலோவென்ன (ருசியுண்டானாலுமித்யாதி.)

மூன்றுலோகத்தையும் வயிற்றிலேகொண்டது முறையோவென்ன (உடையவனித்யாதி) (முறையாலேயாயிருக்குமிறே) என்றதுக்கு - (முறைகெடப்பரிமாறுகின்றார்) என்றத்தோடேயந்வயம். "நெறியா -" முறையிலே. "தன் - வயிற்றிற்கொண்டு" என்றந்வயிப்பது. "நின்றொழிந்தார்" என்கையாலே - முறைகெடவென்றதுசித்தம். முறைகெடப்பரிமாறுகையாவது - இவரைசேஷியாய்வைத்து, தான் சேஷபூதனாய்ப்பரிமாறுகை. சேஷபூதனை, சேஷிவிஷயீகரிக்கிறது முறைகேடோவென்ன (தம்மையித்யாதி) ஆனாலவன்படியேதென்ன (அவனிவரையித்யாதி.)

என்னையாளும்பிரானார் - செய்வார்கட்குகந்து - வெறிதேயருள்செய்வர்; மூவுலகும் - நெறியா - தன் - வயிற்றிற்கொண்டு - சிறியேனுடைச்சிந்தையுள் - நின்றொழிந்தார்; ஆகையாலே, மற்றருள் - அறியேனித்யந்வயஃ. "ப்ரிய தமஏவஹிவரணீயோபவதி" (ப்ரியதமஏவஹிவரணீயோபவதி) இதி ஶ்ரீபாஷ்யே......*

---

# ஒன்பதாம்பாட்டு.

வயிற்றிற்கொண்டுநின்றொழிந்தாரும்யவரும்
வயிற்றிற்கொண்டுநின்றொருமூவுலகுந்தம்
வயிற்றிற்கொண்டுநின்றவண்ணநின்றமாலை
வயிற்றிற்கொண்டுமன்னவைத்தேன்மதியாலே.

## ஆறாயிரப்படி.

(வயிற்றிற்கொண்டு) அண்டங்களையும், அண்டாந்தர் வர்த்திகளான சதுர்முகர்களையும், சதுர்முகாஜ்ஞாநுவர்த்திகளான தேவாதிஸ்த்

தாவராந்தமான சமஸ்தஜந்துக்களையும், ஸ்வஸங்கல்ப சஹஸ்ரைகதேச த்திலே நியமித்தருளுகிற வெம்பெருமான்படியை யறிந்துகொண்டே னிறேயென்கிறார். ... ... ... ... ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடைய சர்வப்ரகார ரக்ஷகத்வத்தை யென்னெஞ்சிலே சுஸ்த்திரமாக வைத்தேனென்கிறார்.

வயிற்றிற்கொண்டு - தாயானவள்வயிற்றிலேவைத்து நோக்குமோபாதிரக்ஷகராய் நின்றுபோந்த. நின்றொழிந்தாரும் - க்ஷத்ரியர்களையும். யவரும் - அவர்களுக்கு மேலான ப்ரஹ்மாதிகளையும். வயிற்றில் - தம்முடைய ஸ்வரூபைகதேசத்திலே. கொண்டு - கொண்டு. நின்று - நின்று. ஒரு - அத்விதீயமான. மூவுலகும் - ஜகத்ரயத்தையும். தம் - தம்முடைய. வயிற்றில் - சங்கல்பைகதேசத்திலே. கொண்டு - தரித்து. நின்றவண்ணம்-யதாபூர்வாவஸ்த்திதியான ஸ்வரூபத்தோடே. நின்ற-நின்ற. மாலை - சர்வாதிகரானவரை. மதியாலே - "இசைவித்தென்னை" என்று அவர்தந் தவநுமதியாலே. வயிற்றில் - என்னகவாயிலே. கொண்டு - கொண்டு. மன்ன-பேராதபடி. வைத்தேன் - வைத்தேன். ..........................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

இப்படி விஷயீகரிக்கைக்கு நீர்செய்ததென்னென்னில்; அநுமதி மாத்ரம்பண்ணினே னித்தனையென்கிறார்.

( வயிற்றிற்கொண்டுநின்றொழிந்தாரும் ) ஜநநியானவள், ப்ரஜையை வயிற்றிலேவைத்து நோக்குமாபோலே, ஜகத்தை நோக்கும் க்ஷத்ரியாதிகளையும். ( யவரும் ) இந்தக்ஷத்ரியர் தங்களையும் நோக்கிக்கொண்டு போருகிற ப்ரஹ்மாதிகளையும். ( வயிற்றிலித்யாதி ) க்ஷத்ரியாதிகளையும் ப்ரஹ்மாதிகளையும் தன்னுள்ளே கொண்டிருந்துள்ள மூவுலகையும். (தம்வயிற்றிற்கொண்டு) தம்முடைய சங்கல்ப சஹஸ்ரைகதேசத்தாலே நடத்திக்கொண்டென்னுதல்; வயிற்றிற்கொண்டு நின்றொழிந்தாரையும் யவரையும் வயிற்றிற்கொண்டு நின்றொருமூவுலகையும் தம்வயிற்றிற்கொண்டென்று பிரித்துச் சொல்லுதல். ( நின்றவண்ணம்நின்றமாலை ) இவற்றையடையத்தன்வயிற்றிற்கொண்டவிடத்திலும், ஒருவிகாரமின்றிக்கே நின்ற சர்வேஶ்வரனை. ஸவிபூதிகனை சர்வேஶ்வரனை யென்னுடையஹ்ருதயத்திலே பேராதபடி வைத்தேன். ( மதியாலே ) "இவன்படியையறிந்துகொண்டேனென்கிறார்" என்னுமம்மாள். அன்றிக்கே, "மதிঃ-அநுமதிঃ" என்றாக்கி, "அநுமதிமாத்ரத்தாலே" என்பர் பட்டர். அதாவது - அவன் புகுருகிறவிடத்தில் விலக்கிற்றிலனென்கை.....................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. ( வயிற்றிலித்யாதி. ) "மதியாலே-மன்னவைத்தேன்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை பட்டர்நிர்வாஹத்திலே ( இப்படியித்யாதி. )

"வயிற்றிற்கொண்டுநின்று" என்று விசேஷிக்கையாலே பலித்தபாவம் (ஜநயித்யாதி.) "நின்றொழிந்தாரும் -" நின்று போந்தவர்களுமென்றபடி.

ப்ரஹ்மாதிகளையுமென்றது - "யஸ்யப்ரஹ்மச" (யஸ்யப்ரஹ்மச) என்றவிடத்திற்போலே, ப்ராஹ்மணாதிகளையு மென்றபடி. வசிஷ்டாதிகள், இக்ஷ்வாகு வம்சத்தில் ராஜாக்களை ஸ்வஸ்வமஹிமாவினாலே நோக்கிக்கொண்டிருந்தார்களிறே. ஆதிசப்தத்தாலே -.அவர்களுக்கும் கௌரவ்யரான தேவர்களைச்சொல்லுகிறது.

வயிறு - ஹ்ருதயம்.

நின்றவண்ணம் - பூர்வமிருந்த ப்ரகாரத்திலே.

மன்ன - (பேராதபடி.) "மதி" என்று - ஜ்ஞாநமாதல், அநுமதியாதல். "மதி" என்றதுக்கு அம்மாள் நிர்வாஹம் - "மதி" என்று - ஜ்ஞாநமாய், ஜ்ஞாநத்தாலே யவனை ஹ்ருதயத்திலே வைத்தென்றபடி. அதாவது - அவன்படிகளை யறிந்துகொண்டென்றதாய், நிர்ஹேதுகமாக வங்கீகரிக்கும் ப்ரகாரத்தையறிந்து, "இனி ப்ரதிஷேதிக்கக்கடவோமல்லோம்" என்றிருக்கிறானென்றபடி. "மதிঃ-அநுமதிঃ" (மதிঃ - அநுமதிঃ) என்றது - "யாதவோ நேகாவாஹ்வாஹ்" (தாதுலீநமுபஸர்க்கஇவார்த்தம்) என்று தாதுலீநமானவர்த்தத்துக்கு வாசகமான வுபசர்க்கத்தைக்கூட்டி, அநுமதியென்கிறதென்றபடி...............................*

# பத்தாம்பாட்டு.

வைத்தேன்மதியாலெனதுள்ளத்தகத்தே
யெய்த்தேயொழிவேனல்லேனென்றுமெப்போது
மொய்த்தேய்திரைமோதுதண்பாற்கடலுளாற்
பைத்தேய்சுடர்ப்பாம்பணைநம்பரனையே.

## ஆறாயிரப்படி.

(வைத்தேன்மதியால்) அவன்படி யெங்ஙனேயாக வறிந்ததென்றால்; ஆஶ்ரிதர்பக்க லபிநிவிஷ்டனாயிருக்கை யவன்படியென்றறிந்துகொண்டேன்; இதவன்படியானபின்பு, அவனை நானொருநாளும் விடுவேனல்லேனென்கிறார் ... ... ... ... ... ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வஸ்மாத்பரனான க்ஷீராப்திநாதனை யென்னெஞ்சுக்குள்ளே வைத்து, இடைவிடாமலநுபவிப்பேனென்கிறார்.

மொய்த்து - செறிந்து. எய்-திருவநந்தாழ்வான் திருமேனிக்குத்தகுதியான. திரை-திரைகள். மோது-அலையாநிற்பதாய். தண்-ஶ்ரமஹரமான. பாற்கடலுள்-க்ஷீராப்தியினுள்ளே. பைத்து - விரிகிறபணங்களையுடையனாய். ஏய்-ஸ்வாபாவிகமான. சுடர் - தேஜஸ்ஸையுடையனான. பாம்பு-திருவநந்தாழ்வானை. அணை - படுக்கையாக வுடையனாய். நம்-நமக்கு. பரனை-சேஷியானவனை. மதியால் - என்னநுமதியாலே. எனது-என். உள்ளத்தகத்தே-நெஞ்சுக்குள்ளே. வைத்தேன்-வைத்தேன். என்றும்-

எல்லாதிவசத்திலும். எப்போதும்-எல்லாப்போதிலும். எய்த்தேயொழிவேனல்லேன்-இனிவிப்ரலேஷித்துத்தளரக்கடவேனல்லேன்.

இங்ஙனேவிலே தவிரக்கடவேனல்லேனென்றுமாம் .........................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

எம்பெருமான் சபரிகரமாக வென்னுள்ளேபுகுந்தான், அவனே நானினி பொருநாளும் விப்ரலேஷித்து துஃகப்படேனென்கிறார்.

( வைத்தேன்மதியாலெனதுள்ளத்தகத்தே ) அநுமதியாலே யென்னெஞ்சினுள்ளேவைத்தேன். ஓரநுமதிமாத்ரத்துக் கித்தனைபலமுண்டாவதே!. ( எய்த்தேயொழிவேனல்லேன் ) இனியொருநாளுமிளைத்துக்லேசப்படக்கடவேனல்லேன். இவ்வார்த்தை யெத்தனைகுளிக்கு நிற்குமென்ன (என்றுமெப்போதும்) எல்லாதிவசத்திலும், எல்லாவவஸ்த்தையிலும். (மொய்த்தேய்திரை) திரண்டுதகுதியான திரைகள்மோதாநின்றுள்ள ப்ரமஹரமான திருப்பாற்கடலிலே. சிறுதிவலைபடிலும் " மோதிற்று" என்னும்படியிறே சௌகுமார்யமிருப்பது. (பைத்தேய்சுடர்ப்பாம்பணை) திரைகள்வந்து திருமேனியில் படாதபடி விகஸிதமான பணங்களையுடையனாய், பகவதநுபவத்தால்வந்த தகுதியான புகரையுடையனான திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகையாலுண்டான வேற்றத்தையுடையவன். (நம்பரனை) அவ்வேற்றத்தை நமக்கு வெளியிட்டுத்தந்தவனை - வைத்தேன்மதியாலெனதுள்ளத்தகத்தே, எய்த்தேயொழிவேனல்லேனென்று மெப்போதும். * அரவத்தமளியினோடு மழகியபாற்கடலோடுங்காணு மிவர்திருவுள்ளத்திலே புகுந்திருந்தது....................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (வைத்தேனித்யாதி) " பாம்பணைநம்பரனை - எனதுள்ளத்தகத்தே - வைத்தேன்மதியால், எய்த்தேயொழிவேனல்லேனென்று மெப்போதும் " என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (எம்பெருமானித்யாதி) " பாம்பணைநம்பரன் " என்றத்தைப்பற்ற (சபரிகரமாகவென்றது.)

"மன்னவைத்தேன்மதியால்" என்று கீழேசொல்லியிருக்க, மீளவும் "வைத்தேன்மதியாலெனதுள்ளத்தகத்தே" என்றதுக்குபாவம் (ஓரநுமதியித்யாதி) "எய்த்தேயொழிவேனல்லேன்" என்று - முழுச்சொல்லாய், இளைத்து க்லேசப்படக்கடவேனல்லேனென்றபடி. "என்றுமெப்போதும்" என்றபதத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (இனியொருநாளுமித்யாதி) " என்றுமெப்போதும் " என்றபுநருக்திக்குபாவம் (எல்லாதிவசத்திலுமித்யாதி.)

"மொய்த்து, ஏய்" என்றுபதச்சேதம். மொய்த்து-திரண்டு. " ஏய் " என்று-தகுதியாய், திருமேனியில் சௌகுமார்யத்துக்குத் தகுதியான திரையென்றபடி. "தகுதியானதிரை" என்றுவைத்து, "மோது" என்னலாமோவென்ன (சிறுதிவலையித்யாதி.)

"பைத்து, ஏய், சுடர்" என்றுபதச்சேதம். பைத்து - (விகஸிதமானபணங்களையுடையனாய்) என்றபடி. இத்தால்பாவம் (அரவத்தமளியித்யாதி)அமளி-படுக்கை.

மொய்த்தேய்திரையென்றுதொடங்கி, பரனை - மதியாலெனதுள்ளத்தகத்தே - வைத்தேன்; என்றுமெப்போதும்-எய்த்தேயொழிவேனல்லேனென்றந்வயம். ஆல்-அவ்யயம்... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

---

# பதினொன்றாம்பாட்டு.

சுடர்ப்பாம்பணைநம்பரனைத்திருமாலை
யடிச்சேர்வகைவண்குருகூர்ச்சடகோபன்
முடிப்பான்சொன்னவாயிரத்திப்பத்துஞ்சன்மம்
விடத்தேய்ந்தறநோக்குந்தன்கண்கள்சிவந்தே.

## ஆறாயிரப்படி.

( சுடர்ப்பாம்பணை ) இத்திருவாய்மொழி, பகவதநுபவவிரோதி சம்சாரத்ருஷ்டி விஷமென்கிறார். ... ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக, ஜந்மசம்பந்தநிவ்ருத்தியை யருளிச்செய்கிறார்.

சுடர் - நிரவதிகதேஜஸ்ஸையுடைய. பாம்பு - திருவநந்தாழ்வானை. அணை-படுக்கையாகவுடையனாய். நம் - நமக்கு. பரனை - சேஷியான. திருமாலை - ஸ்ரியஃபதியை. அடி - திருவடிகளிலே. சேர்வகை - சேரும்படியை. முடிப்பான் - தலைக்கட்டிக்கொள்ளுகைக்காக. வண் - நிரதிசயசம்பத்தையுடைய. குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வார். சொன்ன - அருளிச்செய்த. ஆயிரத்து - ஆயிரத்தில். இப்பத்தும் - இப்பத்தும். சன்மம் - பகவதநுபவப்ரதிபந்தகமான ஜந்மம். அற - மிகவும். தேய்ந்து - க்ஷயித்து. விட-நசிக்கும்படியாக. தன்-தன். கண்கள் - கண்கள். சிவந்து - சிவந்து. நோக்கும் - பார்க்கும்.

ஜந்மவிநாசஹேதுத்வத்தால் திருவாய்மொழியை புருஷசமாதியாலே சொல்லுகிறது.

இது - கலிவிருத்தம். ..........................................................................*

## ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில் - இப்பத்தானது, தன்னைக்கற்றவர்கள் சம்சாரத்துக்கு த்ருஷ்டிவிஷமென்கிறார்.

( சுடர்ப்பாம்பணைநம்பரனைத்திருமாலை ) இப்பத்தும் கற்றார்க்கு ஜந்மமறுகையிறே பலமாகச்சொல்லுகிறது; அத்தால்போயநுபவிக்கும் ப்ராப்யத்தைச்சொல்லுகிறது " பர்யங்கவித்யையிற் சொல்லுகிறபடியே

திருவநந்தாழ்வான்மடியிலே பெரியபிராட்டியாரோடே யெழுந்தருளியி ருக்கக் கண்டநுபவிக்கையிறே முக்தப்ராப்யபோகந்தான். (அடிச்சேர்வ கையித்யாதி) திருவடிகளிலே சேருகையே தமக்கு ஸ்வபாவமாகவுடைய வாழ்வார். ஜ்ஞாநாநந்தங்களன் றிவர்க்கு நிரூபகம்; சேஷத்வமாயிற்று. (முடிப்பான்சொன்னவித்யாதி) சம்சார சம்பந்தத்தை யறுக்கைக்காகச் சொன்ன வாயிரத்திப்பத்து. அடிச்சேர்வகை - முடிப்பானென்றுமாம். சந்மமானது விட்டுப்போம்படியாக நோக்கும். அது செய்யுமிடத்தில், ( இப்பத்தும் - தன்கண்கள்சிவந்து - நோக்கும் ) அதாவது - ஜந்மத்து க்கிப்பத்து த்ருஷ்டிவிஷமென்கை. இப்பத்துக்கும் ஜந்மத்துக்கும் சஹா நவஸ்த்தாந லக்ஷண விரோதமுண்டென்கை. ..........................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் ( சுடர்ப்பாம்பணையித்யாதி. ) "சன்மம்விட - கண்கள்சிவந்து - நோக்கும்" என்கிற பதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை ( இப்பத்தானதித்யாதி. )

"ஜந்மத்துக்கிப்பத்து த்ருஷ்டிவிஷம்" என்கிற ப்ரகரணத்திலே, "சுடர்ப் பாம்பணைநம்பரனைத்திருமாலை" என்று விசேஷிக்கிறதுக்கு பாவமேதென்னவருளி ச்செய்கிறார் ( இப்பத்தும் கற்றார்க்கித்யாதி வாக்யத்வயத்தாலே. ) போயநுபவிக் கும் ப்ராப்ய மெப்படியிருக்குமென்ன ( பர்யங்கவித்யையிலித்யாதி. )

வகை - ஸ்வபாவம். "அடிச்சேர்வகை" என்றத்தால் பலிதம் ( ஜ்ஞாநாந ந்தங்களித்யாதி. ) முடிப்பான் - முடிக்கைக்காகவென்றபடி.

விவரணம் ( இப்பத்துக்குமித்யாதி. )

சுடர்ப்பாம்பணையென்றுதொடங்கி, இப்பத்தும் - தன்கண்கள்சிவந்து-சன் மம் - தேய்ந்தறநோக்குமித்யந்வயः. தேய்ந்தற - விட்டுப்போம்படியாக. ஜந்மவி நாசஹேதுத்வத்தாலே இப்பத்தை புருஷசமாதியாலே சொல்லுகிறது............*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

( இருத்தும்வியந்து. )

பவ்யத்வாத் ரக்ஷகத்வாத் ப்ரணயிகரணதோ மோக்ஷதாநாத்
நீசாஸ்யாபி ஸ்வஸம்ஸ்லேஷ நிஜா ஸ்வஹஸ்தேந ஸம்பதாத் । ஸ்தித்
தத்ராப்ய ஸம்ஸ்லேஷ ஹேதோ அபி ஸக்த்யா நந்தஸ்வாநாம் விதா
நவாயாஸ்வ ஜந்மாதிதோஷை ஸ்வஸ்தோவாச॥　　　(அஅ)

( பவ்யத்வாத் ) இருத்தும்வியந்தென்னையித்யாதி - ஆஸ்ரிதார்த்தித்தபடியே செய்யுமவனுகையாலும்; ( ரக்ஷகத்வாத் ) பெருந்தாள்களிற்றுக்கருள்செய்தபெரு

மான் - ஸ்ரீகஜேந்த்ராழவானுக்கு ரக்ஷகனுகையாலும்; ( த்ரிஜகததிககாருண்யத꞉ ) அருள்தானினியானறியேனித்யாதி - ஆஸ்ரிதர்க்கு த்ரைலோக்யைஸ்வர்யத்தைக்காட்டிலு மதிகமாக க்ருபைபண்ணுமவனுகையாலும்; அதவா, தானுஸ்ரிதஹ்ருதயத்திலேயிருந்து க்ருபைபண்ணுமதுவே தனக்கு த்ரைலோக்யைஸ்வர்யாதிகமாகவெண்ணுமவனுகையாலும்; (கோபபாவாத்) ஆயனமரர்க்கரியேறெனதம்மான் - * அயர்வறுமமரர்களுக் கதிபதியான தான் கோபாலனுய்க்கொண்டு கோபர்களோடே பொருந்தியிருக்கையாலும்; ( நீலாஸ்மாத்ரிப்ரபத்வாத் ) திகழுமணிக்குன்றமொன்றேயொத்துநின்ருன் - நிரவதிகதேஜோயுக்தமான நீலரத்நபர்வதம்போலேயிருக்கிற திருமேனியையுடைத்தாகையாலும்; (ஸ்வஜநக்ருதநிஜாத்மப்ரதாநப்ரபுத்வாத்) பொருள்மற்றெனக்கித்யாதி - ஸ்வாஸ்ரிதர்க்கு ஸ்வாத்மதாநம்பண்ணவல்லனுகையாலும்; (மந்தஸ்மித்யாஸ்த்திதத்வாத்ருதி) செவ்வாய்முறுவலோ டெனதுள்ளத்திருந்த - மந்தஸ்மிதத்தோடே யாஸ்ரித ஹ்ருதயத்திலேயிருக்கையாலும்; (ஸுக்ருதிஷுசாதர்க்கிதாநுக்ரஹத்வாத்) வெறிதேயருள்செய்வர் செய்வார்கட்குகந்து-தனக்கு வரணீயராம்படியான சுக்ருதிகளிடத்திலே யசிந்திதமாகவந்து க்ருபைபண்ணுமவனுகையாலும்; (ஸ்வாகாம்சித்தாநபாயாத்) மன்னவைத்தேன்மதியாலே, வைத்தேன்மதியாலெனதுள்ளத்தகத்தே - ஆஸ்ரிதருடைய வநுமதிமாத்ரத்தாலே யவர்களுடைய ஹ்ருதயத்திலேநின்றும் போரமாட்டாமையாலும்; எம்பெருமானுஸ்ரிதரோடேகலந்து அவர்கள் ஹ்ருதயத்திலேதானே நிரதனுயிருக்கிருனென்று "இருத்தும்வியந்து" என்கிறதஸுகத்திலே யாழ்வாரருளிச்செய்தானென்கிருர் ... ...(அஅ)



## திருவாய்மொழிநூற்றந்தாதி.

இருந்தவன்ருன்வந்திங்கிவரெண்ணமெல்லாந்
திருந்தவிவர்தந்திறத்தேசெய்து - பொருந்தக்
கலந்தினியனுய்நிற்கக்கண்டசடகோபர்
கலந்தநெறிகட்டுரைத்தார்கண்டு. (எஎ)

(இருந்தவன்) இதில் - இவர்கருத்தைத்தான் கைக்கொண் டிவருடனேகலந்தபடி பேசினவாழ்வார்பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிருர். எங்ஙனேயென்னில்; இவர், வெள்ளக்கேட்டாலேயழியாதபடி திருக்கடித்தானத்திலிருப்பைக்காட்டி சம்ஸ்லேஷரஸத்தை சாத்மிப்பித்தவநந்தரம், ஸ்வவிஷயத்தி லர்த்தித்வப்ரமுகமான விவர் மநோரதத்தையெல்லாம் தானிவர்பக்கலிலே பண்ணிக்கொண் டிவரோடே பூர்ணசம்ஸ்லேஷம்பண்ணி, அந்தசம்ஸ்லேஷஜநிதஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே புதுக்கணித்த திவ்யாவயவங்களையும், நீலபர்வதம்போலே யொளிவிடுகிற வடிவையுமுடையனுயிருக்கிறபடியை மண்டியநுபவித்து ஹ்ருஷ்டராய்ச்செல்லுகிற * இருத்தும் வியந்திலர்த்தத்தை, "இருந்தவன்தான்வந்து" என்றுதொடங்கி யருளிச்செய்கிருரென்கை.

(இருந்தவன்தான்வந்து) திருக்கடித்தானத்திலேயிருந்ததான், இவரிருந்தவளவும் மெள்ளவந்து. (இவரெண்ணமெல்லாம்திருந்த விவர்தந்திறத்தேசெய்து) இவரெண்ணமாவது - "என்றன்கருத்தையுறவீற்றிருந்தான்" என்று, "தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே" என்கிறவாழ்வார் திருவுள்ளக்கருத்தைத் தான்கைக்கொண்டபடியென்கை. (திருந்தவிவர் தந்திறத்தேசெய்து) தனக்காஸ்ரிதபாரதந்த்ர்யம் ஸ்வரூபமாகையாலே, நன்றாக விவர்விஷயத்திலேசெய்து. தன்னை முற்றூட்டாக வநுபவிக்கும்படியாக்கிவைத்து. (பொருந்தக்கலந்து) "நாம் நித்யசூரிகளுக் கவ்வருகாயிருப்புதோம், இவர் நித்யசம்சாரிகளுக் கவ்வருகாகவெண்ணியிருப்பர்" என்று வாசிவையாமல், "சிறியேனுடைச்சிந்தையுள்," "தூயசுடர்ச்சோதிதனதென்னுள்வைத்தான்" என்னும்படி ஒருநீராகக்கலந்து. (இனியனுயிருக்கக்கண்டசடகோபர்) "திகழுமணிக்குன்றமொன்றேயொத்துநின்றான்," "கருமாணிக்கக்குன்றத்துத்தாமரைபோல் திருமார்வுகால்கண்கைசெவ்வாயுந்தியானே" என்றும், "செவ்வாய்முறுவலோடெனதுள்ளத்திருந்தவவ்வாயன்றியானறியேன்" என்றும், இப்படியாயிற்றுப் பெறுப்பேறுபெற்றானு யினியனுயிருந்தபடியென்கை. (கண்டசடகோபர்) இப்படி யவனினியனுயிருந்தபடியைக்கண்டநுபவித்த வாழ்வார். (கலந்தநெறிகட்டுரைத்தார்கண்டு) அவன்தம்முடனேவந்து கலந்தபடியைத் திருவுள்ளத்தாலேகண்டருளிச்செய்தார். கலக்கைக்கவன் க்ருபையேயுபாயம், இத்தலையிலுள்ளதறுமதிமாத்ரமே. கலந்தநெறி கட்டுரைக்கையாவது - "அந்யோந்யமபிவீக்ஷந்தௌ" (அந்யோந்யமபிவீக்ஷந்தௌ) என்னும்படி "கண்டுகொண்டு - இருந்தான்," "தருந்தானருள் தானருள் தானினியானறியேன்," "கிந்ஸ்யாச்சித்தமோஹோயம்," (கிந்ஸ்யாச்சித்தமோஹோயம்) "மருள்தானீதோ," "மாயமயக்குமயக்கான்" "திகழும்தன்றிருவருள்செய்தே," "திகழும்தந்திருவருள்செய்து," "வெறிதேயருள்செய்வர்" என்றருளிச்செய்தவிவையென்கை............................(எஎ)

எட்டாம்பத்தில் - ஏழாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி - எஎ.—பாட்டு - அ௪௧.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## எட்டாம்பத்து.

## எட்டாந்திருவாய்மொழி.

### கண்கள்சிவந்து - ப்ரவேஶங்கள்.

### பன்னீராயிரப்படி.

எட்டாந்திருவாய்மொழியில், கீழ் - தம்முடைய நெஞ்சிலேவந்து புகுந்திருந்து இந்த்ரியாதிவிரோதிகளையும் நசிப்பித்துத் தன்பேறாகக்கலந்து ப்ரீதனான ஸர்வேஶ்வரன், "'இவருக்கு நிகர்ஷாபாதகமான விரோதிவந்தேறி' என்னுமிட மிவரறியும்படி, இவருடைய ஸ்வரூபமானது நமக்கு ப்ரகாரமாயிருக்கிறபடியையும், விலக்ஷணமாயிருக்கிறபடியையுங்காட்டி நைர்த்தோஷ்யத்தை ப்ரகாசிப்பிப்போம்" என்று திருவுள்ளம்பற்றி; இவருடைய வாத்மஸ்வரூபம் தன்னை யாஶ்ரயித்திருக்கு மென்கைக் குறுப்பாகத் தானிவருடைய ஹ்ருதயத்திலே யிருக்கிறவிருப்பையும், சர்வாந்தராத்மபூதனான தன்னுடைய நிரதிசயஜ்ஞாநாநந்த யோகத்தையும், அஹமர்த்தபூதனான வாத்மாவும் தமக்கு ப்ரகாரபூதனென்னு மிடத்தையும், சர்வகாரணபூதனான தான் விலக்ஷணசாரஸ்யத்தையுடையனான சேதநனுக்கு அப்ருதக்பூதனான நிலையையும், ஸ்வப்ரகாரபூதனான வாத்மாவினுடைய அரவகமத்வத்தையும், நிஷ்க்ருஷ்டாத்மஸ்வரூபத்தினுடைய ப்ராப்யபாவத்தையும், ஏவம்விதாத்மஜ்ஞாநமில்லாதாருடைய சம்சாரசம்பந்தத்தையும், ஆத்மப்ராப்தி காமனுடைய வந்திமஸ்ம்ருத்யபேக்ஷையையும், ஸ்வரூபைக்யரூபமான மோக்ஷ மசம்பாவிதமென்னுமிடத்தையும், ஏவம்விதனான வாத்மாவுக்குத் தன்பக்கல் ப்ரத்யாஸத்தியே யுஜ்ஜீவநஹேதுவென்னுமிடத்தையும் ப்ரகாசிப்பித்தபடியை யநுசந்தித்து, இப்படி விலக்ஷணமான வாத்மாவினுடைய நைர்த்தோஷ்யத்தை ப்ரகாசிப்பித்துத் தன்றிருவடிகளிலே சேர்த்துக்கொண்டானென்று ப்ரீதராகிறார்.................................................*

### ஈடு.

* மாயக்கூத்தனி லிவர்க்கோடின விடாயெல்லா மாறும்படிவந்து சம்ஶ்லேஷித்து, தன் விடாயுந்தீர்ந்து, இவரைப்பெற்ற பேற்றாலே ப்ரீதனாய், நினைவின்றிக்கே யிருக்கச்செய்தே யிங்ஙனே சேரவிழுந்தது. "இனி ப்ரவ்ருத்தமான சம்ஶ்லேஷம் சிதிலமாக வொண்ணாது; இவராகிறார் – * வளவேழுலகிலாழ்வாராயிற்று; நம்மைக்கிட்டக்கொள்ள 'சிறியேனுடைச்சிந்தை' என்று தம்மயோக்யதையை யநுசந்தித்தவர், இன்னமதுபின்னாட்டியகலப்பார்ப்பர்; ஏற்கவே பரிஹரிக்கவேணும்" என்றுபார்த்து, " இனியிவர்தாமகலப்பார்ப்பதும் 'அநாதிகாலம்சம்சரித்துப்போ

ந்த வாத்மவஸ்து அங்குத்தைக்கு யோக்யமன்று' என்றுயிற்று, இதங்ங னல்ல, வந்தேறியான வித்தைப்பாராதே அடியைப்பாரீர்'' என்று, ''இ வ்வாத்மவஸ்துவினுடைய வைலக்ஷண்யத்தை யிவர் நெஞ்சிலே படுத்த வேணும்'' என்றுபார்த்து; ''நித்யமாய், ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய்,நம க்கத்யந்தசேஷமாய்க்காணு மிருப்பது, நீர் கிட்டுமது நமக்கவத்யமல்ல, கௌஸ்துபத்தோபாதி பிராட்டிமாரோபாதி நமக்குமிறமாமித்தனை'' எ ன்று இவருடைய ஸ்வரூபவைலக்ஷண்யத்தை யிவர்நெஞ்சிலே படுத்துகி ருனுய்; ''அதுசெய்யுமிடத்தில், 'உம்முடையவாத்மஸ்வரூபமிருக்கும் படி காட்டவாரீர்' என்றுல், 'மின்மினிபோலே யிருக்கிற விதில்சரக்கெ ன்' என்றிவரிசைவாரொருவரல்லர், 'அவ்வாயன்றியானறியேன்மற்ற ருள்' என்று நம்வடிவழகிலே துவக்குண்டிருப்பதொன்றுண்டு, நம்மை முன்னிட்டு நமக்கு ப்ரகாரமாயிருக்கிற ஸ்வரூபத்தைக் காட்டிக்கொடுப் போம்'' என்று பார்த்து, ''வாரீர், நம்முடைய வடிவழகிருக்கிறபடிக ண்டீரே, நம்மைக்காணும் காட்சியிலே யும்மையுங்காணலாய்க்காணுமிரு ப்பது'' என்று தன்னுடைய வடிவழகை முற்பட வநுபவிப்பித்து, தன க்கு நூபுராதிகளோபாதி யத்யந்தபோக்யமுமாய் அத்யந்தசேஷமுமாயி ருக்கிற வாத்மஸ்வரூபத்தைக் காட்டிக்கொடுக்க, அத்தையநுபவித் தினி யராகிருர். இத்திருவாய்மொழியில் முதலிரண்டாைப்பாட்டாலே - தன் னையநுபவிப்பித்து, அநந்தரம் ஆத்மஸ்வரூபத்தைக் காட்டிக்கொடுத்தா னுயிருக்கும். அதுக்கடியென்னென்னில்; ''வஸ்துதான் ஸ்வாஶ்ரயமாய ல்லதிராமையாலே ஆஶ்ரயமான தன்னைக்காட்டி, பின்னை ஸ்வரூபத்தை க்காட்டிக்கொடுக்கிருன்'' என்பாருமுண்டு. அன்றிக்கே, '''ஸ்வரூபமி ருக்கும்படியைக் காட்டித்தரவாருமென்றுலிசையார்' என்று தன்னைமு ற்படக் காட்டிக்கொடுக்கிருன்'' என்பாருமுண்டு. ''இரண்டாைப்பாட் டாலும்- * இருத்தும்வியந்திற் கலவிபின்னுட்டுகிறது'' என்பாருமுண்டு.*

## ஜீயர் அரும்பதம்.

கண்கள்சிவந்துப்ரவேஶே, கீழும் மேலும் பகவத் ப்ரகரணமாயிருக்க, இதி லாத்மஸ்வரூப வைலக்ஷண்யம் சொல்லுகிறதுக்கு சங்கதியேதென்கிறசங்கையிலே சங்கதியருளிச்செய்கிருர் (மாயக்கூத்தனிலித்யாதி.) ஸம்பந்தத்தாலே - ஆழ்வாரு டைய விடாயும் தீர்ந்ததென்றபடி. சைதில்யப்ரஸக்தி யேதென்ன (இவராகிருரித் யாதி.) பரிஹரிக்கும் க்ரமமேதென்ன (இனியிவர்தாமித்யாதி.) அடியைப் பாரீ ரென்றது - இவ்வாத்ம வஸ்துவினுடைய ஸ்வாபாவிகாகாரத்தைப் பாரீரென்றபடி. ''அடியைப்பாரீர்'' என்றதின் விவரணம் (நித்யமாயித்யாதி.) ஆனுல், பகவத்விக் ரஹத்தையும் ஸ்வரூபத்தையும் சொன்னவநந்தரம், ஆத்மஸ்வரூபத்தைச் சொல்லு வானென்னென்ன வருளிச்செய்கிருர் (அதுசெய்யுமிடத்திலென்றுதொடங்கிமேலெ ல்லாம்.) (நம்மைக்காணும்காட்சியிலே) இத்யாதிக்கு-நம்முடைய விக்ரஹாதிகளோ பாதி யும்முடைய ஸ்வரூபமும் நமக்கு பரதந்த்ரமான வாகாரத்தாலே போக்யமாயி ருக்குமென்று கருத்து. கீழ், கௌஸ்துபத்தோபாதியென்றது - ப்ரணயித்வநிபந்தந

ஸ்வாபிப்ராயத்தாலே; இங்கு, நூபுராதிகளோபாதியென்றது - தத்வஸ்த்திதியால்வந்த வாழ்வாரபிப்ராயத்தாலே.

அதுக்கடியென்னென்னிலென்றது - ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தைக்காட்டுகிறவிடத்திலே முதலிரண்டாைப்பாட்டாலே யநுபவிப்பிக்கைக்கடி யென்னென்னிலென்றபடி........................................*

# எட்டாந்திருவாய்மொழி

## முதற்பாட்டு.

கண்கள்சிவந்துபெரியவாய்வாயுஞ்சிவந்துகனிந்துள்ளே
வெண்பலிலகுசுடரிலகுவிலகுமகரகுண்டலத்தன்
கொண்டல்வண்ணன்சுடர்முடியனான்குதோளன்குனிசார்ங்க
னொண்சங்கதைவாளாழியானொருவனடியேனுள்ளானே.

### ஆறுயிரப்படி.

(கண்கள்சிவந்து) என்னோடே சம்ஶ்லேஷித்த சம்ஶ்லேஷத்தினுடைய ஸ்த்தைர்யார்த்தமாகத் தன்னுடைய நிரவதிகமானவழகைக்காட்டி யென்னை வசீகரித்துக்கொண் டென்னுள்ளே யிருந்தருளினானென்கிறார்... ... ... ... ... ... ... .. ... ... ... ... ...*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், சர்வப்ரகாரவிலக்ஷணமான வடிவழகோடே யென்னெஞ்சுக்குள்ளே புகுந்திருந்தானென்கிறார்.

சம்ஶ்லேஷப்ரீத்யதிசயத்தாலே, கண்கள்-திருக்கண்கள். சிவந்து-சிவந்து. பெரியவாய்-பெருத்திருப்பனவாய். அப்படியே, வாயும்-திருவதரமும். சிவந்து-சிவந்து. கனிந்து-பழுத்து. உள்ளே-அகவாயிலே. வெண்-வெளுத்த. பல் - திருமுத்துநிரையினுடைய. இலகு-விளங்குகிற. சுடர்-சுடரையும். இலகு-அத்யுஜ்ஜ்வலமாய். விலகு-அசைகிற. மகரகுண்டலத்தன் - மகரகுண்டலத்தையுமுடையனாய். இவ்வவயவசோபைக்கும் பரபாகரூபமாய். கொண்டல்-காளமேகத்தின். வண்ணன் - நிறம்போலேயிருக்கிற ரூபசோபையையுடையனாய். அவ்வடிவழகுக்குத்தகுதியாய், சுடர்-பேரொளியையுடைத்தான. முடியன் - திருவபிஷேகத்தையுடையனாய். நான்குதோளன் - அந்தசர்வேஶ்வரத்வாநுரூபமான நாலுதிருத்தோள்களையுமுடையனாய். "[Grantha script]"(திவ்யாஸ்த்ரபுஷ்பிதசதுர்ப்புஜம்) என்கிறபடியே அந்தபுஜகல்பகம் பூத்தாப்போலேயிருக்கிற, குனி - வளைந்த. சார்ங்கம்-ஸ்ரீசார்ங்கம். ஒண்-தர்ஶநீயமான. சங்கு - ஸ்ரீபாஞ்சஜந்யம். கதை - கௌமோதகீ. வாள்-நந்தகம். ஆழியான்-திருவாழியாகிற திவ்யாயுதத்தையுடையனாய். ஒருவன்-இவ்வவயவசோபையாலு மாபரணசோபையாலு மாயுதசோபையாலு மத்விதீயகாரனானவன். அடியேன்-இவ்வழகிலே துவக்குண்டடியேனான வென்னுடைய. உள்ளான்-அகவாயிலே ப்ரகாசியாநின்றான்.

சங்குகதையென்கிறவித்தை-சங்கதையென்று கடைக்குறைத்தலாய்ச் சொல்லிற்று ........................................................................*

ஈடு - முதற்பாட்டு.

அவன், தம்மோட்டைக்கலவியாலே புதுக்கணித்த திவ்ய சௌந்தர்யாதிகளோடே யென்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்திருந்தா னென்கிறார். நம்மாழ்வார்கள், வடிவழகுக் கவ்வருகுஸ்வரூபகுணங்களி லிழிய மாட்டார்கள். திவ்ய விக்ரஹத்தை சுபாஶ்ரயமாகப் பற்றினபின்னை யவ்வருகுபோவானென்று சாஸ்த்ரங்கள் சொல்லுகிறது - இத்தைவிட்டுப் போகச் சொல்லுகிறதல்ல, ஸ்வரூபகுணங்களு முபாஸ்யமென்கைக்காகச்சொல்லுகிறது. அவன்றன்னோடு பிராட்டிமாரோடு சேஷபூதரோடுவாசியில்லை, எல்லார்க்கு மபிமதமாயிருக்குமாயிற்றுத்திருமேனி.

(கண்கள்சிவந்து) "தஸ்யயதாகப்யாஸம்புண்டரீகமேவமக்ஷிணீ" (தஸ்யயதாகப்யாஸம்புண்டரீகமேவமக்ஷிணீ) என்று கண்களாகில் சிவந்திருக்குமிறே; இப்படியிருக்கச்செய்தே, * மாயக்கூத்தனில் விஶ்லேஷத்தாலே விவர்ணமானது, * இருத்தும்வியந்தில் சம்ஶ்லேஷத்தாலே தன்னிறம்பெற்றபடி. கண்ணிலேதுவக்குண்டு கால்வாங்கமாட்டாதேயிருக்கிறவிருப்பு, இசையிலேகாணுமித்தனை. (பெரியவாய்) வ்ருத்திஹ்ராஸாதிகளுண்டாகிறதாயிற்று. "ஸதைகரூபரூபாய" (ஸதைகரூபரூபாய) என்கிறது-கர்மநிபந்தநமான விகாரங்களில்லையென்றவித்தனையொழிய, ஆஶ்ரிதசம்ஶ்லேஷத்தாலேபிறக்கும் விகாரத்தையில்லையென்கிறதன்றே; அப்படியேயானவன்று ஆஶ்ரயணீயனன்றிக்கேயொழியுமே. அவனும் தன்னளவிலே விக்ருதனுகக்கடவனிறே. (வாயும் சிவந்து) கண்ணேயன்றிக்கே, திருவதரமும் தன்னிறம்பெற்றபடி சொல்லுகிறது. "செவ்வாய்-வெண்பல் சுடர்க்குழை" என்றது பின்னூட்டுகிறபடி.. (கனிந்து) இச்சிவப்பு, தன்னிலேயூறி நெய்த்துத் தோற்றுநின்றதாயிற்று. (உள்ளே) திருவதரத்தில் சிவப்பைவிட்டு, உள்ளூப்புகுகையிலுண்டான வருமையடையத்தோற்றுகிறது. (வெண்பலிலகுசுடர்) திருவதரத்திற்சிவப்புக்குப் பரபாகமான வெண்மையையுடைத்தாய், தேஜஸ்ஸூநின்று சுழியாநின்றதாயிற்று. (இலகுவிலகுமகரகுண்டலத்தன்) திருக்குழலிலிருட்சிக்கு ப்ரகாசகமாய், அலைந்துவருகிற திருமகரகுண்டலத்தையுடையவன். "இக்கலவிநமக்கு சம்பவிப்பதே!" என்று தலைசீய்த்துப்படாநின்றான்போலே. கடலுடைந்தாப்போலே தன்னளவிலே ஹ்ருஷ்டனுகாநின்றான். (கொண்டல்வண்ணன்) வர்ஷூகவலாஹகம்போலே வடிவும் குளிர்ந்துகறுத்தது. முன்பு விவர்ணமாய்ப்போலே திருமேனியிருந்தது. (சுடர்முடியன்) தன்னழகாலேயல்லாதவழகை முட்டாக்கிடும் திருவபிஷேகத்தையுடையவன். * மாயக்கூத்தனிலிவர் விடாய்தீர்ந்தபின்பாயிற்று முடியும் நற்றரித்தது. "முடிசேர்சென்னியம்மா" என்றி

றே கூப்பிட்டது. ( நான்குதோளன் ) இவரையணைத்தபின்பு தோள்கள் பணைத்தபடி. ( குனிசார்ங்கன் ) " மகரகுண்டலத்தன் " என்கிறவோபாதி, இவையும் சிலவாபரணங்களிருக்கிறபடி. வீரர்கள்கையில்வில்லு, வினையில்லாதபோதும் வளைந்தேயிருக்குமிறே. ( ஒண்சங்கு ) " உண்பது சொல்லில்," "உன்செல்வம்சாலவழகியது" என்னும்படியான வொண்சங்கு. (கதைவாளாழியான்) இவற்றையுடையவன். (ஒருவன்) புண்டரீகாக்ஷனாய், காளமேக நிபச்யாமளனாய், சதுர்ப்புஜனாய், சங்கசக்ராதி திவ்யாயுதோபேதனாகையாலே அத்விதீயன். (அடியேன்) அவனுடைய சேஷித்வ மத்விதீயமாயிருக்கிறாப்போலே, இவருடைய சேஷத்வமு மத்விதீயம். அதாவது - ஸ்வரூபஜ்ஞாநத்தாலன்றிக்கே அழகுக்குத்தோற்று-அடியேனென்கிறார். (உள்ளானே) பராகர்த்தமான மநஸ்ஸை ப்ரத்யக்விஷயமாக்கினவாறே, "யுவாகுமாரः" என்று கேட்டேபோம்வடிவழகு, வயிரப்பேழைதிறந்தாப்போலே அவயவசோபையு மாயுதசோபையு மாபரணசோபையுமாய் மிளிராநின்றதாயிற்று... ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (கண்களித்யாதி) "கண்கள்சிவந்து" என்றுதொடங்கி, "ஒருவனடியேனுள்ளானே" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (அவன்தம்மோட்டையித்யாதி) ஸ்வரூபகுணங்களை விட்டு விக்ரஹத்தை யநுபவிப்பானென்னென்ன (நம்மாழ்வார்களித்யாதி) விக்ரஹத்தைவிட்டு ஸ்வரூபகுணங்களிலே போவானென்று சாஸ்த்ரஞ்சொல்லாநின்றதேயென்ன (திவ்யவிக்ரஹத்தையித்யாதி) ஆனாலெதுக்காகச்சொல்லுகிறதென்ன (ஸ்வரூபகுணங்களுமித்யாதி) விக்ரஹந்தான், பிராட்டிமார்க்கொழிய சேஷபூதர்க்கபிமதமாகக்கூடுமோவென்ன (அவன்றன்னோடித்யாதி)

இப்போது "சிவந்து" என்கையாலேபாவம் (தஸ்யயதேத்யாதி) "சிவந்து" என்கிற ஸ்வரத்துக்குபாவம் (கண்ணிலேயித்யாதி) வ்ருத்திஹ்ராஸாதிகளுண்டானால், " ஸதைகரூபரூபாய" (ஸதைகரூபரூபாய) என்கிறத்தோடு விரோதியாதோவென்ன (ஸதைகேத்யாதி) அப்படியேயானாலோவென்ன (அப்படியேயித்யாதி) "பெரியவாய்" என்றதுக்குபாவம் (அவனுமித்யாதி) பெரியவாய் - பெருத்தென்றபடி. தன்னளவிலேயென்றது - தன்பெருமைக்கீடாகவென்றபடி.

"வாயும்" என்றசப்தார்த்தம் (கண்ணேயன்றிக்கேயித்யாதி) " இருத்தும் வியந்திற்கலவிபின்னாட்டுகிறது" என்றத்தை தர்சிப்பிக்கிறார் (செவ்வாயித்யாதி)

" உள்ளே " என்ற ஸ்வரத்துக்குபாவம் (திருவதரத்திலித்யாதி) விலகுதல்-சலித்தல். திரு மகரகுண்டலத்துக்கசைவுவருகைக்கு ஹேதுவை யருளிச்செய்கிறார் (இக்கலவியித்யாதி) கீழெல்லாவற்றுக்கும்பாவம் (கடலித்யாதி.)

இப்போது "கொண்டல்வண்ணன்" என்கையாலேபாவம் (முன்பித்யாதி.)

திருவபிஷேகத்துக்கு விக்ருதியேதென்ன (மாயக்கூத்தனிலித்யாதி) இதுதானிவராசைப்பட்டபடியே வந்தநுபவிப்பித்ததுக் குத்யோகமாக விருக்குமென்கிறார் (முடிசேரித்யாதி)

ஆபரணங்களோடே ஆயுதங்களை யெடுக்கிறதுக்குபாவம் (மகரகுண்டலத்தனித்யாதி) "குனி" என்றதுக்குபாவம் (வீரர்களித்யாதி)

"ஒண்சங்கதை" என்றது - கடைக்குறைத்தலாய், ஒண்சங்கு கதையென்றபடி. சங்குக்கொண்மையேதென்ன (உண்பதித்யாதி) நாய்ச்சியார்திருமொழி.

அத்விதீயத்வமேதென்ன (புண்டரீகாக்ஷனுயித்யாதி)

"ஒருவன்" என்றத்தை " அடியேன் " என்றத்தோடேகூட்டி பாவாந்தரம் (அவனுடையவித்யாதி) சேஷத்வ மத்விதீயமாகையாவதேதென்ன (அதாவதித்யாதி) உள்ளான்-உள்ளேயிருக்கிறனென்றபடி. "கண்கள்சிவந்து" என்றுதொடங்கி, "உள்ளான்" என்னுமளவுக்கும்பாவம் (பராகர்த்தமானவித்யாதி) வயிரப்பேழை-வஜ்ரங்களிருக்கிறபெட்டி. (வயிரப்பேழைதிறந்தாப்போலே) என்கிறவிடத்திலே- "ஸ்ரீரங்காந்தர்மந்த்ரம்" (ஸ்ரீரங்காந்தர்மந்திரம்) இத்யாத்யநுசந்தேயம்.

க்ரமேணுந்வய:. "உள்ளேவெண்பல்" இத்யாதிக்கு - அகவாயிலேவெளுத்தபல்லினுடைய ப்ரகாசிக்கிற தேஜஸ்ஸையும், இலகு-ப்ரகாசிப்பிப்பதாய், விலகு-சலியாநிற்கிற, மகரகுண்டலத்தையுமுடையவனென்று சப்தார்த்தம்..............*

---

# இரண்டாம்பாட்டு.

அடியேனுள்ளானுடலுள்ளானண்டத்தகத்தான்புறத்துள்ளான்
படியேயிதுவென்றுரைக்கலாம்படியனல்லன்பரம்பரன்
கடிசேர்நாற்றத்துள்ளாலையின்பத்துன்பக்கழிநேர்மை
யொடியாவின்பப்பெருமையோனுணர்விலும்பரொருவனே.

## ஆறாயிரப்படி.

( அடியேனுள்ளான் ) அசங்க்யேயமான வண்டங்களுக் கெல்லாம் நிர்வாஹகனாய், நிரஸ்தசமாப்யதிகனாய், அநாக்ராத து:ககந்த நித்யசித்தநிரவதிகாநந்தத்தையுடையனாய், சர்வஜ்ஞனாய்,நிரபேக்ஷனாயிருந்துவைத்து, என்னுடைய நிகர்ஷத்தையும் தன்னுடைய வுத்கர்ஷத்தையுமநுசந்தித்து, தன்னோடு கலந்து பரிமாறுகைக்கு நானீடல்லேனென் றகலுகிறேனென்னும் பயத்தாலே என்னால் தன்னை விடமுடியாததொருபடிதன்னழகைக் காட்டிக்கொண்டு என்னுள்ளே புகுந்தருளுகை யன்றியே என்னுடம்பினுள்ளேயும் புகுந்தருளினானென்கிறார். ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வாந்தராத்மபூதனாய் நிரதிசய ஜ்ஞாநாநந்தயுக்தனானவன், என்னாத்மாவோடு சரீரத்தோடு வாசியற வுள்ளே புகுந்துநின்றானென்கிறார்.

அண்டத்து - அண்டத்தகவாயிலுண்டான சமஸ்தபதார்த்தங்களுக்கும். அகத்தான் - அந்தராத்மாவாய். புறத்து - புறவாயில் அவ்யக்த மஹதஹங்காரங்களுக்கும். உள்ளான் - ஆத்மபூதனாய். இதுவே - இதுவே. படி - ப்ரகாரம். என்று-என்று. உரைக்கலாம்படியன் - சொல்லலாம்படி யிருப்பதொரு ப்ரகாரத்தையுடையன். அல்லன் - அல்லனாய். பரம்பரன் - பரரான நித்யமுக்தர்களுக்கும் பரனாயிருப்பானொருவனாய். கடி - விலக்ஷணமான. நாற்றம் - கந்தங்களெல்லாம். சேர்-சேர்

ந்த. ஆலியுள் - பரிமளசமுதாயத்தை அவகாஹித்தநுபவித்து. இன்பம் - இன்பத்தினுடைய. துன்பம் - அல்பாஸ்த்திரத்வாதி நிபந்தநமான துன்பத்தினுடைய. கழிகழிவையுடைத்தான. நேர்மை - ஸூக்ஷ்மாம்சத்தினுடைய. ஒடியா - விச்சேத ரஹிதமாகையாலே நித்யமான. இன்பம் - ஆநந்தத்தினுடைய. பெருமையோன்-அபரிச்சேத்யதையையுடையனாய். உணர்வில் - ஜ்ஞாநத்தில்வந்தால். உம்பர் - அந்தவாகந்தம்போலே நித்யத்வா பரிச்சிந்நத்வங்களாலே மேலாயிருப்பான். ஒருவன் - ஒருவன். அடியேன் - சேஷத்வைக நிரூபணீயமான அஹமர்த்தத்தினுடைய. உள்ளான் - அகவாயிலே யந்தராத்மதயா நில்லாநின்றான். உடல் - அத்யந்தஹேயமான சரீரத்தினுடைய. உள்ளான் - ஹ்ருதயாம்சத்திலேயும் வர்த்தியாநின்றான்.

படியேயிதுவென்று - உபமாநராஹித்யத்தைச் சொல்லிற்றாகவுமாம். கந்தாநுபவசுகத்ருஷ்டாந்தம், ப்ரதிபத்த்யர்த்தமாகச் சொல்லுகிறது; உபயலிங்கவிசிஷ்டமாய், ஸ்வேதர சமஸ்த விலக்ஷணமான ஜ்ஞாநாநந்த மாஹாத்ம்யத்துக்கு த்ருஷ்டாந்தமில்லாமையாலே.......................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்திருந்த வளவன்றிக்கே, என் சரீரத்திலேயும் புகுந்து கலந்தானென்கிறார்.

(அடியேனுள்ளான்) திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாதத்திலே யாறுமரச மாழ்வான்சேவித்துநின்று போரப்புக்கவாறே, "ஆழ்வான்,ஆழ்வார் 'அடியேனுள்ளான்' என்றபடிகண்டாயே!" என்ன, "க்ருதார்த்தனானேன்" என்று போந்தானும். என்னுள்ளான் என்னவேண்டுமிடத்திலே, (அடியேனுள்ளான்) என்கையாலே - ஜ்ஞாநாநந்தங்களன்று வஸ்துவுக்கு நிரூபகம்; சேஷத்வமென்கை. ஜ்ஞாநாநந்தங்களிலு மந்தரங்கம் பகவச்சேஷத்வமென்கை. (உடலுள்ளான்) சேதநனுக்கு பகவத் ஸ்வரூபத்திலும் திவ்யமங்களவிக்ரஹமே யுத்தேஸ்யமானாப்போலே, ஈஸ்வரனுக்கும், இவர் ஸ்வரூபத்திலு மிவர்கழிக்கிற சரீர முத்தேஸ்யமாய்த் தோற்றாநின்றது; செருக்கரபிமதவிஷயத்திலழுக்குகக்குமாபோலே. இத்தால் - "ஜீவபரபேதமும், ஜீவர்களுக்கு பரஸ்பரபேதமும், சேஷ சேஷிசம்பந்தமுமபரமார்த்தம்." என்கிற பக்ஷங்க ளர்த்தாத்ப்ரதிக்ஷிப்தங்கள். உம்முடைய திருமேனியை விரும்புகிறவனாரென்ன; இன்னானென்கிறதுமேல் (அண்டத்தகத்தான்புறத்துள்ளான்) அண்டாந்தர்ப்பூதமான பதார்த்தங்களோடு, புறம்புள்ள பதார்த்தங்களோடு வாசியற சர்வகதனானவன் சர்வகதமான வஸ்துகிடீ ரொருவ்யக்தியி லேகதேசமான சரீராம்சத்திலே யகப்பட்டதென்கை. (படியேயிது) (இதுவே-படி.) சர்வதா சத்ருஸமாயிருப்பதோ ருபமாநத்தையுடையவனல்லன். சர்வகதமுமாய், சர்வநிர்வாஹகமுமா யிருப்பதொரு வஸ்துவுண்டாகிலிறே யொப்புச்சொல்லலாவது. சொல்லும்படிதா னென்னென்னில் (பரம்பரன்) மேலானவற்றுக்கெல்லாம் மேலானவன். "நேதிநேதி" என்கிறபடியே-இவ்வளவன்றென்னுமித்தனை. ஆனாலு மிவ்விஷயத்தை ப்ரதிபத்தி பண்

னும்படிதானென்னென்னில் ( கடிசேர்நாற்றத்துள்ளாலே ) ஆலே - மது. "கடி" என்றும், "நாற்றம்" என்றும் – பரிமளமாய், மீமிசைச்சொல்லாய் - மிக்கபரிமளமென்கை. "கடி" என்று - புதுமையாய், செவ்விப்பரிமளமென்றுமாம். பரிமளத்துக் குள்ளும்புறம்புமில்லாமையாலே—நாற்றத்திலென்றபடி. (இன்பத்துன்பக்கழிநேர்மை) அதினுடையவநுபவத்தால் வந்த சுகத்தில் துːகாம்சத்தைக் கழித்த நேர்மையுண்டு- நுண்மை-சுகாம்ஶம் புஷ்பத்தில் பரிமளத்தை த்ருஷ்டாந்தமாகச் சொல்லுகையாலே, அதிலல்பாஸ்த்திரத்வங்கள் துːகாம்சம்; அதுகழிந்தநுண்மை-சுகாம்சம். துன்பங்கழிந்த வின்பமென்றபடி. ( ஒடியாவின்பப்பெருமையோன் ) ஒடியாததுமாய், பெரியதுமான சுகம். நித்யமுமாய் நிரதிசயமுமான வாநந்தத்தையுடையவன். "ஆநநூமயః" ( ஆநந்தமயః ) என்கிறார். (உணர்விலும்பரொருவனே) ஜ்ஞாநத்தில் வந்தால் மேலானவொருவன். அத்விதிய ஜ்ஞாநாநந்தஸ்வரூபனென்கை. (ஒடியாவின்பப்பெருமையோனுணர்விலும்பரொருவன் – அடியேனுள்ளானுடலுள்ளான்) எல்லார்க்கும் ஸ்ப்ருஹணீயவிஷயமாயிருக்கிறவன்கிடீ ! றென்சரீரத்தை யாதரிக்கிறான்... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. ( அடியேனித்யாதி. ) "உடலுள்ளான்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை ( என்னுடையவித்யாதி. )

ஆத்மாவுக்கு ஜ்ஞாநாநந்தாதிகளும் நிரூபகமாயிருக்க, சேஷத்வத்தை நிரூபகமாக வருளிச்செய்ததுக்கு சம்வாதம் ( திருக்கோட்டியூரித்யாதி. ) "'ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மாசேஷோஹிபரமாத்மநः' (ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மாசேஷோஹிபரமாத்மநః) என்றும், 'ஜ்ஞாநமயோமலः' (ஜ்ஞாநமயோமலః ) என்றும், 'தாஸபூதாः' (தாஸபூதாః ) என்றும் இத்யாதிகளாலே ஜ்ஞாநாநந்தங்களும் சேஷத்வமும் ஆத்மாவுக்கு நிரூபகமாகச் சொல்லாநின்றது ; இதிலே அந்தரங்க நிரூபகமேது" என்று எம்பெருமானார் திருவோலக்கத்திலே ப்ரஸ்துதமாக, சர்வஜ்ஞரா யெழுந்தருளியிருக்கச்செய்தேயும், "இத்தை ஆசார்யமுகேந வெளியிடவேணும்" என்றுபார்த்து, திருக்கோட்டியூர்நம்பி சந்நிதிக்கு "ஆழ்வான், இத்தைப்பெற்றுவாரும்" என்று வரக்காட்டியருள, அவருமெழுந்தருளி, நம்பியைசேவித்து, இந்த வ்ருத்தாந்தத்தை விண்ணப்பம்செய்து, ஆறுமாசம் சேவித்திருக்க, அவரிரங்காமையாலே "எம்பெருமானார் சந்நிதியிலேபோய் சேவித்துவருகிறேன்" என்றுபோகப்புக, அவரையழைத்து "ஆழ்வான், * மயர்வறமதிநலமருளப்பெற்ற வாழ்வார்தானே 'அடியேனுள்ளான்' என்றபடி கண்டாயே!" என்றருளிச்செய்ய, "க்ருதார்த்தனானேன்" என்றெழுந்தருளினானென்றபடி.. ஐதிஹ்யத்துக்கு வ்யாக்யாதா பாவமருளிச்செய்கிறார் ( என்னுள்ளானித்யாதி. ) அவையும் நிரூபகமாயிருக்க, அன்றென்கிறதென்னென்ன ( ஜ்ஞாநாநந்தேத்யாதி. ) சேஷத்வ மந்தரங்கமாகையாவது- பகவத்ப்ரகாரதயா லப்தசத்தாகமான வஸ்துவாகையாலே ப்ரதமம்சேஷத்வத்தை யிட்டு நிரூபித்துக்கொண்டு, பின்னை மற்றுள்ளவற்றை யிட்டு நிரூபிக்கவேண்டும்படியிருக்கை.

தம்மிடத்திலிருந்தால் போராதோ, ஹேயமானசரீரத்தை விரும்புகைக்கடியேதென்ன (சேதநனுக்கித்யாதி.) பகவத் விக்ரஹ மப்ராக்ருதமாகையாலே விரும்புகை ப்ராப்தம், இது ப்ராக்ருதமன்றே, உத்தேஶ்யமாகக் கூடுமோ வென்ன (செருக்கரித்யாதி.) "அடியேன்" என்றும், "உள்ளான்" என்றும்சொல்லுகையாலே - ஜீவபரபேதமும், "அடியேன்" என்ற ஏகவசநத்தாலும், "அண்டத்தகத்தான்" என்கையாலும் - ஜீவபரஸ்பரபேதமும், "அடியேன்" என்று - சேஷத்வம் சொல்லுகையாலே - சேஷசேஷிபாவ சம்பந்தமும் சொல்லுகையாலே, ப்ரதிக்ஷிப்தங்களென்கை. புறம்புள்ள பதார்த்தங்க ளென்றது - மஹதாதிகளை. பதப்ரயோகத்துக்கு பாவமாதல், "அண்டத்தகத்தான் புறத்துள்ளான் - உடலுள்ளான்" என்றத்தையுங் கூட்டி பாவமாதல் (சர்வகதமானவித்யாதி.)

"இதுவே - படி - என்றுரைக்கலாம்படியனல்லன் -" இதுவே சர்வதா சத்ருஶமென்று சொல்லலாம்படியான வுபமாநத்தை யுடையனல்லனென்று சப்தார்த்தம். அதுக்கு ஹேதுவேதென்ன (சர்வகதமுமித்யாதி.) "மேலானவற்றுக்கெல்லாம் மேலானவன்" என்றதுக்கு ப்ரமாணம் (நேதிநேதீத்யாதி) இவ்வளவல்ல விவ்வளவல்ல வென்றபடி. ஆனாலுமென்றது - பரிச்சேதிக்கப் போகாவிட்டாலுமென்றபடி.

"கடி - நாற்றத்து - ஆலையுள் - துன்பங்கழிந்த - இன்பம் - நேர்மை - சேர் - ஒடியாவின்பப்பெருமையோன்" என்றந்வயிப்பது. சேர்-சத்ருசமானவென்றபடி. ஆலை, பூவிலேயுண்டாமதாகையாலே, நாற்றமென்றது - பூவில் பரிமளமென்றபடி. அதில் துஃகாம்ஶமேதென்ன (புஷ்பத்திலித்யாதி.)

ஒடியா - நித்யமாயென்றபடி. விவரணம் (நித்யமுமாயித்யாதி.) "கடி - நாற்றத்து - ஆலையுள்" என்று - சர்வகந்தங்களையும் சர்வரசங்களையும்சொல்லி, தததநுபவத்தி லல்பாஸ்த்திரத்வாதி தோஷங்கழிந்த வாநந்தத்தில் சாராம்ஶத்தோடே சத்ருசமாய் நித்யமுமாய் நிரதிசயமுமான வாநந்தத்தை யுடையவனென்று சப்தார்த்தம். அந்வயித்ததுக்கு பாவம் (எல்லார்க்குமித்யாதி.)

அண்டத்தகத்தானென்று தொடங்கி, பரம்பரன் - கடிசேர் நாற்றத்துள்ளும், ஆலையுள்ளுமுண்டான - துன்பங்கழிந்த - இன்பம் - நேர்மையோடே - சேர்ந்த-ஒடியாவின்பப்பெருமையோன் உணர்விலும்பரொருவன் - அடியேனுள்ளானுடலுள்ளானித்யந்வயஃ..........................................................................*

---

## மூன்றாம்பாட்டு.

---

உணர்விலும்பரொருவனையவனதருளாலுறற்பொருட்டென்
னுணர்வினுள்ளேயிருத்தினேனதுவுமவனதின்னருளே
யுணர்வுமுயிருமுடம்புமற்றுலப்பிலனவும்பழுதேயா
முணர்வைப்பெறவூர்ந்திறவேறியானுந்தானாயொழிந்தானே.

### ஆறாயிரப்படி.

(உணர்விலும்பர்) இப்படி யெம்பெருமான் செய்தருளுகைக்கு ஹேதுவென்னென்னில்; என்னிச்சாமாத்ரமே காரணமாகச்செய்தருளி

ளுன்; அதுதானென்னாலே வந்ததொன்றன்று, அதுவுமவனுடைய ப்ரசாதத்தாலேவந்ததென்றுகொண்டு, இப்படி * இருத்தும் வியந்திற்சொன்னபொருளை யநுபாஷித்து, பின்னையும், இவ்வளவோ அவனெனக்குச்செய்தருளிற்று, வ்ருத்த சம்ஶ்லேஷ ஸ்த்தைர்யார்த்தமாக, தன்னுடைய சௌந்தர்யாவிஷ்காரத்தாலே யென்னை வசீகரித்து வைத்ததுவும்போராமே, என்னோடுபண்ணின சம்ஶ்லேஷத்துக்குபங்கம் வருகிறதென்னும் பயத்தாலே, ஒன்றை யெனக்குச்செய்யவொண்ணாததொருபடி, அஹமர்த்தவிசிஷ்டனானதானே, அஹம் சப்தவாச்யனென்றுதோற்றும்படி தன்னைக்குறித் திவ்வாத்மாவுக்குண்டான, நிரவதிகபுருஷார்த்தமாய், சாக்ஷாத்காரரூபமாயிருந்த சேஷதைகரஸத்வ ஜ்ஞாநத்தையும் தந்தருளினானென்கிறார்... ... ... ... ... ... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தன்க்ருபாதிசயத்தாலே தானென்னுள்ளே புகுந்திருக்கும்படி யென்னை யிசைவிப்பதுஞ்செய்து நான் தனக்கு ப்ரகாரபூதனாயிருக்கிறபடியையும் ப்ரகாசிப்பித்தானென்கிறார்.

உணர்வில்-உணர்வுமிக்கிருக்கக்கடவரான. உம்பர்-நித்யஸூரிகளுக்கு சர்வப்ரகாரநிர்வாஹகனான. ஒருவனை-அத்விதீயனானவனை. அவனது - அவனுடைய. அருளால்-க்ருபையாலே. உறற்பொருட்டு-ப்ராபிக்கைக்காக. என் - என்னுடைய. உணர்வினுள்ளே-அபேக்ஷாரூபஜ்ஞாநத்துக்குள்ளே. இருத்தினேன்-இருத்தினேன். அதுவும்-அந்தவிச்சைதானும். அவனது-அவனுடைய. இன்னருளே-நிர்ஹேதுகக்ருபையடியாகவுண்டானதே. இப்படி யென்னையிசைவித் தென்னுள்ளேபுகுந்தவன், உணர்வும்-விஷயாவலம்பியான ஜ்ஞாநவ்ருத்திவிசேஷமும். உயிரும்-ப்ரவ்ருத்திஹேதுவான பஞ்சவ்ருத்திப்ராணபேதமும். உடம்பும் - ப்ராணப்ரவ்ருத்திபேதமான சரீரபேதமும். மற்று-மற்றும். உலப்பிலனவும்-அஸங்க்யாதமான மஹதஹங்காரேந்த்ரியாதிகளும். பழுது-ஹேயம். ஆம்-என்கிற. உணர்வை-உணர்வை. பெற-பெறும்படியாக. ஊர்ந்து-நடத்தி. இறவேறி - விலக்ஷணஸ்வரூபனான வாத்மாவளவும் முடியக்கொண்டேறி. யானும்-ஆத்மவிஷயமான வஹம்புத்திவ்யவஹாரங்களும். தானாயொழிந்தான்-ஸ்வவிஷயமாம்படி ஆத்மப்ரகாரவிசிஷ்டனாய்விட்டான்............*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

கேவலக்ருபையாலே ஸ்வவிஷயமாக விச்சையையும் பிறப்பித்து, என்னோடே சம்ஶ்லேஷித்து, சம்ஶ்லேஷ ஸ்த்தைர்யார்த்தமாக, விலக்ஷணமுமாய்த் தனக்கநந்யார்ஹமுமான வாத்மஸ்வரூபத்தையுங்காட்டி யருளினானென்கிறார்.

(உணர்விலும்பரொருவனை) உணர்விலேயுள்ளரான நித்யசித்தர்-ஜ்ஞாநாதிகரான நித்யஸூரிகளுடைய சத்தாதிகள் ஸ்வாதீநமாம்படியிருக்கிற வத்விதீயனை. இத்தால் - ப்ராப்யஸ்வரூபஞ்சொல்லிற்று. * அயர்வறுமமரர்களதிபதியாயிருக்கு மிருப்பிறே ப்ராப்யம். " அடியார்கள்குழா

ங்களை - உடன்கூடுவதென்றுகொலோ" என்றிறே யிவர் ப்ரார்த்தித்தது. (அவனதருளால்) அவனுடைய ப்ரசாதத்தாலே. "ப்ராப்யமவனே" என்கிற நிர்ப்பந்தத்தோபாதி, ப்ராபகமு மவன்ப்ரசாதமேயாயிருக்கிறபடி. (உறற்பொருட்டு) ப்ராபிக்கையின்பொருட்டு. ப்ராப்யப்ராபக மவனேயாகில், நீரதிலங்வயித்த வம்ஸமேதென்ன (என்னுணர்வினுள்ளேயிருத்தினேன்) அவனையென்னுடைய ஜ்ஞாநத்துக்கு விஷயமாக்கினேன். "வைத்தேன்மதியால்" என்றதுதானிறே. இச்சித்தேனென்கை. இச்சைதான் ஸ்வாதீநமோவென்னில் (அதுவுமவனதின்னருளே) அந்தவிச்சைதான் பிறந்தது மவன்ப்ரஸாதத்தாலே. நின்றநின்றவளவுகள்தோறும், "இவ்வளவு மவனாலேபிறந்தது" என்னும்படியாயிற்றிருப்ப தவனுடைய ஸௌஹார்த்தம். "தன்பொன்னடிக்கீழ் - இருத்தும்வியந்து" என்று - ப்ராப்யமும் ப்ராபகமு மவனேயென்று, "அருத்தித்து" என்றதிறே; அத்தையிறே யிங்குச்சொல்லுகிறது. இரண்டாைப்பாட்டென்கிறதற்றது. மேல் - ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தைக்காட்டித் தந்தானென்கிறது (உணர்வும்) வைஷயிகஜ்ஞாநமும். (உயிரும்) பஞ்சவ்ருத்திப்ராணனும். (உடம்பும்) சரீரமும். (மற்றுலப்பிலனவும்) மற்றுமபரிச்சேத்யமான மஹதாதிப்ரக்ருதிவிகாரங்களும், ப்ரக்ருதியும். (பழுதேயாமுணர்வைப்பெறவூர்ந்து) இவையெல்லாம் ஹேயமென்னும்படியான வறிவை நான்பெறும்படிநடத்தி; அங்வர்த்தப்ரயோஜநத்தேருருமாபோலே. இவையபுருஷார்த்தமென்னுமுணர்வுண்டு - மயர்வற்றமதி, அத்தை நானுடையேனும்படிபண்ணி. (இறவேறி) ப்ரக்ருதி ப்ராக்ருதங்களபுருஷார்த்தங்களென்னு மளவேயன்றிக்கே, முடியப்போய். ஜ்ஞாநாநந்தஸ்வரூபமாய், பகவச்சேஷைதக ரஸமாயிருக்கு மாத்மவஸ்துவென்னுமளவும் காட்டித்தந்து. (இறவேறி) முடியவேற்றி. (யானும்தானாயொழிந்தானே) அவ்வளவிலும் பர்யவஸியாதே, என்னைச்சொல்லும்சொல்லாலே தன்னைச்சொல்லலாம்படி தனக்கு ப்ரகாரதயா சேஷமென்னுமிடத்தையுங்காட்டித்தந்தான். "ஆழ்வீர்" என்றால், "ஏன்" என்பானீச்வரன்போலேகாணும். அஹம்சப்தமுமஹம்புத்தியும் தன்னளவும் செல்லும்படி ப்ரகாரதைக வேஷமாயிருக்கிறபடியைக் காட்டித்தந்தான். * தச்சப்தம் குணவிசிஷ்டவாசியான வோபாதி, * த்வம்சப்தமு மசித்விசிஷ்டஜீவாந்தர்யாமியளவும் செல்லக்கடவதிறே... ... ... ... ... ...*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு (உணர்விலித்யாதி) "என்னுணர்வினுள்ளேயிருத்தினேன்" என்றுதொடங்கி, "யானுந்தானாயொழிந்தான்" என்னுமளவும்கடாக்ஷித்தவதாரிகை (கேவலக்ருபையாலேயித்யாதி) * இருத்தும்வியந்தில் சம்ஶ்லேஷ முந்மஸ்தகமாகச்செல்லாநிற்கச்செய்தே, ஆத்மஸ்வரூபத்தைக்காட்டுகிறதுக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார் (சம்ஶ்லேஷஸ்த்தைர்யார்த்தமாகவென்று.)

விவரணம் (ஜ்ஞாநாதிகரானவித்யாதி) இப்பதத்தால் பலிதார்த்தம் (இத்தாலித்யாதி) அதெப்படியென்ன (அயர்வறுமித்யாதி.)

இப்பதத்துக்குபலிதம் (ப்ராப்யமவனேயித்யாதி) "பின்னாட்டுகிறது" என்கிறயோஜனைக்குச் சேரக்காட்டுகிறார் (வைத்தேனித்யாதி) பலிதம் (இச்சித்தேனென்கையென்று.)

ப்ராப்திக்கன்றோ வவன்வேண்டுவது, இச்சைக்குவேணுமோவென்ன (நின்றநின்றவித்யாதி) "உணர்வு" என்று - இச்சையைச்சொல்லுமோவென்ன (தன்பொனனடியித்யாதி) யத்வா, "பின்னாட்டுகிறது" என்கிறத்தைக்காட்டுகிறாராதல்.

"ஊர்ந்து" என்கிறபதத்துக்கு பாவகதநமுகேந வுக்தார்த்தத்தை விசதீகரிக்கிறார் (அந்வர்த்தேத்யாதி) (அந்வர்த்தப்ரயோஜநத்தேர்) என்றதுக்கு - ஜீயர்காலந்தொடங்கி சம்ப்ரதாயமில்லை. ஆனாலும், சமர்த்தனானராஜா தரித்ரனானால் த்ரவ்யார்த்தமாகத் தேர்களிலே யேறித்தானேநடத்துகை. விஜயாவஹமான விஜயரதமுண்டு - அர்ஜுநரதம், அதிலே தானே சாரதியாயேறி பீஷ்மாதிகள் சாமர்த்யமெல்லாம் பழுதேயாம்படி யத்தேரை நடத்தினாப்போலே, சரீரத்துக்கு ரதமென்றுபேராகையாலே, ததேகதேசமான ஹ்ருதயத்திலிருந்து வைஷயிக ஜ்ஞாநாதிகள் பழுதேயாம்படியான ஜ்ஞாநத்தை நடத்தினானென் றருளிச்செய்யலாயிருக்கும். "இவையெல்லாம்" இத்யாதிவாக்யவிவரணம் (இவையபுருஷார்த்தமித்யாதி) முடியப்போகையாவதேதென்ன (ஜ்ஞாநாநந்தேத்யாதி) "ஊர்ந்து" என்றதுக்கநுகுணமாக, "இறவேறி" என்றதுக்கு சப்தத்தைநெருக்கி யர்த்தமருளிச்செய்கிறார் (முடியவேற்றியென்று) பலிதம் (ஆழ்வீரித்யாதி) காட்டித்தந்தப்ரகாரமேதென்ன (அஹம்சப்தமித்யாதி) "யானுந்தானாயொழிந்தான்" என்றால் - ஸ்வரூபைக்யமொழிய ப்ரகாரப்ரகாரிபாவம் சொல்லுமோவென்ன; "தத்த்வமஸி" என்கிறவிடத்திற்போலே சொல்லுமென்கிறார் (தச்சப்தமித்யாதி.)

க்ரமேணாந்வய:...........................................................*



## நான்காம்பாட்டு.

யானுந்தானாயொழிந்தானையாதும்யவர்க்குமுன்னோனைத்
தானுஞ்சிவனும்பிரமனுமாகிப்பணைத்ததனிமுதலைத்
தேனும்பாலுங்கன்னலுமமுதுமாகித்தித்திப்பென்
னூனிலுயிரிலுணர்வினினின்றவொன்றையுணர்ந்தேனே.

### ஆறாயிரப்படி.

(யானும்) நானநர்ஹனென்றுகொண் டென்னுடைய விச்சாநுகுணமாகத் தன்னை யெனக் ககலவொண்ணாதபடி, தன்னைக்குறித் திவ்வாத்மா சேஷதைகஸ்வபாவ னென்னுமிடத்தைக் காட்டித் தந்தருளுகையன்றியே, தன்றிருவடிகளை நானே யகல்வேனல்லே னென்றிருக்கும்படியாக ஸ்வசேஷதைகரஸமான விவ்வாத்மா, நூபுராதிதிவ்யபூஷணம்போலே கல்யாணசாலியா யிருக்குமென்னுமிடத்தையுங் காட்டித் தந்தருளினானென்கிறார்...........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சமஸ்தகாரணபூதனானவன், "அஹமந்நம்" (அஹமந்நம்) என்கிறபடியே தனக்கு சர்வவிதபோக்யபூதனான வாத்மாவைத் தனக் கப்ருதக்ஸித்த ப்ரகாரமாகவுடையனாய் நிற்கிறநிலையை யறியப்பெற்றேனென்கிறார்.

யாதும்யவர்க்கும் - சமஷ்டிரூபமான சகலசேதநாசேதநங்களுக்கும். முன்னோனை - நியதபூர்வக்ஷணவர்த்தியான காரணபூதனாய். தானும் - வ்யஷ்டிரூபஸ்ருஷ்ட்யாதிகளுக் குறுப்பாக ரக்ஷணத்துக்குக் கடவதானும். சிவனும்-சம்ஹாரத்துக்குக்கடவ ருத்ரனும். பிரமனுமாகி - ஸ்ருஷ்டிக்குக்கடவ ப்ரஹ்மாவுமாய்க்கொண்டு. பணைத்த - விஸ்த்ருதனான. தனிமுதலை - ப்ரதாநகாரணபூதனாய். தானிச்சேதநனுக்கு சர்வவிதபோக்யமாமாபோலே, தேனும்பாலும் கன்னலுமமுதுமாகி - தனக்கிச் சாநுரூபபோக்யமாய்க்கொண்டு. தித்தித்து - ரஸித்து. என்-என்னுடைய. ஊனில்-சரீரத்திலும். உயிரில் - ப்ராணனிலும். உணர்வினில் - ஜ்ஞாநத்திலும். நின்ற - அப்ருதக்ஸித்தனாய்க்கொண்டு ஏகாகாரமாயிருக்கிற. ஒன்றை - ஆத்மஸ்வரூபத்தை சரீரமாக வுடையனாகையாலே. யானும் - அஹமர்த்தமும். தானாயொழிந்தானை - தானாய்விட்டவனை. உணர்ந்தேன் - அறியப்பெற்றேன். ..............................*

## ஈடு - நான்காம்பாட்டு.

ப்ராப்தியைக்காட்டினவளவேயன்றியே, இவ்வாத்மா தனக்கத்யந்தபோக்யமென்னுமிடத்தையுங் காட்டித் தந்தானென்கிறார்.

(யானும்தானாயொழிந்தானை) கீழ்ச்சொன்ன வநந்யார்ஹசேஷத்வத்தில் ப்ரீதியாலே யநுபாஷிக்கிறார். (யாதுமித்யாதி.) யாதும் யவர்க்குமென்று — காரணாவஸ்த்தமான சேதநாசேதநங்களைச்சொல்லுகிறது. (முன்னோனை) கார்யத்துக்கு நியமேந பூர்வக்ஷணவர்த்தியானதிறே காரணமாவது. (தானுமித்யாதி) ப்ரஹ்மருத்ரர்கள்நடுவேயவதரித்ததானும், ப்ரஹ்மருத்ரர்கள் முதலான கார்யவர்க்கமு மாய்க்கொண்டு விஸ்த்ருதமான வத்விதியகாரணமானவனை. சேதநாசேதநங்க ளடங்க வழிந்தபோது தன்றிருமேனியிலே சக்த்யவஸ்த்தப்ரபைபோலே சூக்ஷ்மரூபேண விவை கிடக்கும்படி யெறட்டுக்கொண்டுநோக்கி, ஸ்ருஷ்டிகாலம் வந்தவாறே தன்பக்கலினின்றும் விபக்தமாக்கி, அண்டஸ்ருஷ்டியளவும் தானேநடத்தி ; அண்டாந்தர்வர்த்திகளில் ப்ரதாநரான ப்ரஹ்மாதிகளையுண்டாக்கி, ஸ்வேநரூபேணநின்று பாலநகர்மத்தைப்பண்ணியும், ப்ரஹ்மருத்ரர்களுடைய சரீரத்தையு மாத்மாவையு மதிஷ்டித்துக்கொண்டு நின்று ஸ்ருஷ்டிசம்ஹாரங்களைப்பண்ணியும், அவர்கள் செய்கிற கார்யங்களோடு தான்செய்கிற கார்யங்களோடு வாசியற வெல்லாம் தானே நடத்துகிறவனை. (தேனும்) இப்படி யினிதாயிருக்கிறதார்க்கென்னில் ; "ஸர்வரஸ:" (ஸர்வரஸ:) என்று சேதநனுக் கவனினியனாயிருக்குமாபோலே, ஈஶ்வரனுக்கு மிதினிதாயிருக்குமிறே. அவனுக்கு "என்னது" என்றினிதாயிருக்கும் ; இவனுக்கு "அவனது" என்றினிதாயிருக்கும். "ஈஶ்வரபர

தந்த்ரன்" என்றறிவதற்குமுன்னும், "ஸ்வாநுபவமமையும்" என்னும்படி யினிதாயிருக்கிறதிறே. (என்னூனிலித்யாதி) என்சரீரத்திலும், ப்ராணனிலும், ஜ்ஞாநத்திலும் வ்யாப்தமாய், விலக்ஷணமான வாத்மாவைத் தனக்கு சரீரமாகவுடையவனை யறியப்பெற்றேன்.

"நின்றவொன்று" என்கிறது ஜீவாத்மஸ்வரூபவாசியான சப்தம்; ஆஶ்ரயமான ப்ரகாரி பர்யந்தாபிதாநம்பண்ணுகிறது. ஸ்வநிஷ்டமல்லாமையாலே பகவத்பர்யந்தமாயிறேயிருப்பது. ஆத்மாவினுடையபோக்யதையாகில் சொல்லுகிறது, காரணத்வம் சொல்லுகிற தென்னென்னில்; விமுகரானசேதநரை கர்மாநுகுணமாக ஸ்ருஷ்டித்துவிட்டான்; ஐஶ்வர்யகாமரான ப்ரஹ்மாதிகளுக்கு அவர்களுகந்த வைஶ்வர்யத்தைக் கொடுத்துவிட்டான்; எனக்கு, அசிதம்ஶம் த்யாஜ்யமென்னு மிடத்தையும், ஐஶ்வர்ய மபுருஷார்த்தமென்னுமிடத்தையும், ஆத்மவஸ்துதனக்கநந்யார்ஹசேஷமாய் நிரதிசயபோக்யமா யிருக்குமென்னுமிடத்தையுங் காட்டித் தந்தானென்கைக்காகச் சொல்லுகிறார். *நின்றனரிருந்தனரிற்போலே, இஸ்ஸாமாநாதிகரண்யத்துக்கு விசேஷணம்ஶமான போக்யதையிலே தாத்பர்யம். வையதிகரண்யத்துக்கும், நாட்டார் சொல்லுகிற சுத்தபேதமன்று பொருள்; சாமாநாதி கரண்யத்துக்கும், ஸ்வரூபைக்ய மன்று பொருள்.

யாதும்யவர்க்கும் முன்னோனை யென்றுதொடங்கி, என்னூனிலுயிரிலுணர்வினில் நின்றவொன்றுன – யானும் தானாயொழிந்தானை – உணர்ந்தேனென்றந்வயம்..........................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு. (யானுமித்யாதி.) "தேனும்பாலும்கன்னலுமமுதுமாகி" என்கிறபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (ப்ராப்தியையித்யாதி.)

புநருக்திக்கு பாவம் (மேல்சொன்னவித்யாதி.)

"தானும்சிவனும்" இத்யாதியைப் பற்ற (காரணவஸ்த்தமானவித்யாதி.) காரணபூதனென்னுதே, "முன்னோனை" என்றதுக்கு பாவம் (கார்யத்துக்கித்யாதி.) முன்னோனை - காரணபூதனை.

"யாதும் யவர்க்கும்" என்று தொடங்கி, "தனிமுதலை" என்னுமளவுக்கு மர்த்தம் (சேதநாசேதநங்களித்யாதி.) பணைத்த - விஸ்ருதனான. "தானும்" என்றதுக்கர்த்தம் (அண்டாந்தர்வர்த்திகளித்யாதி.)

"தேனும்பாலும்" என்றுதொடங்கி, "தித்தித்திருப்பதாய் - என்னூனிலுயிரிலுணர்வினில்நின்றவொன்றை" என்று - ஆத்மாவைச் சொல்லுகிறது. இன்னார்க்கினிதாயிருக்குமென்னுமையாலே பாவம் (இப்படியினிதாயித்யாதி.) தமக்கும் ஸ்வரூபம் போக்யமாயிருக்குமே, ஈஶ்வரனுக்கும் தனக்கும் போக்யமாமிடத்தில் வாசியேதென்ன (அவனுக்கித்யாதிவாக்யத்வயம்.) அப்படியாத்மவஸ்துதான் போக்யமாயிருக்குமோவென்ன (ஈஶ்வரபரதந்த்ரனித்யாதி.)

"நின்றவொன்றை" என்று-சேதநனையன்றேசொல்லுகிறது, ஈஶ்வரனைச் சொல்லும் வழியேதென்ன (நின்றவொன்றென்கிறவித்யாதி.) பண்ணும்ப்ரகாரமேதென்ன (ஸ்வநிஷ்ட்டமித்யாதி.) ஸ்வநிஷ்ட்ட மல்லாமையாலேயென்றது - ஸ்வபர்யவசாயியல்லாமையாலே யென்றபடி. ஆத்மாவினுடைய போக்யதை சொல்லுகிறவிடத்திலே காரணத்வஞ் சொன்னதுக்கு ப்ரயோஜந மில்லையேயென்று சங்கித்து பரிஹரிக்கிறார் (ஆத்மாவினுடையவித்யாதி.) "யாதும் யவர்க்கும்முன்னோனே" என்றதுக்கு ப்ரயோஜநம் (விமுகரானவித்யாதி.) "சிவனும்பிரமனுமாகி" என்றதுக்கு ப்ரயோஜநம் (ஐஶ்வர்யகாமரானவித்யாதி.) "தேனும்" என்றுதொடங்கி "ஒன்றையுணர்ந்தேனே" என்றதுக்கு ப்ரயோஜநம் (எனக்கசிதம்சமித்யாதி.) "நின்றவொன்றை" என்கிற சாமாநாதிகரண்யத்தாலே, ப்ரகாரியான தன்னைக் காட்டித்தந்தானென்றன்றே தோற்றுகிறது, ஆத்மஸ்வரூபபோக்யதையைக்காட்டித் தந்தானென்று தோற்றவில்லையேயென்ன (நின்றனரித்யாதி) போக்யதாவிசிஷ்டஸ்வரூபத்தில் விசேஷணும்ஸமானவென்றபடி. "நின்றவொன்றை" என்கிற சாமாநாதிகரண்யத்தாலே, "ஐதாத்ம்யமிதꣳ ஸர்வம்" (ம்ருதாத்மகோகட:) என்றுப்போலே ஸ்வரூபைக்யமன்றே தோற்றுகிறதென்ன (வையதிகரண்யத்துக்குமித்யாதி.) வையதிகரண்யம் - ப்ராசங்கிகம். சுத்தபேத மன்றென்றது - ராஜப்ருத்யர்களுக்குப்போலே, அப்ருதக்ஸித்த சேஷ சேஷிபாவ நிபந்தநமான பேதம் பொருளென்றபடி. ஸ்வரூபைக்யமன்று பொருள் - சரீரசரீரிபாவ நிபந்தநைக்யம் பொருளென்றபடி.

கீழநுபாஷணமென்றது தவிர, "நின்றவொன்றுன - யானும் தானாயொழிந்தானை" என்றந்வயிக்கையாலே, இதுவுமோரர்த்தம். அநுபாஷண பக்ஷத்தில், "யாதும்" என்றுதொடங்கி யடைவேயந்வயம்.......................................*

# ஐந்தாம்பாட்டு.

நின்றவொன்றையுணர்ந்தேனுக்கதனுணேர்மையதுவிதுவென்
றென்றுமொருவர்க்குணரலாகாதுணர்ந்துமேலுங்காண்பரிது
சென்றுசென்றுபரம்பரமாயாதுமின்றித்தேய்ந்தற்று
நன்றுதீதென்றறிவரிதாய்நன்றாய்ஞானங்கடந்ததே.

## ஆறாயிரப்படி.

"உணர்வுமுயிருமுடம்பும்" என்றுதொடங்கி நாலாம்பாட்டளவாகப் பட ஆத்மநிதாத்பர்யமாய், நிர்த்தேசத்தை பகவத்பர்யந்தமாகப் பண்ணிக்கொடுபோந்தது; இனி, இந்நிர்த்தேசமு மாத்மபர்யந்தமேயாகிறது.

(நின்றவொன்றை) இப்படி யெம்பெருமானுடைய காருண்யத்தாலே யென்னால் சாக்ஷாத்க்ருதமாய், ப்ரக்ருதி மஹதஹங்காராகாதசேந்த்ரிய ப்ருதிவ்யாதிபூத சப்தாதிவிஷயரூப சதுர்விம்ஶதி தத்த்வவிலக்ஷணமாய், தத்ஸ்வபாவகந்த ரஹிதமாயிருந்த விவ்வாத்மஸ்வரூபத்தை யொருவர்க்கறிகையுமரிது, யோகத்தினாலே ப்ரத்யக்ஷிக்கையு மரிதென்கிறார்... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படி பகவத்ப்ரகாரபூதனான வாத்மாவினுடைய துரவகமத்வாதிசயத்தை யருளிச்செய்கிறார்.

நஶ்வரமாய் நாநாகாரமான வசித்துப்போலன்றியே, நின்ற - நித்யமாய். ஒன்றை-ஜ்ஞாநைகாகாரமான வாத்மவஸ்துவை. உணர்ந்தேனுக்கு - அவன் ஸ்வப்ரகாரதயாகாட்டக்கண்டவெனக்கு. அதனுள் - அதினுடைய. நேர்மை - சூக்ஷ்மமான வைலக்ஷண்யம். ஒன்றும் - ஒன்றும் - ஒருப்ரகாரத்தாலும். ஒருவர்க்கு - நிஷ்பந்நஜ்ஞாநராயிருப்பார்க்கும். அதுவிதுவென்று - ஏவம்விதமென்று - அநுபூதஸஜாதீயமாகவும், அநுபூயமான ஸஜாதீயமாகவும். உணரலாகாது-ஶ்ரவணமநநாதிகளாலறியப்போகாது. உணர்ந்தும்-வருந்தியறிந்தாலும். மேலும் - சமாதிபர்யந்தமாகவாரோஹித்தவளவிலும். காண்பரிது - அபரோக்ஷித்துக்காணவரிதாயிருக்கும். அவன் காட்டக்கண்டவெனக்கு, * தேஹேந்த்ரியமநःப்ராணாதிகளில் வைத்துக்கொண்டு, பரம்பரயாய்-ஒன்றுக்கொன்றுமேலாய். சென்றுசென்று - சென்றுசென்று. யாதும் - அவற்றினுடைய விகாராதிஸ்வபாவமொன்றும். இன்றி - இன்றியே. தேய்ந்து-அத்யந்தசூக்ஷ்மமாய். அற்று - தத்ஸம்பர்க்கமற்று. நன்றுதீது - அவற்றுக்குண்டான வுத்தரோத்தராபேக்ஷையாய்வருகிறநன்மையும், தீமையுமுடைத்து. என்று-என்று. அறிவு-அறிய. அரிதாய் - அரியதாய். நன்றாய் - சர்வப்ரகாரவ்யாவ்ருத்தமான ஜ்ஞாநாநந்த வைலக்ஷண்யத்தையுமுடைத்தாய். ஞானம் - அவற்றையவலம்பிக்கிற ஜ்ஞாநத்துக்கு. கடந்தது-விஷயமன்றியேயிருந்தது.

இதில்-சாங்க்யோக்த மர்யாதையாலே ஆத்மவ்யாவ்ருத்திசொல்லிற்றாயிற்று.*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

"கீழ் – பகவத்ப்ரகாரமாக வாத்மாவநுசந்திக்கப்பட்டது; இதுக்குமேல் நாலுபாட்டு-படக்தமான சௌக்ல்யத்தைப்பிரித்து நிஷ்கர்ஷக சப்தத்தையிட்டு வ்யவஹரிக்குமாபோலே, 'எம்பெருமானோடு' என்கிற பாட்டளவும் கேவலாத்மஸ்வரூபத்தைச்சொல்லுகிறது" என்றெம்பாரருளிச்செய்யும்படி. ஆண்டான், " ப்ரகாரமானவேஷத்திலே சொல்லுகிறது " என்னும். "நின்றவொன்றை" என்கிறவிதில் - பகவத்ப்ரசாதத்தாலே நானறிந்த வில்வாத்மவஸ்து வொருவர்க்கு மறியப்போகாது, வருந்தியறிந்தாலும் சாக்ஷாத்கரிக்கப்போகிறதன்றென்கிறார்.

(நின்றவொன்றை) * தேஹேந்த்ரியமநःப்ராணாதிகளிற்காட்டி லங்யமாய், இவையழியுமன்று மழியாதே யேகரூபமாய், இவற்றுக்கு நியந்தாவுமாய், விலக்ஷணமுமான வாத்மாவை. (உணர்ந்தேனுக்கு) ஆராய்ந்தேனுக்கு. " உயர்வறவுயர்நலம் " என்று அவனுடைய கல்யாணகுணங்களிலே யிழிந்தவராகையாலே, இதுக்குமுன்பு மின்மினிபோலேயிருக்கிற வாத்மஸ்வரூபத்தில் கண்வைத்திலர்; பரிகரமும் பக்திரூபாபந்நஜ்ஞாநமாகையாலே யித்தையநுசந்திக்கைக்குப் போதுபெற்றிலர். (முக்தன் * நோபஜநம்ஸ்மரந் பண்ணுமாபோலேயிறே, பகவத்குணப்ரவணனுக்கு மாத்மஜ்ஞாநமவிஷயமாயிருக்கும்படி.) இத்தையாராய்ந்தேனுக்கி

திருந்தபடி யென்னென்கிறுர் (அதனுணேர்மை) அதினுடையவைலக்ஷண்யம். (அதுவிதுவென்று) அநுபூதங்களின்படி யென்றுதல், அநுபவிக்கிறவற்றின்படி யென்றுதலறியப்போகாது. (ஒன்றுமொருவர்க்குணரலாகாது) (ஒருவர்க்கு-ஒன்றும்-உணரலாகாது) எத்தனையேனு மதிசயிதஜ்ஞாநர்க்கு மேகதேசமுமறியப்போகாது. (உணர்ந்துமேலும்காண்பரிது) "ஜ்ஞாதும்த்ரஷ்டுஞ்சதத்த்வேந" (ஜ்ஞாதும்த்ரஷ்டுஞ்சதத்த்வேந) என்கிறபடியே யறியப்போகாது, அறிந்தால் பின்னை சாக்ஷாத்கரிக்கவும் போகாது. (சென்றுசென்றுபரம்பரமாய்) போய்ப்போயொன்றுக்கொன்றுமேலாயிருக்கிற. * அந்நமயப்ராணமய மநோமயங்களுக் கவ்வருகாய். (யாதுமின்றித்தேய்ந்தற்று) அவற்றின் ஸ்வபாவங்க ளொன்றுமின்றிக்கே அவற்றோடறத்தேய்ந்தற்று. (நன்றுதீதென்றறிவரிதாய்) தேஹம், தேஹத்திற்காட்டி லிந்த்ரியம், அதிற்காட்டில் மநஸ்ஸு, அதிற்காட்டில் ப்ராணன் என்றென்றுக்கொன்று வைலக்ஷண்யமுண்டாகிறுப்போலே, ப்ராக்ருதங்களின்படியால் நன்றென்றும் தீதென்று மறியவரிதாயிருக்கும். (நன்றாய்) ஸ்வதோவ்யாவ்ருத்தமாய். (ஞானங்கடந்ததே) ஐந்த்ரியிகஜ்ஞாநத்துக்கெட்டாதிருக்கும். கீழிலவையொன்றுக்கொன்று நெடுவாசியாயிருக்கச்செய்தேயும் ஏகப்ரமாணகம்யத்வ சாம்யமுண்டு; அதுவுமில்லையென்கிறது.

ஆக, இப்பாட்டில்-சாங்க்யத்தில் தத்த்வஸங்க்யாநக்ரமத்தாலே ஆத்மஸ்வரூபத்தைச்சொல்லும்படியையும், அதுதன்னை யறிகையிலுண்டான வருமையுஞ்சொல்லிற்று... ... ... ... ... ... ... ...*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (நின்றவித்யாதி) கீழ்ப்பாட்டில் ப்ரமேயத்தை யநுவதித்துக்கொண்டு, மேல் நாலுபாட்டுக்கு மிரண்டுவகையாக சங்கதியருளிச்செய்கிறுர் (கீழ் பகவத்ப்ரகாரமாகவித்யாதிவாக்யத்வயத்தாலே) நிஷ்கர்ஷகசப்தத்தையிட்டு வ்யவஹரிக்குமாபோலே-"படஸ்யசௌக்ல்யம்"(படஸ்யசௌக்ல்யம்) என்றுநிஷ்கர்ஷித்து வ்யவஹரிக்குமாபோலேயென்றபடி. சப்தங்கள்தான், நிஷ்கர்ஷகங்களென்றும், அநிஷ்கர்ஷகங்களென்று மிரண்டுவகையாயிருக்கும். அதில், நிஷ்கர்ஷகங்களாவது – தர்மதர்மிகளைப் பிரியவநுசந்திக்கை. இதுதான், நியதநிஷ்கர்ஷகமென்றும், வைவக்ஷிகநிஷ்கர்ஷகமென்று மிரண்டுவிதமாயிருக்கும். அதில், நியதநிஷ்கர்ஷகமாவது – தர்மதர்மிகளைப் பிரியவே யநுசந்திக்கை; இதுக்குதாஹரணம் – "கந்தவதீப்ருதிவீ" (கந்தவதீப்ருதிவீ) என்றது. வைவக்ஷிகநிஷ்கர்ஷகமாவது-தன்னிச்சாநுகுணமாகப் பிரித்துச்சொல்லுகை; இதுக்குதாஹரணம் – "படஸ்யசௌக்ல்யம்" (படஸ்யசௌக்ல்யம்) என்று. அநிஷ்கர்ஷகமாவது – தர்மதர்மிகளை யபேதேநவநுசந்திக்கை; இதுக்குதாஹரணம் – "சுக்ல: பட:" (சுக்ல: பட:) என்று. ஆண்டான், "நின்றவொன்றை" என்றத்தை ப்ரகாரிபர்யந்தமாக்கி, ப்ரகாரமான வேஷத்திலே சொல்லுகிறதென்னுமென்றபடி. ஆக, மேல் நாலுபாட்டும் வைவக்ஷிகநிஷ்கர்ஷகமென்று எம்பார்நிர்வாஹம்; அநிஷ்கர்ஷகமாகஆண்டான்

நிர்வாஹம். "எம்பெம்மானேடொத்தேசென்று" என்கிறபாட்டில், கைவல்யபர யோஜனைக்குச்சேர, எம்பார்நிர்வாஹம்; பகவதுபாசந பரயோஜனைக்குச்சேர, ஆண்டான் நிர்வாஹம். "ஒன்று மொருவர்க்குணரலாகாதுணர்ந்து மேலும் காண்பரிது" என்றபதங்களைக்கடாக்ஷித்து இப்பாட்டில் ப்ரமேயத்தை யருளிச்செய்கிறார் (நின்றவொன்றையென்கிறவிதிலித்யாதி.)

"நின்ற" என்றதுக்கு - (தேஹேந்த்ரியமநஃப்ராணதிகளிற்காட்டி லக்ஷ்யமாய்) என்றும், (இவையழியுமன்று மழியாதே யேகரூபமாயிருக்கும்) என்றுமர்த்தத்வயம். "ஒன்றை" என்றதுக்கர்த்தம் (இவற்றுக்கித்யாதி) "ஆராய்ந்தேனுக்கு" என்றிப்போது சொல்லுகிறதென்னென்ன (உயர்வறவித்யாதி) பரிஹாராந்தரம்(பரிகரமுமித்யாதி) பரிகரம் - ஜ்ஞாநம். இப்போதவன் வலியக்காட்டிக்கொடுக்கையாலே யித்தையாராய்ந்துகொண்டாடுகிறார் (இத்தையித்யாதி) இதிருந்தபடி யென்னென்றது-மேலேக்கடாக்ஷித்து. "அதுவிது" என்றது-அதுபோலேயிருக்கும், இதுபோலேயிருக்குமென்றபடி. "அது" என்கையாலே - அநுபூதமானத்தையும், "இது" என்கையாலே - அநுபவிக்கிறவற்றையுமென்றபடி.

"அறியப்போகாது" என்றதுக்கும், "சாக்ஷாத்கரிக்கப்போகாது" என்றதுக்கும் த்ருஷ்டாந்தம் (ஜ்ஞாதும்த்ரஷ்டும்சேத்யாதி) "[illegible] ।ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப" (பக்த்யாத்வநந்யயாஶக்யஅஹமேவம்விதோர்ஜுந। ஜ்ஞாதும்த்ரஷ்டும்ச தத்த்வேந ப்ரவேஷ்டும்சபரந்தப) இதிகீதாயாம் ஏகாதசே.

தேய்ந்தற்று - மிகவும் சம்பந்தமற்று. அவற்றின் ஸ்வபாவமென்றது - தேஹாதிகளின் ஸ்வபாவமென்றபடி.

தேஹாதிகள் நன்றுதீதென்றறியலாயிருக்கைக்கு ஹேதுவையும், அதப்படியறியப்போகாதென்னுமத்தையும் தர்ஸிப்பிக்கிறார் (தேஹமித்யாதி.)

இத்தால்பாவம் (கீழிலவை யித்யாதிவாக்யத்வயம்.)

சாங்க்யத்தில் - சாங்க்யசாஸ்த்ரத்திலென்றபடி. தத்த்வசங்க்யாநக்ரமம்-தத்த்வகணநாக்ரமம். க்ரமேணாந்வயஃ ............................................*

---

# ஆறாம்பாட்டு.

நன்றாய்ஞானங்கடந்துபோய்நல்லிந்திரியமெல்லாமீர்த்
தொன்றாய்க்கிடந்தவரும்பெரும்பாழுலப்பிலதனையுணர்ந்துணர்ந்து
சென்றாங்கின்பத்துன்பங்கள்செற்றுக்களைந்துபசையற்றா
லன்றேயப்போதேவீடதுவேவீடுவீடாமே.

## ஆறாயிரப்படி.

( நன்றாய் ) யோகத்தினாலே யாத்மஸ்வரூபத்தை சாக்ஷாத்கரிக்கைபி லருமையென்னென்னில் ;

ப்ராக்ருதவிஷயங்களினுடைய வஸ்த்திரத்வாதி தோஷாநுசந்தாநத்தாலே ரஸயுக்தமாக சர்வேந்த்ரியங்களையு மாத்மவ்யதிரிக்த சர்வவிஷ

யங்களினின்றும் நிவர்த்திப்பித்தால், இவ்வாத்மஸ்வரூபம் கைவருவது; ஆகையாலே காண்கை யரிதென்கிறுர்..................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், யோகசாஸ்த்ரத்வாரா நிஷ்கர்ஷித்து வருந்தி யபரோக்ஷிக்கப்பட்ட வாத்மாவினுடைய ப்ராப்யரூபத்தை யருளிச்செய்கிறுர்.

நன்ருய் - ப்ராக்ருத சகல பதார்த்தங்களிலும் சங்கராஹித்யமாகிற சுத்தியையுடையராய். ஞானம் - அந்தவிஷயங்களிலே சங்கிப்பதான வைஷயிக ஜ்ஞாநங்களையும். கடந்து - தப்பி. போய் - அவ்வருகேபோய். நல் - இந்த ஜ்ஞாநஜநநத்வாரா இவனைத்தப்பாமல் ப்ரவர்த்திப்பிக்கும் நன்மையுடைத்தான. இந்திரியம்-இந்த்ரியங்கள். எல்லாம் - எல்லாவற்றையும். ஈர்த்து - தலையழித்து. ஒன்ருய்க்கிடந்த - "திலதைலவத்தாருவஹ்நிவத்" (திலதைலவத்தாருவஹ்நிவத்) என்கிறபடியே தூர்விவேசமாம்படி சேதநனோடு சேர்ந்துகிடப்பதாய். அரும் - துரத்யயமாய். பெரும் - "அநந்தஸ்யநதஸ்யாந்தஸ்ஸங்க்யாநம்வாபிவித்யதே" (அநந்தஸ்யநதஸ்யாந்தஸ்ஸங்க்யாநம்வாபிவித்யதே) என்று தானபரிச்சிந்நமாய். உலப்பில் - கார்யமுகத்தாலே அசங்க்யாதமுமாயிருக்கிற. பாழதனை - ப்ரக்ருதிதத்த்வத்தை. ஆத்மாவிற்காட்டி லத்யந்தப்ஹிர்ப்பூதமாம்படி, உணர்ந்துணர்ந்து - ஶ்ரவணமநநாதிகளால் பலகாலு முணர்ந்துணர்ந்து. சென்று - போய். ஆங்கு - அந்த ஆத்மவிஷயத்தில். இன்பத்துன்பங்கள் - ப்ராக்ருதமாய் புண்யபாபகார்யமான சுகதுःகங்களை. செற்றுக்களைந்து - ஸஹேதுகமாகக் கழித்து. பசை - தத்விஷய வாஸநாருசிகளுமாகிற பசையும். அற்ருல் - அற்ருல். அன்றே - அந்நாளிலே. அப்போதே-அம்முஹூர்த்தத்திலே. வீடு - சகல சாம்சாரிக தோஷ மோக்ஷம்பிறக்கும். அதுவே-அதுவே. வீடு - ஆத்மாநுபவமோக்ஷமாகிறது. வீடாமே - பகவத்ப்ரகாரபூதமாய் விலக்ஷணமான வாத்மாநுபவமும் ப்ராப்யாந்தர்க்கதமாகக் குறையில்லை. .........*

## ஈடு - ஆரும்பாட்டு.

யோகசாஸ்த்ரத்திற் சொல்லுகிறபடியே யிந்த்ரியஜயாதிரூபமான யோகத்தாலே ப்ரக்ருதிவிநிர்முக்தாத்ம ஸ்வரூபத்தை துःகேந சாக்ஷாத்கரிக்கலாமென்கிறுர்.

(நன்ருய் ஞானங்கடந்துபோய்) வ்யாவ்ருத்தமான நன்மையையுடைத்தாய், இந்த்ரியஜ்ஞாநத்துக் கவிஷயமா யிருக்குமென்று அவற்றை யநுபாஷிக்கிறதென்னவுமாம். நன்றுயென்கிற விதுகிடக்க, சப்தாதிவிஷயங்களைத் தப்பிப்போயென்னுதல். "ஜ்ஞாயத இதிஜ்ஞாநம்" (ஜ்ஞாயத இதிஜ்ஞாநம்) என்கிற ப்ரக்ரியையாலே - ஜ்ஞாநமென்கிறது. ஜ்ஞாநத்தால் காணப்படும் விஷயங்களை, ஜ்ஞாநசப்தத்தாலே சொல்லுகிறது. (நல்லிந்திரியமெல்லாமீர்த்து) விஷயங்களைத் தப்பிப்போனாலும், அவையிருந்தவிடங்களிலே மூட்டக்கடவதான சாமர்த்யத்தையுடைய விந்த்ரியங்களையுங்கழித்து. (ஒன்ருய்க்கிடந்தவித்யாதி) அநாதிகாலம் சேதநனோடு சம்ஸ்ருஷ்டமாய்க் கிடப்பதாய், "மமமாயாதுரத்யயா" (மமமா

யாதுரத்யயா) என்கிறபடியே ஒருவரால் கடக்க வரிதாய், மஹதஹங்காராத்யவஸ்த்தைகளாலே பரப்பையுடைத்தாய், போகமோக்ஷங்களைவிளைத்துக்கொள்ளலாம்படியாய், ப்ரவாஹரூபத்தாலும் ஸ்வரூபத்தாலும் நித்யமாயிருக்கிற வசித்தத்வத்தை; ப்ரக்ருதியை கார்யங்களாயும் காரணங்களாயு மிருக்குமென்னுமிடத்தை மிகவுமுணர்ந்து. (ஆங்கு-நன்ருய்-சென்று) தன்பக்கல் போக்யதாபுத்தியைப் பிறப்பிக்கக் கடவதான விதில் கால்தாழாதே, ஆத்மஸ்வரூபத்தளவும் சென்று. (இன்பத்துன்பமித்யாதி) அத்தை "த்யாஜ்யம்" என்று விட்டாலும், சுகதுஃகங்களுக்கு ஹேதுவான புண்யபாபகர்மங்கள் கிடக்குமாகில் பின்னையும் கொண்டு மூட்டுமிறே; அவற்றையும் விட்டு. அவற்றைவிட்டாலும் ருசிவாஸநைகள்கிடக்குமாகில் பின்னையும் கர்ப்பிக்கும் ( பசையற்ருல் ) ருசிவாஸநைகளற்ருல். ( அன்றேயப்போதே ) அக்காலத்திலே அம்முஹூர்த்தத்திலே. ( வீடு ) ப்ரக்ருதி ப்ராக்ருதங்களில் தொற்றறும். ப்ரக்ருதியின்தனே சுணேயும், சௌகுமார்யமுமுடையாரில்லை. தன்பக்கல் த்யாஜ்யபுத்தி பண்ணிணைத் தானும் முகம்பாராது.

( அதுவேவீடு ) "அற்றதுபற்றெனிலுற்றதுவீடுயிர்" என்று-ப்ராக்ருதங்களில் தொற்றற்றவாறே ஆத்மப்ராப்திலக்ஷணமோக்ஷமாயிருக்கும். அதுக்கென்னச்செய்யவேண்டுவதில்லை.

( வீடாமே ) அவனுக்கு ப்ரகாரமாக வாத்மவஸ்துவையநுசந்தித்து, அவ்வழியாலே யிதுதன்னை ப்ராப்யமாகவிறே யிவர்தாம் நினைத்திருப்பது. அவ்வளவுபோகமாட்டாதே, இதின் நன்மையைக்கண்டு இவ்வளவிலே கால்தாழ்வார்க்கும் போந்திருந்ததி! என்கிருர். தம்முடையவுத்தேஶ்யத்தி லேகதேசத்தைப் புருஷார்த்தத்தில் சரமாவதியாகக்கொள்ளுகையாலேயிறே முன்பிவரித்தைச் சிரித்திருந்தது. ....................*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு (நன்ருயித்யாதி.) "நல்லிந்திரியமெல்லாமீர்த்து" என்று தொடங்கி, "அன்றேயப்போதேவீடு" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (யோகசாஸ்த்ரத்திலித்யாதி.)

த்விதியார்த்தத்துக்கு, "ஆங்கு - நன்ருய் - சென்று" என்று மேலே யந்வயம். ஜ்ஞாநமென்று விஷயங்களைச் சொல்லுமோவென்ன ( ஜ்ஞாயத இத்யாதி. ) விவரணம் ( ஜ்ஞாநத்தாலித்யாதி. )

இந்த்ரியங்களுக்கு நன்மையேதென்ன ( விஷயங்களையித்யாதி. ) இவ்விடத்திலே - "[illegible]" ( ப்ரகீர்ணே விஷயாரண்யே ப்ராதாவந்தம்ப்ரமாதிநம் । ஜ்ஞாநாங்குஶேந க்ருஹ்ணீயாத்வஶ்யமிந்த்ரியதந்திநம் ) என்றதநுசந்தேயம். ஈர்த்து - ( கழித்தி. )

மஹதாதி கார்யாவஸ்த்தையைப்பற்ற (ப்ரவாஹரூபத்தாலும் நித்யமாயென்றது.) காரணாவஸ்த்தையைப்பற்ற (ஸ்வரூபத்தாலும் நித்யமாயென்றது.) "உணர்ந்துணர்ந்து" என்கிற வீப்ஸைக்கர்த்தம் (ப்ரக்ருதியையித்யாதி.)

"ஆங்கு - சென்று -" அவ்வாத்மவஸ்துவிலே சென்றென்றுசப்தார்த்தம். "நன்றாய்" என்றதுக்கு பாவம் (தன்பக்கலித்யாதி.)

"இன்பத்துன்பங்கள்" என்றது - சுகதுஃகஹேதுவான புண்யபாபங்களையென்றபடி. பலாபிசந்திரஹிதமான கர்மாநுஷ்ட்டாநத்தாலே முன்பு பலாபிசந்தியுக்தமாகப் பண்ணின புண்யபாபங்கள் க்ஷயிக்கும்; அத்தைப்பற்ற (அவற்றையும் விட்டு) என்கிறார். "செற்றுக்களைந்து -" முழுச்சொல்லு. ஸவாஸநமாகவிட்டு.

வீடு - விடுகையுண்டாம். இவனுசையற்றாலும், அநாதியாய் வருகிற ப்ரக்ருதிசம்பந்தம் விடுமோவென்ன (ப்ரக்ருதியின் தனியித்யாதி.) அதெப்படியென்ன (தன்பக்கலித்யாதி.) சுணை - லஜ்ஜை. இவ்விடத்திலே - "ப்ரக்ருதே꞉ ஸுகுமாரதரம் நகிஞ்சிதஸ்தீதி மே மதிர்ப்பவதி । யா த்ருஷ்டாஸ்மீதி புநர்ந தர்ஶநமுபைதி புருஷஸ்ய" (ப்ரக்ருதேஸ்ஸுகுமாரதரம் நகிஞ்சிதஸ்தீதி மேமதிர்ப்பவதி । யாத்ருஷ்டாஸ்மீதிபுநர்நதர்ஶநமுபைதிபுருஷஸ்ய) என்ற ஸாங்க்யகாரிகை யநுசந்தேயம்.

"அதுவே" என்றவவதாரணார்த்தம் (அதுக்கென்னவித்யாதி.)

(நினைத்திருப்பது) என்றவநந்தரம், இப்படி யிருக்கிறவர் "வீடாம்" என்றீடுபடுவானென்னென்ன என்று கூட்டுவது. இச்ஶங்கைக்கு பரிஹாரம் (அவ்வளவித்யாதி.) இப்போது கொண்டாடுகிறவர், "அதுசெற்று" என்று முன்பு நிரசிப்பானென்னென்ன (தம்முடையவித்யாதி.) ஏகதேசத்தையென்றது - தமக்குத்தேஶ்யமான பகவதநுபவ சுகத்திற்காட்டி லல்பமான வாத்மாநுபவசுகத்தை யென்றபடி. ஆக, ஈடுபடுகிற தவர்களபிப்ராயத்தாலே, சிரித்திருந்தது ஸ்வாபிப்ராயத்தாலேயென்றபடி.

அன்றே - அக்காலத்திலே. அப்போதே - அம்முஹூர்த்தத்திலே யென்றபடி. க்ரமேணாந்வய꞉. அதுவேவீடு - விடுகைதானே ஆத்மப்ராப்திலக்ஷண மோக்ஷமாயிருக்கும். வீடாமே - ஆத்மப்ராப்திலக்ஷண மோக்ஷந்தானே, அவனுக்கு ப்ரகாரதயா வநுசந்திக்கிற வழியாலே ப்ராப்யமுமா யிருக்குமென்றபடி.......................*

## ஏழாம்பாட்டு.

அதுவேவீடுவீடுபேற்றின்பந்தானுமதுதேறி
யெதுவேதானும்பற்றின்றியாதுமிலிகளாகிற்கி
லதுவேவீடுவீடுபேற்றின்பந்தானுமதுதேறா
தெதுவேவீடேதின்பமென்றெய்த்தாரெய்த்தாரெய்த்தாரே.

### ஆறாயிரப்படி.

(அதுவேவீடு) இந்தவாத்ம ஸ்வரூபாவிர்ப்பாவமே மோக்ஷமாகிறது, மோக்ஷம்பெற்றால் பெறும்சுகமாவது மதுவேயென் றத்யவஸித்

துக்கொண்டு வ்யதிரிக்தவிஷயசங்கத்தையெல்லாம் விடில், ஆத்மஸ்வரூபாவிர்ப்பாவலக்ஷணமாயிருந்த மோக்ஷம் கைவரும், இப்படிசெய்யாதார்க்குக் கைவாராது, அவர்கள் சம்ஸரித்தேபோ மித்தனையென்கிறுர்.

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உக்தப்ரகாரத்திலே ஆத்மாவலோகநம்பண்ணுதார், தததுபவஸித்தியன்றியே சம்சரிப்பர்களென்கிறுர்.

அதுவே - கீழ் பகவத்ப்ரகாரதயா ப்ரஸ்துதனுன வாத்மாவினுடைய வநுபவமே. வீடு - மோக்ஷமாவது. வீடுபேறு - அந்தமோக்ஷலாபத்தால்வரும். இன்பந்தானுமது - ஆநந்தமுமேயாக. தேறி - நிஷ்கர்ஷித்து. எதுவேதானும் - ப்ரக்ருதி ப்ராக்ருதங்களெல்லாவற்றிலும். பற்று - போக்யபோகோபகரண போகஸ்த்தாநரூபேணவருகிறசங்கம். இன்றி - அற்று. யாதும் - அத்தாலேவந்த ருசிவாஸனைகளும். இலிகளாகிற்கில் - இன்றியிலேயொழியப்பெறில். அதுவே - முன்புதானறுதியிட்ட வாத்மாநுபவமே. வீடு-மோக்ஷமும். வீடுபேறு-மோக்ஷலாபஜநிதமான. இன்பந்தானும்-ஆநந்தமும். அது-அதுவே. தேருது-இப்படி பகவதாத்மகமாக வாத்மாவை நிஷ்கர்ஷிக்கமாட்டாதே. எது-எது. வீடு-மோக்ஷம். இன்பம் - அத்தால்வரும்சுகம். ஏது-எது. என்று-என்று. எய்த்தார்-சித்ததௌர்ப்பல்யம்பிறந்தவர்கள். எய்த்தாரொய்த்தாரே - கர்ப்பநரகங்களிரண்டாலுமெய்த்தேவிடுவர்கள் .......................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

கீழ்ச்சொன்னவுபாயத்தின்படியே யவ்வஸ்துவை ப்ராபிக்கமாட்டாதே அதிலே சம்சயம்நுவர்த்திக்குமவர்கள், உருவக்லேசப்பட்டேபோமித்தனையென்கிறுர்.

(அதுவேவீடு) கீழ்ச்சொன்னவதுவே ஆத்மப்ராப்திலக்ஷணமோக்ஷமாகிறது. (வீடுபேற்றின்பந்தானுமது) அம்மோக்ஷத்தை ப்ராபித்தால்வரும் சுகமுமதுவே. (தேறி) இப்படிதெளிந்து. (எதுவேதானும்பற்றின்றி) ப்ரக்ருதிப்ராக்ருதங்களிலுண்டான தொற்றற்று. (யாதுமிலிகளாகிற்கில்) அதில் ருசிவாஸனைகளுமறப்பெறில். கர்மத்தையநுஷ்டித்து ஜ்ஞாநத்தையுடையனுய், * ஸ்த்திதப்ரஜ்ஞாக்யர்வஸ்த்தைபிறந்து, யோகமும் தலைநின்று, ஆத்மசாக்ஷாத்காரம்பண்ணப்பெறில். (அதுவேவீடு) கீழ்ச்சொன்ன வாத்மப்ராப்தியேமோக்ஷம். (வீடுபேற்றின்பந்தானுமது) மோக்ஷசித்தியில்வரும்சுகமு மந்தவாத்மாநுபவம். (தேருது) இப்படி தெளியமாட்டாதே. (எதுவேவீடேதின்பமென்றெய்த்தார்) மோக்ஷமாகிறதெது, மோக்ஷசுகமாகிறதேதென்றிளைத்தவர்கள். (எய்த்தாரெய்த்தாரே) இளைத்தாரிளைத்தாரொன்று உருவக்லேசப்பட்டேபோமித்தனை. நிராப்ரயமாக வாத்மஸ்வரூபத்தை யநுசந்திக்கை நிஷ்ப்ரயோஜநமென்கை.*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாம்பாட்டு (அதுவேயித்யாதி) "எதுவேவீடேதின்பமென்றெய்த்தாரெய்த்தாரெய்த்தாரே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (கீழ்ச்சொன்னவித்யாதி) கீழ்ச்சொன்னவுபாயமாவது - யோகசாஸ்த்ரம்.

வீடுபேற்றின்பம் - வீடுபெறுகையாலுண்டான வாநந்தம். "அதுவேவீடு வீடு பேற்றின்பந்தானுமதுதேறி" என்றது-ஜ்ஞாநதசை.

"எதுவேதானும்" என்று - முழுச்சொல்லு. "யாதும்" என்று - ருசிவாசனைகளைச்சொல்லுகிறது. "இலிகளாகிற்கில்-" இல்லாதவர்களாகப்பெறில். விவரணம் (கர்மத்தையித்யாதி) கர்மத்தையநுஷ்டிக்கையாவது - பலாபிசந்திரஹிதமாக வர்ணாஸ்ரமதர்மங்களைச்செய்துபோருகை. ஜ்ஞாநத்தையுடையனாகையாவது - ஆத்மப்ராப்திக்கு சாதநமுமாய், இந்த்ரியஜயாதிரூபமான ஜ்ஞாநயோகத்திலே யாரம்பிக்கை. ஸ்த்திதப்ரஜ்ஞாக்யாவஸ்த்தையை பஜிக்கையாவது - விஷயங்கள்வந்துமேலிட்டாலும் கலங்காத தைர்யத்தையுடையனாகை. யோகம் தலைநிற்கையாவது- ஜ்ஞாநாநந்தலக்ஷணமான வாத்மவஸ்து ப்ரதிபாஸிக்கும்படி அஷ்டாங்கயோகத்திலே முதிரநிற்கை.

கீழ், "அதுவேவீடு" இத்யாதி - ஜ்ஞாநதசை; இங்கு, "அதுவேவீடு" இத்யாதி-பலதசை. நிராஸ்ரயமாகவென்றது - யோகசாஸ்த்ரக்ரமத்தாலன்றிக்கே யென்னுதல், விஸ்வாஸஹீநமாகவென்னுதல்.

என்று (தேறி) என்றும், என்றிப்படி (தேறுது) என்றும் கூட்டுவது. க்ரமேணாந்வயஃ..........................................................................*



## எட்டாம்பாட்டு.

எய்த்தாரெய்த்தாரெய்த்தாரென்றில்லத்தாரும்புறத்தாரு
மொய்த்தாங்கலறிமுயங்கத்தாம்போகும்போதுன்மத்தர்போற்
பித்தேயேறியனுராகம்பொழியும்போதெம்பெம்மானோ
டொத்தேசென்றங்குள்ளங்கூடக்கூடிற்றாகினல்லுறைப்பே.

### ஆறாயிரப்படி.

(எய்த்தாரெய்த்தார்) இவ்வாத்ம ஸ்வரூபாவிர்ப்பாவலக்ஷணமோக்ஷமான திந்த்ரியஜயமாத்ரத்தாலே கைவாராது, அந்திமதசையிலே பகவத்ஸமாநாகாராத்மாநுஸந்தாநமும் வேண்டுமென்கிறார் ..............*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், கீழுக்தமான ப்ரக்ரியையாலே ஆத்மப்ராப்திகாமனுக்கு ததவலோகந ரூபமாந சாதநம்கைப்பட்டாலும், பகவத்விஷயமான வந்திமஸ்ம்ருதியுண்டாகிலு மாயிற்று ப்ராப்தி சித்திப்பதென்கிறார்.

எய்த்தார் - அவயவங்கள் வ்யாபாரக்ஷமமல்லாதபடியிளைத்தார். எய்த்தார்- இந்த்ரியங்கள் விஷயக்ரஹணசமர்த்தங்களாம்படியிளைத்தார். எய்த்தார்-ஸ்வாஸமும் மந்தீபவிக்கும்படியிளைத்தார். என்று-என்று. இல்லத்தாரும்-க்ருஹத்தில் பார்யாபுத்ரப்ருத்யாதிகளும். புறத்தாரும் - புறம்புள்ளசம்பந்திபாந்தவ ப்ரப்ருதிகளும். மொய்த்து-திரண்டு. ஆங்கு - அவ்வவஸ்த்தையிலே. அலறி - இரியக்கூப்பிட்டு. முய

ங்க - மேல்விழ. " தம்புத்ரபஶுமித்ரார்த்தவ்யாஸக்தமநஸந்நரம் " (தம்புத்ரபஶுமித்ரார்த்தவ்யாஸக்தமநஸந்நரம்) என்றிவர்கள்பக்கலிலே நெஞ்சைவைத்து, யமபடரோவழித்துணையாக. தாம்-தாம். போகும்போது - போமவஸ்த்தையிலே. உன்மத்தர்போல் - உந்மாதங்கொண்டாரைப்போலே. பித்தேயேறி - நெஞ்சுகலங்கி. " ஏதேகதம்பவிஷ்யந்தி " (ஏதேகதம்பவிஷ்யந்தி) என்று, இவற்றின்பக்கல் மமதையாலே, அனுராகம் - அநுராகம். பொழியும்போது - அபிவர்த்திக்குங்காலத்தில். இக்கலக்கமற்றுத்தெளிவுபிறந்து, எம்பெம்மானோடொத்தேசென்று - என்னுடைய ஈஶ்வரனிவனைத்தனக்கு சேஷமென்று நினைத்திருக்குமாபோலே, இவனும் தன்னை யவனுக்கு சேஷமாகவநுசந்தித்து. அங்கு-அவன்பக்கலிலே. உள்ளம்-தன்னெஞ்சு. கூடக்கூடிற்றாகில்-சென்றுகூடப்பெற்றதாகில். நல்-நல்ல.உறைப்பு-உறுதி.

தத்ப்ரகாரபூதனான வாத்மாவை லபித்ததாகலாம். இப்படி துஸ்ஸஹமான வாத்மாவலோகநத்தையிறே யெனக்கெளிதாக ப்ரகாஶிப்பித்ததென்றுகருத்து ... *

## ௯டு - எட்டாம்பாட்டு.

இப்படி துஸ்ஸம்பாதமான ஜ்ஞாநம் கைவந்தாலும், அந்திமஸ்ம்ருதியில்லையாகில் செய்ததெல்லாம் வ்யர்த்தமென்கிறார்.

(எய்த்தாரெய்த்தாரெய்த்தாரென்று) இவனுக் குத்க்ரமணதசை பிறப்பதற்குமுன்னே யிவன்முடிகை யிஷ்டமாயிருக்கையாலே, "முடிந்தான், முடிந்தான், முடிந்தான்" என்று பலகாலுஞ்சொல்லாநிற்பர்களாயிற்று. இவன்கலங்கினதசையிலே நெஞ்சைத்தெளிவித்து உத்தேஶ்ய வஸ்துவை யநுசந்திக்கவல்லனும்படி பண்ணுகையன்றிக்கே, "முடிந்தான், முடிந்தான், முடிந்தான்" என்கிறவித்தையே சொல்லாநிற்பர்களாயிற்று. (இல்லத்தாரும் புறத்தாரும்) இவன்றானுள்ளநாளி லிவர்களுக்கொன்று கொடாமையாலே, "இவனு மிதொருநடுவிற் பெருங்குடியுமென், இவன்முடிந்து உள்ளத்ரவ்யத்தை நாமே விநியோகங்கொண்டாலாகாதோ" என்றிருப்பர்கள் பார்யாதிகள். (புறத்தாரும்) அவனுமிவர்களுமான சமுதாயம் பொறாமையாலே "போகவமையும்" என்றிருப்பர்கள் புறம்புள்ளார். (மொய்த்து) கல்யாணத்துக்கழைத்தாலும் வாராதவர்கள், துஃகமுண்டானவாறே தாங்களேவந்து மேல்விழுவர்கள். (ஆங்கலறி) இவனுக்குள்ளதெளிவும் போம்படி கூப்பிடாநிற்பர்கள். மீளுகைக்கு சங்கையுண்டான தசையிலே, பயத்தாலே ப்ராணன்போம்படி கூப்பிடுவர்கள். (முயங்க) கட்டிக்கொள்ள. கூப்பீட்டுக்குப்போகாதகுறை ப்ராணன்களும்போம்படி, ஸ்நேஹிகளைப்போலே மேலேவிழுந்து கட்டிக்கொள்வர்கள். (தாம்போகும்போது) "இவர்களையு மிவ்வைஶ்வர்யத்தையும் விட்டுப்போகாநின்றோம்" என்று நெஞ்சிங்கேயிழுக்க, தன்னால் மீளவொண்ணாமையாலே, சரீரத்தைவிட்டுத் தாங்களேபோகாநிற்பர்கள். (தாம்போகும்போது) என்கிறார்காணு மப்போதை க்லேசத்தைப்பற்ற. (உன்மத்தரித்யாதி) வீதராகருங்கூட, உந்மாததசையிற்போலேயறிவுகெட்டு. தெளிவுபிறந்து தன்னையும் சர்வேஶ்வரனையுமநுசந்திக்கவேண்டும் தசை

யிலேகலங்கி. (அனுராகம்பொழியும்போது) இளையாளைப்பொன்னையும் பூட்டிக்கொடுவந்து முன்னேநிறுத்துவர்கள். புத்ராதிகள்பக்கல் ஸ்நேஹியாதநாளைக்கும் போரஸ்நேஹிக்கத்தொடங்கும். ஜீவிக்கும்நாள், லோபத்தாலே யிவற்றுக்கொன்றும்செய்யான்; இப்போதாக, "புதைத்து வைத்ததநத்தை யாபரணமாகப்பூட்டிக் காணப்பெற்றிலோம்" என்று மதகுதிறந்து ஸ்நேஹிக்கும். (எம்பெம்மானேடொத்தேசென்றித்யாதி) இப்படிகலங்குகிற சமயத்திலேதெளிவுண்டாய், தன்னையுமவனையு மநுசந்தித்து, "அவனேடொத்தசுத்தியையுமிதுடைத்து" என்றநுசந்திக்கையாகிற விவ்வர்த்தம் கூடிற்ருகில். "அவ்வஸ்துவும் ஜ்ஞாநாநந்தலக்ஷணமாயிருக்கும், இவ்வஸ்துவும் ஜ்ஞாநாநந்தலக்ஷணமாயிருக்கும்" என்றநுசந்திக்கும்படி அவ்வாத்மவஸ்துவிலே ஹ்ருதயம் சேருகையாகிறவர்த்தம் கூடுமாகில். (நல்லுறைப்பு) நல்லவாய்ப்பு. (ஆத்மப்ராப்திசித்திக்கும்) அல்லாதபோது, செய்ததெல்லாம் வ்யர்த்தம். உன்மத்தர்போல் பித்தேயேறில் அபிமதம் சித்தியாது; அனுராகம்பொழியில் ஆதிபரதனைப்போலே மானுய்ப்போமித்தனை. ஆண்டான்பணிக்கும்படி - "'நின்றவொன்றையுணர்ந்தேனுக்கு' என்னும்பாட்டுத்தொடங்கி, நிஷ்க்ருஷ்டாத்மாநுசந்தாநமாத்ரமேயன்றிக்கே பகவச்சேஷத்வ பர்யந்தமாக வநுசந்திக்கிறது; இப்பாட்டில் - 'எம்பெம்மானேடொத்தேசென்றங்குள்ளங்கூடக்கூடிற்ருகில்' என்கிற வந்திமஸ்ம்ருதியும், எம்பெருமான் தனக்கு சேஷமாக விவ்வாத்மவஸ்துவை நினைத்திருக்குமாபோலே, இவனுமவனேடொத்து அவன்நினைவோடொத்து அத்தசையிலே சேஷத்வாநுசந்தாநம் கூடுமாகில் நல்லவாய்ப்பு" என்று, பகவத்குணங்களிலே வித்தராயிருக்கிறவிவரிதெல்லா மநுசந்திக்கிற தென்னென்னில்; "இப்படியரிதாயிருக்கிற வித்தைக்கிடீர்! எனக்குக் காட்டித்தந்தது" என்று அவன்பக்க லுபகாரஸ்ம்ருதியாலே .................................... ...............*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (எய்த்தாரித்யாதி) உக்தத்தை யநுவதியாநின்றுகொண்டு, "அங்குள்ளங்கூட" என்றபதத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இப்படியித்யாதி)

"எய்த்தார்" என்கிறத்ரிருக்திக்கு ப்ரயோஜநம் (இவனுக்கித்யாதி) விவரணம் (இவன்கலங்கினவித்யாதி) "இல்லத்தாரும் புறத்தாரும் மொய்த்து - எய்த்தார்" என்கைக்கு ஹேதுவேதென்ன வருளிச்செய்கிருர் (இவன்ருனித்யாதி வாக்யத்வயத்தாலே) நடுவில்பெருங்குடி - க்ராமண்யம். "மொய்த்து" என்றதுக்குபாவம் (கல்யாணத்துக்கித்யாதி) ஆங்கு – அவ்வவஸ்த்தையிலே. இருவர்க்கும் ரோதநத்திலுண்டான ஆற்றத்தையருளிச்செய்கிருர் (இவனுக்கித்யாதி) விவரணம் (மீளுகைக்கித்யாதி) இவர்கள் கட்டிக்கொள்ளுகைக்கும் ப்ரயோஜநம் முன்புசொன்னவபிசந்தியென்கிருர் (கூப்பீட்டுக்கித்யாதி)

"தாம்" என்றதுக்கர்த்தம் (இவர்களையுமித்யாதி) "போகும்போது" என்றதுக்குபாவம் (தாம்போகும்போதித்யாதி)

கிழ்வாக்யவிவரணம் (தெளிவுபிறந்தித்யாதி) அநுராகம்வர்த்திக்கைக்குஹேதுவேதென்ன (இளையாளையித்யாதி) ஹேத்வந்தரம் (புத்ராதிகளித்யாதி) முன்பு ஸ்நேஹிக்கவில்லையோவென்ன (ஜீவிக்கும்நாளித்யாதி) "பொழியும்" என்றதுக்கர்த்தம் (இப்போத்தாகவித்யாதி)

எம்பார்யோஜநைக்குச்சேரவர்த்தம் (இப்படிகலங்குகிறவித்யாதி) விவரணம் (அவ்வஸ்துவுமித்யாதி) அர்த்தாந்தரமாதல். "அவனோடொத்தசுத்தியையுடைத்து" என்றது - ஆத்மாவினுடைய ஸ்வாபாவிகாகாரத்தையிட்டு. "ஒத்தேசென்று-" ஒத்தசுத்தியையுடைத்தென்று. ஒத்ததேசு என்றத்தை "ஒத்தேசு" என்று நடுக்குறைத்தல். அங்கு - அந்தவாத்மவஸ்துவிலே. "உள்ளங்கூட-" உள்ளங்கூடுகையாவது-அநுசந்திக்கையாய், அநுசந்திக்கிற விவ்வர்த்தம். கூடிற்றாகில்-கூடுமாகில். அல்லாதபோதென்றது - கூடாதபோதென்றபடி. வ்யர்த்தமாம் ப்ரகாரமேதென்ன (உன்மத்தரித்யாதி) அபிமதமாவது - ஆத்மப்ராப்தி. (மானுய்ப்போம்) என்றவிடத்தில் - "யம்யம்வாபிஸ்மரந்பாவம்த்யஜத்யந்தே களேபரம் । தந்தமேவைதிகௌந்தேயஸதாதத்பாவபாவிதః" (யம்யம்வாபிஸ்மரந்பாவம்த்யஜத்யந்தே களேபரம் । தந்தமேவைதிகௌந்தேயஸதாதத்பாவபாவிதஃ) என்றதநுசந்தேயம். " 'ஒத்தேசென்று' என்றதுக்கர்த்தம் (எம்பெருமான் தனக்கித்யாதி) 'எம்பெம்மானோடொத்தேசென்று-' எம்பெம்மான் நினைவோடொத்துச்சேர்ந்து. ஏகாரம்-அவ்யயம். அங்கு-அத்தசையில். சரமதசையிலென்றபடி. உள்ளம் கூடுகையாவது - சேஷத்வாநுசந்தாநம். கூடிற்றாகில் - கூடுமாகில். நல்லுறைப்பு - (நல்லவாய்ப்பு) பகவதநுபவம் சித்திக்குமென்றபடி" என்று ஆண்டான் நிர்வாஹத்திலே சப்தார்த்தம். "எம்பெம்மானோடு" இத்யாதிக்கு - என்னுயனான வீஸ்வரனிவனைத்தனக்குசேஷமாகநினைத்திருக்குமாபோலே, இவனுமவனோடொத்து. அதாவது - தன்னையவனுக்கு சேஷமாகவநுசந்தித்து. அங்கு. அவன்பக்கலிலே. "உள்ளம் - சென்று - கூட" நெஞ்சுசென்றுகூட. கூடிற்றாகில் - பெற்றதாகில். நல்லுறைப்பு - நல்லவாய்ப்பு. "தத்ப்ரகாரபூதனான வாத்மாவை லபித்ததாகலாம்" என்றுமாயில் சப்தார்த்தம். உபகாரஸ்ம்ருதியாலே யென்கையாலே - உபகர்த்ருவ ரூபகுணாநுசந்தாநத்திலே யிதுவு மந்தர்க்கதமென்றுகருத்து.

க்ரமேணாந்வயஃ ........................................................................*

## ஒன்பதாய்பாட்டு.

கூடிற்றாகினல்லுறைப்புக்கூடாமையைக்கூடினா
லாடற்பறவையுயர்கொடியெம்மாயனாவததுவதுவே
வீடைப்பண்ணியொருபரிசேயெதிர்வுநிகழ்வுங்கழிவுமா
யோடித்திரியுமியோகிகளுமுளருமில்லையல்லரோ.

### ஆறாயிரப்படி.

(கூடிற்றாகில்) பரமபுருஷ சமாநாகாரதயா ஆத்மஸ்வரூப மநுசந்தேயமென்று சொல்லுவானென், ததபிந்நமன்றோவென்னில்;

பரமபுருஷனுக்கு மிவ்வாத்மாவுக்கு மைக்யங்கூடுவது பாவாபாவங்களுக் கைக்யங்கூடிலன்றோ; ஆதலால் அவனுமவனே, இவனுமிவனே, அவனிவனாகக்கூடாது. இங்ஙனே யிவற்றைச் சொல்லுவார் சிலருளரோவென்னில்; ஸ்வமதி பரிகல்பித நிர்மூலாத்வைதவாதிகளான குத்ருஷ்டிக ளென்றுமுளரென்கிறார். ......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படி ப்ரகாரதயா ப்ராப்தியின்றியே ஸ்வரூபைக்யம் மோக்ஷமென்கிற குத்ருஷ்டிபக்ஷ மசம்பவக்ரஸ்தமென்று அதிக்ஷேபிக்கிறார்.

கூடிற்றாகில் - நித்யசம்சாரியான ஜீவஸ்வரூபம் நிரதிசயவிலக்ஷண ப்ரஹ்மஸ்வரூபமாகக் கூடுமாகில். நல் - நல்ல. உறைப்பு - பெறுப்பேறன்றோ. கூடாமையை - லோகத்தில் கூடாமையே வடிவாயிருக்கிற சசவிஷாணாதிகளை. கூடினால்லபிக்கப்பெற்றதாகிலிறே. அது - அந்தஜீவவஸ்து. நிர்த்தோஷப்ரமாண வேதமயனாய், ஆடல் - பகவத்ப்ரத்யாசத்தியாலே தர்ஸநீயகதியான. பறவை - பெரியதிருவடியை. உயர்கொடி - ஸ்வவைலக்ஷண்ய ப்ரகாசகமான உச்ச்ரிதத்வஜமாகவுடைய. எம் - ஆஸ்ரிதாநுபாவ்யமான. மாயனாவது - ஆஸ்சர்யஸ்வரூப ரூபகுணங்களையுடையனான சர்வேஸ்வரனாய்விடுவது. அதுவே - அந்தஜீவவஸ்துதானேயாமத்தனை. த்ரவ்யம் த்ரவ்யாந்தரமாகை அசம்பாவிதமிறே, ஆனாலிதுக்கு மூலமென்னென்னில்; ஒருபரிசே - ஸ்வபுத்திமர்யாதையா யிருப்பதொருபடியாலே. அப்ரமாணமாக, வீடை - மோக்ஷத்தை. பண்ணி - கல்பித்து. எதிர்வும் - மேல்வரும்காலத்தோடு. நிகழ்வும் - இப்போது வர்த்திக்கிற காலத்தோடு. கழிவும் - முன்பு கழிந்த காலத்தோடு வாசியற. ஆய் - ஒருபடிப்பட்ட வுள்ளராய். ஓடி - “ஸம்ஸாரபதவீம்வ்ரஜந்” (ஸம்ஸாரபதவிம்வ்ரஜந்) என்று ஜங்காலராயோடி. திரியும்-திரியக்கடவ. யோகிகளும் - யோகிகளும். உளரும்-உண்டாயிருக்கும். அநாதியானகர்மஜநிதமான சம்சாரப்ரவாஹத்தில். இல்லையல்லரோ - இல்லாதாரில்லையிறே.

ஏவம்வித மஹாயோகிகளும் சம்பாவிதமென்றதிக்ஷேபித்தாராயிற்று.......*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

அந்திமஸ்ம்ருதியிலே ஜீவபரபேதம் ப்ரஸ்துதமானவாறே, இந்த பேத மபரமார்த்தம், தத்த்வஜ்ஞாநம் பிறந்த வாத்மாவும் ப்ரஹ்மாவுமொன்றென்று கொண்டு நித்யசம்சாரியான சேதநனையே ப்ரஹ்மமாகச் சொல்லுகிற மாயாவாதிகளை க்ஷேபிக்கிறார்.

(கூடிற்றாகில்நல்லுறைப்பு) அநுபாஷணம். (கூடாமையித்யாதி) சசவிஷாணமாதல், ககநகுசுமமாதல், வந்த்யாசுதனாதல் அநுபபந்நமானவை கூடுமாகில், “ஸர்வேஸ்வரவாஹநம்” என்னும் ஹர்ஷப்ரகர்ஷத்தாலே யாடாநின்றுள்ள பெரியதிருவடியை த்வஜமாகவுடையவனாய், ஆஸ்சர்யமான குணசேஷ்டிதங்களை யுடையனாய், பெரியதிருவடி திருத்தோளிலே பின்பும் பிறகுவாளியுமாய் சம்சாரிசேதநனிருப்பது. (அதுவதுவே) அவ்வஸ்துவவ்வஸ்துவே. வஸ்துவஸ்த்வந்தரமாகாதிறே. நித்

யசித்தர்க்கு மவ்வருகாக சம்சாரிசேதநரைச் சொல்லுவாரும் சிலருண்டோவென்ன ( வீடைப்பண்ணியொருபரிசே ) ( ஒருபரிசே - வீடைப் பண்ணி ) சாஸ்த்ரமூலமாகவன்றிக்கே, அவித்யா நிவ்ருத்தியே மோக்ஷமென்று ஸ்வபுத்தியாலே யொன்றைக்கட்டி. ( எதிர்வும் நிகழ்வும் கழிவுமாய் ) பூதபவிஷ்யத்வர்த்தமாந காலத்ரயத்திலுமுளராய். ( ஓடித்திரியும்யோகிகளுமுளரும் ) நிஷ்ப்ரயோஜநமாகத் தட்டித் திரியும் மஹாயோகிகளுமுளர். ( இல்லையல்லரோ ) இல்லாமையில்லை. காலமநாதி, பண்ணினவக்கும் பாபங்களுக் கெல்லையில்லை. இப்படி யிருப்பார் சில மஹாபுருஷர்களுண்டாகக்கூடாதோ; சம்சாரத்தில் கூடாததுண்டோ.............*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. ( கூடிற்றாகிலித்யாதி. )

“கூடாமையை” என்றது - கூடாதவையென்றும், அநுபபந்நமானவையென்றபடி. ஐகாரம் - அவ்யயம். “கூடினால்” என்றது - கூடுமாகிலென்றபடி. உயர்கொடி - உச்ச்ரிதத்வஜமாக வுடையவனென்றபடி. பிறகுவாளி - பின்னே சாத்துகிற வாபரணம்.

ஆனலர்த்ததத்த்வமேதென்ன ( அதுவதுவேயித்யாதி. ) இவ்விடத்திலே- “வரமாத்மாத்மநோர்யோகஃ வரமார்த்த இதீஷ்யதே । மித்யைதத்அந்யத் த்ரவ்யம்ஹி நைதி தத்த்ரவ்யதாம்யதஃ” ( பரமாத்மாத்மநோர்யோகஃ பரமார்த்தஇதீஷ்யதே । மித்யைததந்யத்ரவ்யம்ஹிநைதிதத்ரவ்யதாம்யதஃ ) என்றதநுசந்தேயம். “ ‘வரமாத்மாத்மநோர்யோகஃ - ஐக்யம்யதஃவரமார்த்தஃ’ (பரமாத்மாத்மநோஃயோகஃ - ஐக்யம்யதஃபரமார்த்தஃ ) இதி இஷ்யதே - இஷ்டமாகாநின்றது ; அதஃ, ‘அந்யத்ரவ்யம் தத்ரவ்யதாம் நைதி’ இத்யேதந்மித்யா” ( அந்யத்ரவ்யம்தத்ரவ்யதாம்நைதி - இத்யேதந்மித்யா ) இதிபூர்வபக்ஷஃ; ஸித்தாநஸ்து, “யதஃ அந்யத்ரவ்யம் - ஜீவபூதத்ரவ்யம். தத்ரவ்யதாம் - பரமாத்மத்ரவ்யதாம் நைதி. அதஃ ‘வரமாத்மாத்மநோர்யோகஃ வரமார்த்த’ இதீஷ்யத இதியத், ஏதந்மித்யா.” ( யதஃ அந்யத்ரவ்யம் - ஜீவபூதத்ரவ்யம். தத்ரவ்யதாம் - பரமாத்மத்ரவ்யதாம்நைதி. அதஃ ‘பரமாத்மாத்மநோர்யோகஃ பரமார்த்த’ இதீஷ்யத இதியத், ஏதந்மித்யா. )

நித்யசித்தர்க்கும் - நித்யசூரிகளுக்கும். அவ்வருகாக - அவ்வருகான சர்வேஸ்வரனாக. “ஒருபரிசே - வீடைப்பண்ணி” என்றதுக்கர்த்தம் ( சாஸ்த்ரமூலமாகவித்யாதி. ) பரிசு - ப்ரகாரம். “யோகிகளுமுளருமில்லையல்லரோ” என்றது-க்ஷேபோக்தி. மாயாவாதிகளிடத்திலுப்பாலம்பம் தோற்றச்சொல்லுகிற வாழ்வாருடைய ஹார்த்தபாவத்தை யருளிச்செய்கிறார் (காலமநாதித்யாதிவாக்யசதுஷ்டயத்தாலே.) சம்சாரிசேதநன் ( ஆடல்பறவையுயர்கொடி யெம்மாயனாவது ) என்று மூலத்திலே யத்யாஹரித்துக்கொள்வது. ..................................................................*

# பத்தாம்பாட்டு.

உளருமில்லையல்லராயுளராயில்லையாகியே
யுளரெம்மொருவரவர்வந்தென்னுள்ளத்துள்ளேயுறைகின்றார்
வளரும்பிறையுந்தேய்பிறையும்போலவசைவுமாக்கமும்
வளருஞ்சுடருமிருளும்போற்றெருளுமருளுமாய்த்தோமே.

## ஆறாயிரப்படி.

(உளரும்) இப்படி துர்த்தர்ஸமாய், பகவச்சேஷதைகரஸமாய், விலக்ஷணமுமான வாத்மஸ்வரூபத்தை, வ்ருத்தஸம்ப்லேஷஸ்த்தைர்யார்த்தமாக, கேவலம் க்ருபையாலே யெனக்குக்காட்டித்தந்தருளினனிப்போது; முன்பு, இஸ்ஸம்ப்லேஷஸ்த்தைர்யார்த்தமாக, * நிரவதிகசௌந்தர்ய சௌகந்த்ய சௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யநந்தகுண விசிஷ்டனாய், அஸங்க்யேய கல்யாண திவ்யபூஷண திவ்யாயுதோபேதனை தன்னைக்காட்டிக்கொண்டென்னுள்ளே புகுந்தருளினன்; நிரீப்வரஸாங்க்ய குத்ருஷ்டிகளில் நான்புகாதபடி தன்னைக்காட்டிக்கொண்டிருந்தருளினன்; ஆதலால், அநர்ஹதாநுஸந்தாந ஜ்ஞாநாஜ்ஞாந வ்ருத்திக்ஷயாதி பகவதநுபவவிரோதிகளெல்லாம் போக்கினேனென்கிறார். ...............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஏவம்விதமான வாத்மஸ்வரூபத்தை ப்ரகாஸிப்பித்து பாஹ்யகுத்ருஷ்டிமதங்களில் கைகழலாதபடி யென்னெஞ்சிலே யவன் புகுந்திருக்கையாலே, என்னுடைய சாம்சாரிக க்லேஸமெல்லாந் தீர்ந்தேனென்கிறார்.

இல்லை - ஆஸ்ரிதவிஷயத்திலில்லையென்கிறசொல்லுக்கு. அல்லராய் - விஷயமல்லராய்க்கொண்டு. உளரும்-என்றுமுளருமாய். இல்லையாகியே-அநாஸ்ரிதவிஷயத்திலில்லையாயே. உளராய்-உளராமவர். எம்-எங்களுக்கு ஸ்வரூபரூபகுணவிசிஷ்டராய்க்கொண்டு. ஒருவர்-அத்விதீயராய். உளர்-ப்ரகாசிப்பித்தார். அவர்-அவர்தாமே. வந்து-அபிநிவிஷ்டராய்வந்து. என்-என். உள்ளத்துள்ளே-நெஞ்சுக்குள்ளே. உறைகின்றார்-நித்யவாஸம்பண்ணுகின்றார். அத்தாலே, வளரும்-வளரும். பிறைபோல-பிறைபோலேயிருக்கிற. ஆக்கமும்-ஆக்கத்தையும். தேய்பிறையும்போல - தேய்பிறைபோலேயிருக்கிற. அசைவும்-அழிவையும். வளருஞ்சுடரும்போல் - அபிவ்ருத்ததேஜஸ்ஸையுடையவாதித்யனைப்போலும். தெருளும் - ஜ்ஞாநத்தையும். இருளும்போல்-அந்தகாரம்போலேயிருக்கிற. மருளும்-அஜ்ஞாநத்தையும். மாய்த்தோம் - நசிப்பித்தோம்.

ஔபாதிக வ்ருத்திக்ஷயங்களும் ஜ்ஞாநாஜ்ஞாநங்களும்போய், ஏகரூப ஸ்வபாவனை வாத்மாவை தர்சிக்கப்பெற்றோம் நாமென்றுகருத்து ....................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

சாங்க்யாதிகுத்ருஷ்டிகளில் நான் புகாதபடிதானே ஸ்வயம்வரித்து, நினைவுக்கு வாய்த்தலையான மநஸ்ஸிலே நித்யவாஸம்பண்ணுகையாலே, என்னுடைய சகலதுரிதங்களும் போயிற்றென்கிறார்.

(உளருமில்லையல்லராய்) "ஈப்ஶ்வரனென்பானொருவனுளன், இல்லையென்னவொண்ணுதே அஸ்திமாத்ரமாயிருக்கும்" என்று சேப்ஶ்வரசாங்க்யமதம். விதிநிஷேதக்ஷமனன்றிக்கேயிருக்கும் பர்த்தாவைப்போலே, ஈப்ஶ்வரனுகிருன் ஜகந்நியமநக்ஷமனன்றிக்கே சத்பாவமாத்ரமேயாயிருக்குமென்கை. (உளராயில்லையாகியே) "இல்லையாகியேகா ணவனுடைய வுண்மை" என்னும் நிரீஶ்வரசாங்க்யன்; அந்தபக்ஷங்களை நிரஸிக்கிருர். அன்றிக்கே, ஆஶ்ரிதாநாஶ்ரிதவிஷயமாக்கி, இல்லையல்லரா யுளராயிருப்பராஶ்ரிதர்க்கு; இல்லையாகியே யுளராயிருப்பராநாஶ்ரிதர்க்கு. (உளரெம்மொருவர்) குணவிபூத்யாதிகளால் பரிபூர்ணராய்க்கொண்டுளராய், அவற்றைக்காட்டி யென்னை விஷயீகரித்த வத்விதீயர். (அவர்வந்தென்னுள்ளத்துள்ளேயுறைகின்ருர்) குணுதிகரான வவரொன்னளவும்வந்து, * மயர்வறமதிநலமருளித் தாம்திருத்தின நெஞ்சிலே நித்யவாசம்பண்ணுகின்ருர். (வளருமித்யாதி) தீபஸந்நிதியிலந்தகாரம் நில்லாதாப்போலே, அவரென் ஹ்ருதயத்திலே நித்யவாஸம்பண்ணுகையாலே, சந்த்ரனுக்குப்போலே மாறிமாறி வரக்கடவதான வ்ருத்திக்ஷயங்களும், ஆதித்யனு மந்தகாரமும்போலே மாறிமாறிவரக்கடவதான ஜ்ஞாநாஜ்ஞாநங்களும் மாய்க்கப்பெற்ருேம்......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (உளருமித்யாதி) "உளரெம்முருவர்" என்றுதொடங்கி, "மாய்த்தோம்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (சாங்க்யாதீத்யாதி) சாங்க்யன்-நிரீஶ்வரசாங்க்யன். ஆதிசப்தத்தாலே-ஸேஶ்வரசாங்க்யரைச்சொல்லுகிறது.

"இல்லையல்லராய்-உளர்" என்றந்வயிப்பது. இல்லாதவரல்லராய்க்கொண்டுளராயிருப்பரென்று சப்தார்த்தம். "இல்லையல்லராயுளரும்" என்றதுக்கர்த்தம் (ஈஶ்வரனென்பானித்யாதி) விவரணம் (விதிநிஷேதேத்யாதி) "உளராயில்லையாகியே" இல்லையாகியேயுளர் - இல்லையன்றியே யுளராயிருப்பர். இல்லையென்றபடியென்று சப்தார்த்தம். அர்த்தாந்தரம் (அன்றிக்கேயித்யாதி) குணவிபூத்யாதிகளால் பரிபூர்ணரயென்றது - அர்த்தாத்ஸித்தம். "உளருமில்லையல்லரா யுளராயில்லையாகியே" என்று - ஸேஶ்வர நிரீஶ்வர சாங்க்யருடைய மதாநுவாதமாதல், ஆஶ்ரிதாநாஶ்ரித விஷயத்தி லிவனிருக்கும்படியை ஸ்வாபிப்ராயத்தாலே யருளிச்செய்கிருராதல்.

வளரும்பிறைபோல், ஆக்கமும்-வ்ருத்தியும், தேய்பிறையும்போல், அசைவும்-சங்கோசமும். அதாவது - வ்ருத்திக்ஷயமுமென்றபடி. இத்தால் - சரீரத்தினுடைய வ்ருத்திக்ஷயங்களைச்சொல்லுகிறது.

"வளரும்சுடர் - போல்தெருளும், இருள்போல் - மருளும்" என்று - வைஷயிக ஜ்ஞாநங்களைச்சொல்லுகிறது ... .........................................*

# பதினொன்றாம்பாட்டு.

தெருளுமருளுமாய்த்துத்தன்றிருந்துசெம்பொற்கழலடிக்கீ
ழருளியிருத்துமம்மானுமயனுஞ்சிவனுந்திருமாலா
லருளப்பட்டசடகோபனோராயிரத்துளிப்பத்தா
லருளியடிக்கீழிருத்துநம்மண்ணல்கருமாணிக்கமே.

## ஆறாயிரப்படி.

( தெருளும் ) சதுர்முக பசுபதி ப்ரப்ருதி சர்வாத்மாக்களுக்கும் நியந்தாவாய், ஸ்ரியஃபதியாயிருந்துவைத்து, ப்ராக்ருதவிஷய ஜ்ஞாநாஜ்ஞா நாதி ஸ்வாநுபவ விரோதிகளைப் போக்கி, ஸ்வாஸ்ரிதரைத் தன்றிருவடிக ளிலே சேர்விக்கும் ஸ்வபாவனாயிருந்த வெம்பெருமானுடைய வருளுக் கே பாத்ரமான சடகோப னோராயிரத்து ளிப்பத்தும் வல்லாரை யருளி யவனடிக்கீழிருத்துமென்கிறார். ........................................ .......*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக பகவத்ப்ராப்தியை யருளிச்செய்கிறார்.

தெருளும் மருளும் - சாம்சாரிகமான ஜ்ஞாநாஜ்ஞாநங்களை. மாய்த்து - போக்கி. தன் - ஆஸ்ரிதரைத் தானேயங்கீகரிக்கும். திருந்து - திருத்தத்தையுடைத்தாய். செ - சிவந்த. பொன் - பொன்னான. கழல் - வீரக்கழலையுடைய. அடிக்கீழ்-திருவடிகளின்கீழே. அருளி - " அடிக்கீழமர்ந்துபுகுந் தடியீர்வாழ்மின் " என்றருளி. இருத்தும் - புறம்புபோகாதபடி யிருத்தும். அம்மானும் - ஸ்வாமியாம். அயனும் சிவனும் - ஜகத்ஸ்ருஷ்டி சம்ஹாரங்களுக்குக்கடவ ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கு மந்தராத்மபூதனான. திருமாலால் - ஸ்ரியஃபதியாலே. அருளப்பட்ட - * மயர்வறமதிநல மருளப்பட்ட. சடகோபன் - ஆழ்வாருடைய. ஓர் - அத்விதீயமான. ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழியில். இப்பத்தால் - இப்பத்துநிமித்தமாக. நம் - நம்முடைய. அண்ணல் - ஸ்வாமியாய். கருமாணிக்கம் - நீலரத்நம்போலே யிருக்கிற திருநிறத்தையுடையவன். அருளி - நிரவதிகக்ருபையைப்பண்ணி. அடிக்கீழ் - தன்திருவடிகளின்கீழே. இருத்தும் - இருத்தும்.

இதுவும் - அறுசீராசிரியவிருத்தம். ............................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில்-இப்பத்தும்கற்றாரை, தம்மை விஷயீகரித்தாப்போலே விஷயீகரித்துத் தன் றிருவடிகளின்கீழே வைத்துக்கொள்ளுமென்கிறார்.

( தெருளும்மருளும்மாய்த்து ) ப்ரஹ்மாவின் ராஜஸமடியாகவந்த குத்ருஷ்டிஜ்ஞாநமானதும், ருத்ரன் தாமஸஜ்ஞாந மடியாகவந்த வாகமாதி பாஹ்யஜ்ஞாநமான வஜ்ஞாநமும் மாய்த்து. ஸ்வாநுபவ விரோதியான ப்ராக்ருதவிஷய ஜ்ஞாநா ஜ்ஞாநங்களை வாஸனையோடே போக்கி, ( தன்திருந்துசெம்பொற்கழலடிக்கீழ் ) ஆஸ்ரிதரை வேறொருவர் காலில்

குனியவிடாததாய், ஸ்ப்ருஹணீயமாய், வீரக்கழலையுடைத்தான திருவடிகளின்கீழே. இப்போதை வீரக்கழல், பிராட்டி முன்னாக வாச்ரயித்தாரைத் தன் கையிலும் பிறர்கையிலுங் காட்டிக்கொடாதவீரக்கழல். (அருளியிருத்தும்) கேவல க்ருபையாலே யிருத்தும். (அம்மானுமயனும்சிவனும்திருமாலாம்) ப்ரஹ்மருத்ரப்ரமுகரான சர்வாத்மாக்களுக்கும் நிர்வாஹகனாய், சர்வேஸ்வரனான ஸ்ரிய:பதியாலே. "மயர்வறமதிநலமருளினன்" என்கிறபடியே (அருளப்பட்டசடகோபன்) அருளுக்கு விஷயபூதரான வாழ்வார். இவ்வருளுக்கு வாய்த்தலை பிராட்டியென்கை. (ஓராயிரத்துளிப்பத்தால் – நம்மண்ணல்கருமாணிக்கமே – அருளியடிக்கீழிருத்தும்) சர்வநிர்வாஹகனாய், ஸ்ப்ருஹணீயமான வடிவழகையும் குணங்களையுமுடையனான சர்வேச்வரன் தானேயருளித் தன்றிருவடிகளின்கீழே சேர்த்துக்கொள்ளும். இத்திருவாய்மொழி யப்யஸித்தார்க்குத் தாம்பெற்ற பேறென்கிறார்.......................................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (தெருளுமித்யாதி) "இப்பத்தாலருளியடிக்கீழ்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (இப்பத்துமித்யாதி) "அருளப்பட்ட" என்றவநந்தரம், "அருளியடிக்கீழிருத்தும்" என்கையாலே (தம்மைவிஷயீகரித்தாப்போலேவிஷயீகரித்து) என்கிறார்.

இப்பாட்டில் நிவர்த்யமாகச்சொல்லப்பட்ட ஜ்ஞாநாஜ்ஞாநங்களை யிரண்டுவகையாக வருளிச்செய்கிறார் (ப்ரஹ்மாவினித்யாதி வாக்யத்வயத்தாலே) குத்ருஷ்டிஜ்ஞாநமென்றது-ஸேஸ்வரசாங்க்யனுடைய ரஜ:கார்யாந்யதாஜ்ஞாநத்தை. பாஹ்யஜ்ஞாநமான வஜ்ஞாநமென்றது-நிரீஸ்வரசாங்க்யனுடைய தம:கார்யவிபரீதஜ்ஞாநத்தை. "தெருளும் மருளும்" என்றதுக்கர்த்தாந்தரம் (ஸ்வாநுபவேத்யாதி) மாய்த்து - போக்கி. ப்ராக்ருதவிஷய ஜ்ஞாநாஜ்ஞாநங்களாவன - அவற்றினுடைய சம்ஸ்லேஷ விஸ்லேஷங்களால் வந்ததெளிவும் கலக்கமும்.

"திருந்து" என்று - கட்டளைப்பாடேதென்ன (ஆஸ்ரிதரையித்யாதி) வீரக்கழலைச்சொன்னதுக்குபாவம் (இப்போதையித்யாதி) "திருமாலால்" என்றதத்தைப்பற்ற (பிராட்டிமுன்னாகவென்றது) "அயனும் சிவனும் - அம்மானும் - திருமாலால்" என்றந்வயித்தர்த்தமருளிச்செய்கிறார் (ப்ரம்ஹருத்ரேத்யாதி) "அருளப்பட்ட" என்றதைக்காட்டுகிறார் (அருளுக்குவிஷயபூதரானவாழ்வாரென்று) "திருமாலாலருளப்பட்ட" என்றதுக்குபாவம் (இவ்வருளுக்கித்யாதி) வாய்த்தலை-ஜநகை.

மாணிக்கம் முடிந்தாளலாயிருக்கையாலும், போக்யமாயிருக்கையாலும் (ஸ்ப்ருஹணீயமான வடிவழகையும் குணங்களையுமுடையனான) என்கிறார். "அருளப்பட்ட சடகோபன் - அருளியடிக்கீழிருத்தும்" என்கையாலே பலித்தபாவம் (இத்திருவாய்மொழியித்யாதி.)

தெருளுமென்று தொடங்கி, இருத்தும்; அயனும் சிவனும் - அம்மானும்-திருமாலாலென்று தொடங்கி, இப்பத்தால் - நம்மண்ணல் கருமாணிக்கம்-இப்பத்தையநுசந்தித்தவர்களை என்றத்யாஹரித்து, அருளியடிக்கீழிருத்து மித்யந்வய:.......*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( கண்கள்சிவந்து. )

ப்ராஸாதந்யேந பாநாச்ச்ருதி விபுதயா லம்மஹிம்நா பரத்வாத்
மாதுர்யாத் தேஹதேஹ்யாதிஷு ஸக்ததயா ஸ்வஸ்வரூபப்ரகாஶாத்।
அந்த்யஸ்ம்ருத்யாப்யபாவாத் ஸ்வபரமபுருஷைக்யப்ரமத்வம்ஸகத்வாத்
ஜ்ஞாநாஜ்ஞாநப்ரதத்வாத் ஸூசயதி ஹரி: ஸ்வம் ஸ்வதாஸ்யம் ஸ்வரூபம்॥ அக

( ப்ராஸாதந்யேநபாநாத்ருதி ) கண்கள்சிவந்தித்யாதி - தன்னுடைய திவ்யாவயவ திவ்யாபரண திவ்யாயுத சோபைகளோடேகூட வாச்ரிதஹ்ருதயத்திலே ப்ரகாசியாநிற்கையாலும் ; ( விபுதயாலம்மஹிம்நா ) அடியேனுள்ளானித்யாதி-விபுத்வேந பூர்ணமஹிமா வாகையாலே அண்டங்களிலும், ததந்தர்வர்த்திகளாயும், தத்பஹிர்ப்பூதங்களாயு மிருக்கிற சமஸ்தவஸ்துக்களிலும் வ்யாபித்து நிற்கையாலும் ; ( பரத்வாத் ) உணர்விலும்பரொருவனை-ஜ்ஞாநாதிகரான நித்யசூரிகளுடைய ஸத்தாதிகளும் தன்னதீநமாம்படி யத்விதீயனா யிருக்கையாலும் ; ( மாதுர்யாத்தேஹதேஹ்யாதிஷுசக்ததயா ) தேனும்பாலுமித்யாதி - தேன்போலேயும் பால்போலேயும் கன்னல்போலேயும் போக்யனாகையாலும், சரீரஜீவபுத்திகளிலே யிருக்கையாலும் ; ( ஸ்வஸ்வரூபப்ரகாசாத் ) இது மூன்றுபாட்டிலர்த்தம். நின்றவொன்றையுணர்ந்தேனுக்கு, நன்றாய் ஞானம் கடந்துபோய், அதுவே வீடுவீடுபேற்றின்பம்-பரமாத்மாவான தன்னை யாத்மாவாக வுடையனான ஜீவாத்ம ஸ்வரூபத்தை ப்ரகாசிப்பிக்கையாலும் ; ( அந்த்யஸ்ம்ருத்யாப்யபாவாத் ) எய்த்தாரெய்த்தா ரித்யாதி - சரீரபாதசமயத்தி லந்திமப்ரத்யயத்தாலே ப்ராப்யனாகையாலும்;(ஸ்வபரமபுருஷைக்யப்ரமத்வம்ஸகத்வாத்) கூடிற்றாகிலித்யாதி - ஜீவனுக்கும் பரமபுருஷனான தனக்கு மைக்யப்ரமத்தை நிவர்த்திப்பிக்கையாலும் ; (ஜ்ஞாநாஜ்ஞாநப்ரதத்வாத்) தெருளும் மருளும் மாய்த்தோமே - தன்னுடைய வநுபவத்துக்கு விரோதியான வஜ்ஞாநத்தையும், இதரவிஷய போக்யதா ஜ்ஞாநத்தையும் போக்குகையாலும்; எம்பெருமான் தன்னைக்குறித்து "தாஸ்யமே சேதநனுக்கு ஸ்வரூபம்" என்று ப்ரகாசிப்பியாநிற்கிறனென்று "கண்கள்சிவந்து" என்கிற தசகத்திலே யாழ்வாரருளிச்செய்தாரென்கிறார். ........................................................................(அக)

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

கண்ணிறையவந்துகலந்தமாலிக்கலவி
திண்ணிலையாவேணுமெனச்சிந்தித்துத் - தண்ணிதெனு
மாருயிரினேற்றமதுகாட்டவாய்ந்துரைத்தான்
காரிமாறன்றன்கருத்து. (எஅ)

(கண்ணிறையவந்து) இதில், ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தை யெம்பெருமான் காட்டக்கண்டு பேசின வாழ்வார்பாசுரத்தை யநுவதித் தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில் ; * இருத்தும் வியந்தில் பெரிய ப்ரீதியோடே யநுபவிக்கிறவ

ளவில் "சிறியேனுடைச்சிந்தையுள்" என்று நம்பெருமைக் கெதிர்த்தட்டான தம் சிறுமையை யநுசந்தித்தார்; "இவரின்னம் * வளவேழுலகு தலையெடுத்து நம்மை விட்டகலவுங்கூடும், அதுக்கிடமறும்படி, ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய் நித்யமாய் ஸ்ரீ ஸ்தநம்போலேயும் ஸ்ரீகௌஸ்துபம்போலேயும் நமக்கு நித்யபோக்யமாய்க்காணு மிவ்வாத்மவஸ்துவிருப்பது" என்று ஆத்மஸ்வரூப வைலக்ஷண்ய மடியாக வவன் காட்டிக்கொடுக்க, அத்தை யநுசந்தித்து ப்ரீதராகிற * கண்கள்சிவந்திலர்த்தத்தை "கண்ணிறைய" இத்யாதியாலே யருளிச்செய்கிறுரென்கை.

(கண்ணிறையவந்துகலந்தமால்) * கண்ணும் வாயும் துவர்ந்தவிவருடைய கண்ணிறையும்படிவந்து சம்ஶ்லேஷித்த வாஶ்ரிதவ்யாமுக்தனுன சர்வேஶ்வரன். (இக்கலவி) * இருத்தும் வியந்திலிந்த சம்ஶ்லேஷம். (திண்ணிலையாவேணுமெனச் சிந்தித்து) த்ருடஸ்வபாவத்தை யுடைத்தாகவேணுமென்றெண்ணி. (தண்ணிதெனு மாருயிரினேற்றமதுகாட்ட) இவர் "சிறியேனுடைச்சிந்தை" என்றநுசந்தித்துப் போருகிற வாத்மாவினுடையபெருமையானத்தைக்காட்டியருள. (ஆய்ந்துரைத்தான்) ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தை யாராய்ந்தருளிச்செய்தார். அதாவது-"஦ா ஸஸ்ய஦ாஸொஹ஼" (தாஸஸ்யதாஸோஹம்) என்னும்படி, "கண்கள்சிவந்து" என்றுதொடங்கி "அடியேனுள்ளான்" என்றும், "அடியேனுள்ளான்" என்றுதொடங்கி "உணர்விலும்பரொருவனே" என்றும், "உணர்விலும்பரொருவனை" என்றுதொடங்கி "என்னுணர்விலுள்ளேயிருத்தினேன்" என்று இரண்டாப்பாட்டிலும், தனக்கு ஸ்ரீகௌஸ்துபம்போலே சேஷமாயிருக்கிறபடியையும், "உணர்வைப் பெறவூர்ந்து" என்றும், "தேனும்பாலும் கன்னலுமமுதுமாகித்தித்தித்தென், னுனியி லுயிரிலுணர்வினில்நின்றவொன்றையுணர்ந்தேனே" என்றும், "நன்ருய்ஞானம் கடந்ததே" என்றும், "தெருளும்மருளும்மாய்த்தோமே" என்றும் - ஆத்மாவினுடைய ப்ரக்ருதேঃபரத்வமும், ஜ்ஞாத்ருத்வாதிகளும் போக்யதையும் ஜ்ஞாநாநந்தத்வமும் நித்யத்வமும் முதலாக வருளிச்செய்தவையென்கை. (அதுகாட்டவாய்ந்துரைத்தான் காரிமாறன்தன்கருத்து) ஆத்மஸ்வரூபவைலக்ஷண்யத்தை யெம்பெருமான்காட்ட, அத்தையாராய்ந் தருளிச்செய்தாராழ்வார் தன்திருவுள்ளக்கருத்தாலே யென்னுதல்; இப்படி ஸ்வரூபவைலக்ஷண்யத்தை யாராய்ந்தருளிச்செய்யும்படி யாயிற்று ஆழ்வார்திருவுள்ளக்கருத்தென்னுதல்; அப்போது, (ஆய்ந்துரைத்தகாரிமாறன்றன்கருத்து) என்ருகக்கடவது......................................................(௭௮)

எட்டாம்பத்தில் - எட்டாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி - ௭௮.—பாட்டு - ௮௬௦.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## எட்டாம்பத்து.

## ஒன்பதாந்திருவாய்மொழி.

### கருமாணிக்கமலை - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(கருமாணிக்கமலை) எம்பெருமான் நிர்ஹேதுகமாகத் தன்னழகைக்காட்டித் தம்மை வசீகரித்துக்கொண்டு, தம்மோடுகலந்தருளின கலவியால் தமக்குவந்த நிர்வ்ருதியை யந்யாபதேசத்தாலே பேசுகிறார் ... ...*

### பன்னீராயிரப்படி.

ஒன்பதாந்திருவாய்மொழியில், கீழே - "ஸௌந்தர்யசீலாதி விசிஷ்டனான சர்வேஶ்வரனுக்கு பரிசுத்தாத்ம ஸ்வரூபமானது ப்ரகாரதயாசேஷம்" என்றுதெளிந்தவர், அந்தசேஷபூதனான வாத்மாவினுடைய ததேகரக்ஷ்யத்வ ததேகபோக்யத்வங்களை ப்ரதிபாதிப்பதாக, சேஷியினுடைய வவயவசோபையையும், ஆபரணசோபையையும், அநிஷ்டநிவர்த்தகத்வத்தையும், குணவத்தாதிசயத்தையும், அபரிச்சிந்நவிபூதியோகத்தையும், ஔதார்யோத்கர்ஷத்தையும், ப்ரணயித்வாதிசயத்தையும், சர்வகர்ம ஸமாராத்யதையையும், சர்வ்வேதப்ரதிபாத்யதையையும், ஆஶ்சர்யாவஹத்வத்தையு மநுசந்தித்து; ஏவம்ப்ரகார விசிஷ்டனாய்த் திருப்புலியூரிலெழுந்தருளியிருக்கிற சர்வேஶ்வரனுடைய வநுபவத்திலே யவகாஹித்து ஹ்ருஷ்டரான விவருடைய ரூபாதி வைலக்ஷண்யத்தைக்கண்ட பரிவர்தொடக்கமான பார்ஶ்வஸ்த்தர், இந்தவைலக்ஷண்யத்திலே ஜிஜ்ஞாஸுக்களாக; ஸுஹ்ருத்பூதரானவ ரவர்களுக்கறிவித்த பாசுரத்தைத் திருப்புலியூரில் நாயனாருடனே யியற்கையிலே புணர்ந்த நாயகியினுடைய வேறுபாடுகண்டு "சம்ஶ்லேஷம்ப்ரவ்ருத்தம்" என்றறிந்த தோழியானவள்;இதறியாதே, இவளுடைய * பதிஸம்யோக சுலபமான பருவத்தைக்கண்டு பந்துக்கள்வேறே மணமுரசறைவிக்க, "நாயகிக்கிது அஸஹ்யம்" என்றறிந்து, விலக்குவதாக வுத்யோகித்து, இவளுடைய வுக்திப்ரகாரத்தாலும் வடிவில்வேறுபாட்டாலும் நிரூபித்தறிந்தாளாக, பந்துக்களைக்குறித்து, "இவள்திருப்புலியூர் நாயனாருடைய குணநாமங்களையே பலகாலும் பேசாநின்றாள், இவளுக்கங்கேபாவபந்தமுண்டாகக்கூடும், அவனாகிறான் - இவளுக்குத் தகுதியாம்படி அபிரூபனாய், அலங்காரவிசிஷ்டனாய், ஆண்பிள்ளையாய், அதிசயிதகுணனாய், ஐஶ்வர்யயுக்தனாய், அத்யுதாரனாய், ப்ரணயியாய், ஆசாரஸ்த்தனாய், வேதவிதக்ரேஸரனாய், ஆஶ்சர்யபூ

தனுயிருப்பானொருவன்; ஆதலால், இவள்வடிவில் அநந்யதாஸித்தமான ஸம்ஶ்லே ஷஸூசக சிஹ்நங்களுண்டாகையாலும், அவளுக்கேயிவளாம்" என்றறத்தோடு "நின் றுரைத்த பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்..........................................*

ஈடு.

கீழ்த்திருவாய்மொழியில், முதலிரண்டளைப்பாட்டாலே, அவ னுடைய ஸௌந்தர்யசீலாதிகளை யநுஸந்தித்து, அவற்றோபாதி விலக்ஷ ணமுமாய் அநந்யார்ஹமுமாயிருக்கிற வாத்மஸ்வரூபத்தைக் குறைப்பா ட்டாலே யநுஸந்தித்தினியரானார்; அந்தசேஷத்வரஸத்தாலே ப்ரீதராய், ப்ரீதிபாரவஶ்யத்தாலே தாமானதன்மையழிந்து ஒருபிராட்டிதசையை ப்ராப்தராய், ஸ்வதசையை யந்யாபதேசத்தாலே பேசியினியராகிறார்.

"ப்ரீதியிலந்யாபதேசமுள்ளது இத்திருவாய்மொழி யொன்று மே" என்றாழ்வான் நிர்வஹிக்கும்படி. திருப்புலியூரி லெம்பெருமானோ டே யியற்கையிலேபுணர்ந்து பிரிந்தாளொருபிராட்டி அவனாலே யபஹ் ருதசித்தையாயிருக்கிறபடியை உயிர்த்தோழியானவள்கண்டு, இவள்வடி வில் வேறுபாட்டாலும் பேச்சில்வேறுபாட்டாலும் "ஸம்ஶ்லேஷம்ப்ரவ் ருத்தம்" என்றறிந்தாள்; இவையொன்றையுமறியாதே, "வதிஸம்யொம ஸுலஹம்வயொத்ருஷ்ட்வாதவெவிதா" பதிஸம்யோகஸுலபம்வயோத்ரு ஷ்ட்வாசமேபிதா) என்கிறபடியே, ப்ராப்தயௌவனையென்னு மிவ்வள வேகொண்டு, பித்ராதிகள் "ஸ்வயம்வரத்துக்கு ராஜபுத்ரர்கள்வருவது" என்று நகரத்திலே மணமுரசறைவிக்க, அத்தைக்கேட்டதோழியானவ ள், ஸ்ரீபரதாழ்வானை, "நீராஜா" என்றுபண்ணின தூர்யகோஷம்செவிப் பட்டபோதவன் பட்டதெல்லாம்பட்டு; "இத்வநி பெண்பிள்ளைசெவிப் படுமாகில் * மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழாத தன்மையளாயி ருக்கிற விவளைக்கிடையாது, ஏற்கவேபரிஹரிக்கவேணும், அதுசெய்யு மிடத்தில் 'திருப்புலியூர் நாயனாரோடே ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாயிற் று' என்போமாகில் நம்காவற்சோர்வாலேவந்ததாம், அறிவியாதொழியி லிவளையிழக்கவரும், இனி யிவ்வளவில் செய்யலாவதென்" என்றுபார்த் து, "இவர்கள் தாங்களும் 'இவளுக்குவடிவிலே யொருவேறுபாடுண்டு, இதுக்குஹேதுவேதோ" என்று விசாரியாநின்றார்கள், நாமுமிவர்களோ டே நிரூபணத்தேயிழிந்து அவ்வழியாலே யறிந்தோமாய் இத்தைவிலக் கவேணும்" என்றுநிரூபித்து, இவள்வடிவிருந்தபடியா லிவளுக்குத்திரு ப்புலியூரில் நாயனாரோடே ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாயிற்றுப்போலே யிருந்தது, அவனுடைய குணசேஷ்டிதங்களையே வாய்புலற்றாநின்றாள், நீங்கள் செய்கிறவற்றைத்தவிருங்கோள்" என்று அறத்தோடு நிற்கிறாளா ய்-"இதுதர்மமல்ல" என்ன, "ஆனால் நீசொல்லுகிற திருப்புலியூரில் நா யனார்க்கிவளுக்கிடான வைலக்ஷண்யமுண்டாகவேணும், ஒப்பனையும் ஆ

ண்பிள்ளைத்தனமும் குணமும் ஐஶ்வர்யமும் ஔதார்யமும் ப்ரணயித்வமுமுண்டாகவேணும், சமாசாரனாகவேணும், வேதார்த்த தத்த்வஜ்ஞானமுடையனாகவேணும், இவையெல்லாமுண்டோ” என்ன, “நீங்கள்கேட்கிறவளவல்ல, இவையெல்லாம் குறைவற்றவிஷயம், இவையொன்றுமில்லையேயாகிலு மிவள்தானங்கே யநந்யார்ஹையானாள், நீங்கள் செய்கிறவிவற்றைத்தவிருங்கோள்” என்று அத்தைவிலக்குகிறதா யிருக்கிறது. “மணவிலக்கு” என்பதொரு கிளவித்துறையிது.

திருமந்த்ரத்திலே, தனக்கும் பிறர்க்குமாயிருக்கு மிருப்பைக்கழித்து அநந்யார்ஹ சேஷத்வத்தைச்சொல்லக்கடவதிறே; அதிங்குச் சொல்லுகிறது. கீழ்த்திருவாய்மொழியில் - அநந்யார்ஹசேஷத்வஞ்சொல்லிற்று; இதில் - அந்யசேஷத்வமும், ஸ்வஸ்வாதந்த்ர்யமு மபுருஷார்த்தமென்கிறது. ஒருகந்யகையாகில், ஒருவனுக்கேயாயிருக்கையும், ஒருவனுக்கேயானால் பிறர்க்குரிய ளல்லளாயிருக்கையுமிறே ஸ்வரூபம்... ... ...*

## ஜீயர் அரும்பதம்.

கருமாணிக்கமலை ப்ரவேஶ, சங்க்ரஹஸங்கதி (கீழ்த்திருவாய்மொழியிலித்யாதி.)

இத்திருவாய்மொழி ப்ரீதியென்றதுக்குசப்தம் - “அப்பன்திருவருள்மூழ்கினள்” என்றது. ப்ரீதிபாரவஶ்யத்தாலே அந்யாபதேசமென்றதுக் காப்தசம்வாதம் (ப்ரீதியிலித்யாதி) விஸ்தரசங்கதி (திருப்புலியூரிலித்யாதி) இயற்கையிலேபுணர்ந்து-யாத்ருச்சிகமார்க சம்ஶ்லேஷித்து. வடிவில் வேறுபாட்டாலுமென்றது - “புனையிழைகளணிவும்” இத்யாதியைப்பற்ற. பேச்சில் வேறுபாட்டாலுமென்றது- “அருமாயன்பேரன்றிப்பேச்சிலள்” ஒன்றத்தைப்பற்ற. “பதிஸம்யோகஸுலபம் வயோத்ருஷ்ட்வா சமேபிதா । சிந்தார்ணவகதஃ பாரம் நாஸஸாதாப்லவோ யதா” (பதிஸம்யோகஸுலபம்வயோத்ருஷ்ட்வாசமேபிதா। சிந்தார்ணவகதஃபாரம் நாஸஸாதாப்லவோயதா) இத்யயோத்யாகாண்டே. மணமுரசு - விவாஹதூர்யநாதம். (மானிடவர்க்கென்றுபேச்சுப்படில்) மநுஷ்யராயிருப்பார்க்கென்று சொல்லுகிற சப்தம் நாட்டிலே பரிமாறுமாகில். (வாழாததன்மையள்) வாழாத ஸ்வபாவத்தையுடையவள். நாய்ச்சியார்திருமொழி அஞ்சாம்பாட்டு. சம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமானமைக்கு ஹேத்வந்தரம் (அவனுடையவித்யாதி) “அறத்தோடுநிற்கிறாளாய்” என்றதின்விவரணம் (இதுதர்மமல்லவென்றது) “வடமொழிமறைவாணர்” என்றத்தைப்பற்ற (சமாசாரனாகவேணுமென்றது) “வேதியரொலிவேலையில்நின்றேவிப்ப” என்றத்தைப்பற்ற (வேதார்த்த தத்த்வஜ்ஞானமுடையனாகவேணுமென்றது) “திருவருளாமிவள் நேர்பட்டதே” என்றத்தைப்பற்ற (இவள்தானங்கேயநந்யார்ஹையென்றது.)

ஸ்வாபதேசம் (திருமந்த்ரத்திலேயித்யாதி) தனக்கும் பிறர்க்குமாயிருக்கிற விருப்பைக்கழித்தென்றது - உகாரத்திலே யநந்யார்ஹசேஷத்வ விரோதியான வந்யசேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்யங்களைக்கழித்தென்றபடி. ஆனால் கீழ்த்திருவாய்மொழிக்கு மிதுக்கும் வாசியேதென்ன (கீழ்த்திருவாய்மொழியிலித்யாதி.) அதெப்படியென்ன (ஒருகந்யகையித்யாதி) அதாவது - ஒருவனுக்கேயாயிருக்கையாலே ஸ்வஸ்

வாதந்த்ர்ய நிவ்ருத்தியும், பிறர்க்குரியளல்லளாயிருக்கையாலே அந்யசேஷத்வநிவ்ருத்தியும் சொல்லுகிறதென்றபடி. இவ்விடத்திலே - "பிதாரக்ஷதிகௌமாரே பர்த்தாரக்ஷதியௌவநே। புத்ரஸ்துஸ்த்தாவிரே பாவே நஸ்த்ரீஸ்வாதந்த்ர்யமர்ஹதி" (பிதாரக்ஷதிகௌமாரேபர்த்தாரக்ஷதியௌவநே। புத்ரஸ்துஸ்த்தாவிரே பாவே நஸ்த்ரீஸ்வாதந்த்ர்யமர்ஹதி) என்றதநுசந்தேயம்.............................*

---

## ஒன்பதாந்திருவாய்மொழி

## முதற்பாட்டு.

---

கருமாணிக்கமலைமேன்மணித்தடந்தாமரைக்காடுகள்போற்
றிருமார்வுவாய்கண்கையுந்திகாலுடையாடைகள்செய்யபிரான்
றிருமாலெம்மான்செழுநீர்வயற்குட்டநாட்டுத்திருப்புலியூ
ரருமாயன்பேரன்றிப்பேச்சிலளன்னைமீரிதற்கென்செய்கேனோ.

### ஆறாயிரப்படி.

இப்பிராட்டி திருப்புலியூரிலே யிருந்தருளுகிற வெம்பெருமானோடே யியற்கையிலே புணர்ந்தருளின புணர்ச்சியை யறியாமையாலும், "மானிடவர்க்கென்றுபேச்சுப்படில் வாழகில்லேன்" என்றிருக்கும் ஸ்வபாவத்தை யறியாமையாலும், இவளுடைய தாயாரு முறவுமுறையாரும், மநுஷ்யரிலே யிவளுக்கொருவனை யந்வேஷித்து அவனுக்குக் கொடுக்கையிலே ப்ரவ்ருத்தராகிறபடியைக் கண்டு, இவள் ஸ்வபாவத்தையும், இவளெம்பெருமானோடு கலந்தகலவியையு மறிந்திருந்த விவளுடைய தோழியானவள், தான் சொல்லிற்றை யவர்களங்கீகரிக்கைக்காக அவர்களோடேகூடத் தானும் சமாநசித்தையாய்க்கொண்டு, "இவள் திருப்புலியூரிலிருந்தருளின வெம்பெருமானுடைய குணங்களாலே வசீக்ருதையாய், அவன்றிறமல்லது மற்றொன்றறியாள், இனி நாம் கோலினவை முடியா, அவனையே வரனாகப் பார்க்கவேணும்" என்றுகொண்டு அவர்களை நிவர்த்திப்பிக்க, அவர்களும் "இவளுக்கவனழகொக்குமோ" என்றுகேட்க, அவனுடைய வழகிலேயிறே யிவளகப்பட்டதென்கிறாள். ..............*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், திருப்புலியூரிலே யெழுந்தருளியிருக்கிறவனுடைய வவயவசோபையிலே யகப்பட்டு அவன்றிருநாமமன்றிச் சொல்லுகிறிலளென்கிறாள்.

கரு - கறுத்தநிறத்தையுடைய. மாணிக்கமலைமேல் - மாணிக்கமலைமேலில். மணி - தர்ஸநீயமான வொளியையுடைத்தாய். தடம் - பெருத்த. தாமரைக்காடுகள் போல் - தாமரைக்காடுகள்போலே. திருமார்வு - லக்ஷ்மீ கௌஸ்துப லக்ஷிதமான திருமார்பு. வாய் - திருப்பவளம். கண் - திருக்கண்கள். கை - திருக்கைகள். உந்தி-

திருவுந்தி. கால் - திருவடிகள். உடையாடைகள் - திருப்பீதாம்பரங்களினுடைய. செய்ய - சிவப்பையுடையனாய்க்கொண்டு. பிரான் - ஆஶ்ரிதரை யநுபவிப்பிக்குமுபகாரகனாய், திரு - இவ்வழகை நித்யாநுபவம்பண்ணுகிற பிராட்டிக்கு. மால்-வல்லபனாய். எம்மான் - அவ்வழகாலே நமக்கு நாயகனான. செழு - அழகிய. நீர்-நீரையுடைத்தான. வயல் - வயலையுடைய. குட்டநாட்டுத்திருப்புலியூர் - குட்டநாட்டுத்திருப்புலியூரில். அரு - பெறுதற்கரியனான. மாயன் - ஆஶ்சர்யபூதனுடைய. பேர்-திருநாமம். அன்றி - ஒழிய. பேச்சு - வேறொருபாசுரம். இலள்-அற்றிராநின்றாள். அன்னைமீர் - அன்னைமீர். இதற்கு - இவள்படிக்கு. என் - ஏது. செய்கேனோ-செய்வேனென்று தானுள்பாடையல்லாமையை யறிவித்தாளாயிற்று.

மணித்தடமென்று - ஶ்லாக்யமான தடாகமாகவுமாம். ....................*

## ஈடு - முதற்பாட்டு.

அவனுடைய திவ்யாவயவ சௌந்தர்யத்தைக்கண்டு மற்றொன்றறியாதபடி யீடுபட்டாளென்கிறாள். "கருமாணிக்கக்குன்றத்துத்தாமரைபோல் திருமார்வு கால்கண்கை செவ்வாயுந்தியான்" என்று * இருத்தும் வியந்திலநுபவித்த வித்தைத் தோழிபேச்சாலே பேசி யினியராகிறார்.

(கருமாணிக்கமலைமேல்) அநுபவிப்பார் நெஞ்சு குளிரும்படி கருமையையுடைத்தாய், ப்ரகாசத்தால் மிக்கிருப்பதாய், நிரதிசய போக்யமாயிருப்பதொரு மலைமேலே. கறுத்தே யிருணீக்குவ தொருமலையென்றுமாம். அபூதோபமை யிருக்கிறபடி. (மணித்தடந்தாமரைக்காடுகள் போல்) இப்படி யிருப்பதொரு மலைமேலே, தெளிந்ததொருதடாகமாய், அதுகாடுபடத் தாமரை பூத்தாப்போலேயாயிற்றுத் திருமேனியும்திவ்யாவயவங்களுமிருப்பது. (திருமார்வு) பற்றாசான பெரியபிராட்டியாரெழுந்தருளியிருக்கும் திருமார்வு. திருமார்வுக்குச் சிவப்பு பிராட்டி சந்நிதாநத்தாலே. (வாய்) அவள்வழியாலே யுறவுபண்ணினார்க்கு அநுகூலபாஷணம்பண்ணுகிற திருப்பவளம். (கண்) இன்சொல்லுச் சொல்லப்புக்கு அநுகூலதர்ஶநத்தாலே தடுமாறினால், குறையும் தலைக்கட்டிக்கொடுக்கும் கண். (கை) நோக்குக்குத் தோற்றாரை யணைக்கும் கை. (உந்தி) உத்தேஶ்யபூமியிலே விழாநின்றால் நடுவே காற்கட்டவல்ல திருவுந்தி. நடுவே யமுக்கும் சுழியிறே. (கால்) இவையெல்லாவற்றுக்கும் தோற்று விழும்திருவடிகள். (உடையாடைகள்) அங்கேகிடந்தநுபவிக்கும் திருப்பீதாம்பரம். "கமலபாதம்" என்ன, "சிவந்தவாடை" என்னக்கடவதிறே. (பிரான்) இவ்வவயவசோபையடைய "பக்தாநாம்" என்றிருக்குமவன். (திருமால்) அழகேயன்றிக்கே, இவளுக்கிடான மேன்மையுமுண்டு; "யஸ்ய ஸாஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹிதத்தேஜ:" (யஸ்ய ஸாஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹிதத்தேஜஃ) என்கிறபடியே. (எம்மான்) "இவளையவனுக்குக்கொடுங்கோள்" என்றால், "இவளுக்கவன்தரம்போருமோ" என்னவேண்டாதபடி யிருப்பதே யென்னையனென்கிறாள். (செழுநீரித்யாதி) அழகிய ஜலசம்ருத்தியை யுடைத்தான வயல்சூழ்ந்த. (கு

ட்டநாட்டுத்திருப்புலியூர்) குட்டநாடென்று-அந்நாட்டுக்குப்பேர். (அருமாயன்) பெறுதற்கரிய வாஸ்சர்யபூதன். (பேரன்றிப்பேச்சிலள்) பரவ்யூஹவிபவங்களுக் கேகாந்தமான திருநாமங்களைச் சொல்லுகிறிலள். அல்லாத வுகந்தருளின நிலங்களில் நிற்கிறவர்கள் பேரும் சொல்லுகிறிலள். (அன்னைமீரிதற்கென்செய்கேனோ) "அவர்களோடொக்கத்தானுமிப்போதறிந்துசொல்லுகிருள்" என்னுமிடந்தோற்ற, இதுக்கு நானென்னத்தைச்செய்வேனென்கிருள். .......................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (கருமாணிக்கமலையித்யாதி.) "திருமார்வு" என்றுதொடங்கி, "அருமாயன்பேரன்றிப்பேச்சிலள்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (அவனுடையவித்யாதி.) * இருத்தும்வியந்தி லநுபவம் பின்னுட்டுகிறதென்கிருர் (கருமாணிக்கமித்யாதி.) மாணிக்கமென்றது - புஷ்யராகத்தை.

கறுப்பும் சிவப்புமாகிற விருத்ததர்மங்க ளொன்றுக்கே வர்த்திக்கக் கூடாமையாலே, * கறுப்பால் - குளிர்த்தியையும், "மாணிக்கம்" என்கையாலே-ப்ரகாசாதிசயத்தையும், "மலை" என்கையாலே - போக்யதாதிசயத்தையும் நினைக்கிறதென்கிருர் (அநுபவிப்பாரித்யாதி.) அர்த்தாந்தரம் (கறுத்தேயித்யாதி.) "மாணிக்கம்" என்று - இருள் நீக்கும் தேஜஸ்ஸைச் சொல்லுகிறது. இவ்விரண்டாமர்த்தத்தைக்கடாக்ஷித்து (அபூதோபமை யிருக்கிறபடியென்றது.) மணித்தடம் - ஸ்வச்சமானதடாகம். மணித்தடத்தோடே கூடினமலை திருமேனிக்கு த்ருஷ்டாந்தம்.

பற்ருசான - தஞ்சமான. திருமார்வைச் சொன்ன வநந்தரம், திருப்பவளத்தைச் சொல்லுகிறதுக்கு தாத்பர்யம் (அவள்வழியாலேயித்யாதி.) உத்தேஸ்யபூமியென்றது - திருவடிகளை. ரஸோக்தி (நடுவேயித்யாதி.) அங்கேகிடந்து - திருவடிகளிலே கிடந்து. திருவடிகளிலேவிழுந் தநுபவிக்குமதா யிருக்குமோ வென்ன (கமலபாதமித்யாதி.) அவயவசோபைக்கநந்தரம், "உபகாரகன்" என்னுமதுக்குபாவம் (இவ்வவயவசோபையித்யாதி.)

ஸ்ரீயஃபதித்வம் சர்வாதிகத்வஸூசகமாகையாலே யருளிச்செய்கிருர் (அழகேயித்யாதி.) "திருமால்" என்ருல் - மேன்மையைக் காட்டுமோவென்ன (யஸ்யஸேத்யாதி.) தோழியானவள் நாயகியைப்போலே "எம்மான்" என்னப் பெறுமோவென்ன (இவளையவனுக்கித்யாதி.) "திருப்புலியூரருமாயன்பேரன்றிப்பேச்சிலள்" என்றதுக்கு வ்யாவர்த்யத்தை யிரண்டுவகையாக வருளிச்செய்கிருர் (பரவ்யூஹேத்யாதி வாக்யத்வயத்தாலே.)

திருமார்வுவாய் கண் கையுந்தி காலுடையாடைகளினுடைய சிவப்பையுடையபிரானென்று சப்தார்த்தம். .......................................*



# இரண்டாம்பாட்டு.

அன்னைமீரிதற்கென்செய்கேனணிமேருவின்மீதுலவுந்
துன்னுசூழ்சுடர்நாயிறுமன்றியும்பல்சுடர்களும்போன்
மின்னுநீண்முடியாரம்பல்கலன்ருனுடையெம்பெருமான்
புன்னையம்பொழில்சூழ்திருப்புலியூர்புகழுமிவளே.

## ஆறாயிரப்படி.

(அன்னைமீர்) அவனெப்பித்தருளின விருக்கு மழகைச்சொல்லி, அவ்வழகிலேயிறே யிவள் விழுந்ததென்கிறாள்.............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடைய வாபரணசோபையிலே யகப்பட்டு அவனூரைப் புகழாநின்றாளென்கிறாள்.

அன்னைமீர் - அன்னைமீர். இதற்கு - நீங்களும் நானுமறியாதபடி யிவளுக்குப்பிறந்த ப்ரகாரத்துக்கு. என் - எத்தை. செய்கேன் - செய்வேன். அணி-அழகிய. மேருவின் - மேருவின். மீது - மேலே. உலவும் - வர்த்திப்பதாய். துன்னு - செறிந்து. சூழ் - சூழ்ந்த. சுடர் - சுடரையுடைத்தான. ஞாயிறும்-ஞாயிறும். அன்றியும்-அவ்வளவேயன்றியே. பல் - பலவகைப்பட்ட. சுடர்களும்போல் - க்ருஹநக்ஷத்ரங்களுடைய தேஜஸ்ஸும்போலே யிருக்கிற. மின்னு - ஒளியையுடைத்தாய். நீள் - ஓங்கின. முடி - திருவபிஷேகம். ஆரம் - ஆரம் முதலான. பல் - பலவகைப்பட்ட. கலன்றான் - ஆபரணங்களை. உடை - உடையனாய். எம்பெருமான் - அவ்வழகைக்காட்டி நம்மையடிமைகொண்ட சர்வாதிகனனவனுடைய. புன்னை - புன்னையையுடைத்தான. அம் - அழகிய. பொழில் - சோலைகளாலே. சூழ் - சூழப்பட்ட. திருப்புலியூர் - திருப்புலியூரை. இவள், புகழும் - புகழாநின்றாள்.

அணிமேருவென்று - * ருக்மாபமான திருமேனிக்கு த்ருஷ்டாந்தம். ......*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

அவனுடைய வாபரணசோபையி லகப்பட்டாளென்கிறாள்.

(அன்னைமீரிதற்கென்செய்கேன்) நீங்கள் கற்பித்திலிகோள், நான் கற்பித்திலேன், இதுக்கு நானெத்தைச் செய்வேன். (அணியித்யாதி) அழகிதான மேருவின்மேலே சஞ்சரியாநிற்பானுமாய், காண்கிறவளவன்றிக்கே நெருங்கிச் சூழ்ந்த தேஜஸ்ஸையுடைய விலக்ஷணனான வாதித்யனும். (அன்றியும்பல்சுடர்களும்போல்) மற்று மப்படியேயிருக்கிறநக்ஷத்ராதி தேஜஃபதார்த்தங்களும்போலே. (மின்னுநீண்முடி) "துன்னுசூழ்சுடர் ஞாயிறு" என்றுசொன்ன திருவபிஷேகம். (ஆரம்) "அஞ்சுடர்மதியம்பூண்டு" என்கிறபடியே திருவாரம். (பல்கலன்) அல்லாத திவ்யாபரணங்கள். (எம்பெருமான்) ப்ரீத்யுக்தி - இவ்வம்சம் பொய்யாகாதபடி யிருந்தவென்னையன். (புன்னையம்பொழில்சூழ்) (அழகியபுன்னைப்பொழில்சூழ்ந்த. அவ்வூரில்) சோலைவாய்ப்பையன்றோ விவள்சொல்லுகிறது. சோலையிலே கலந்தார் வார்த்தையாயன்றோ விருக்கிறது. (திருப்புலியூர்புகழுமிவளே) பிள்ளாய், இவ்வூர் வாசியெங்கேயறிந்தாள்; அவனுடைய வாபரணசோபையோபாதி யவ்வூரில் சோலையிலு மவ்வூரிலும் குமிழிநீருண்டாளாய்த் தோற்றுகிறதில்லையோ விவள்வார்த்தையாலே.......................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (அன்னைமீரித்யாதி.) "மின்னுநீண்முடியாரம்பல்கலன்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை ( அவனுடையவித்யாதி. )

மீளவும் சொல்லுகிறவளுடைய பாவம் ( நீங்களித்யாதி. ) "இதற்கு-" புகழுகிறவிதுக்கென்றபடி.

" துன்னு - " ( நெருங்கி. )

" மின்னுநீண்முடி " என்றதுக்கு த்ருஷ்டாந்தம் ( துன்னுசூழ்சுடர்ஞாயிறென்றது. ) " துன்னுசூழ் " என்றத்தை, " பல்சுடர்களும் " என்றதிலே யந்வயித்து ( அப்படியேயிருக்கிற ) என்கிறார். " ஞாயிறு " என்றுசொன்ன த்ருஷ்டாந்தத்துக்கு, தார்ஷ்டாந்திகத்தில் - ( திருவபிஷேகம் ) என்றபடி. ஆரம்-முத்துமாலையாதல், பதக்கமாதல். * ஆரத்துக்கு த்ருஷ்டாந்தமாக சந்த்ரனைச்சொல்லுகையாலே சந்த்ரனை யிங்கே கூட்டிக்கொள்ளுகிறார் ( அஞ்சுடரித்யாதி ) அழகிய சுடரையுடைய சந்த்ரனைப் பூண்டென்று சப்தார்த்தம். திருவாசிரியம் முதற்பாட்டு. " அஞ்சுடர்மதியம் " என்றது - சந்த்ரனை யாரமாக ரூபிக்கையாலே, " பல்கலன் " என்றதுக்கு த்ருஷ்டாந்தம் - " பல்சுடர்களும் " என்றது. " ப்ரீத்யுக்தி " என்றதின்விவரணம் ( இவ்வம்ஸமித்யாதி. )

கலவிக்கடையாளம் சொல்லுகிறவிடத்திலே, சோலையைவர்ணிக்கிற நாயகியினுடைய வார்த்தைக்கு ப்ரயோஜநத்தை யநுவதிக்கிற தோழியினுடைய பாவத்தை யருளிச்செய்கிறார் (சோலைவாய்ப்பை யித்யாதிவாக்யத்வயத்தாலே.) "இவள்" என்றதுக்கு பாவம் ( பிள்ளாயித்யாதி. ) இவள் - அதிபாலையென்றபடி. பிள்ளாயென்றது - தோழியினுடைய வார்த்தைப்பாடு. " புகழும் " என்றதுக்கு பாவம் ( அவனுடையவித்யாதி. )

அணிமேருவினென்று தொடங்கி, புகழுமிவள் - அன்னைமீரிதற்கென்செய்கேனித்யந்வயஃ. ..................................................................*

---

# மூன்றாம்பாட்டு.

புகழுமிவணின்றிராப்பகற்பொருநீர்க்கடற்றீப்பட்டெங்குந்
திகழுமெரியொடுசெல்வதொப்பச்செழுங்கதிராழிமுதற்
புகழும்பொருபடையேந்திப்போர்புக்கசுரரைப்பொன்றுவித்தான்
றிகழுமணிநெடுமாடநீடுதிருப்புலியூர்வளமே.

## ஆறாயிரப்படி.

( புகழுமிவள் ) அழகியனானலென், ஆண்பிள்ளைத்தன முடையனாக வேண்டாவோவென்னில்; அந்த சௌர்யவீர்யாதி குணங்களையே காணிவளிராப்பகல் புகழாநின்றதென்கிறாள் ..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடைய வீரசரிதத்துக்குத்தோற்றவ ளவனூரிலழகைப்புகழாநின்றாளென்கிறாள்.

பொரு - திரைக்கிளப்பத்தாலே யொன்றுக்கொன்று பொருது அலைகிற. நீர் - நீரையுடைத்தான. கடல் - கடலானது. தீப்பட்டு - நெருப்பைக்கொளுந்தி. எங்கும் - எங்கும். திகழும் - விளங்குகிற. எரியொடு - ஜ்வாலைகளோடே. செல்வதொப்ப - செல்வதுபோலே. புகழும் - சத்ருக்களும்புகழும்படியாய். செழும் - மிக்க. கதிர் - ஒளியையுடைய. ஆழி - திருவாழி. முதல் - முதலாக. பொரு - பொருந்தின. படை - ஆயுதங்களை. ஏந்தி - ஏந்தி. போர் - யுத்தத்திலே. புக்கு - ப்ரவேசித்து. அசுரரை - அசுரர்களை. பொன்றுவித்தான் - நசிப்பித்தவனுடைய. திகழும்-விளங்குகிற. மணி - மாணிக்கங்களையுடைத்தாய். நெடு - ஓங்கின. மாடம் - மாடங்களையுடைத்தான. நீடு - ஆயாமவிஸ்தாரவத்தாயுள்ள. திருப்புலியூர் - திருப்புலியூரினுடைய. வளம் - அழகை. இவள் - இவள், இராப்பகல் - இராப்பகல். நின்று - ஓவாதுநின்று. புகழும் - புகழாநின்றாள்.

பொருபடை - பொருகிறபடையென்றுமாம் .:. ............................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

ஒப்பனையழகு ருஷிகளும்சொல்லார்களோ, இதுகலவிக்கு சூசகமாகவேணுமோவென்ன; "ஹூாரஂவபிஷஜெ" (பர்த்தாரம்பரிஷஸ்வஜே) என்று வீரவாசிகண்டணைக்கும் பிராட்டிபாசுரமாயன்றோ விவள் வார்த்தையிருக்கிறதென்கிறாள்.

(புகழுமிவள்நின்றிராப்பகல்) (இவள்-இராப்பகல்-நின்று-புகழும்) வீரவாசியறிந்தீடுபடும் பருவமன்றிக்கேயிருக்கிறவிவள், கேட்டார்வாய்க்கேட்டொருக்கால் சொல்லிவிட்டாளோ. அஹோராத்ரம்நின்று வாய் புலற்றாநின்றாள். (புகழும்) நெஞ்சாலேநினைத்துவிட்டவளவேயோ, வ்ரீளைகுடிபோய் வாய்விட்டுப்புகழுகிறாளல்லளோ. (பொருநீர்க்கடல்தீப்பட்டு) பொராநின்றுள்ள திரையையுடைத்தான கடல் நெருப்புக்கொளுந்தி. (எங்கும் திகழுமெரியொடுசெல்வதொப்ப) பரப்புமாறக்கொண் டுஜ்வலியாநின்றுள்ள நெருப்போடேகூடநடந்து செல்லுமாபோலேயாயிற்று, ஆயுதங்களால்வந்த புகரும்திருமேனியுமிருக்கும்படி, (புகழும்பொருபடையான - செழுங்கதிராழிமுதல் - ஏந்தி) " ஹெதிஹிஸெ்சதநாவ த்ரீஶீதஜயஸ்வநஂ " (ஹேதிபிஸ்சேதநாவத்பிருதீரிதஜயஸ்வநம்) என்று திவ்யாயுதங்கள்தா னவனைப்புகழும்படியாதல்; " 'ஶத்ரோஃப்ர வ்யாதவீய்ஸ்யரஞ்ஜநீயஸ்யவிக்ரமைஃ' (ஶத்ரோஃப்ரக்யாதவீர்யஸ்யரஞ்ஜநீயஸ்யவிக்ரமைஃ) என்கிறபடியே 'கையுமாயுதமுமாய்ப்பொருத்தமிருந்தபடியென்' என்று சத்ருக்கள் புகழும்படியைச்சொல்லுகிறது" என்றெம்பெருமானருளிச்செய்யும்படி. (பொருபடை) யுத்தோத்யுக்தமானவாயுதம். (செழுங்கதிர்) மிக்கதேஜஸ்ஸையுடைத்தான திருவாழி முதலான திவ்யாயுதங்களையேந்தி. (போர்புக்கசுரரைப்பொன்றுவித்தான்) சாயுதனாய்யுத்தத்திலேபுக்கு துஷ்ப்ரக்ருதிகளைமுடித்தான். பொன்றுவிக்கை - முடிக்கை. (திகழுமித்யாதி) உஜ்ஜ்வலமான மாணிக்கங்களை

யுடைய ஓங்கினமாடங்களையுடைத்தாய், கல்பாவதியான திருப்புலியூரி லழகை - புகழும். வளம் - அழகு. எதிரிகளுக்குக் கிட்டவொண்ணாமை க்கவன்றான்வேண்டா, அவ்வூரேயமையும். பிராட்டி, ஸ்ரீமிதிலையைவிட்டு "ராகவஸ்யநிவேஶநே" (ராகவஸ்யநிவேஶநே) என்று திருவயோத் யையைப்புகழுமாபோலே, இவள் திருநகரியைவிட்டுத் திருப்புலியூர்ப்பு கழே புகழாநின்றாள். "அயோத்யாபராஜிதா" (அயோத்யாபராஜிதா) என்கிறபரமபதத்தை நினைத்திருக்குமாபோலேகாணும் இவளவ்வூரைநி னைத்திருப்பது. "மாகவைகுந்தங்காண்பதற்கென்மனமேக மெண்ணுமி ராப்பகலின்றியே" என்றிறேயங்கு மிவர்பாசுரம் .......................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு (புகழுமித்யாதி) "தந்த்ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம்ஸுகாவஹம் । பபூவஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம்பரிஷஸ்வஜே" (தந்த்ருஷ்ட்வாஶத்ருஹந்தாரம் மஹர்ஷிணும்ஸுகாவஹம் । பபூவஹ்ருஷ்டா வைதேஹீபர்த்தாரம்பரிஷஸ்வஜே) இத்யாரண்யகாண்டே.

கீழ்வாக்யவிவரணம் (அஹோராத்ரமித்யாதி.)

"தீப்பட்டு" என்றது - படபாமுகாக்நியென்றபடி. செல்லுமாப்போலே யென்றது - வருமாப்போலேயென்றபடி.

த்விதீயார்த்தத்துக்கு, சத்ருக்களாலே புகப்படுமவனென்று சப்தார்த்தம். பொருபடை-பொராநிற்கிறபடையென்றபடி. "தைத்யஸ்த்ரீகண்டரோகாணாம் மதராகவிலோபிபிஃ । ஹேதிபிஶ்சேதநாவத்பிருதீரிதஜயஸ்வநம்" (தைத்யஸ்த்ரீகண்டரோகாணும்மதராகவிலோபிபிஃ । ஹேதிபிஶ்சேதநாவத்பிருதீரிதஜயஸ்வநம்) இதிரகுவம்ஶே. "ஶத்ரோஃப்ரக்யாதவீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமைஃ । பஶ்ய தோயுத்தலுப்தோஹம் க்ருதஃ காபுருஷஸ்த்வயா" (ஶத்ரோஃப்ரக்யாதவீர்யஸ்யரஞ்ஜநீயஸ்யவிக்ரமைஃ । பஶ்யதோயுத்தலுப்தோஹம்க்ருதஃகாபுருஷஸ்த்வயா) இதியுத்தகாண்டே ஸ்வஸூதம்ப்ரதிராவணஃ.

"திருப்புலியூர் வளமே - புகழும்" என்றவவதாரணார்த்தம் (பிராட்டியித் யாதி) "ஸமாத்வாதஶ தத்ராஹம் ராகவஸ்ய நிவேஶநே । புஞ்ஜாநா மாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ" (ஸமாத்வாதஶதத்ராஹம்ராகவஸ்ய நிவேஶநே । புஞ்ஜாநாமாநுஷாந்போகாந்ஸர்வகாமஸம்ருத்திநீ) இதிஸுந்தரகாண் டே. "திகழுமணிநெடுமாடநீடு" என்றவர்ணநத்துக்குபாவம் (அயோத்யேத்யாதி) இப்படி பரமபதத்தை யுத்தேஶ்யமாக நினைத்திருப்பரோவென்ன (மாகவைகுந்த மித்யாதி)

பொருநீர்க்கடலென்றுதொடங்கி, செல்வதொப்ப - புகழும்பொருபடையா ன - செழுங்கதிராழிமுதல் - எந்திப்போர்புக்கென்றுதொடங்கி, வளமே - இவள்- இராப்பகல்-நின்று-புகழுமித்யந்வயஃ.......................................*

———

## நான்காம்பாட்டு.

ஊர்வளங்கிளர்சோலையுங்கரும்பும்பெருஞ்செந்நெலுஞ்சூழ்ந்
தேர்வளங்கிளர்தண்பணைக்குட்டநாட்டுத்திருப்புலியூர்ச்
சீர்வளங்கிளர்மூஉவுலகுண்டுமிழ்தேவபிரான்
பேர்வளங்கிளர்ந்தன்றிப்பேச்சிலளின்றிப்புனையிழையே.

### ஆறாயிரப்படி.

(ஊர்வளம்) ஆண்பிள்ளைத்தனமமையாதிறே, குணவானாயிருக்கவேணுமிறேயென்னில்;

அவனுடைய வாபத்ஸகத்வாதி குணங்களிலேயிறே யகப்பட்டதென்கிறாள். ...........................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆபத்ஸகத்வாதி குணோத்கர்ஷங்களையுடையவன்திருநாமங்களைப் பெரியகிளர்த்தியோடே சொல்லாநின்றாளென்கிறாள்.

ஊர் - ஊருக்கு. வளம் - வளப்பமாய். கிளர் - உயர்ந்த. சோலையும்-சோலையும். கரும்பும் - அத்தோடணைத்துச் சொல்லலாம் கரும்பும். பெரும் - அதிலும் பெரிய. செந்நெலும் - செந்நெலும். சூழ்ந்து - சூழ்ந்து. ஏர் - ஏரின். வளம் - அழகு. கிளர் - மிகாநிற்கிற. தண் - குளிர்ந்த. பணை - நீர்நிலங்களையுடைய. குட்டநாட்டுத் திருப்புலியூர் - குட்டநாட்டுத் திருப்புலியூரில். சீர் - ரக்ஷகத்வோபயுக்த குணங்களினுடைய. வளம் - சம்ருத்தி. கிளர் - தோற்றும்படி. மூவுலகு-ஜகத் த்ரயத்தையும். உண்டு - அமுதுசெய்து. உமிழ் - உமிழ்ந்த. தேவபிரான்-சூரிபோக்யனானவனுடைய. பேர் - திருநாமங்களினுடைய. வளம் - சம்ருத்தியை. புனை - அணியப்பட்ட. இவ்விழை - ஆபரணங்களையுடையவிவள். இன்று - இப்போது. கிளர்ந்தன்றி - கிளர்ந்தன்றி. பேச்சிலள் - சொல்லுகிறிலள்.

ஏர்வளங்கிளரொன்று - அழகிதான சம்ருத்தி தோன்றுகிறதென்றுமாம். ஊரின்வளப்பந் தோன்றும்படியான சோலையென்றுமாம். ...........................*

### ஈடு - நான்காம்பாட்டு.

வெறுமாண்பிள்ளைத்தனமே போராதே, ஆபத்ஸகனாகவேணுமேயென்ன; அக்குறைதானுண்டோ விவனுக்கென்கிறாள்.

புனல்தருபுணர்ச்சியையன்றோ விவள்வாய்புலற்றுகிறது.

(ஊர்வளங்கிளர்சோலையும்) ஊரில் சம்பத்தைக் கோட்சொல்லிக் கொடுக்கும் சோலையென்னுதல், ஊர்களுக் கிட்டுச்சொல்லும் சிறப்புக்களைத் தெரிவிக்கும் சோலையென்னுதல். (கரும்பும் பெருஞ்செந்நெலும்சூழ்ந்து) வயலடங்கக் கரும்பும், அதுக்கு நிழல்செய்யும் செந்நெலும் சூழ்ந்துகிடக்கும். (ஏர்வளங்கிளர்) ஏராலுண்டான வழகையுடை

த்தாயென்னுதல், ஏரினுடைய சமுதாயத்தைச் சொல்லிற்றுதல். அதாவது - உழுவதுநடுவதாய்ச் செல்லாநிற்கை. ( தண்பணை ) மருதநிலமென்னுதல், அழகிய நீர்நிலமென்னுதல். மருதநிலமென்றத்தால் – வயலைச் சொன்னபடி. ( சீர்வளங்கிளர்மூவுலகுண்டுமிழ் ) குணங்களின் நன்மையடையச் செயலிலே தெரியும்படி, சகலலோகங்களையும் வயிற்றிலேவைத்து, வெளிநாடுகாணவுமிழ்ந்த * அயர்வறுமமரர்களதிபதி. (பேர்வளம்) திருநாமங்களினுடைய வழகைச் சொல்லுதல், திருநாமங்களையடங்கவென்னுதல். ( கிளர்ந்தன்றிப்பேச்சிலள் ) குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களை, கடல்கிளர்ந்தாப்போலே பெரியகிளர்த்தியோடேயன்றோ விவள்சொல்லுகிறது. நாம் திருநாமம் சொல்லுமாபோலேயோ விவள்சொல்லுகிறது. (இன்று) இவ்வேறுபாடும் நன்மையும் நேற்றில்லைக்கிடீர். (இப்புனையிழையே) திருநாமஞ் சொல்லச்சொல்ல ஒருபடி ஆபரணம் பூண்டாப்போலே யிராநின்றாள்.........................*

## ஜீயர் அரும்பதம்.

நான்காம்பாட்டு. ( ஊர்வளமித்யாதி. ) கலவிக் குறிசொல்லுகிறவிடத்திலாபத்ஸகத்வம் சொல்லுகிறது, ஆபத்ஸகத்வ மில்லையென்றவர்களை யிசைவிக்கைக்காகவென்கிறார் ( வெறுமாண்பிள்ளையித்யாதி. ) "மூவுலகுண்டு" என்றத்தைப்பற்ற ( புனல்தருபுணர்ச்சியையித்யாதி. ) புனல்தரு புணர்ச்சியாவது - நீரிலே யமிழ்ந்துபோகிறதன்னை நாயக னுத்வியெடுத்தால் அதுக்குத்தோற்று "ஆபத்திலே ரக்ஷிப்பதே!" என்று ஆலிங்கநம் பண்ணிக்கொள்ளுகை யென்றபடி.

முந்தினவர்த்தத்துக்கு, "ஊர்" என்று - திருப்புலியூர். "வளம்" என்று- சம்பத்தாதல், சிறப்பாதல். கிளருகை - சொல்லுகை. த்விதீயார்த்தத்துக்குபாவம்- ஒருவனொருவனைக் கவிபாடும்போது அதின்சிறப்புப் பாடுமதுக்கு த்ருஷ்டாந்தம் திருப்புலியூர்ச்சோலையென்று. நாட்டிலூர்களுக்குண்டான வதிசயமெல்லா மிச்சோலையைக்கொண்டே யறியலாயிருக்குமென்றபடி.

"ஏர்வளங்கிளர் -" "வளம்" என்று - அழகுக்கும், சமுதாயத்துக்கும் பேர். கிளர் - சொலவாய், அதிலே பலிதம் - உடைத்தாகை. சமுதாயத்துக்கு நியாமகமருளிச்செய்கிறார் ( அதாவதித்யாதி. ) "தண்மை" என்று - அழகு. ஏர்வளத்தைக் கிளராநின்றுள்ள தண்பணையென்றபடி. "பணை" என்று - மருதநிலத்துக்கும், நீர்நிலத்துக்கும்பேர்.

"சீர்" என்று - கல்யாணகுணங்களாய், "வளம்" என்று - நன்மையாய், "கிளர்" என்று - ப்ரகாசிக்கையாய், குணங்களினுடைய நன்மை யடையச் செயலிலே ப்ரகாசிக்கும்படியென்று சப்தார்த்தம். விவரணம் (நாம்திருநாமமித்யாதி.)

"இப்புனையிழையே" என்றவிடத்தில், "இ" என்று - பூர்வபராமர்ஸி. திருநாமத்தைச் சொன்னவநந்தரம், "ஆபரணம்பூண்டவள்" என்கையாலே, திருநாமம்சொல்லுகைதானே ஆபரணமென்கிறாள் ( திருநாமம்சொல்லவித்யாதி. )...*

# ஐந்தாம்பாட்டு.

புனையிழைகளணிவுமாடையுடையும்புதுக்கணிப்பு
நினையுநீர்மையதன்றிவட்கிதுநின்றுநினைக்கப்புக்காற்
சுனையினுட்டடந்தாமரைமலருந்தண்டிருப்புலியூர்
முனைவன்மூவுலகாளியப்பன்றிருவருண்மூழ்கினளே.

## ஆறாயிரப்படி.

(புனையிழைகள்) "அவன் சௌந்தர்யசீலாதிகுணங்களையுடையனானலென், அவனை யேற்கவே யறியப்பெற்றிலோம், வேறே யொருவனையங்வேஷித்து அவனுக்குக் கொடுக்கக்கடவதாய்ச் சொல்லாநின்றபின்பு இனிச்செய்யலாவதில்லை" என்று தாயார்சொல்ல;

தோழியானவள், இயற்கையிற் புணர்ச்சியைச் சொல்லுகை யீட்டின்றியே யிருக்கச்செய்தே, "இவளையிழக்கிறோம்" என்னும் பயத்தாலே முன்னமே திருப்புலியூர் முனைவனான சர்வேஸ்வரனோடே புணர்ந்தருளினாளென்கிறாள்......................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இவள்வடிவில் புதுமையிருந்தபடியால் அதிசயிதைஸ்வர்ய விசிஷ்டனானவனுடைய சம்ஸ்லேஷத்திலே யவகாஹித்தாளென்கிறாள்.

புனை - முன்பு புனைந்த. இழைகள் - ஆபரணங்களை. அணிவும் - இப்போது ஓரழகுபெறப் பூண்டிருக்கிறபடியும். ஆடையுடையும்-பரிவட்டத்தினுடையவழகும். புதுக்கணிப்பும் - வடிவில்பிறந்த புதுமையும். நின்று - தாமுள்ளதனையும்நின்று. நினைக்கப்புக்கால் - நினைக்கப்புக்காலும். இவட்கு - இவளுக்கு. இது - இந்தவைலக்ஷண்யம். நினையும் - லோகமர்யாதையால் நினைக்கலாம். நீர்மையதன்று - ஸ்வபாவமன்று. ஆதலால், சுனையினுள் - சுனைகளுக்குள்ளே. தடம் - பெருத்த. தாமரை-தாமரைகள். மலரும் - மலராநிற்கிற. தண் - ஸ்ரமஹரமான. திருப்புலியூர் - திருப்புலியூருக்கு. முனைவன் - ப்ரதாநநிர்வாஹகனாய். மூவுலகு - ஜகத்துக்கு. ஆளி - ஸ்வாமியான. அப்பன் - உபகாரகனுடைய. திருவருள் - நிரதிசயோபகாரத்திலே. மூழ்கினள் - அவகாஹித்தாள். ......................................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

வெறுமாபத்ஸகத்வமேபோருமோ, இவளுக்குத் தக்க வைஸ்வர்யமு முண்டாகவேணுமேயென்ன; அதுவுமுண்டென்கிறாள்.

(புனையிழைகளணிவும்) ஆபரணங்கள் நாம் பூட்டினாப்போலேயிருந்ததோ. (ஆடையுடையும்) முகத்தலையறிந்துடுத்ததாயிருந்ததோ. (புதுக்கணிப்பும்) நீர்பாய்ந்த வயல்போலே இவள்வடிவிலே பிறந்த செவ்விபாரீர்கோள். (நினையும்நீர்மையதன்றிவட்கிதுநின்றுநினைக்கப்புக்கால்) (நின்றுநினைக்கப்புக்கால் – நினையும்நீர்மையதன்றிவட்கிது) உபக்ரமித்

துவிடுகையன்றிக்கே, காலதத்வமுள்ளதனையும் நின்றுராயப்புக்காலும், இவளுக்குப்பிறந்த விவ்வழகுகள் நினைக்கப்போகாது. "யதோவாசோ நிவர்த்தந்தே" (யதோவாசோநிவர்த்தந்தே) என்கிறவிஷயத்தைப் பரிச்சேதிக்கிலும், இவள்படி பரிச்சேதிக்கப்போகாது.

இவையெல்லாவற்றாலும் நீ பரிச்சேதித்த வம்ஸமேதென்ன (அப்பன்றிருவருள்மூழ்கினள்; (சுனையினுள்தடந்தாமரைமலரும்) ஒருபூவே தடாகத்தைக் கண்செறியிட்டாப்போலே மலரும். அவ்வூரில் பதார்த்தங்கள் பிறர்க்கிடங்கொடாதென்கிறாள். இவளுக்குப் புறம்புபோக்கில்லை. (திருப்புலியூர்முனைவன்) அவ்வூருக்கு ப்ரதாநன். (மூவுலகாளி) சமஸ்தலோகங்களுக்கும் நிர்வாஹகன். ஐஶ்வர்யத்துக்குப் புறம் பொருவரைத் தேடிப்போகவேண்டா. (அப்பன்) "ஐஸ்வர்யத்தாலும்குறைவறப்பெற்றேன்" என்று தன் ப்ரீதியாலே சொல்லுகிறாள். (திருவருள் மூழ்கினளே) கடல்கொண்ட வஸ்துவை யெங்ஙனே மீட்கப்பார்க்கிறபடி. அருட்கடலிலே மூழ்கின விவளை மீட்கலாமோ வுங்களாலே. ......*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (புனையித்யாதி.) "மூவுலகாளி" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (வெறுமாபத்ஸகத்வமித்யாதி.)

"புனையிழைகளணிவும் -" பூணப்பட்ட வாபரணங்களின் சேர்த்தியும். "புதுக்கணிப்பும் -" வடிவிற்செவ்வியும். "நினையும்நீர்மையதன்று -" நினைக்கும்ஸ்வபாவத்தை யுடைத்தன்று. "புனையிழைகளணிவும்" என்றதுக்கு ஹார்த்தபாவம் (ஆபரணங்களித்யாதி.) "இது" என்றது - பூர்வபராமர்ஶி. "இது" என்றதுக்கர்த்தம் (இவளுக்குப்பிறந்த விவ்வழகுகளென்றது.) விவரணம் (யதோவாசஇத்யாதி.) புனையிழைகளென்று தொடங்கி, புதுக்கணிப்புமான - இது - இவளுக்கு - நின்று நினைக்கப்புக்கால் - நினையும் நீர்மையதன்று என்றந்வயிப்பது.

தாமரையானது சுனையினுடைய பரப்பெல்லாம் மலருமென்றுசப்தார்த்தம். "தாமரை" என்றவேகவசநார்த்தம் (ஒருபூவேயென்றது.) "தடம்" என்றதுக்கர்த்தம் (கண்செறியித்யாதி) கபளீகரித்தாப்போலே யென்றபடி. இதுக்குபாவம் (அவ்வூரிலித்யாதி.) இத்தால் பலிதம் (இவளுக்கித்யாதி.)

"நிர்வாஹகன்" என்றத்தால்பலிதம் (ஐஶ்வர்யத்துக்கித்யாதி.)

"மூழ்கினள்" என்றத்தால்பலிதம் (கடல்கொண்டவித்யாதி) விவரணம் (அருட்கடலிலேயித்யாதி.)

புனையிழைகளென்றுதொடங்கி, புதுக்கணிப்புமான - இது - இவளுக்கு - நின்றுநினைக்கப்புக்கால் - நினையும் நீர்மையதன்று; சுனையினுளென்றுதொடங்கி, மூழ்கினளித்யந்வயஃ ..........................................................*

# ஆறும்பாட்டு.

திருவருண்மூழ்கிவைகலுஞ்செழுநீர்நிறக்கண்ணபிரான்
றிருவருள்களுஞ்சேர்ந்தமைக்கடையாளந்திருந்தவுள
திருவருளருளாலவன்சென்றுசேர்தண்டிருப்புலியூர்த்
திருவருட்கமுகொண்பழத்ததுமெல்லியல்செவ்விதழே.

## ஆறுயிரப்படி.

(திருவருள்) இப்புதுக்கணிப்பும், புனையிழைகளணிவும், இவளுடைய பருவத்தாலும் லீலாரூபசேஷ்டாவிசேஷத்தாலும்சம்பவியாதோ, திருப்புலியூரெம்பெருமானோடு கலந்தகலவியால் வந்ததென்னுமிடத்துக்கடையாளமென்னென்ன; திருப்புலியூர் சராசரங்களுக்கெல்லா மாத்மதாநம்பண்ணுகைக்காக வவ்வூரிலேபுகுந்து நின்றருளின வெம்பெருமானுடைய திருவருளாலேவளர்ந்த கமுகினொண்பழம்போலேயன்றோ விவள் திருப்பவளமிருப்பதென்கிறாள் ...................... ....................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அபிரூபனுய் பவ்யனுனவனுடைய வௌதார்யகுணத்திலே யவகாஹித்தநுபவித்தமைக்கடையாளமுண்டென்கிறாள்.

செழுநீர் - சம்ருத்தஜலமான மஹார்ணவத்தின். நிறம் - நிறத்தையுடையனாய். கண்ணன் - ஆஶ்ரிதசுலபனானக்ருஷ்ணனாகிற. பிரான் - மஹோபகாரகனுடைய. திருவருள் - நிரவதிகமான வௌதார்யகுணத்திலே. வைகலும் - அநேககாலம். மூழ்கி - அவகாஹித்து. திருவருள்களும் - சம்ஶ்லேஷதசையி லவன்பண்ணினவதிசயிதோபகார பரம்பரைகளையும். சேர்ந்தமைக்கு - இவள்பெற்றபடிக்கு. திருந்த-மறைக்கவொண்ணாத. அடையாளம் - அடையாளங்கள். உள - உள. அவற்றில்வைத்துக்கொண்டு, திருவருள் - தன்னுடைய நிருபாதிகமானதிருவருளை. அருளால் - உபகரிக்கைநிமித்தமாக. அவன் - அவன்தானே. சென்று - சென்று. சேர் - சேர்ந்த. தண்-ஶ்ரமஹரமான. திருப்புலியூர் - திருப்புலியூரில். திருவருள் - அவனுடையகடாக்ஷோபகாரபாத்ரமான. கமுகு - கமுகினுடைய. ஒண் - திரண்டுசிவந்துநன்றான. பழத்தது - பழம்போன்றது. மெல் - மெல்லிய. இயல் - ஸ்வபாவத்தையுடையவிவளுடைய. செ - சிவந்த. இதழ் - இதழ்போலேயிருக்கிற வதரமானது ... ... *

## ஈடு - ஆறும்பாட்டு.

ஐஶ்வர்யமேபோருமோ, உதாரனாகவேண்டாவோவென்ன, அவனுடைய வௌதார்யகுணத்திலே யகப்பட்டு சம்ஶ்லேஷித்தமைக் கடையாளம் வ்யக்தமாகவுண்டென்கிறாள்.

(வைகலும்-திருவருள்மூழ்கி) அநேககால மவன்ப்ரசாதத்திலே யவகாஹித்து. நாம், கண்டத்தையறியுமித்தனையிறே. எதிர்சூழல்புக் கிப்படி பரிமாறித்திரிகிற தெத்தனைகாலமுண்டு, அறிந்தோமோ. (செழுநீர்

நிறக்கண்ணபிரான்) சௌந்தர்ய சௌலப்யங்களைக்காட்டிக்காணு மிவ ளை யிப்படி யகப்படுத்திற்று. (திருவருள்களும் சேர்ந்தமைக்கு) அவனு டைய ப்ரசாதமெல்லா மிவ்வாஶ்ரயமொன்றிலும் வந்துசேர்ந்தமைக்கு. (அடையாளந்திருந்தவுள) அவன்விஷயீகாரம் பெற்றமைக்கடையாளம் வ்யக்தமாகவுள.

(நீயிதென்கொண்டறிந்தாயென்ன) (திருவருளருளால்) குணகு ணநிரூபணம்பண்ணாதே விஷயீகரிக்கையாகிற ஸ்வபாவத்தை யுபகரிக் கைக்காக. திருவருளருளுகைக்காக. ஆல்–அசை. (அவன்சென்றித்யாதி) * கலங்காப்பெருநகரம் கலவிருக்கையாயிருக்கவன்றோ வவனிங்குவந்து ஸந்நிஹிதனாயிற்று. (திருவருட்கமுகு) என்று சிலவுண்டு. அதாவது– நீராலேவளருகையன்றிக்கே, பெரியபிராட்டியாரும் சர்வேஶ்வரனுமாக க்கடாக்ஷிக்க அத்தால் வளருவனசில; அதினுடைய வழகியபழம்போலே யிராநின்றது, ம்ருதுஸ்வபாவையான விவளுடையவதரம். அவ்வாயிலே யறியலாயன்றோவிருக்கிறது ..............................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (திருவருளித்யாதி) " திருவருளருளுகைக்காக அவன்சென்று சேர்தண்டிருப்புலியூர் " என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை ( ஐஶ்வர்யமித்யாதி ) " திருவருளருள் " என்கையாலே ஔதார்யம்.

நாலாம்பாட்டிலே "இன்றிப்புணையிழை" என்கிறவிடத்திலே "இவ்வேறுபாடும் நன்மையும் நேற்றில்லை" என்றதும், இங்கு "வைகலும் திருவருள்மூழ்கி" என்றதும் வ்யாஹதமன்றோவென்ன ( நாங்கண்டத்தையித்யாதிவாக்யத்வயத்தாலே. )

உள - உண்டு.

அருள் என்னாதே, "திருவருள்" என்றதுக்குபாவம் (குணகுணேத்யாதி.)

" சென்று " என்றது - விபரீதலக்ஷணையாய், வந்தென்றபடி. " சென்று சேர் " என்றதுக்குபாவம் (கலங்காப்பெருநகரமித்யாதி) ஒண்மை - அழகு. பழத்தது - பழம்போலேயிருக்கிறது. செவ்விதழ் - செவ்வியவிதழென்றாய், அத்தால் அதரத்தை லக்ஷிக்கிறது. இத்தால் பலித்ததாத்பர்யம் (அவ்வாயிலேயித்யாதி)

மெல்லியல்செவ்விதழ் - திருவருளருளாலென்றுதொடங்கி, ஒண்பழத்தது; வைகலும் - திருவருள்மூழ்கியென்றுதொடங்கி, திருந்தவுள இத்யர்வயः... ... ...*

---

## ஏழாம்பாட்டு.

---

மெல்லிலைச்செல்வவண்கொடிப்புல்கவீங்கிளந்தாட்கமுகின்
மல்லிலைமடல்வாழையீன்கனிசூழ்ந்துமணங்கமழ்ந்து
புல்லிலைத்தெங்கினூடுகாலுலவுந்தண்டிருப்புலியூர்
மல்லலஞ்செல்வக்கண்ணன்றாளடைந்தாளிம்மடவரலே.

## ஆறாயிரப்படி.

(மெல்லிலை) "இவளுக்குத் திருப்பவளத்திலழகுதான் ஸ்வாபாவிகமன்றே, இதவனோடு கலந்தமைக்கடையாளமல்ல, அவன்றானிவளோடுகலந்து பரிமாறுகைக்கீடான ப்ரணயித்வமுடையவனே" என்ன; தன் பக்கலடங்காமை யவ்வூரில் ஸ்த்தாவரங்களிலுங்கூட வெள்ளங்கோத்து, அவையும் பரஸ்பர ஸம்ஶ்லேஷதாரகமாயிருக்கும்படியேபெருகி இவனுடைய ப்ரணயித்வவெள்ளத்திலேயிறே யிவளழுந்திற்றென்கிறாள்......*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தேசத்தில் வ்ருக்ஷலதாதிகளும் பரஸ்பரஸம்ஶ்லேஷத்தாலே ப்ரணயித்வத்தை ப்ரகாசிப்பிக்கும்படி, பெரியப்ரணயித்வைஶ்வர்யத்தையுடைய க்ருஷ்ணன் திருவடிகளை யிவள்கிட்டினாளென்கிறாள்.

மெல்-ம்ருதுவான. இலை-இலைத்தழைப்பையும். செல்வம்-சௌந்தர்யைஶ்வர்யத்தையும். வண் - தன்னுடைய வுபக்ரத்துக்குக்கொடுக்கு மௌதார்யத்தையுமுடைத்தான. கொடி-வெற்றிலைக்கொடி. புல்க-சூழ்ந்தணைக்க. வீங்கு-அத்தோட்டைசம்ஶ்லேஷத்தாலே புஷ்டமாய். இளம்-இளகிப்பதித்த. தாள்-அடியுரத்தையுடைத்தான. கமுகின்-கமுகுக்குப்பரிசரவர்த்தியாய். இம்மிதுநபோகத்துக்கு சிசிரோபசாரம்பண்ணும் பரிசாரிகைகள்போலே. மல்-செறிந்த. இலை-இலையையும். மடல்-பரிசாரசாதநம்போலேயிருக்கிற பூமடலையுமுடைத்தான. வாழை-வாழைகளினுடைய. ஈன்-நிரதிசயபோக்யமாய் ஹ்ருத்யமான. கனி-பக்வபலங்களை. சூழ்ந்து-பரிஷ்வங்கம்பண்ணுகையாலே. மணங்கமழ்ந்து-பரிமளோத்தரமாய். அப்படிபரிஸரவர்த்திகளாய், புல்-செறிந்த. இலை-இலையையுடைத்தான. தெங்கின் - உயர்ந்ததெங்கின். ஊடு-நடுவே. கால்-காமசாரமானதென்றலானது. உலவும் - உலாவும்படியான. தண்-ஶ்ரமஹரமான. திருப்புலியூர்-திருப்புலியூரில். மல்லலம்செல்வம் - அதிசயிதமான ப்ரணயித்வசம்பத்தையுடைய. கண்ணன்-க்ருஷ்ணன். தாள்-திருவடிகளை. இம்மடவரல்-முக்தஸ்வபாவையானவிவள். அடைந்தாள்-கிட்டியநுபவித்தாள்... ... ......*

## ஈடு - ஏழாம்பாட்டு.

கேவலமுதாரனாகப்போராதே, ப்ரணயித்வகுணமுண்டாகவேணுமேயென்ன; அவ்வூரில் ஸ்த்தாவரங்களுங்கூட பரஸ்பர மாஶ்ரயமாம்படியன்றோ வவனுடைய ப்ரணயித்வகுண மிருந்தபடியென்கிறாள்.

(மெல்லிலையித்யாதி) ம்ருதுஸ்வபாவமான விலையையுடைத்தாய், ஶ்ரத்தையையுடைத்தாயிருக்கிற வண்கொடியுண்டு - உதாரமானகொடி. தன்பர்த்தாவான கமுகுக்குத் தன்னுடம்பை முற்றூட்டாகக்கொடுக்கும்போலே. ( வீங்கிளந்தாள்கமுகின் ) கொடிதழுவத்தழுவவளராநின்று, ஒருகாலைக்கொருகா லிளகாநின்றுள்ள தாளையுடையகமுகு. "யஸ்ய ஸாஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹிதத்தேஜ:" (யஸ்யஸாஜநகாத்மஜா- அப்ரமேயம்ஹிதத்தேஜ:) என்னும் ந்யாயத்தாலே. "ததௌ பாஹுலதாம் ஸ்கந்தே கோபீமதிர்விபாதிந:" (ததௌபாஹுலதாம்ஸ்கந்தேகோபீம

துநிகாதிந:) (கமுகின்மல்லிலைமடல்வாழை) கமுகோடேகூடின பெரிய விலையையும் மடலையுமுடையவாழை. வெற்றிலைக்கொடிக்கும் கமுகுக்கும் வெய்யில் தட்டாதபடி நிழல்செய்து நிற்குமாயிற்றுவாழை. (ஈன்கனிசூழ்ந்து) பழத்தாறுகள் தெற்றிக்கிடக்குமாயிற்று. (மணம்கமழ்ந்து) காற்றானது விளைவதறியாதேபுக்கு, பரிமளத்தில் லோபத்தாலே அங்கேயிங்கேசுழித்து, பரிமளத்தை யெறட்டுக்கொண்டு வாழைநெருக்கத்தாலேநெருக்குப்பட்டு, அல்பாவகாசமுள்ள தெங்கின்சோலையிலே புறப்பட்டு சஞ்சரியாநிற்குமாயிற்று. (புல்லிலை) புல்லப்பட்டவிலை. அந்யோந்யம் தழுவப்பட்ட விலையையுடைய தெங்கென்னுதல்; வாழையிலையோடே தழுவினவிலையையுடைய தெங்கென்னுதல்; சோலைநெருக்கத்தாலே நேரிதானவிலையென்னுதல். (மல்லலம்செல்வக்கண்ணன்) நிரவதிகமாயழகிதான சம்பத்தையுடையக்ருஷ்ணன். (தாளடைந்தாள்) ப்ரணயித்வகுணத்துக்குத்தோற்றுத் திருவடிகளைப்பற்றினாள். (இம்மடவரல்) முன்பெனக்கு பவ்யையாய்ப்போந்த விவள்கிடீர்! மீட்கவொண்ணாதபடியானாள்..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (மெல்லிலையித்யாதி) "வண்கொடிப்புல்க" என்றுதொடங்கி, "புல்லிலைத்தெங்கினூடு" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (கேவலமித்யாதி) "வண்கொடிப்புல்க" என்றத்தைப்பற்ற (ப்ரணயித்வகுணமென்றது) கொடிக்குக் கமுகு ஆதாரமாய், கமுகுக்குவாழை யாதாரமாய், வாழைக்குத்தென்னஞ்சோலை யாதாரமாயிருக்கையாலே (ஸ்த்தாவரங்களுங்கூட பரஸ்பரமாஶ்ரயமாம்படி யென்றது.)

"செல்வம்" என்றது - ஶ்ரத்தையை. இதுக்கௌதார்யமேதென்ன (தன்பர்த்தாவானவித்யாதி) வீங்குகை - வளருகை. "வண்கொடிப்புல்கவீங்கு" என்றதுக்குத்ருஷ்டாந்தம் (யஸ்யஸேத்யாதி) "வண்கொடி" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் (தாவித்யாதி) "வலிவ௱த்திஸ்ரு ... " (பரிவ்ருத்திஶ்ரமேணகாசலந்வலயஶாலிநீ। ததௌபாஹுலதாம்ஸ்கந்தேகோபீமதுநிகாதிந: ) இதிபஞ்சமேம்ஸே ராஸக்ரீடாயாம். "கமுகின்" என்றது - கமுகோடேகூடவென்றபடி. "மல்லிலைமடல்வாழை" என்றதுக்குபாவம் (வெற்றிலைக்கொடிக்குமித்யாதி) "சூழ்ந்து" என்றதுக்குபாவம் (பழத்தாறுகளித்யாதி) தெற்றிக்கிடக்கை - நெருங்கிக்கிடக்கை. வாழையீன்கனி - வாழைகளீன்ற பழங்கள். தாறு - சிப்பு. கமழ்ந்து-க்ரஹித்து. புல்லப்பட்ட-தழுவப்பட்ட. முந்தினவர்த்தத்துக்கு, புல்லிலை-புல்கப்பட்டவிலையென்றபடி. இவ்வர்த்தத்துக்கு, அந்யோந்யம் தென்னிலையும் தென்னிலையும் தழுவிக்கொண்டென்றபடி. மூன்றாமர்த்தத்துக்கு,புல்லிலை-புல்லிதானவிலை.நேரிதானவிலையென்றபடி.

மல்லல் - பெருமை. மடப்பம்-பவ்யதை. மடவரல்-பவ்யையானவள்... ...*

## எட்டாம்பாட்டு.

மடவரலன்னைமீர்கட்கென்சொல்லிச்சொல்லுகேன்மல்லைச்செல்வ
வடமொழிமறைவாணர்வேள்வியுணெய்யழல்வான்புகைபோய்த்
திடவிசும்பிலமரர்நாட்டைமறைக்குந்தண்டிருப்புலியூர்ப்
படவரவணையான்றன்னாமமல்லால்பரவாளிவளே.

### ஆறாயிரப்படி.

(மடவால்) ப்ரணயஸ்வபாவம்போலே வ்ருத்தவத்தையுமுண்டாகவேணுமிறேயென்ன;

அவன்வ்ருத்தவத்தையிருக்கும்படி பார்க்கலாகாதோ, மிக்கிருந்துள்ள சம்பத்தையுடையரான வடமொழிமறைவாணர் வேள்வியுள் நெய்யழல்வான் புகைபோய்த் திடவிசும்பி லமரர்நாட்டை மறைக்கும் நிரதிசயபோக்யமான திருப்புலியூரில் திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடையவனுடைய திருநாமமல்லது சொல்லுகிறிலளென்கிறாள்... ... ...*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், விலக்ஷணசமாசாரப்ரியனாய் பர்யங்கவிசிஷ்டனானவவனுடைய திருநாமத்தைச்சொல்லாநின்றாளென்கிறாள்.

அன்னைமீர்கட்கு-அன்னையரானவுங்களுக்கு. என் - என்னபாசுரத்தை. சொல்லி-சொல்லி. சொல்லுகேன்-சொல்லுவேன். ஆராதநோபகரணமான, மல்லை-பெரிய. செல்வம்-சம்பத்தையுடையராய். வடமொழி-ஆராதநகாலவக்தவ்யமான சம்ஸ்க்ருதபாஷையையும். மறைவாணர் - ஆராதனப்ரதிபாதகமான வேதநிர்வஹணத்தையுமுடையவர்களுடைய. வேள்வியுள் - ஆராதநரூபமான யாகாதிகர்மங்களில். நெய் - ஆஜ்யாஹுதிவிசிஷ்டமான. அழல்-அக்நியினுடைய. வான்-பெரிய. புகை-புகையானது. போய்-கிளர்ந்துபோய். திடம்-த்ருடமான. விசும்பில் - ஆகாசத்திலே. அமரர்-தேவர்களுடைய. நாட்டை-லோகத்தை. மறைக்கும் - திரைவளைத்தாப்போலே மறைக்கக்கடவதான. தண் - ஶ்ரமஹரமான. திருப்புலியூர் - திருப்புலியூரிலே. ‘‘உத்ஸீதேயுரிமே லோகா ந குர்யாம் கர்ம சேதஹம்’’ (உத்ஸீதேயுரிமேலோகாநகுர்யாம்கர்மசேதஹம்) என்று லோகஹிதார்த்தமாக வாசாரபரனுகையாலே யிவர்களுடைய வாசாரஸக்தனாய்க்கொண்டு, படம்-ஸ்வஸ்பர்ஶத்தாலே விரிகிறபணங்களையுடைய. அரவணையான்றன்-திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே கர்மத்துக்கு ஆராத்யதயா கண்வளர்ந்தருளுகிறவனுடைய. நாமம்-திருநாமம். அல்லால் - ஒழிய. இவள்-இந்த. மடவரல்-மடந்தையானவள். பரவாள் - பரவுகிறிலள்..............*

### ஈடு - எட்டாம்பாட்டு.

வேறும் ப்ரணயித்வமேபோராதே, ‘‘கர்மணைவ ஹி ஸம்ஸித்தி மாஸ்த்திதா ஜநகாதய:’’ (கர்மணைவஹிஸம்ஸித்தி மாஸ்த்திதாஜநகாதய:) என்றன்றோகுடியிருப்பது, ஆனுலிதுக்குத்தக்க வாசாரமுண்டாகவேணுமே

யவனுக்கென்ன; ஆனலவ்வூரிலுள்ளாருடைய வாசாரமிருக்கிறபடியை க்கேட்கலாகாதோவென்கிறுள்.

(மட்வரல்) மட்வந்தபடியை. இவளெனக்கு பவ்யையானபடியை. பற்றிற்று விடாதபடியையென்றுமாம். அன்னைமீர்கட்கு) என்கையிலே யிவளைக்காட்டித்தந்திருக்கிறவுங்களுக்கு. (என்சொல்லிச்சொல்லுகேன்) இவளென்வழிவாராநின்றுளென்னவோ, இவளெனக்கு பவ்யையென்ன வோ.

(மல்லையித்யாதி) நிரவதிகமான சம்பத்தையுடையராய், சம்ஸ்க்ரு தத்துக்கும் வேதத்துக்கும் வ்யாஸபதம் செலுத்தவல்லராயிருந்துள்ள ப்ராஹ்மணருடைய யாகங்களில் நெய்யாலே ஹோமம்பண்ணின வக்நி யிலுண்டான செறிந்தபுகையானதுபோய். (திடவிசும்பிலமரர் நாட்டை மறைக்கும்) வ்யவஸ்த்திதஸ்வபாவமான வாகாசத்தில் தேவலோகத்தை மறைக்கும். ஸ்வர்க்கத்திலுள்ள வைமாநிகரை யப்ஸரஸ்ஸுக்கள் முகங்க ண்டநுபவிக்கவொட்டாதே மறைக்கும். போகத்துக்கேகாந்தமாகத் தி ரைவளையாநின்றதென்றுமாம். (தண்டிருப்புலியூர்) "ஸங்கரஸ்யசகர்த்தா ஸ்ய முபஹ்ருந்யாமிமாஃப்ரஜாஃ" (ஸங்கரஸ்யசகர்த்தாஸ்ய முபஹ்ருந்யா மிமாஃப்ரஜாஃ) என்றிறே யவன்படியும். (படவரவித்யாதி) ஸ்வஸ்பர்ஶத் தாலே விகஸிதபணனான திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடையவ னுடைய திருநாமமல்லது வாய்புலற்றுகிறிலள். நானருகேயிருக்க, சம் ப்ஶ்லேஷதசையில் படுக்கையழகையேசொல்லி வாய்புலற்றுகின்றுள். (இ வள்) என்னையொழிய வேறொன்றை ப்ரவர்த்திக்கவறியாதவிவள்... ...*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (மடவரலித்யாதி) "வடமொழிமறைவாணர்" என்றுதொ டங்கி, "அமரர்நாட்டைமறைக்கும்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (வெறு மித்யாதி)

"நாமமல்லால்பரவாளிவள்" என்றத்தைக்கடாக்ஷித்து (இவளென்வழியி த்யாதி) "மடவரல்" என்றத்தைப்பற்ற (இவளெனக்கித்யாதி)

"மல்லை" என்று - பெருமையாய், அத்தால் - நிரவதிகத்வம் சொல்லுகிறது. சம்ஸ்க்ருதமென்றது - புராணதிகளை. வாணர் - நிர்வாஹகர். வான்புகை-செறிந்தபு கை. "நாட்டை" என்றது-நாட்டிலுள்ளாரை. ஊரிலுள்ளார் சமாசாரம்சொன்னு லிவனுசாரம் சித்திக்குமோவென்ன (சங்கரஸ்யேத்யாதி) "உத்ஸீதேயுரிமே லோகா ந குர்யாம் கர்ம சேதஹம் । ஸங்கரஸ்ய சகர்த்தா ஸ்யாமுபஹந்யாமிமாஃப்ரஜாஃ" (உத்ஸீதேயுரிமேலோகாநகுர்யாம்கர்மசேதஹம் । ஸங்கரஸ் யசகர்த்தாஸ்யாமுபஹ்ருந்யாமிமாஃப்ரஜாஃ) இதிகீதாயாம் த்ருதீயே. அதாவது-அவ னைக்கண்டிவர்களு மநுஷ்டிக்கிருர்களென்றபடி.

இத்தால்பாவம் (நானருகேயித்யாதி) "இவள்" என்றதுக்குபாவம் (என்னை யொழியவித்யாதி)

மல்லைச்செல்வமென்றுதொடங்கி, பரவாளிவள்; அன்னைமீர்கட்கு - இவளெனக்கு மடவந்தபடியை - என்சொல்லிச்சொல்லுகேனித்யந்வயः ..................*

# ஒன்பதாம்பாட்டு.

பரவாளிவணின்றிராப்பகற்பனிநீர்நிறக்கண்ணபிரான்
விரவாரிசைமறைவேதியரொலிவேலையினின்றொலிப்பக்
கரவார்தடந்தொறுந்தாமரைக்கயந்தீவிகைநின்றலரும்
புரவார்கழனிகள்சூழ்திருப்புலியூர்ப்புகழன்றிமற்றே.

## ஆறாயிரப்படி.

( பரவாளிவள் ) வ்ருத்தமுண்டானாலும் ததநுகுணதத்வஜ்ஞானமுண்டாகவேணுமேயென்ன ;

அதுவுமுண்டு, நிரதிசயபோக்யமான த்வநியையுடைய சாமவேதிகளுடைய வத்யயநகோஷமும், ததர்த்தசிந்தைபண்ணுவார்கோஷமும் கடல்போலே கோஷியாநிற்க, முதலைமிக்க பொய்கைகள் தோறுந் தாமரைகள் நிலைவிளக்கெரியுமாபோலே மலராநிற்பதுஞ் செய்து, தலைத்தரமான கழனிகளை யுடைத்தாயிருக்கிற திருப்புலியூரில் பனிநீர்நிறக்கண்ணபிரானுடைய புகழன்றி மற்றொன்று பரவாளிவள் நின்றிராப்பகலென்கிருள்..........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், வேதவித்ப்ரதாநனான க்ருஷ்ணனுடைய திருப்புலியூர்ப்புகழொழிய வேறொன்றிவள் சொல்லுகிறிலளென்கிருள்.

பனி - குளிர்ந்த. நீர்நிறம் - நீர்நிறத்தையுடைய. கண்ணன்-க்ருஷ்ணனான. பிரான் - மஹோபகாரகனுடைய. விரவு - விரவி. ஆர் - நிரம்பின. இசை - இசையையுடைய. மறை - சாமவேதந்தொடக்கமான வேதங்களாலுண்டான. வேதியர்-வைதிகருடைய. ஒலி - கோஷமானது. வேலையில் - சமுத்ரம்போலே. நின்று-நின்று. ஒலிப்ப - முழங்காநிற்க. கரவு - கரவுகள். ஆர் - ஆர்ந்த. தடந்தொறும்-தடாகந்தோறும். தாமரை - தாமரையினுடைய. கயம் - பரப்பானது. தீவிகை-நீராஜநதீபம்போலே. நின்று - நின்று. அலரும் - அலராநிற்பதுமாய். புரவார்- கட்டளைப்பட்ட. கழனிகள் - வயல். சூழ் - சூழ்ந்த. திருப்புலியூர்ப்புகழ் - திருப்புலியூர்ப்புகழ். அன்றி - ஒழிய. மற்று - வேறொன்றை. இவள் - இவள். நின்று-ஒருபடிப்பட. இராப்பகல் - இராப்பகல். பரவாள் - ப்ரவுகிறிலள்.

“தடமும் கயமும் நளியும் பெருமை.” தடமென்று - கரையாய், “ தடந்தொறும் - கரவார் - தாமரைக்கயம் ” என்று-பொய்கையாகவுமாம். கரவு-முதலை. புரவு - கட்டளைச்சேர்த்தி. ..................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

ஆசாரமேபோருமோ, ப்ரயோகவ்ருத்தியைப் பார்த்து அநுஷ்ட்டாநத்துக்கு வேண்டுவ தறிந்திருக்கவொண்ணாதே!, "நிஷ்டிதம்ஸர்வஶாஸ்த்ரேஷு ஸர்வவேதேஷுநிஷ்டிதம்" (நிஷ்ட்டிதம்ஸர்வஶாஸ்த்ரேஷு ஸர்வவேதேஷுநிஷ்ட்டிதம்) என்றன்றோ இக்குடியிலுள்ளாருடையபடி, இதுக்குத் தக்க வேதார்த்த தத்த்வஜ்ஞாநமுண்டாகவேணுமேயென்ன ; அதுக்குமொரு குறையில்லையென்கிறாள்.

(பரவாளிவள்நின்றிராப்பகல்) இவளடைவு கெடப் பேசாநின்றாள்; இராப்பகல் பேசாநின்றாள். இதுக்கு வேறு ப்ரமாணம் தேடவேணுமோ, இவளுக்தியேயன்றோ ப்ரமாணம். (பனிநீர்நிறக்கண்ணபிரான்) குளிர்ந்தவடிவையும், அப்படியே யிருக்கிற சீலத்தையுமுடையவன். (விரவாரிசைமறை) விரவி - எங்குமொக்கப்பரம்பி, ஆர்ந்து – மிக்கிருந்துள்ள, ஸ்வரத்தையுடைத்தான வேதமென்னுதல். அன்றிக்கே, (விரைவார்) என்று பாடமாகில், விரையென்று - போக்யதையாய், வாரென்று - அதில் மிகுதியாய், இசைமறையென்று - சாமவேத மென்னுதல். (வேதியரொலி) வேதகோஷமும், வேதார்த்தவிசாரம்பண்ணுகிறவர்களுடைய கோஷமும். (வேலையில்நின்றொலிப்ப) சமுத்ரகோஷத்திற்காட்டில் நின்று கோஷிக்க. (கரவார்தடந்தொறும்) முதலை மிக்கிருந்துள்ள பொய்கைதோறும். (தாமரையித்யாதி) (தாமரைக்கயம்) கயமென்று - திரளுக்கும், பெருமைக்கும் பேர். (தீவிகை) விளக்கு. தாமரையினுடைய திரளானது நிலைவிளக்குப்போலே யலர்ந்துநிற்கும். (புரவார்கமுனிகள்சூழ்) (புரவு-சாரம். பூஸாரமென்றபடி.) புரவார்ந் திருக்கையாவது - தலைத்தரப்பெருக்காயிருக்கை. பட்டர், "அவ்வூரில் ப்ராஹ்மணர் இறுத்துமாய்கிறார்கள், இவரூருக்குச் சிறப்புச் சொல்லிப் போருகிறாரிறே" என்றருளிச்செய்வர். (திருப்புலியூர்ப்புகழன்றிமற்று – பரவாளிவள்நின்றிராப்பகல்) அவ்வூரிலுள்ளாருடைய வேதகோஷமும், வேதார்த்தவிசாரம்பண்ணுகிற வாரவாரமும், அவ்வூரில் போக்யதையுமேயிறே யிவளடைவுகெடச் சொல்லாநிற்பது........................ ..................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (பரவாளித்யாதி.) "விரவாரிசைமறைவேதியரொலி" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (ஆசாரமேயித்யாதி.) அநுஷ்ட்டாநமுண்டானபோதே தத்த்வஜ்ஞாநம் சித்தமன்றோ, அத்தைத் தனித்துக்கேட்கிறதென்னென்ன (ப்ரயோகவ்ருத்தியையித்யாதி.) ப்ரயோகவ்ருத்தி – ப்ரயோக விதாயக க்ரந்தம். அநுக்ரமணி யென்றபடி. "மிதிலாதிபதிம்ஶூரம் ஜநகம்ஸத்யவிக்ரமம் । நிஷ்டிதம்ஸர்வஶாஸ்த்ரேஷு ஸர்வவேதேஷுநிஷ்டிதம்" (மிதிலாதிபதிம்ஶூரம் ஜநகம்ஸத்யவிக்ரமம்। நிஷ்ட்டிதம்ஸர்வஶாஸ்த்ரேஷு ஸர்வவேதேஷு

நிஷ்ட்டிதம் ) இதி பாலகாண்டே புத்ரகாமேஷ்டிப்ரகரணே ஸுமந்த்ரம் ப்ரதிவசிஷ்ட்டஃ. நிஷ்ட்டிதஃ - சமர்த்தஃ.

"திருப்புலியூர்ப்புகழன்றிமற்று - பரவாள்" என்கையாலே வ்யதிரேகசித்தார்த்தம் ( இவளடைவுகெடப் பேசாநின்றாளென்று. ) கலவிக் குறிசொல்லுகிறவிடத்தில், இவளுடைய வுக்தியைச் சொல்லுகிறவளுடைய பாவம் ( இதுக்கித்யாதி வாக்யத்வயம். ) இதுக்கு - சம்ஶ்லேஷத்துக் கென்னுதல், "வேதியரொலி" என்கையாலே தத்த்வஜ்ஞானத்துக்கென்னுதல்.

"பனிநீர்" என்று - குளிர்ந்தகடல். பனி - குளிர்த்தி. நீர் - கடல்.

"விரை" என்று - பரிமளமாய், அத்தால் - போக்யதையைச் சொல்லுகிறது. வார்தல் - நெடுமையாய், அத்தாலே - மிகுதியைச் சொல்லுகிறது. த்விதீயார்த்தத்துக்கு, "இசைமறை" என்று - முழுச்சொல்லு. "மறை-ஒலி, வேதியரொலி" என்றிரண்டிடத்திலும் கூட்டுவது.

கரவு - முதலை. "கயமும் தடமும் நனியும் பெருமை" என்னக்கடவதிறே. நனி - மிகுதி. புரவு - தலைநிலம். "புரவு" என்றும், "கழனி" என்றும் புநருக்தமாகையாலே, விஷயவிபாகம்பண்ணுகிறார் ( புரவார்ந்தித்யாதி. ) தலைத்தரம்-தலையீடு. ரஸோக்தி ( பட்டரித்யாதி. ) அந்வயமுகேநபாவம் ( திருப்புலியூரித்யாதி. ) இவளடைவுகெடப் பேசும் திருப்புலியூர்ப் புகழாவதேதென்ன ( அவ்வூரிலுள்ளாருடையவித்யாதி. )

பனிநீரொன்றுதொடங்கி, புகழன்றிமற்று - இவள்நின்றிராப்பகல் - பரவாளித்யந்வயஃ. ..........*

## பத்தாம்பாட்டு.

அன்றிமற்றோருபாயமென்னிவளந்தண்டுழாய்கமழ்தற்
குன்றமாமணிமாடமாளிகைக்கோலக்குழாங்கண்மல்கித்
தென்றிசைத்திலதம்புரைகுட்டநாட்டுத்திருப்புலியூர்
நின்றமாயப்பிரான்றிருவருளாமிவணேர்பட்டதே.

### ஆறாயிரப்படி.

( அன்றி ) சௌந்தர்ய சௌசீல்ய ப்ரணயித்வைஶ்வர்யவ்ருத்தத்வ சர்வஜ்ஞத்வாதி சர்வகுணவிசிஷ்டனா யிருந்தானேயாகிலும், இங்கு ப்ரவ்ருத்தமான மணத்தைத் தவிர்க்கை யீடல்லவென்ன;

அன்றி மற்றோருபாயமென்னி வளந்தண்டுழாய்க் கமழ்தல் என்று அவர்களுங்கூட விசைவதோ ரடையாளத்தைச் சொல்லிக்கொண்டு, திருப்புலியூர்நின்ற மாயப்பிரானோடே யிவள் புணர்ந்தருளினா ளென்றுஞ்சொல்லுகிறாள்..........*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்சர்யசேஷ்டித யுக்தனானவனே யிவள்கிட்டினமைக்கு அநந்யதா சித்தமான வடையாளமுண்டென்கிறாள்.

குன்றம் - குன்றம்போலே. மா - ஶ்லாக்யமாயுள்ள. மணி-மணிமயமான. மாடம் - மாடங்களினுடையவும். மாளிகை - மாளிகைகளினுடையவும். கோலம்-தர்ஶநீயமான. குழாங்கள் - திரளானவை. மல்கி - நெருங்கியிருப்பதாய். தென்திசை - தெற்குத்திக்குக்கு. திலதம்புரை - திலதம்போலும். குட்டநாட்டுத் திருப்புலியூர் - குட்டநாட்டுத்திருப்புலியூரிலே. நின்ற - நின்ற. மாயப்பிரான் - ஆஶ்சர்யபூதனுடைய. திருவருளாம் - க்ருபையேயாம். இவள் - இவள். நேர்பட்டது-கிட்டிற்று. அன்றி - அதன்றி. இவள் - இவள். அம் - அழகிய. தண் - குளிர்ந்த. துழாய்-திருத்துழாய். கமழ்தல் - பரிமளத்தை யுடையளாகைக்கு. மற்று - வேறு. ஓர்-ஒரு. உபாயம் - உபாயம். என் - ஏதோ. ..........................................................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

நீ சொல்லுகிறவை யெல்லாங் கிடக்க, இவளை யவனுக்குக் கொடுக்கவேண்டும்படி யசாதாரண லக்ஷண மேதேனு முண்டாகில் சொல்லென்னச் சொல்லுகிறாள்.

(அன்றிமற்றோருபாயமென்னிவ ளந்தண்டுழாய்கமழ்தல்) வேறுமற்றுபாயமுண்டோ, இவளழகிதாய்க் குளிர்ந்த திருத்துழாய் நாறுகைக்கு. ராஜபுத்ரனை யணையாதார்க்குக் கோயிற்சாந்து நாறுகைக்கு விரகுண்டோ. என்னுடம்பாத லுங்களுடம்பாதல் திருத்துழாய் நாறுகின்றதோ. ஸ்வாபதேசத்தில், "அந்தண்டுழாய்கமழ்தல்" என்கிறவிது, அங்கீகாரஸூசகமாயிருக்கிறது.

(குன்றமித்யாதி) மலைபோலே அவிசால்யமாயிருப்பதாய்,பெருவிலையனை ரத்நங்களாலே செய்யப்பட்டிருந்துள்ள மாடங்களினுடையவும் மாளிகைகளுடையவும் தர்ஶநீயமான குழாங்களால் மிக்கு, தெற்கில் திக்குக்குத் திலகம்போலே யிருக்கிற குட்டநாட்டுத் திருப்புலியூரிலே நின்றருளின வாஶ்சர்யபூதன். "அவனுக்கிவள்போராள்" என்னும்படி குணாதிகன். ("இவளுக்கவன்போரான்" என்றன்றோ நீங்களிருக்கிறது, "அவனுக்கிவள்போராள்" என்றன்றோ அவ்வூரிலுள்ளார்வார்த்தை.) (திருவருளாமிவள்நேர்பட்டதே) இவள்நேர்பட்டதவன்திருவருளாம். அவன்திருவருளேயாமென்றாள். இதுவேயோ, இன்னமடையாள முண்டோவென்ன (அன்றிமற்றோருபாயமென்னிவ ளந்தண்டுழாய்கமழ்தல்)*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (அன்றியித்யாதி.) "அன்றிமற்றோருபாய மென்னிவளந்தண்டுழாய்க் கமழ்தல்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (நீசொல்லுகிறவையித்யாதி.) அசாதாரணலக்ஷணம் - திருத்துழாய் கமழ்கை.

"அன்றி" என்றதுக்கிரண்டுபாவம். முந்தினது, கலவியொழிய அந்தண்டுழாய் கமழ்தலுக்கு மற்றுபாயமேதென்று; இத்தைக்காட்டுகிறார் (வேறுமற்றித்யாதி.) இரண்டாம்பாவம் (இதுவேயோவித்யாதி) முடிவில் வாக்யத்திலே கண்டுகொள்வது. "கமழ்தல்" என்றது - கமழுகைக்கென்றபடி. திருத்துழாய்நாறினால் அகலவிக் குறியாகவேணுமோவென்ன (ராஜபுத்ரனையித்யாதி.) "இவளந்தண்டு

ழாய்க்கமழ்தல்'' என்றதுக்கு வாஸநை ( என்னுடம்பாதலித்யாதி. ) அங்கீகாரசூச கமென்றது - அங்கீகரித்தமைக்கு சூசகமென்றபடி.

"மல்கி-" மிக்கு. இத்தால் பாவம் ( அவனுக்கிவளித்யாதி. )

"நேர்பட்டது" என்றது - ப்ராப்தமானதென்றபடி. கீழே, "அன்றி" என்றதுக்கு - கலவியையொழிய வேறுபாயமேதென் றருளிச்செய்து, இங்கே, அந்தண்டுழாய் கமழ்தலொழிய வேறடையாளமுண்டோ வென்றர்த்தாந்தரம் (இதுவேயோவித்யாதி.)

இவள் நேர்பட்டது - குன்றமாமணிமாடமென்று தொடங்கி, மாயப்பிரான் றிருவருளாம் ; இவளந்தண்டுழாய்கமழ்தல் - அன்றி மற்றோருபாயமென் னித்யந்வயஃ. ........................................................................................*



# பதினொன்றாம்பாட்டு.

நேர்பட்டநிறைமூவுலகுக்குநாயகன்றன்னடிமை
நேர்பட்டதொண்டர்தொண்டர்தொண்டன்சடகோபன்சொன்
னேர்பட்டதமிழ்மாலையாயிரத்துள்ளிவைபத்து
நேர்பட்டாரவர்நேர்பட்டார்நெடுமாற்கடிமைசெய்யவே.

## ஆறாயிரப்படி.

(நேர்பட்ட) ஏவம்வித பகவத்ஸௌந்தர்யாதி குணாநுபவஜநித ப்ரீதியாலே பகவச்சேஷத்வ காஷ்டாரூபகதரான சடகோபன்சொல் நேர்பட்ட தமிழ்மாலை யாயிரத்துளிப்பத்தும் நேர்பட்டவர்கள், நெடுமாற்கடிமைசெய்யப்பெற்று வாழ்வரென்கிறார் ......... .....................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக பகவத்கைங்கர்யத்தை யருளிச்செய்கிறார்.

நிறை-பரிபூர்ணமான. மூவுலகுக்கும்-த்ரிவிதசேதநாசேதநங்களுக்கும். நேர்பட்ட-வாய்த்த. நாயகன்றன்-ஸ்வாமியானசர்வேஶ்வரனுடைய. அடிமை-கைங்கர்யத்துக்கு. நேர்பட்ட-வாய்த்த. தொண்டர் - பக்திபரவசருடைய. தொண்டர்தொண்டர்-சம்பந்திசம்பந்திகளுக்கும். தொண்டன்-சேஷபூதரான. சடகோபன்-ஆழ்வாருடைய. சொல்நேர்பட்ட-சொல்வாய்ப்பையுடைத்தாய். தமிழ்-த்ராமிடபாஷையாலே. மாலை-மாலையாகச்சேர்க்கப்பட்டிருக்கிற. ஆயிரத்துள்-ஆயிரத்துள். இவைபத்தும்-இவைபத்தையும். நேர்பட்டாரவர்-அப்யஸித்துக்கிட்டினவர்கள். நெடுமாற்கு-ஆஶ்ரிதவ்யாமுக்தனான சர்வேஶ்வரனுக்கு. அடிமைசெய்ய - அடிமைசெய்கைக்கு. நேர்பட்டார்-வாய்த்தவர்கள்.

இதுவும் - அறுசீராசிரியவிருத்தம்.........................................................*

## ஈடு-பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் – இப்பத்தைக்கற்றவர், ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைப்பண்ணப்பெறுவரொன்கிறார்.

(நேர்பட்டநிறைமூவுலகுக்கும் நாயகன்றன்னடிமை) குறைவற்ற மூவுலகுக்கும் நேர்பட்டநாயகன் "த்ரைலோக்யமபிநாதேந யேநஸ்யாந்நாதவத்தரம்" (த்ரைலோக்யமபிநாதேந யேநஸ்யாந்நாதவத்தரம்) என்று ரக்ஷ்யவர்க்கத்தளவன்றிக்கே யிருக்கிற ரக்ஷகத்வத்துடிப்பு. இத்தால் - நாயகன்படிசொல்லிற்று. "அநுரூபஸ்ஸவைநாத:" (அநுரூபஸ்ஸவைநாத:) என்னுமாபோலே. (அடிமைநேர்பட்டதொண்டர் தொண்டர்தொண்டர்தொண்டன்சடகோபன்) இவர்தம்படிசொல்லுகிறது. அவன்சேஷித்வத்துக் கெல்லையானாப்போலே, இவர் சேஷத்வத்துக் கெல்லையானபடி. (சொல்நேர்பட்டதமிழ்மாலை) அந்தவாச்யத்துக்குத்தகுதியான வுக்திவாய்த்த தமிழ்த்தொடையாயிரத்திலு மித்திருவாய்மொழிநேர்பட்டவர்கள். (நெடுமாற்கடிமைசெய்ய–நேர்பட்டார்) இப்பாசுரத்தைச்சொன்னவர்கள், இவருடைய வ்ருத்தியிலே யந்வயிக்கப்பெறுவரொன்கை. நேர்படுகை-சொல்லப்படுகை. சொல்லப்பட்டாரொன்றபடி. ஆக, இப்பாட்டால்–சர்வேஶ்வர ஸ்வரூபத்தையும், ஸ்வஸ்வரூபத்தையும், ப்ரதிபாதகமான ப்ரபந்தவைலக்ஷண்யத்தையும், இத்தை யப்யஸித்தாருடைய ப்ராப்யவைலக்ஷண்யத்தையும் சொல்லிற்றாயிற்று... ... .........*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (நேர்பட்டவித்யாதி) "இப்பத்தும் நேர்பட்டாரவர் – நெடுமாற்கடிமைசெய்ய - நேர்பட்டார்" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (இப்பத்தையித்யாதி.)

"நிறைமூவுலகுக்கும் - நேர்பட்ட - நாயகன்" நேர்பட்ட-சத்ருஶமான. நேர்படுகையின் சரமாவதி (த்ரைலோக்யமபீத்யாதி) அயோத்யாகாண்டே, "அநேநஶ்ரேயஸாஸத்யஸ்ஸம்யோஜ்யாஹமிமாம்மஹீம்" (அநேநஶ்ரேயஸாஸத்யஸ் ஸம்யோஜ்யாஹமிமாம்மஹீம்) என்றது, மேல். ஶ்லோகத்துக்கடியும் காட்டுகிறார் (அநுரூப இத்யாதி)

அந்தவாச்யத்துக்கு - தகுதியான நாயகனுக்கென்றபடி. நேர்பட்டவர்கள்- அப்யஸித்தவர்கள்.

"நேர்பட்டாரவர்-நெடுமாற்கடிமைசெய்ய-நேர்பட்டார்" என்றதின் பலிதார்த்தம் (இப்பாசுரத்தையித்யாதி.)

நேர்பட்டநிறை மூவுலகுக்குமென்றுதொடங்கி, இப்பத்தும் நேர்பட்டாரவர் – நெடுமாற்கடிமைசெய்ய – நேர்பட்டாரித்யந்வய:. "அடிமைசெய்ய – நேர்பட்டார்-" அடிமைசெய்கைக்கு வாய்த்தவர்களென்றபடி.................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(கருமாணிக்கமலைமேல்.)

வைலக்ஷண்யாத் ஸ்வமூர்த்தே: மகுடமுகமஹாபூஷணைர்பூஷிதத்வாத் ஸ்வார்ஹாநேகாயுதத்வாத் ப்ரளயஸகிதயோஜ்ஜீவநேகர்ஷகத்வாச் ச । பவ்யத்வாதைச்வர்யஸம்பந்நிரவதிகதயாச்சர்யசேஷ்டத்வயோகாந் மாணிஷ்டாம்சாத் ஸ்வகீயேஷ்வ கடயதி ஹரிஶ்ஶேஷதாமாஜ்ஞாயிதேந ॥ (கூ௦)

(வைலக்ஷண்யாத்ஸ்வமூர்த்தே:) கருமாணிக்கமலைமேலித்யாதி - நிரதிசய சௌந்தர்யயுக்த திவ்யாவயவங்களையுடைய திருமேனியையுடையனாகையாலும்; (மகுட்முகமஹாபூஷணைர்ப்பூஷிதத்வாத்) மின்னுநீண்முடியாரமித்யாதி - தீப்தியுக்தங்களாயிருக்கிற திருவபிஷேகம்முதலான திருவாபரணங்களாலே யலங்க்ருதனாயிருக்கையாலும்; (ஸ்வார்ஹாநேகாயுதத்வாத்) செழுங்கதிராழிமுதலித்யாதி - மிக்க தேஜஸ்ஸையுடைய திருவாழிமுதலான திவ்யாயுதங்களையுடையனாகையாலும்; (ப்ரளயஸகிதயா) மூவுலகுண்டுமிழ்தேவபிரான் - ப்ரளயாபத்திலே சகலலோகங்களையும் திருவயிற்றிலேவைத்து, சகாவைப்போலே ரக்ஷிக்குமவனாகையாலும்; (உஜ்ஜீவநேகர்ஷகத்வாத்) முனைவன் மூவுலகாளியப்பன் - த்ரைலோக்யநிர்வாஹகனாய், தஜ்ஜீவநத்திலே க்ருஷிபண்ணுமவனாகையாலும்; (பவ்யத்வாத்யைஸ்ச) செழுநீர் நிறக்கண்ணபிரான் - க்ருஷ்ணனாயவதரித்து ஆஸ்ரிதர்க்கு பவ்யனாயிருக்கையாலும்; ஆதிசப்தார்த்தம் - இங்கேக்ரமம் விவக்ஷிதமன்று. (ஸம்பந்நிரவதிகதயா) மல்லலஞ்செல்வக்கண்ணன் - நிரவதிகைஸ்வர்யத்தை யுடையனாகையாலும்; வடமொழிமறைவாணரித்யாதி, விரைவாரிசைமறையித்யாதி - திருவநந்தாழ்வானைத் திருப்படுக்கையாகவுடையனாகையாலும், அவ்வூரில்வர்த்திக்கிற ப்ராஹ்மணரெல்லாரும்வேதார்த்தங்களை விசாரித்துக்கொண்டு வைதிகங்களான யாகாதிகளை யநுஷ்டிக்கும்படி அத்யந்தசிஷ்டனாயிருக்கையாலும்; (ஆஸ்சர்யசேஷ்டத்வயோகாத்) நின்றமாயப்பிரான் - ஆஸ்சர்யங்களான வ்யாபாரங்களையுடையனாகையாலும்; திருப்புலியூரெம்பெருமான், சேதநருக்கு ஸ்வகீயதாஸ்யத்திலே நிஷ்டையை ப்ரகடீகரியாநிற்கிறானென்று "கருமாணிக்கமலைமேல்" என்கிறதசகத்திலே காரிஸூநுவாலே யத்யவஸிக்கப்பட்டதென்கிறார் ........................................(கூ௦)

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

கருமால்திறத்திலொருகன்னிகையாமாற
னொருமாகலவியுரைப்பால் - திரமாக
வன்னியருக்காகாதவன்றனக்கேயாகுமுயி
ரின்னிலையையோருநெடிதா. (எகூ)

(கருமால்திறத்தில்) இதில் - ஆத்மாவினுடைய வந்யசேஷத்வநிவ்ருத்தியை யாழ்வாரருளிச்செய்தபடியை யநுவதித்தருளிச்செய்கிருர். எங்ஙனேயென்னில்; இப்படி விலக்ஷணமான வாத்மஸ்வரூபந்தான் தனக்கு முரித்தன்றிக்கே பிறர்க்கு முரித்தன்றிக்கே யவனுக்கே யநந்யார்ஹசேஷமாயிருக்கும்படியை 'யந்யாபதேசத்தாலே யருளிச்செய்கிற * கருமாணிக்கமலையிலர்த்தத்தை "கருமால்திறத்தில்" இத்யாதியாலேயருளிச்செய்கிருரென்கை.

(கருமால்திறத்திலொருகன்னிகையாம்மாறன்) நீலநிறத்தையுடையனுய், ஆஸ்ரிதவ்யாமுக்தனுன சர்வேஸ்வரன்விஷயத்தில் அந்யசேஷத்வமில்லாத கந்யகாவஸ்த்தையைபஜித்தவாழ்வார். "கருமாணிக்கமலை" என்றத்தைக்கடாக்ஷித்தபடி. (ஒருமாகலவியுரைப்பால்) அத்விதீயமாய், விலக்ஷணமான சம்ஸ்லேஷ லக்ஷணங்களைத்தோழிபேச்சாலே யருளிச்செய்யப்புகுகையாலே. அதாவது - "திருப்புலியூரரு மாயன்பேரன்றிப்பேச்சிலள்" என்றும், "திருப்புலியூர்புகழும்" என்றும், "திருப்புலியூர்வளமே - புகழும்" என்றும், "அப்பன்றிருவருள் மூழ்கினள் - புனையிழைகளணிவுமாடையுடையும் புதுக்கணிப்பும் நினையும் நீர்மையதன்று" என்றும், "திருவருட்கமுகொண்பழத்தது மெல்லியில்செவ்விதழே - திருவருள்களும் சேர்ந்தமைக்கடையாளம்திருந்தவுள" என்றும், இவற்ருலே "கண்ணன்ருளடைந்தாளிம்மடவரல்" என்றும், "படவரவணையான்றன் நாமமல்லால் பரவாளிவள்" என்றும், "திருப்புலியூர்ப்புகழன்றிமற்று-பரவாளிவள்" என்றும், "திருப்புலியூர்நின்றமாயப்பிரான்றிருவருளாமிவள் நேர்பட்டதே - அன்றி மற்றேருபாயமென்னி வளந்தண்டுழாய்கமழ்தல்" என்றும், இப்படி கலவிக்குறிகளைக்கூறப் புகுகையாலேயென்கை. (திரமாகவன்னியருக்காகாது) "கதம்நாமோபதாஸ்யாமிபுஜமந்யஸ்யகஸ்யசித்" (கதம்நாமோபதாஸ்யாமிபுஜமந்யஸ்யகஸ்யசித்) என்கிறபடியே நிஸ்சயமாக அந்யர்க்கு சேஷமாகலாகாது, ப்ராப்தசேஷியானவனுக்கே சேஷமாகிற வாத்மஸ்வரூபத்தின்நிஷ்ட்டையை. (ஒருநெடிதா) ஆராய்ந்துபோருங்கோள் தீர்க்கமாக வென்னுதல்; தீர்க்கமாக விசாரியென்று தன்றிருவுள்ளத்தைக்குறித் தருளிச்செய்கிருராதல்..............................................................*

எட்டாம்பத்தில் - ஒன்பதாந்திருவாய்மொழி முற்றிற்று.



ஆக, திருவாய்மொழி - எகூ.—பாட்டு - அஎக.





ஸ்ரீ

# திருவாய்மொழி.

## எட்டாம்பத்து.

## பத்தாந்திருவாய்மொழி.

### நெடுமாற்கடிமை - ப்ரவேசங்கள்.

### ஆறாயிரப்படி.

(நெடுமாற்கடிமை) இப்படி யெம்பெருமான் தம்மை யநங்யார்ஹமாம்படி யடிமைகொண்டபடியை யநுசந்தித்து மிகவும் ப்ரீதராய், அந்த ப்ரீதிப்ரகர்ஷத்தாலே யவ்வளவில் பர்யவஸியாதே, "அவனுடைய ஸௌந்தர்யசீலாதிகளிலே யீடுபட்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு சேஷமாகையே நிரதிசயபுருஷார்த்தம்" என்றத்யவஸித்து, ஐஸ்வர்யாதியாய், ஸர்வேஸ்வரத்வ பர்யந்தமான ஸகலபுருஷார்த்தங்களும், தனித்தனியும்திரளவும், இப்பாகவத சேஷத்வ புருஷார்த்தத்தோ டொவ்வாதென்கிறார்.............................................................*

### பன்னீராயிரப்படி.

பத்தாந்திருவாய்மொழியில், கீழ்த்திருவாய்மொழியிலே பகவச்சேஷத்வத்தினுடைய நிரதிசயபோக்யதையை ப்ரதிபாதித்து, அந்த போக்யதாதிசயத்தாலே "நேர்பட்ட தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்" என்று ப்ரஸ்துதமான ததீயசேஷத்வ பாரம்யத்தி லினிமையானது ப்ரகாசித்து, அந்த ததீயருடைய போக்யதைக்கு ஹேதுவான; தத்ஸம்பந்தத்துக்கு மூலமாயிருக்கிற வீஸ்வரனுடைய வாஸ்ரிதவ்யாமோஹத்தையும், உதாரரூபத்வத்தையும், அசேஷஜந ஸம்ஸ்லேஷத்தையும், ஆபத்ஸகத்வத்தையும், ஆஸ்சர்யஸ்வபாவத்தையும், ஆஸ்ரிதவிரோதிநிரஸநத்தையும், அகிலகாரணத்வத்தையும், அர்ணவசாயித்வத்தையும், ஆஸ்ரிதவிரோதி நிராஸகமான வாயுதபூர்த்தியையும், அநுபாவ்யாகார யோகத்தையு மநுஸந்தித்து, ஏவம்வித பகவத்விஷயத்துக் கபிமதரான பாகவதருடைய வத்யந்த சேஷத்வ காஷ்ட்டாவிசேஷமே யதிசயிதபோக்யமாய், ஐஸ்வர்ய கைவல்ய பகவத்ப்ராப்த்யாதிக ளதுக்கு ஸத்ருஸமல்லாதபடியான பரமபுருஷார்த்தத்வம் ப்ரகாசிக்கும்படி ப்ரதிபந்தகத்தை நிஸ்ஸேஷமாக நிவர்த்திப்பித்த ப்ரகாரத்தை யருளிச்செய்து தலைக்கட்டுகிறார். ததீயசேஷத்வபரமான * பயிலுஞ்சுடரொளியில் - தத்ஸம்பந்தநிபந்தநமான ததீயர்க்கும் சேஷித்வ சரண்யத்வ ப்ராப்யத்வங்களுண்டாகையாலே, முதலிட்டு நாலுபாட்டாலே - சேஷித்வத்தையும், அநந்தரம் மூன்றுபாட்டா

லே - சரண்யத்வத்தையும் ப்ரதிபாதித்து, "எந்தொழுகுலந்தாங்கள்" என்று சங்க்ரஹேண ப்ரதிபாதித்த ப்ராப்யத்வத்தை யிங்கே விஸ்தரேண ப்ரதிபாதித் தருளுகிறார். ..........................................................................................*

ஈடு.

கீழிரண்டுதிருவாய்மொழியாலுமாக வாத்மாவினுடைய வநந்யார்ஹசேஷத்வம் சொல்லிற்றாய், "அதுபிறர்க்குமுரித்தல்ல, தனக்குமுரித்தல்ல" என்றாயிற்றுச் சொல்லிற்று. ப்ரணவத்தில் மத்யமபதத்தாலும், * நமஸ்ஸாலும் சொன்ன வர்த்தமாயிற்றுச் சொல்லுகின்றது. அநந்யார்ஹசேஷத்வத்துக் கெல்லை ததீயசேஷத்வ பர்யந்தமாகையிறே. ததீயர்க்கு க்ரயவிக்ரயார்ஹமானவன்றிறே தச்சேஷத்வம் நிலைநின்றதாவது. "எந்தம்மைவிற்கவும்பெறுவார்கள்" என்றிறே யிருப்பது. அம்முணியாழ்வான் போசளராஜ்யத்தினின்றும் வந்தநாளிலே,பட்டர்கண்டருளி, "நீ ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் போர வடிமைசெய்து போந்தாய் என்று கேட்டோம், உன் ப்ரக்ருதிக்குச்சேர * நெடுமாற்கடிமையைக்கேள்" என்றருளிச்செய்தாராம். "ஈஶ்வரஶேஷம்" என்றறிந்தவன்று ப்ரமித்து மீளவுமாம்; ததீயசேஷத்வ பர்யந்தமாக வுணர்ந்தால் மீளவேண்டாவிறே. "தத்பக்திநிக்நமநஸாம் க்ரயவிக்ரயார்ஹ:" (தத்பக்திநிக்நமநஸாம் க்ரயவிக்ரயார்ஹ:) என்னக்கடவதிறே. "ஐஶ்வர்யம் புருஷார்த்த:" (ஐஶ்வர்யம் புருஷார்த்தம்) என்றிருப்பார், "ஆத்மலாபம் புருஷார்த்த:" (ஆத்மலாபம் புருஷார்த்தம்) என்றிருப்பார், "பகவச்சேஷத்வம் புருஷார்த்த:" (பகவச்சேஷத்வம் புருஷார்த்தம்) என்றிருப்பார், "ஈஶ்வரனாய், 'ஆநந்தமய:' என்றிருக்கு மிருப்பு புருஷார்த்தம்" என்றிருப்பாராயிறேயிருக்கிறது. "இப்படிப்பட்ட புருஷார்த்தங்கள், தனித்தனியும் திரளவும், நான்பற்றின பாகவதசேஷத்வமாகிற புருஷார்த்தத்தோடொவ்வாது" என்று எடுத்துக்கழிக்கவும் போராது. "இப்படியிருக்கிறவிதுவே, காலதத்த்வமுள்ளதனையு மெனக்கு மென்னோடுசம்பந்தமுடையார்க்கும் வாய்க்கவேணும்" என்று ப்ரார்த்தித்துத் தலைக்கட்டுகிறார். * பயிலும் சுடரொளியிற்காட்டி லித்திருவாய்மொழிக்கு வாசியென்னென்னில்; "பாகவதர்கள்சேஷிகள்" என்றதங்கு; "பாகவதர்கள் போக்யர்" என்கிறதிங்கு. [கச்சதாமாதுலகுலம்] [கச்சதாமாதுலகுலம்] ஸ்ரீசத்ருக்நாழ்வானுக்காதல், இவ்வாழ்வார்க்காதலிறே யிவ்வர்த்தங்களில் ருசியுள்ளது. [நித்யஶத்ருக்ந:] [நித்யஶத்ருக்ந:] "பெருமாள் போக்யர்" என்று அவர்பக்கல் கண்வையாதென்றதிறே.........*

ஜீயர் அரும்பதம்.

நெடுமாற்கடிமை ப்ரவேஶே, சங்கதி கதநார்த்தம் கீழி லிரண்டு திருவாய்மொழியிலர்த்தத்தை யநுவதிக்கிறார் (கீழிரண்டித்யாதி.) சொன்ன ப்ரகார மேதென்ன (பிறர்க்குமித்யாதி.) பிறர்க்கு முரித்தல்லவென்றது - "இறவேறி" என்றத்தைப்பற்ற, "அருமாயன்பேரன்றிப் பேச்சிலள்" என்றத்தைப்பற்ற (தனக்கு

முசித்தல்லவென்றது.) இவ்வர்த்தத்தை திருமந்த்ரத்திலே யேறிட்டுக் காட்டுகிறார் (ப்ரணவத்திலித்யாதி.) கீழிரண்டு திருவாய்மொழியாலும், உகார நமஸ்ஸுக்களுடைய சாப்தமான வர்த்தம் சொல்லிற்று; இதில், * நமஸ்ஸிலார்த்தமான பாகவத சேஷத்வத்தைச் சொல்லுகிறதென்கிறார் (அநந்யார்ஹேத்யாதி.) (பர்யந்தமாகையிறே) அத்தைச் சொல்லுகிற தித்திருவாய்மொழியில் என்று கூட்டுவது. அப்படியிருக்குமோவென்ன (ததீயர்க்கித்யாதி.) "ததீயர்க்கு க்ரயவிக்ரயார்ஹம்" என்னுமதுக்கு ப்ரமாணம் (எந்தம்மையித்யாதி) ஸ்பஷ்டோர்த்த:. பெரியாழ்வார்திருமொழி, "காசின்வாய்" இத்யாதி. "இத்திருவாய்மொழி, பாகவதவைபவ ப்ரதிபாதகம்" என்கைக்கைதிஹ்யம் (அம்முணியித்யாதி.) பகவச்சேஷத்வத்தைப்பற்ற பாகவதசேஷத்வத்துக் கதிசயமேதென்ன (ஈஸ்வரசேஷமித்யாதி.) ப்ரமித்தென்றது - ஐஸ்வர்யாதிகளைக்கண்டு ப்ரமித்தென்றபடி. "ததீயர்க்கு க்ரய விக்ரயார்ஹம்" என்னுமதுக்கு ப்ரமாணாந்தரம் (தத்பக்திநிக்நேத்யாதி.) "ஸ்வஸ்வப்ரபாவமதிவேலமபுத்யமாநோ லக்ஷ்மீஸஹாயகுணமங்களபங்கலக்ந: । தத்பக்திநிக்நமநஸாம் க்ரயவிக்ரயார்ஹோ வாரிப்ரதாரித இவத்வரிதோ பபூவ." (ஸ்வஸ்வப்ரபாவமதிவேலமபுத்யமாநோ லக்ஷ்மீஸஹாயகுணமங்களபங்கலக்ந: । தத்பக்திநிக்நமநஸாம் க்ரயவிக்ரயார்ஹோ வாரிப்ரதாரித இவத்வரிதோ பபூவ.")

பாட்டுக்களில் ப்ரமேயங்களைச் சேர்த்துப்பிடித் தருளிச்செய்கிறார் (ஐஸ்வர்யமித்யாதி.) "வியன்மூவுலகு" என்றத்தைப்பற்ற (ஐஸ்வர்யமித்யாதி.) "தானேதானேயானும்" என்றத்தைப்பற்ற (ஆத்மலாபமித்யாதி.) "உறுமோபாவியேனுக்கு" இத்யாதி மூன்றும்பாட்டைக் கடாக்ஷித்து (பகவச்சேஷத்வமித்யாதி.) "மூவுலகின்வீடுபேறு" என்றத்தைப்பற்ற (ஈஸ்வரனுயித்யாதி.) திரளவுமென்றது - "முழுதும்" என்றத்தைப்பற்ற. "நங்கட்கு" என்றத்தைப்பற்ற (என்னோடு சம்பந்தமுடையார்க்குமென்றது.)

"எம்மையாளும்பரமரே" என்றத்தைப்பற்ற (பாகவதர்கள் சேஷிகளென்றதங்கென்றது) "விடுமாறென்பதென்னந்தோ வியன்மூவுலகுபெறினும்" என்றத்தைப்பற்ற (போக்யமென்கிறதிங்கென்றது) இப்படி "பாகவதசேஷத்வ முத்தேஸ்யம்" என்றிருந்தவர்களுண்டோவென்ன; உண்டென்கைக்கும், போக்யமென்னுமதுக்கும் ப்ரமாணம் (கச்சதேத்யாதி) அயோத்யாகாண்டே ப்ரதமே. போக்யதைக்கு சூசகம் (நித்யசத்ருக்ந: என்றது) நித்யசத்ருக்கள் - இந்த்ரியங்கள் ............*

---

## பத்தாந் திருவாய்மொழி

## முதற்பாட்டு.

நெடுமாற்கடிமைசெய்வேன்போலவனைக்கருதவஞ்சித்துத்
தடுமாற்றற்றதீக்கதிகண்முற்றுந்தவிர்ந்தசதிர்நினைந்தாற்
கொடுமாவினையேனவனடியாரடியேகூடுமிதுவல்லால்
விடுமாறென்பதென்னந்தோவியன்மூவுலகுபெறினுமே.

## ஆறுயிரப்படி.

ஆஶ்ரிதர்பக்கல் மிகவும் வ்யாமோஹத்தையுடைய வெம்பெருமான் றனக்கு அடிமைசெய்கையி லெனக்குள்ள விச்சாமாத்ரமே காரணமாக, பதற்றமற்று நின்றுநலிகிற புண்யபாபரூபகர்மங்களையெல்லாம் போனபடி தெரியாமேபோக்கி யென்னை யடிமைசெய்வித்துக்கொண்டருளின விவனடியாரடியே கூடுமிதுவல்லது, விஸ்மயநீயமான த்ரைலோக்யம் பெறினுமல்லனென்கிறார் ................................................................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், ஆஶ்ரிதவ்யாமுக்தனான சர்வேஶ்வரனுக்கு சேஷபூதமான பாகவதவிஷயமான சேஷத்வத்துக்கு த்ரைலோக்யைஶ்வர்யமும் தகுதியல்லவென்கிறார்.

நெடு - நிரவதிகமான. மாற்கு - ஆஶ்ரிதவ்யாமோஹத்தையுடைய சர்வேஶ்வரனுக்கு. அடிமை - அடிமை. செய்வேன்போல் - செய்வேன்போல. அவனை-அவனை. கருத-மநோரதமாக்கினவளவிலே. தடுமாற்றம்-ஓரலைச்சல். அற்ற-அறும்படி. என்பக்கலிலேநிற்கிற, தீக்கதிகள் - துஃகஹேதுவான வவித்யாகர்ம ரூபமாயுள்ள பொல்லாவழிகள். முற்றும்-எல்லாம். வஞ்சித்து - நானறியாதபடிவஞ்சித்து. தவிர்ந்த - "காணேவொருங்கிற்றுங்கண்டிலமால்" என்கிறபடியே விட்டுப்போயிற்றின. இனி, சதிர்-உறுவது. நினைந்தால்-பார்த்தால். அவன்-ஆஶ்ரிதவத்ஸலனான வவனுக்கு. அடியார்-அடியாரான பாகவதருடைய. அடியே-திருவடிகளையே. கூடுமிதுவல்லால்-ப்ராபிக்குமதொழிய. வியன்-விஸ்தீர்ணமான. மூவுலகு-த்ரைலோக்யைஶ்வர்யத்தை. பெறினும்-பெற்றாலும். கொடு-ஐஶ்வர்யத்திற்காட்டில் ததீயசேஷத்வத்துக்கு வாசிசொல்லவேண்டும்படி. மாவினையேன்-மஹாபாபத்தையுடையநான். அந்த ததீயசேஷத்வத்தை, விடும்-விடும். ஆறு-ப்ரகாரமாக. என்பது - சொல்லப்படுவது. என்-ஏது. அந்தோ - ஐயோ!, விடவென்றுசொல்ல ப்ரசங்கமுண்டாவதே.

நெடுமால் - சர்வாதிகசேஷியென்றுமாம். சதிர் - உறுவது..................*

## ஈடு - முதற்பாட்டு.

நாட்டார் விரும்புகிற வைஶ்வர்யபுருஷார்த்தமும் நான்பற்றினபுருஷார்த்தத்தோடொவ்வாதென்றுஎடுத்துக்கழிக்கவும்போராதென்கிறார்.

(நெடுமாற்கு) நெடுமாலுக்கென்றபடி. மாலென்று - பெரியோனென்றபடி. நெடுமையால் நினைக்கிறது-அதில் பெருமையை. அறப்பெரியோனென்றபடி. அவன்சேஷித்வத்தி லெல்லையைப்பிடிக்கிறார், தாம் சேஷத்வத்தி லெல்லையைக்கணிசிக்கிறவராகையாலே. அன்றிக்கே, மாலென்று - வ்யாமோஹமாய், நெடுமையால் - மிக்கவ்யாமோஹத்தையுடையவனென்னுதல். தன்னளவன்றியே தன்னுடையாரளவிலே நிறுத்தும்படிகாணும் வ்யாமோஹம். "அடியார்க்கென்னை யாட்படுத்தவிமலன்." (அடிமைசெய்வேன்போலவனைக்கருத) அவனுக்கடிமை செய்வாரைப் போலே அவனைநினைக்க. மித்ரபாவமேயாய், ஆராய்ந்தால் அதுதானும்

போட்கன். (தடுமாற்றற்றதிக்கதிகள்முற்றுந்தவிர்ந்த) ஒருசத்கர்மத்தை யநுஷ்ட்டித்து, அது நின்று தடுக்குமதில்லாமையாலே தடுமாற்றமற்று வர்த்திக்கிற வவித்யாதிகளடங்கத்தவிர்ந்தன. தவிர்ந்தபடிதானென்னெ ன்னில்; வஞ்சித்துத்தவிர்ந்தன. "பகலெல்லாமொக்க வர்த்திக்கக்கடவோம்" என்றுசொல்லிவைத்து, ராத்ரியிலே யொருகலத்திலேயுண்டு வைத்து, ஒக்கக்கிடந்து விளக்கையெரியவைத்து, போனதறியாமே வஞ்சித்துப்போவாரைப்போலே. (அடிமைசெய்வேன்போலவனை - வஞ்சித்து-கருத) என்னவுமாம். (முற்றுந்தவிர்ந்த) நான்போக்கிக்கொள்ளுமன்றிறே க்ரமத்தாலே போகவேண்டுவது. "ஸவெஃவாபாநஃப்ரதூயந்தே," (ஸர்வேபாப்மாநஃப்ரதூயந்தே) "ஸவஃவாபெஹெ்யாமொக்ஷயிஷ்யாமி" (ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி) என்றிறே யவன்போக்கும்போதிருப்பது. (சதிர்நினைந்தால்) அவன்றிருவடிகளிலேகுனிந்தமாத்ரத்திலே துஷ்கர்மங்களடங்கலும் போனபடியை யநுஸந்தித்தால், புருஷார்த்தத்துக் கெல்லையானுளையன்றே பற்றவடுப்பது. உறுவதுபார்க்கில் ததீயரையன்றே பற்றவடுப்பது. (கொடுமாவினையேன்) ப்ரீதிதலைமண்டையிட்டுச் சொல்லுகிறார். பாட்டுக்கேட்பார், பாட்டுவருத்தினவாறே "பாவியேன்" என்னுமாபோலே. அன்றிக்கே, ப்ரதமாவதியிலே சரமாவதியைப் பற்றப்பெற்றிலேனென்கிறாராகவுமாம். (அவனடியாரடியேகூடுமிதுவல்லால்) தன்றிருவடிகளைப்பற்றினார்திறத்திலே யவன் மிக்கவ்யாமோஹத்தைப்பண்ணுவானானால், அவன் விரும்பினானையன்றே நமக்கும் விரும்பவடுப்பது. அவனுஜிதவ்யாமுக்தனானால் அவனுக்கு ப்ரியவிஷயத்தையன்றே பற்றவடுப்பது. அவதாரணத்தால்-அங்குசாம்யாபந்நராயிருக்கு மவரல்லர்; அவன்சேஷித்வத்தி லெல்லையிலே நிற்குமாபோலே, சேஷத்வத்திலெல்லையிலே நிற்கிறார். (அடியேகூடும்) அவர்களோடொப்பூணுண்ணவிருக்குமவரல்லர், அவர்கள் காலைப்பற்றுவராயிற்று. (விடுமாறென்பதென்) புறம்புண்டானவிஷயத்திலே விடுவது பற்றுவதானத்தை யிவ்விஷயத்திலும்செய்யவோ. (அந்தோ) நான்பற்றினபுருஷார்த்தத்துக்கு நாலுமூன்றுபடிகீழேநிற்கிற வைஶ்வர்ய மித்தோடொவ்வாதென்ன வேண்டுவதே! என்று - அந்தோவென்கிறார். (வியன்மூவுலகுபெறினும்) காடும்மலையுமான வம்சத்தைத்திருத்தி, அநுபவயோக்யமாம்படிபண்ணி, த்ரைலோக்யத்தையு மெனக்குக் கையடைப்பாக்கினாலும் - விடுமாறென்பதென்னந்தோ. ஐஶ்வர்யத்துக்கு லோகபரிக்ரஹமுண்டாகையிறே, அத்யந்தவிஸத்ருஶமாயிருக்கச்செய்தேயும், "இது நான்பற்றின பாகவத சேஷத்வத்தோடொவ்வாது" என்னவேண்டுகிறது ..........................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (நெடுமாலித்யாதி) "வியன்மூவுலகுபெறினும் - விடுமாறென்பதென்னந்தோ" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (நாட்டாரித்யாதி.)

அவன்பெருமைசொன்னதுக்குபாவம் (அவன்சேஷித்வத்திலித்யாதி) கணிசிக்கை - அநுசந்திக்கை. வ்யாமோஹத்தின்சரமாவதி (தன்னளவித்யாதி) இதுக்கு ப்ரமாணம் (அடியார்க்கித்யாதி) "கருத -" நினைக்க. அடிமைசெய்யக்கருதவென்னுதே, "செய்வேன்போல்" என்றதுக்குபாவம் (மித்ரபாவமேயித்யாதி) போட்கன்-பொய்யன். அதுதானும்-செய்கைதானும்.

தடுமாற்றற்ற - அப்ரதிஹதமான தடுமாற்றம்-ப்ரதிஹதி, * தீக்கதிகளுக்குத் தடுமாற்றமேதென்ன (ஒருசத்கர்மத்தையித்யாதி) அவித்யாதிகள்-அஜ்ஞாநாதிகள். ஆதிசப்தத்தாலே - கர்மவாஸநாருசி ப்ரக்ருதிசம்பந்தங்களைச்சொல்லுகிறது. தவிர்ந்தசதிர்-போனசாதுர்யம். வஞ்சித்தப்ரகாரந்தானேதென்ன (பகலெல்லாமித்யாதி) "தீக்கதிகள்முற்றும் - வஞ்சித்து - தவிர்ந்த" என்னுதல்; "வஞ்சித்து - கருத" என்னுதல். முற்றும் தவிரக்கூடுமோவென்ன (நான்போக்கியித்யாதி) சாதுர்யமேதென்ன (அவன்றிருவடிகளிலே யித்யாதி) பாபநிவர்த்தகனவனானால் அவனையாஸ்ரயிக்குமதன்றோ கர்த்தவ்யமென்ன (உறுவதித்யாதி) உறுவது-ஸ்வரூபஸ்த்திதி.

பாகவதசேஷத்வரஸத்தாலே யுகந்துபேசுமதொழிய, "பாவியேன்" என்கிறதென்னென்ன (ப்ரீதியித்யாதி) ப்ரீதிதலைமண்டையிட்டவிடத்தில் "பாவியேன்" என்னக்கடவதுண்டோவென்ன (பாட்டுக்கேட்பாரித்யாதி) வருத்தினால்-ஈடுபடுத்தினால். அர்த்தாந்தரம் (அன்றிக்கே ப்ரதமேத்யாதி) ப்ரதமாவதியிலே - * பொய்ந்நின்றஞானத்திலென்றபடி. சரமாவதி-பாகவதசேஷத்வம். விரோதிநிவர்த்தகனீஸ்வரனுயிருக்க, அவனைவிட்டு ததீயரைப்பற்றுகிறதென்னென்ன (தன்றிருவடிகளையித்யாதி) இது, "நெடுமால்" என்றதின் த்விதீயார்த்தத்தை விவக்ஷித்து. (உறுவதுபார்க்கில்) இத்யாதிவாக்யம், ப்ராதமிகார்த்தத்தைவிவக்ஷித்து. இதுக்குப்ரமாணமாக, "ஜஜஜ ஜஜஜஜஜ-ஜஜ ஜஜஜஜஜஜஜஜ। ஜஜஜஜஜஜஜஜஜஜ ஜநீயாவிஶேஷத:" (மமமத்பக்தபக்தேஷுப்ரீதிரப்யதிகாபவேத் । தஸ்மாந்மத்பக்தபக்தாஸ்சபூஜநீயாவிஶேஷத:) என்றதநுசந்தேயம். விவரணம் (அவனுறிதேத்யாதி) அவதாரணத்தாலேயென்றது - "அடியே" என்கிற வவதாரணத்தாலேயென்றபடி. அங்கு - பாகவதவிஷயத்திலே. சேஷத்வத்தினெல்லையிலேயென்றது- "நெடுமால்" என்றதின் முந்தினவர்த்தத்தைப்பற்ற. விவரணம் (அவர்களோடித்யாதி.)

"என்பதென்" என்கிறதுக்குபாவம் (புறம்புண்டானவித்யாதி) விடுமாறென்பதென் - விடும் ப்ரகாரம்சொல்ல ப்ரசங்கமென் என்றுசப்தார்த்தம். (புறம்புண்டான) இத்யாதி வாக்யத்துக்குபாவம் - ஒருபுருஷார்த்தத்தைப்பற்றுமவன், ததோதிகபுருஷார்த்தத்தைக்கண்டால் தாழ்ந்தத்தைவிட்டு அதிகத்தைப்பற்றுமிறே; இங்கு சரமாவதிபுருஷார்த்தமாகையாலே அதுபோகாதென்றபடி. மூன்றுபடியென்றது - பகவச்சேஷத்வம், ஆத்மப்ராப்தி, ஐஸ்வர்யமென்கிற பர்வங்களைப்பற்ற. நாலென்றது-ப்ரவேசத்திலே கண்டுகொள்வது. கையடைப்பு - கைவசமென்றபடி. நாலுமூன்றுபடி நிழேனின்றத்தை யெடுத்துக்கழிப்பானென்னென்ன (ஐஸ்வர்யத்துக்கித்யாதி) இதுக்கு "அந்தோ" என்றத்தோடேசேர்த்தி.

நெடுமாற்கென்றுதொடங்கி, தீக்கதிகள்-வஞ்சித்து-முற்றும் தவிர்ந்தவென்றுதொடங்கி; இதுவல்லால்-வியன்மூவுல்குபெறினும்-விடுமாறென்பதென் - பாகவதசேஷத்வத்தைவிடும் ப்ரகாரம்சொல்ல ப்ரசங்கமென். அந்தோ வித்யந்வய:......*

# இரண்டாம்பாட்டு.

வியன்மூவுலகுபெறினும்போய்த்தானேதானேயானாலும்
புயன்மேகம்போற்றிருமேனியம்மான்புனைபூங்கழலடிக்கீழ்ச்
சயமேயடிமைதலைநின்றார்திருத்தாள்வணங்கியிம்மையே
பயனேயின்பம்யான்பெற்றதுறுமோபாவியேனுக்கே.

## ஆறாயிரப்படி.

(வியன்மூவுலகு) சிறப்புடைய வைஶ்வர்யபுருஷார்த்தம் பெறினும், கேவலாத்மாநுபவம்பண்ணப்பெற்றாலும், வர்ஷுகவலாஹகம்போலேயிருக்கிற வடிவையுடைய சர்வேஶ்வரனுடைய நிரதிசயபோக்யமான திருவடிக்கீழே சயமேயடிமைதலைநின்றார் திருத்தாள்வணங்கி, இந்தலோகத்திலே நான்பெற்ற புருஷார்த்தரூப சுக்த்துக்கொக்குமோ; இவைசொல்லவேண்டிற்றென்னும் கேதத்தாலே பாவியேனென்கிறார்... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், வர்ஷுகவலாஹகம்போலே ஆஶ்ரிதவிஷயத்தி லுதாரஸ்வபாவமான வடிவையுடைய சர்வேஶ்வரன் திருவடிகளிலே யடிமைசெய்கிற பாகவதருக்கு, ஐஶ்வர்யத்தோடுகூடின வாத்மாநுபவமும் ஸத்ருஶமன்றென்கிறார்.

வியன்-பெரிய. மூவுலகு-த்ரைலோக்யைஶ்வர்யத்தை. பெறினும்-பெறிலும். போய் - இதில் சங்கமற்றுப்போய். சகலகர்மக்ஷயம்பிறந்து, தானே - தானேயாய். தானே - ஈஶ்வராநுபவத்தி லந்வயியாதபடி கேவலம்தானே. ஆனாலும்-அநுபாவ்யனானாலும். புயல் - வர்ஷோந்முகமான. மேகம்போல் - மேகம்போலே ஆஶ்ரிதோபகாரசீலமான. திருமேனி - திருமேனியையுடையனான. அம்மான் - சர்வேஶ்வரனுடைய. புனை - புனையப்பட்ட. பூ - பூவையும். கழல் - வீரக்கழலையுமுடைய. அடிக்கீழ் - திருவடிகளின்கீழே. சயமே - ஸ்வயம்ப்ரயோஜநமாயேயிருக்கிற. அடிமை - அடிமையின். தலை - மேலெல்லையிலே. நின்றார் - நின்றவர்களுடைய. திரு - விலக்ஷணமான. தாள் - திருவடிகளை. வணங்கி - சேஷத்வாநுரூபமாக ப்ரணாமம்பண்ணி. இம்மையே - இஹலோகத்திலே. பயனே-ப்ரயோஜநரூபமாகவே. யான் - நான். பெற்றது - பெற்றதான. இன்பம் - ஆநந்தத்துக்கு. பாவியேனுக்கு-புருஷார்த்தாந்தரங்களிலே, வாசிசொல்லவேண்டும்படி பாபத்தைப்பண்ணினவெனக்கு. உறுமோ - அந்தவைஶ்வர்ய கைவல்யங்க ளெனக்குச்சேருமோ.

அநுரூபமான ததீயசேஷத்வத்துக்கு, அநநுரூபங்கள் தகுதியன்றென்கை.*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

கீழ்ச்சொன்ன வைஶ்வர்யத்தோடே யாத்மாநுபவத்தைச்சேர்த்துத்தந்தாலும், பாகவதசேஷத்வமாகிற புருஷார்த்தத்தோ டொவ்வாதென்கிறார்.

(வியன்மூவுலகுபெறினும்) விஸ்மயநீயமான த்ரைலோக்யைஶ்வர்யத்தையு மெனக்கொருவனுக்கே யாக்கினாலும். (போய்த்தானேதானே

யானாலும்) சம்சாரபந்தமற்றுப்போய் கேவலாத்மாநுபவம்பண்ணப்பெற்றாலும். தானேதானேயென்கிற வீப்ஸையாலே - சம்சாரத்திலே புத்ர பௌத்ராதிகளும் தானுமாய் ஜீவிக்குமத்தையுந்தவிர்ந்து, பரமபதத்தே போய் “ ஹாவுஹாவுஹாவு ” ( அஹமந்நமஹமந்நமஹமந்நம் ) என்று களிக்குமத்தையும்விட்டு, கேவலம் தானேயாகை. (புயலித்யாதி) வர்ஷுக வலாஹகம்போலே யிருக்கிற திருமேனியைக்காட்டி சர்வலோகத்தையு மெழுதிக்கொண் டிருக்கிறவனுடைய, புனையப்பட்டபூவையும் வீரக்கழலையுமுடைய திருவடிகளின்கீழே விருபனானாலும் விடவொண்ணாத சம்பந்தத்தையுடையவனென்கை. (சயமேயடிமைதலைநின்றார்) ஸ்வயம்ப்ரயோஜநமாக வெல்லாவடிமைகளையும் செய்யுமவர்களென்னுதல், அவனுடைய சௌந்தர்யத்திலேதோற்று எல்லாவடிமைகளும் செய்யுமவர்களென்னுதல். ( சயம் ) ஸ்வயமென்னுதல், ஜயமென்னுதல். ( திருத்தாள்வணங்கி ) தேஹாதிரிக்தமாய் நித்யமான வர்த்மவஸ்துவை ப்ராபிக்குமதிலும், அவன்வடிவழகிலே தோற்றிருக்குமவர்கள் வடிவிலே கதேசமமையுமென்கிறார். ( இம்மையேபயனேயின்பம் ) சரீரத்தைவிட்டுப்போ யநுபவிக்கு மதன்றிக்கே, இஹலோகத்திலே ப்ரயோஜநரூபமான சுகமாயிற்று. யான்பெற்றது, ஒரு சாதநாநுஷ்ட்டாநம் பண்ணி “ கைபுகுரும் ” என்று நினைத்திருக்கையன்றிக்கே. ( உறுமோ ) இத்தோடொக்குமோ. ( பாவியேனுக்கே ) நிலைநின்றபுருஷார்த்தத்தி னெல்லைக்கு மபுருஷார்த்தத்துக்கும் வாசி சொல்லும்படியான பாபத்தைப்பண்ணினேன். பகவத்விஷயமல்லாமையாலே ஆத்மப்ராப்தியபுருஷார்த்தம் ; ஐஸ்வர்யம் போலே யஸ்த்திரமல்லாமையாலே நிலைநின்ற புருஷார்த்த மென்கை....*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (வியனித்யாதி) “வியன்மூவுலகு பெறினும் போய்த்தானேதானேயானாலும் - பயனேயின்பம் யான்பெற்றதுறுமோ” என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (கீழ்ச்சொன்னவித்யாதி.)

தானேதானேயானாலும் - தன்னைத்தானேயநுபவித்தாலும்.

புயல் - வர்ஷிக்கை. அர்த்தாந்தரம். (விருபனானாலு மித்யாதி) அர்த்தத்வயத்துக்கும் சப்தநிர்வாஹம் காட்டுகிறார் (ஸ்வயமென்னுதல் ஜயமென்னுதலென்று) “தலைநிற்கை-” ப்ரதாநராகை.

“ பயனேயின்பம் - ” பயனான வின்பமென்றபடி. “ இம்மையேபயனே ” என்றவதரித்ததுக்கு பாவம் ( சரீரத்தையித்யாதி. ) “ பெற்றது ” என்றதுக்குபாவம் ( ஒருசாதநேத்யாதி. ) ( நினைத்திருக்கையன்றிக்கே ) என்றதுக்கு, (யான்பெற்றது) என்ற கீழோடேயந்வயம். நிலைநின்ற புருஷார்த்தத்தி னெல்லையாவது - பகவச்சேஷத்வத்தி னெல்லையான பாகவதசேஷத்வம். நித்யமான புருஷார்த்தமாயிருக்கிற கைவல்யத்தை “ அபுருஷார்த்தம் ” என்பானென்னென்ன (பகவத்விஷய மித்யாதி வாக்யத்வயம்.)

வியன்மூவுலகுபெறினும்போய்த் தானே தானேயானாலும் - பாவியேனுக்கு - புயல்மேகமென்று தொடங்கி, இம்மையேபயனான - யான்பெற்றது - இன்பத்தோடு - உறுமோ விதயன்வயக. இன்பமுறுமோ - இன்பத்தோடொக்குமோவென்றபடி.*

# மூன்றாம்பாட்டு.

உறுமோபாவியேனுக்கிவ்வுலகமூன்றுமுடனிறையச்
சிறுமாமேனிநிமிர்த்தவெஞ்செந்தாமரைக்கட்டிருக்குறளன்
நறுமாவிரைநாண்மலரடிக்கீழ்ப்புகுதலன்றியவனடியார்
சிறுமாமனிசராயென்னையாண்டாரிங்கேதிரியவே.

## ஆறாயிரப்படி.

( உறுமோபாவியேனுக்கு ) வடிவு சிறுத்து மஹாமாஹாத்ம்யங்களை யுடையார் என்னையடிமைகொண்ட ஸ்ரீவைஷ்ணவர்க ளிங்கேதிரிய, அவர்களைத் தவிர்ந்து, இவ்வுலகமூன்று முடன் நிறையச் சிறுமாமேனி நிமிர்த்தருளின செந்தாமரைக் கண்களையுடையனான ஸ்ரீவாமநனுடைய நல்ல பரிமளத்தையுடைய நாட்பூப்போலேயிருக்கிற திருவடிக்கிழே புகுகையுறுமோ பாவியேனுக்கென்கிறார்......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அசேஷஜந சம்ஶ்லேஷ ஸ்வபாவனான வாமநன்றிருவடிகளைப் பெறுகையும், அவனடியாரான பாகவத ரிங்கே சந்நிஹிதராயிருக்கிற விதிலும் சீரிதல்லவென்கிறார்.

இ - தன் வாசியறியாத விந்த. உலகமூன்றும் - ஜகத்ரயமும். உடன்-ஏகோத்யோகத்திலே. நிறைய - நிறையும்படியாக. சிறு - சிறுங்கி யநுபவிக்கும்படி சிறியதாய். மா - தர்ஶநீயமான வைலக்ஷண்ய மாஹாத்ம்யத்தையுடைத்தான. மேனி- திருமேனியை. நிமிர்த்த - வளரும்படிபண்ணினவனாய். எம் - எனக்கு நிரதிசய போக்யமாய். செம் - சிவந்த. தாமரை - தாமரைபோலே யிருக்கிற. கண் - கண்ணையுடையனான. திருக்குறளன் - ஸ்ரீவாமநனுடைய. நறு - பரிமளத்தையுடைத்தாய். மா - ஶ்லாக்யமான. விரை - மதுவையுடைத்தான. நாண்மலர் - செவ்விப் பூப்போலேயிருக்கிற. அடிக்கீழ் - திருவடிகளின்கீழே யடிமைசெய்து. புகுதல்-ப்ராபிக்கையாவது. அவன் - அந்தவாமநனுக்கு. அடியார் - சேஷபூதராய். சிறு-மநுஷ்யஸஜாதீயதையாகிற சிறுமை தோற்றச்செய்தே. மாமனிசராய்-சூரிகளுக்கு மவ்வருகான ப்ரத்யாஸக்தியையுடைய மஹாபுருஷராய். அந்த நீர்மையாலும் மேன்மையாலும், என்னை - என்னை. ஆண்டார் - அடிமைகொண்டவர்கள். இங்கே - இந்தலோகத்திலே, திரிய - கண்காண வர்த்தியாநிற்க. அன்றி - அதன்றியே. பாவியேனுக்கு - ததீயசேஷத்வமாகிற சரமாவதிக்கும் தச்சேஷத்வமாகிற ப்ரதமாவதிக்கும் வாசி சொல்லவேண்டும்படியான பாபத்தையுடைய வெனக்கு. உறுமோ - சீரிதோ.

ததீயசேஷத்வபர்யந்தமான தச்சேஷத்வமொழிய, தச்சேஷத்வ மாத்ரம் சீரிதன்றென்று கருத்து...........................................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

ஐஶ்வர்யகைவல்யங்களில் விலக்ஷணமான பகவல்லாப முண்டானாலும், இங்கேயிருந்து ஸ்ரீவைஷ்ணவர்களுக் கடிமைசெய்கையோ டொவ்வாதென்கிறார். * உலகமளந்தபொன்னடிக்கு நல்ல ஸ்ரீவைஷ்ணவர்களிங்கேயிருந் தென்னையடிமைகொள்ளில், உலகமளந்தவன்றிருவடிகளிலடிமைதானுறாதென்கிறார்.

( உறுமோ பாவியேனுக்கு ) ஆத்மாநுபவத்தையு மைஶ்வர்யத்தையுங் குறித்துச் சொன்னவார்த்தையை, பகவத்விஷயத்திலும் சொல்லுகிறார். ( உறுமோபாவியேனுக்கு ) கீழ்ச்சொன்னவைபோலே கழிக்கவொண்ணாது, புருஷார்த்தத்தி னெல்லை யல்லாமையாலே கழிக்கவேணும். ( பாவியேன் ) ப்ரதமாவதிக்கும், சரமாவதிக்கும் வாசி சொல்லவேண்டும்படி பாபத்தைப்பண்ணினேன். உலகமூன்றுமுடன்நிறைய என்று தொடங்கி, நாண்மலரடிக்கீழ்ப் புகுதல் - உறுமோ. ( இவ்வுலகமூன்றுமுடனிறைய ) சிலவேரிகள்வற்றி, பாழாய்க்கிடக்க, நினைவின்றிக்கேவர்ஷியா, நிறைந்துநிற்குமாபோலே, தன்வாசியறியாத மூன்றுலோகங்களுமொருக்காலே நிறையும்படி.

( சிறுமாமேனிநிமிர்த்த ) கண்ணாலே முகந் தநுபவிக்கலாம்படி சிறுத்து, வைலக்ஷண்யத்துக் கெல்லையின்றிக்கே யிருக்கிற திருமேனியை நிமிர்த்த. ( எம் ) "உன்னைப்பிரமாணித்தார் பெற்றபேறு" என்கிறபடியே, ஆஶ்ரிதர்க்காகச்செய்த செயலிறே. ( செந்தாமரை யித்யாதி ) விகாசம், செவ்வி, குளிர்த்திகளுக்குத் தாமரையை யொப்பாகச் சொல்லலாம்படி யிருக்கிற கண்ணழகையுடைய ஸ்ரீவாமநனுடைய, அழகிய மிக்க பரிமளத்தையுடைத்தான நாட்பூப்போலேயிருக்கிற திருவடிகளின் கீழே.

( நறுமாவிரை ) நன்றாய் மிக்க பரிமளம்; இதுகாணு மிவர்க்கு வேப்பங்குடிநீராய், "உறுமோ" என்றுகழிக்கிறது. பகவத்விஷயத்தில் வெளிறுகழிந்த வம்சமானது வாய்த்து, இவர்க்கு பாகவதபுருஷார்த்தத்தைப்பற்றக் கழிப்பனாகிறது. ( அன்றி ) அத்தைத் தவிர்ந்து. (அவனடியார்) ஸ்ரீவாமநனுடைய வழகிலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள். அவர்களாகிறார் – "முன்னம்குறளுருவாய்மூவடிமண்கொண்டளந்த - மன்னன்சரிதைக்கேமாலாகிப்பொன்பயந்தேன்" என்றிருக்குமவர்கள். (சிறுமாமனிசராய்) வடிவுசிறுத்து ப்ரபாவம் கனத்திருக்குமவர்கள். "சிறுமைபெருமையாகிற விருத்த தர்மத்வயத்துக்கு ஏகதர்மியில் சமாவேசம் கூடினபடி யெங்ஙனே" என்று பட்டர் பால்யத்திலே ஆழ்வானைக் கேட்க, "நம்மோடொக்க 'அந்நபாநாதிகள் தாரகம்' என்னலாய், பகவத்விஷயத்தி லவகாஹநம்பார்த்தால் 'நித்யஸூரிகளோடொப்பர்கள்' என்னலாயிருக்கிற ஆண்டான், அருளாளப்பெருமாள், ஸ்ரீகோவிந்தப்பெரு

மாள், இவர்கள்காண் சிறுமாமனிசராகிறுர்கள்" என்று பணித்தான். (என்னையாண்டார்) என்னையடிமைகொண்டவர்கள். (இங்கே திரிய) என்கண்வட்டத்திலே சஞ்சரியாநிற்க. (அன்றி - அவர்களைத் தவிர்ந்து, நறுமாவிரைநாண்மலரடிக்கீழ்ப்புகுதல் - உறுமோபாவியேனுக்கு) இவருடைய கண்ணிநுண்சிறுத்தாம்பிருக்கிறபடி. ஸ்ரீமதுரகவிகளுக்குமடியிறே. * பொய்ந்நின்றஞானந்தொடங்கி * முனியேநான்முகனளவு மிவையநுவர்த்தித்தவிடத்து, ஆழ்வார், தமக்கு ப்ரயோஜநரூபமாகச் சொன்ன * பயிலுஞ்சுடரொளி, * நெடுமாற்கடிமையே தமக்குத்தஞ்சமாகப் பற்றினர். "யாந்யஸ்மாகம்ஸுசரிதாநி" (யாங்யஸ்மாகம்ஸுசரிதாநி) என்னக்கடவதிறே.............................................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்ரும்பாட்டு. (உறுமோவித்யாதி.) "அவனடியார்சிறுமாமனிசராயென்னையாண்டா ரிங்கேதிரிய - அன்றி - நறுமாவிரை நாண்மலரடிக்கீழ்ப்புகுதல் - உறுமோ" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (ஐஶ்வர்யேத்யாதி.) ஆனல் பகவத்விஷயத்தை விட்டாராயிருக்கிறதோவென்ன (உலகமளந்தவித்யாதி.) பகவத்ஸம்பந்தத்தையிட்டு அவர்களை விரும்புகையாலே அவனையும் விடவில்லையென்று கருத்து.

பாவமேதென்ன (கீழ்ச்சொன்ன வித்யாதி வாக்யத்வயம்.) அதாவது-தள்ளவும் கொள்ளவு மொண்ணுதபடியான பாபத்தைப் பண்ணினேனென்றபடி. "உறுமோ" என்றதுக் கர்வயங் காட்டுகிறுர் (உலகமித்யாதி.)

உடன் - ஒருக்காலே. "உடன் நிறைய" என்றதுக்குபாவம் (சிலவேரிகளித்யாதி.) வர்ஷியா - வர்ஷித்து. சிறுமைக்கும் மஹத்தைக்கும் அவிரோதேந வர்த்தம் (கண்ணுலேயித்யாதி.) இந்த்ரனுக்காகச்செய்த செயலை "எம்" என்கிற தென்னென்ன (உன்னையித்யாதி) இரண்டாந் திருவந்தாதி அறுபத்தோராம்பாட்டு, "நின்றதோர்பாதம்" இத்யாதி. பிரமாணித்தார் - விஸ்வசித்தாரொன்றபடி. நறு - நன்ருய். அழகிதாயென்றபடி. நாட்பூ - செவ்விப்பூ. "நறு" என்ருல் - அழகைக் காட்டுமோவென்ன (நன்ருயித்யாதி.) வ்யாக்யாதாவினீடுபாடு (இதுகாணுமித்யாதி.) விவரணம் (பகவத்விஷயத்திலித்யாதி.) வெளிறுகழிந்தவம்சமானதென்றது - பரத்வாதிகளைப்பற்ற. அதி சுலபமானதென்றபடி. வெளிறு - அசாராம்ஶம். அதாவது - தௌர்லப்யம். இதுவென்றது - "உலகமூன்றும்" இத்யாதியாலேசொன்ன நீர்மை. குறைவற்ற விஷயமென்றபடி.

"அன்றி -" தவிர்ந்து - விட்டு. அத்தைத் தவிர்ந்து - பாகவதர்களோடேகூடியிருக்குமிருப்பைத் தவிர்ந்தென்றபடி. உக்தார்த்தத்துக் காப்தசம்வாதம் (சிறுமைபெருமையித்யாதி.) சமாவேசம் - சஹாவஸ்த்தாநம்.

இப்பாட்டு ஆழ்வாருடைய கண்ணிநுண்சிறுத்தாம்பென்கிறுர் (இவருடையவித்யாதி.) மதுரகவிகளுக்கன்ருே கண்ணிநுண்சிறுத்தாம்புள்ளதென்ன (ஸ்ரீமதுரகவிகளுக்குமித்யாதி.) இத்தை யடியாகப் பற்றினரோ வென்ன; உபபாதநம் (பொய்ந்நின்றஞானமித்யாதி) ஆழ்வார் ஸ்வாநுசந்தாநமாக வருளிச்செய்த தொழிய, இவரை யநுஷ்டிக்கச்சொல்லி யுபதேசித்தாரோவென்ன (யாங்யஸ்மாகமி

த்யாதி.) அதாவது - பூர்வர்களுடைய வநுஷ்ட்டாநமே யிவனுக்கநுஷ்ட்டேய மென்றபடி.

அவனடியாரென்றுதொடங்கி, திரிய - அன்றி - உலகமூன்றுமுடன் என்று தொடங்கி, அடிக்கீழ்ப்புகுதல் - பாவியேனுக்கு - உறுமோவித்யந்வயஃ. உறுமோ-சேருமோவென்றபடி. சீரியதோவென்றுமாம். ...............................*

# நான்காம்பாட்டு.

இங்கேதிரிந்தேற்கிழுக்குற்றென்னிருமாநிலமுன்னுண்டுமிழ்ந்த
செங்கோலத்தபவளவாய்ச்செந்தாமரைக்கணென்னம்மான்
பொங்கேழ்புகழ்கள்வாயவாய்ப்புலன்கொள்வடிவென்மனத்ததா
யங்கேமலர்கள்கையவாய்வழிபட்டோடவருளிலே.

## ஆறாயிரப்படி.

(இங்கே) பாகவதகைங்கர்யரூபபுருஷார்த்தத்துக்கு வர்த்தகமான பகவதநுபவம் சம்பூர்ணமாகக்கிடைக்கைக்கு ஸ்ரீவைகுண்டத்தேறப் போகவேண்டாவோவென்னில்; அவ்வநுபவ மிங்கேகிடைக்குமாகில் இங்கேவர்த்தித்தால் சேதமென்னென்கிறார் ............... ................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ததீயர் நடையாடுகிற விந்தவிபூதியிலே, அவர்களுக்குகப்பாம்படி ஆபத்ஸகனான வவனுடைய கைங்கர்யமும் சித்தித்தால் குறையில்லையென்கிறார்.

இரு-விஸ்தீர்ணமாய். மா-ஶ்லாக்யமான. நிலம்-ஜகத்தை. முன்-ப்ரளயாபத்தவந்தவளவிலே. உண்டு - அமுதுசெய்து. உமிழ்ந்த - அநந்தரத்திலே யுமிழுகிற போதை. செ-சிவந்த. கோலத்த-அழகையுடைத்தான. பவளம் - பவளம்போலேயிருக்கிற. வாய்-திருவதரத்தையும். செ-சிவந்த. தாமரை - தாமரைபோலேயிருக்கிற. கண்-கண்ணையுமுடையனான. என்-என். அம்மான்-ஸ்வாமியானவன். பொங்கு-வர்த்தித்து. எழ்-கிளம்புகிற. புகழ்கள்-தன்குணங்களானவை. வாயவாய்-வாக்விஷயமாகவும். புலன்கொள்-சர்வேந்த்ரியாபஹாரியான. வடிவு-வடிவு. என், மனத்ததாய்-நெஞ்சிலேயாகவும். அங்கு-அங்குத்தைக்கு. ஏய்-அநுரூபமான. மலர்கள்-புஷ்பங்கள். கையவாய் - கையிலேயாகவும். வழி-பாகவதர், முன்பு கரணத்ரயத்தாலும் பண்ணிப்போந்த கைங்கர்யமார்க்கத்திலே. பட்டு-நானுமுடன்பட்டு. ஓட்-நடக்கும்படியாக. அருளில் - அருளுமாகில். ஒருதேசவிசேஷாபேக்ஷையுண்டோ, இங்கே-இந்தவிபூதிதன்னிலே. திரிந்தேற்கு - இப்படிதிரிவேனானவெனக்கு. என்-ஏது. இழுக்குற்று-தாழ்வாயிற்று.....................................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

ஸ்ரீவைஷ்ணவர்களுக்குகப்பான பகவத்கைங்கர்யம் சித்திக்குமாகில், அவர்கள் சஞ்சாரத்தாலே ஶ்லாக்யமான விஜ்ஜகத்திலிருப்பே புரு

ஷார்த்தமென்கிருர். ( இங்கேதிரிந்தேற்கு ) " சிறுமாமனிசர் " என்றீர், "இங்கே" என்றீர், இது * இருள்தருமாஞாலமன்ருே, பாகவதகைங்கர்யத்துக்கு வர்த்தகமான பகவதநுபவம் பூர்ணமாகக்கிடைப்பது பரமபதத்திலேயன்ருேவென்னில்; அவ்வநுபவ மவன்ப்ரசாதத்தாலே யிங்கேகிடைக்குமாகில் இங்கேவர்த்தித்தால் சேதமென்னென்கிருரொன்றுமாம். அங்குத்தை யநுபவத்துக்கு மவன்ப்ரசாதமேயிறே ஹேது; அதிங்கே கிட்டுமாகில் சேதமென்னென்கை.

(இழுக்குற்றென்) தண்மையென். (இருமாநிலமுன்னுண்டுமிழ்ந்த) மிக்கபரப்பையுடைத்தான பூமியை ப்ரளயகாலத்திலே வயிற்றிலே வைத்துநோக்கி, ஸ்ருஷ்டிகாலம் வந்தவாறேயுமிழ்ந்த. (செங்கோலத்தபவளவாய்) ப்ரளயத்திலேதள்ளினுலும் விடவொண்ணுத திருவதரத்தையுடையவன். சிவந்தழகிதான பவளம்போலேயிருந்துள்ள திருவதரம். (செந்தாமரைக்கணென்னம்மான்) என்னை, நோக்காலே "ஜிதம்" என்னப்பண்ணினவன். உத்தமானகுணத்தாலு மழகாலு மென்னையெழுதிக்கொண்டவன். (பொங்கித்யாதி) பொங்கி - பரந்து; சேழ் - அழகு. பொங்கியெழாநின்றுள்ள கல்யாணகுணங்கள் வாயிலேயுளவாய். ஆற்றுப்பெருக்குப்போலே கிளர்த்தியையுடைத்தாய், புக்காரைக்கொண்டு கிளரவற்றுனகுணங்கள். ( புலன்கொள்வடிவென்மனத்ததாய் ) சர்வேந்த்ரியாபஹாரக்ஷமமானவடிவு என்மநஸ்ஸிலே சந்நிஹிதமாய். (அங்கேமலர்கள் கையவாய்) அவ்வடிவுக்கநுரூபமான மலர்கள் கையிலேயுளவாய். (வழிபட்டோடவருளில்) நெறிபட்டுச்செல்லும்படியருளப்பெறில். மநோவாக்காயங்க ளவன்றிருவடிகளிலே நிரந்தரமாக வடிமைசெய்யும்படி யவன் ப்ரசாதத்தைப்பெறில் - இங்கேதிரிந்தேற்கிழுக்குற்றென். பாகவதப்ரீதிரூபமான பகவத்கைங்கர்யத்தை யவன்ப்ரசாதத்தாலே யிங்கேபெறிலெனக்கதுவே புருஷார்த்தமென்கிருர்.................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (இங்கேயித்யாதி) இப்பாட்டில் பகவத்கைங்கர்யம் சொல்லிற்றேயாகிலும் ப்ரகரணவசாத் பாகவதகைங்கர்யபரமாகயோஜிக்கிருர் (ஸ்ரீவைஷ்ணவர்களுக்கித்யாதி) கீழிற்பாட்டோடே சங்கதியாக யோஜநாந்தரம் (சிறுமாமனிசரித்யாதி) விவரணம் (அங்குத்தையித்யாதி.)

இழுக்குற்றென் - இழுக்கென்னென்றபடி. "உற்று" என்றது-அவ்யயம்.

"கோலத்த-" கோலத்தையுடைய. திருப்பவளத்தில் சௌந்தர்யத்தி னுகர்ஷகத்வத்தினுறைப்பை யருளிச்செய்கிருர் (ப்ரளயத்திலேயித்யாதி) சப்தார்த்தம் (சிவந்தவித்யாதி) "என்னம்மான்" என்றத்தை "செந்தாமரைக்கண்" என்றத்தோடேகூட்டிபாவம் (என்னையித்யாதி) "இருமாநிலம்" இத்யாதியோடேகூட்டி "என்னம்மான்" என்றதுக்குபாவாந்தரம் (உத்தமானவித்யாதி) குணத்தாலுமழகாலுமென்றது - "இருமாநிலம்" என்றுதொடங்கி "பவளவாய்" என்றத்தைப்பற்ற.

"பொங்கேழ்புகழ்" என்றதுக்கர்த்தாந்தரம் (பொங்கியெழாநின்றுள்ளவித்யாதி) முந்தினவர்த்தம், பரந்தழகியபுகழென்றபடி. இரண்டாவது, பொங்கியெழாநின்றுள்ளபுகழென்றபடி. குணங்களெழுகையாவதேதென்ன (ஆற்றுப்பெருக்கித்யாதி) கொண்டுகிளரவற்றானவென்றது - ஸ்தோத்ரோத்யுக்தமாக்கவல்லவென்றபடி.

இன்னாருடைய புலன்கொளொன்னுமையாலே (சர்வேந்த்ரியாபஹார க்ஷமமென்றது.)

எய்கை - சத்ருஸமாகை.

விவரணம் (மநோவாக்காயங்களித்யாதி) "பொங்கேழ்" இத்யாதியைப்பற்ற (மநோவாக்காயங்களென்றது) பாகவதகைங்கர்யம் புருஷார்த்தமென்கிறவர், பகவத்கைங்கர்யம் புருஷார்த்தமென்கிற தென்னென்ன (பாகவதப்ரீதியித்யாதி.)

இருமாநிலமென்றுதொடங்கி, வழிபட்டோடவருளில்-இங்கேதிரிந்தேற்கிழுக்குற்றென் இத்யந்வயః. வழிபட்டோட - கைங்கர்யமார்க்கத்திலே நடக்கும்படியாக. அங்கேய் - அங்குத்தைக்குத்தகுதியான. "பொங்கேழ்" என்றவிதுக்குமுந்தினவர்த்தத்திலே, ககரம்குறைந்துகிடக்கிறதாய், பொங்குகேழ் என்று பதச்சேதமாய், பரந்தழகிய புகழென்றபடி. கேழ்-அழகு..........................................*



# ஐந்தாம்பாட்டு.

வழிபட்டோடவருள்பெற்றுமாயன்கோலமலரடிக்கீழ்ச்
சுழிபட்டோடுஞ்சுடர்ச்சோதிவெள்ளத்தின்புற்றிருந்தாலு
மிழிபட்டோடுமுடலினிற்பிறந்துதன்சீரியான்கற்று
மொழிபட்டோடுங்கவியமுதநுகர்ச்சியுறுமோமுழுதுமே.

## ஆறாயிரப்படி.

(வழிபட்டோட) விரோதிரூப சம்சாரமார்க்க பரிவர்த்திகளானவாத்மாக்களுக்கு, பாகவதசேஷத்வவர்த்தக பகவதநுபவப்ரீதி சித்திக்குமோவென்னில்;

அந்தசம்சாரநிவ்ருத்திபூர்வக பகவதநுபவப்ரீதிதான், இங்கேதிருவாய்மொழியைக்கொண் டெம்பெருமானை யநுபவித்தால்வரும் ப்ரீதிக்குப்போருமோவென்கிறார்.......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்சர்யஸ்வபாவனை சர்வேஶ்வரனுடைய பரமபதத்திலே நிரதிசயாநந்தியாயிருந்தாலும், அத்தோடே ஐஶ்வர்யாதிகளெல்லாம் கூடினாலும், இங்கே ஹேயசரீரபரிக்ரஹம்பண்ணியிருந்து பாகவதருக்குகப்பாகத் திருவாய்மொழிபாடி ரஸிக்குமதுக்கு சத்ருஸமோவென்கிறார்.

நித்யகைங்கர்யத்திலே, வழிபட்டு-நெறிபட்டு. ஓட-செல்லும்படி. அருள்-அவன்ப்ரசாதத்தை. பெற்று-லபித்து. மாயன் - ஆஶ்சர்யஸ்வரூபரூபகுண விபூதிகனான சர்வேஶ்வரனுடைய. கோலமலர் - நிரதிசயபோக்யமான. அடிக்கீழ்-திருவடிக

ளின்கீழே. சுழிபட்டு-சுழித்து. ஓடும்-ஓடுகிற. சுடர்-ப்ரபையையுடைத்தான. சோதி வெள்ளத்து-தேஜோராசிரூபமானபரமபதத்திலே. இன்புற்று - நிரதிசயாநந்தியாய். இருந்தாலும்-இருந்தாலும். முழுதும் - கீழ்ச்சொன்ன வைஸ்வர்யகைவல்யாதிகள் சமஸ்தமும் கூடினாலும். இழிபட்டு-தாழ்ச்சியிலே. ஓடும்-மிகவும் கைகழியப்போவ தான. உடலினில் - சரீரத்திலே. பிறந்து-பிறந்து. தன் - நிரதிசயபோக்யபூதனான தன்னுடைய. சீர் - குணங்களை. யான் - அதுக்கத்யந்ததூரஸ்த்தனானநான். கற்று- அப்யஸித்து. மொழிப்பட்டு - அந்தவநுபவஜநிதப்ரீதிசொல்லாய். ஓடும் - ப்ரவஹிக் கிற. கவி - கவியாகிற. அமுதம்-அம்ருதத்தை. "தொண்டர்க்கமுதுண்ண," "அடியா ர்க்கின்பமாரி," "கேட்டாரார்வானவர்கள்" என்கிறபடியே, நுகர்ச்சி-ததீயரோடே கூட வநுபவித்து ரஸிக்கையை. உறுமோ-சேரவற்றோ ..............................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

இப்படிப்பட்ட பகவத்ப்ராப்தியும், கீழ்ச்சொன்னபுருஷார்த்தங் களு மெல்லாங்கூடினாலும், "தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்கிறபடியே, பாகவதர்களுக்கு ப்ரியமாகத் திருவாய் மொழிபாடி யடிமைசெய்யு மித்தோடொக்குமோவென்கிறார்.

(வழிபட்டோடவருள்பெற்று) கைங்கர்யத்திலே நெறிபட்டுச்செ ல்லும்படி யவன் ப்ரசாதத்தைப்பெற்று. நித்யகைங்கர்யம்பண்ணும்படி யாக. (மாயன்) சௌந்தர்யசீலாதிகளா லாஸ்சர்யபூதனானவன். (கோல மலரடிக்கீழ்) தர்ஸநீயமான புஷ்பம்போலேயிருந்துள்ள திருவடிகளின் கீழே. (சுழிபட்டோடும் சுடர்ச்சோதிவெள்ளத்து) ஆற்றுப்பெருக்குப் போலே சுழித்துச்செல்லுகிற தேஜஸ்தரங்கங்களையுடைத்தான பரமபத த்திலே. " அத்யர்க்காநலதீப்தம் தத்ஸ்தானம் " (அத்யர்க்காநலதீப்தம்தத்ஸ்த் தாநம்) என்னக்கடவதிறே. (இன்புற்றிருந்தாலும்) "ஏஷஹ்யேவாநந் தயாதி" (ஏஷஹ்யேவாநந்தயாதி) என்று அவனாநந்திப்பிக்க, ஆநந்த நிர்ப்பரனாயிருந்தாலும். (முழுதும்) கீழ்ச்சொன்ன வைஸ்வர்யாதிகளுமி த்தோடே கூடப்பெற்றாலும். (இழிபட்டோடுமுடலினிற்பிறந்து) தாழ் வுக்கெல்லையாம்படி கைகழியப்போன சரீரத்தோடே பிறந்து. (தன்சீர்) நித்யசூரிகளும் குமிழிநீருண்ணும் கல்யாணகுணங்களை. (யான்கற்று) நி த்யசம்சாரியாய், அந்தக்குணங்களுக்கடைவில்லாத நானறிந்து. (மொழி பட்டோடும்) அவையுள்ளடங்காமையாலே சொல்லாய் ப்ரவஹியாநின் றுள்ள. (கவியமுதநுகர்ச்சியுறுமோ) திருவாய்மொழியாகிற வம்ருதத் தை யநுபவிக்கையோடொக்குமோ - சுடர்ச்சோதிவெள்ளத்தின்புற்றிரு ந்தாலும் - முழுதும். "அவனடியார் சிறுமாமனிசராயென்னை யாண்டா ரிங்கேதிரிய - நறுமாவிரைநாண்மலரடிக்கீழ்ப்புகுதல் - உறுமோ" என் றாரேகீழே; அத்தைவிட்டு (கவியமுதம்நுகர்ச்சியுறுமோமுழுதும்) என் கிறார். அத்தைவிட்டாராயிருக்கிறதோவென்னில்; விட்டிலர். "தொண் டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள்" என்கையாலே, அவர்களுக்கடிமை செய்கிறபடி ................................................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (வழிபட்டித்யாதி) "வெள்ளத்தின்புற்றிருந்தாலும்" என்றுதொடங்கி, " நுகர்ச்சியுறுமோமுழுதும் " என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (இப்படிப்பட்டவித்யாதி) " முழுதும் " என்றத்தைப்பற்ற (கீழ்ச்சொன்னபுருஷார்த்தங்களுமென்றது.)

நெறிபட்டு - ப்ரஹதமாய். விவரணம் (நித்யகைங்கர்யமித்யாதி.)

சுழியையுடைத்தாய்க்கொண்டு நடக்கிற நிரவதிகதேஜஸ்ஸமுத்ரமான பரமபதத்திலேயென்று சப்தார்த்தம். " சுழிபட்டோடும் " என்கையாலும், " வெள்ளம் " என்கையாலும் (தேஜஸ்தரங்கங்களையுடைத்தான) என்கிறார். நிரவதிகதேஜஸ்ஸையுடைத்தாயிருக்குமென்னு மதுக்குப்ரமாணம் (அத்யர்க்கேத்யாதி) " அத்யர்க்காநலதீப்தம் தத்ஸ்தாநம் விஷ்ணோர்மஹாத்மந: " (அத்யர்க்காநலதீப்தம் தத்ஸ்த்தாநம் விஷ்ணோர்மஹாத்மந: ) இத்யாரண்யபர்வணி.

இழிபட்டோடும் - தாழ்ச்சியிலேசெல்லுகிறவென்று சப்தார்த்தம். அஹங்காரயுக்தமாகையாலே (தாழ்வுக்கெல்லையாம்படி) என்றபடி. அடைவில்லாத-ப்ராப்தியில்லாத. அப்யஸிக்கைக்கு யோக்யதையில்லாதவென்றபடி. நுகர்ச்சி-அநுபவம். அத்தைவிட்டு - " சிறுமாமனிசராயென்னையாண்டாரிங்கேதிரிய " என்றத்தைவிட்டென்றபடி.

இழிபட்டோடுமென்றுதொடங்கி, கவியமுதநுகர்ச்சிக்கு - வழிபட்டோடவென்றுதொடங்கி, வெள்ளத்தின்புற்றிருந்தாலும்-முழுதும்- உறுமோவித்யந்வய:. உறுமோ-சத்ருசமாமோவென்றபடி. "தன்சீரியான்கற்று" என்கிறவிடத்தில், ரகரத்தின்மேலிகரம் குற்றியலிகரமாய், தன்சீர் யான் என்றாய், "சீர்" என்றது-சீரையென்றபடி. "சீர்" என்றவேகவசநம் ஜாத்யபிப்ராயமாய், குணங்களையென்றபடி.

---

# ஆறாம்பாட்டு.

நுகர்ச்சியுறுமோமூவுலகின்வீடுபேறுதன்கேழிற்
புகர்ச்செம்முகத்தகளிறட்டபொன்னாழிக்கையென்னம்மா
னிகர்ச்செம்பங்கியெரிவிழிகணீண்டவசுரருயிரெல்லாந்
தகர்த்துண்டுழலும்புட்பாகன்பெரியதனிமாப்புகழே.

## ஆறாயிரப்படி.

(நுகர்ச்சி) சம்சாரநிவ்ருத்தி பூர்வக பகவதநுபவப்ரீதியும் ஸ்வாதீநாகிலலோக பகவதாநந்தமும் கூடினால்தான், திருவாய்மொழியாலே யெம்பெருமானை யநுபவித்தா லுள்ளப்ரீதிக்குப் போருமோவென்கிறார்.*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், விரோதிநிரசநசீலனான சர்வேஸ்வரனுடைய குணகணங்களை பாகவதப்ரீணநமான திருவாய்மொழிமுகத்தாலே யநுபவிக்குமத்தை, ஜகத்காரணபூதனான வீஸ்வரனுயிருக்கு மிருப்புத்தானொக்கவற்றோவென்கிறார்.

தன் - தனக்கு. கேழ் - ஒப்பு. இல்-இன்றியேயிருப்பதாய். புகர்-புகரையுடைத்தாய். செ - சீற்றத்தாலேசிவந்த. முகத்த-முகத்தையுடைத்தான. களிறு - ஆனையை. அட்ட-அடர்த்தடித்த. பொன்-ஸ்ப்ருஹணியமான. ஆழி - திருவாழிமோதிரத்தையுடைய. கை - திருக்கையையுடையனுன. என் - என். அம்மான்—ஸ்வாமியாய். நிகர் - ஜாதிக்குஸத்ருஸமாய். செ-சிவந்த. பங்கி-நாலுகிறமயிர்களையும். எரி - அக்நிசக்ரம்போலேயிருக்கிற. விழிகள்-விழிகளையுமுடைத்தாய். நீண்ட - உத்துங்கசரீரரான. அசுரர் - அசுரர்களுடைய. உயிரெல்லாம் - ப்ராணன்களையெல்லாம். தகர்த்து-பிடித்து. உண்டு - க்ரஸித்து. உழலும் - சஞ்சரிக்கிற. புள்-பெரியதிருவடிக்கு. பாகன்-நியந்தாவானவனுடைய. பெரிய-அபரிச்சிந்நமாய். தனி - அத்விதீயமாய். மா-அதிசயிதபோக்யமான. புகழ்-குணகணங்களை. நுகர்ச்சி - பாகவதப்ரீணநமான திருவாய்மொழிமுகத்தாலே யநுபவித்துரஸிக்கையை. மூவுலகின்-ஜகத்த்ரயவிஷயமான. வீடு-ஸ்ரஷ்ட்ருத்வத்தை. பேறு - பெற்றிருக்கு மீஸ்வரத்வமானது. உறுமோ-கிட்டவற்றே.

உலகின்வீடு - லோகத்தைஸ்ருஷ்டிக்கை. பங்கி-நான்றகுழல். நிகர்ச்செம்பங்கியெரிவிழியென்று - கண்ணுக்குவிசேஷணமாய், ஒப்பமிட்ட வொளியையுடைய செம்புகாய்ந்தநெருப்புப்போலே யனலுமிழ்கிற விழியென்றுமாம்.................*

## ஈடு - ஆறும்பாட்டு.

உத்தமான வைபீவர்யாதிகளும், சேஷியாய் ஜகஜ்ஜந்மாதிகாரணமான சர்வேஸ்வரனுய் நிரதிசயாநந்தியாயிருக்கு மிருப்பும், பாகவத ப்ரீதிரூபமாகத் திருவாய்மொழிபாடி யநுபவிக்கும் ரஸத்தோடொவ்வாதென்கிறுர். புட்பாகனுடைய பெரியவொப்பில்லாத விலக்ஷணமானபுகழைத் திருவாய்மொழியாலே நுகருமதுக்கு, விபுவான வவனுடைய வாநந்தமும் போராதென்கிறுர்.

(நுகர்ச்சியுறுமோ) திருவாய்மொழிமுகத்தாலே பகவத்குணங்களை யநுபவிக்குமத்தோடொக்குமோ. (மூவுலகின்வீடுபேறு) தன்சங்கல்பைகதேசத்தாலே ஜகத்ஸ்ருஷ்டி சம்ஹாரங்களாம்படியிருக்கிற வைஸ்வர்யந்தானத்தோடொக்குமோ. அவனுக்கிறே யிதைப்ஸவர்யமாய்த்தோற்றுவது; இவர்க்கிதபுருஷார்த்தமே; " ஜமஆ)ாவாஈவஜ-ஆழ " (ஜகத்வ்யாபாரவர்ஜம்) என்கிறபடியே. ஸ்வரூபாநுரூபமானவையிறே புருஷார்த்தமாவது. (தன்கேழிலித்யாதி) மிடுக்குக்குத்தனக்கொப்பின்றிக்கேயிருப்பதாய். புகரையும், சீற்றத்தாலே சிவந்தமுகத்தையுமுடைத்தான களிறுண்டு - குவலயாபீடம், அத்தைமுடித்து. (பொன்னுழிக்கை) அழகியதிருவாழிமோதிரத்தாலே யலங்க்ருதமான திருக்கையையுடையவன். குவலயாபீடத்தின் கதுப்பிலே யடித்தபோது, கையுந்திருவாழிமோதிரமுமிருந்தபடி. (என்னம்மான்) கையுமறுகாழியுமானவடிவைக்காட்டி யென்னையெழுதிக்கொண்டவன். உகவாதாரை மிடுக்காலேயழித்தான், உகந்தாரை யழகாலேயழித்தான். (நிகரித்யாதி) ஜாதிப்ரயுக்தமான சிவந்தமயிரையுடையராய், எரிபோலே விழியாநின்றுள்ள கண்களையுடையராய், பெரியவடிவையுடையரான வசுரர்களுடைய வுயிரையெல்லாம் தகர்த்துபுஜித்

று, இதுதானே யாத்ரையாயிருக்கிற பெரியதிருவடியைக் கருத்தறிந்து நடத்துகிறவனுடைய, அபரிச்சிந்நமாய் உபமாநரஹிதமாயிருந்துள்ள கல்யாணகுணங்களை - திருவாய்மொழிமுகத்தாலே யநுபவிக்கு மநுபவத்தோடொக்குமோ. (மூவுலகின் வீடுபேறு) திருவாய்மொழிநுகரு மாநந்தத்துக்கு, * ஏழுலகுந்தனிக்கோல்செல்ல வீற்றிருக்குமாநந்தமும்போராதென்கிறார்..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (நுகர்ச்சியித்யாதி) "புட்பாகன் பெரியதனிமாப்புகழ் - நுகர்ச்சி - மூவுலகின்வீடுபேறு - உறுமோ" என்கிறவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (உக்தமானவித்யாதி) ஒருபாட்டுக்கொருபாட்டு அதிசயம் சொல்லவேண்டுகையாலே, கீழ்ப்பாட்டில் "முழுதும்" என்றத்தைக்கடாக்ஷித்து (உக்தமான வைஶ்வர்யாதிகளுமென்றது) "மூவுலகின்வீடுபேறு" என்றத்தைப்பற்ற (சேஷியாயித்யாதி) அந்வயமுகேநோக்த விவரணம் (புட்பாகனுடையவித்யாதி) இப்பாட்டிலும், கவியமுத நுகர்ச்சி தன்னையேசொல்லுகிறது. விபுவென்றது-காரணத்வஸித்தம்.

வீடு - விடுகை. சம்ஹாரமென்றபடி. பேறு - பெறுகை. ஸ்ருஷ்டியென்றபடி. மஹதைஶ்வர்யமான ஜகத்ஸ்ருஷ்ட்யாதி கர்த்ருத்வத்தை "அத்தோடொக்குமோ" என்னலாமோவென்ன (அவனுக்கிறேயித்யாதி) இவர்க்கிதபுருஷார்த்தமோவென்ன, ப்ரமாணம் (ஜகதித்யாதி) ஈஶ்வரனுக்கது புருஷார்த்தமாகைக்கும், இவனுக்கபுருஷார்த்தமாகைக்கும் ஹேதுவருளிச்செய்கிறார் (ஸ்வரூபாநுரூபேத்யாதி.)

கேழ் - ஒப்பு. முஷ்டியுத்தமாகையாலே, "பொன்னாழி" என்று - திருவாழிமோதிரத்தைச்சொல்லுகிறது. "பொன்" என்றதுக்குபாவம் (குவலயேத்யாதி) கதுப்பு - கபோலம். அறுகாழி - மெல்லியமோதிரம். "களிறட்டபொன்னாழிக்கையென்னம்மான்" என்றுகூட்டிபாவம் (உகவாதாரையித்யாதி.)

"நிகர்" என்று - ஒப்பாய், அத்தால் - அநுரூபதையைச்சொல்லுகிறதாய், ஜாத்யநுகுணமாகச்சிவந்தவென்றபடி. ஜாதிக்கு சத்ருஶமாகவந்த மயிரென்றபடி. பங்கி-மயிர். மாப்புகழ்-கல்யாணகுணங்கள். பலிதம் (திருவாய்மொழியித்யாதி)

தன்கேழில் புகர்ச்செம்முகத்தவென்றுதொடங்கி, தனிமாப்புகழ் - நுகர்ச்சிக்கு - மூவுலகின் வீடுபேறு - உறுமோ - ஒக்குமோ் வித்யந்வய: .....................*

# ஏழாம்பாட்டு.

தனிமாப்புகழேயெஞ்ஞான்றுநிற்கும்படியாத்தான்றோன்றி
முனிமாப்பிரமமுதல்வித்தாயுலகமூன்றுமுளைப்பித்த
தனிமாத்தெய்வத்தளிரடிக்கீழ்ப்புகுதலன்றியவனடியார்
நனிமாக்கலவியின்பமேநாளும்வாய்க்கநங்கட்கே.

## ஆறாயிரப்படி.

(தனிமாப்புகழே) இங்கே யிப்போதே நான்பெற்றநுபவிக்கிறபாகவதசேஷத்வத்துக்கு வர்த்தகமான பகவதநுபவமு மிங்கேசித்தித்தபின்

பு, இதுக்கு விரோதியான பகவதநுபவமும்வேண்டா, இதுக்குவர்த்தகமான பகவதநுபவ சம்வர்த்திதமான பாகவத சம்ஶ்லேஷசுகமே நாளும் வாய்க்க நங்கட்கென்கிறார் ........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அகில ஜகத்காரணபூதனான சர்வேஶ்வரன்திருவடிகளை ப்ராபிக்குமதிலும், அவனுக்கு சேஷபூதரான பாகவதர்களுடைய சம்ஶ்லேஷமே நமக்கென்றுமொக்கவுண்டாகவேணுமென்கிறார்.

தனி-அத்விதீயமாய். மா-அதிசயிதாகாரமான. புகழே - காரணத்வப்ரயுக்த குணப்ரதையை. என்ஞான்றும்-சர்வகாலமும். நிற்கும்படியா - வேதாந்தப்ரசித்தமாய் நிற்கும்படியாக. ஸ்ருஷ்டிகாலம்வந்தவாறே, அபேக்ஷாநிரபேக்ஷமாக, தான்-தானே. தோன்றி - "ஸ்ரூ஬ாஸீ஻ஒ஻" (ப்ராதுராஸீத்தமோநுத:) என்கிறபடியே ஸ்ருஷ்ட்யுந்முகனுயாவிர்ப்பவித்து. முனி - "ஷஹுஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்கிற சங்கல்பத்தாலே ஸ்ருஷ்டிமநநத்தைப்பண்ணுவதாய். மாப்பிரமம்-பரப்ரஹ்மசப்தவாச்யமாயுள்ள. முதல்-ப்ரதாநமாயுள்ள. வித்தாய் - உபாதாந காரணமான. உலகமூன்றும்-ஜகத்த்ரயத்தையும். முளைப்பித்த-உத்பாதித்த. தனிமாத்தெய்வம்-அத்விதீயபரதேவதையினுடைய. தளிர் - அத்யந்தசுகுமாரமான. அடிக்கீழ்-திருவடிகளின்கீழே. புகுதலன்றி-ப்ராபிக்கையன்றிக்கே. அவனடியார் - அந்த காரணகுணங்களுக்குத்தோற்றடிமைப்பட்ட பாகவதர்களுடைய. நனி - மிகவும். மா-ஶ்லாக்யமான. கலவியின்பமே-சம்ஶ்லேஷசுகமே. நங்கட்கு - நமக்கு. நாளும்-சர்வகாலமும். வாய்க்க-வாய்க்கவேணும்.

நனி - மிகுதி ........................................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

ஸ்வயம்புருஷார்த்தமாய்வரும் பகவதநுபவ மெனக்குவேண்டா, பாகவதர்களோடேகூடி யநுபவிக்கும் பகவதநுபவமே காலதத்வமுள்ளதனையு மெனக்குண்டாகவேணுமென்கிறார்.

(தனிமாவித்யாதி) உபமாநரஹிதமாய், ஶ்லாக்யமானபுகழே காலதத்வமுள்ளதனையும் நிற்கும்படியாக. (தான்தோன்றி) அவ்யக்தசரீரனைதான் (முனிமாப்பிரமமுதல்வித்தாய்-தோன்றி) அர்த்திப்பாரின்றிக்கேயிருக்க பூர்ணனாயிருக்கிறதான், தன்பேறாக "ஷஹுஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்றுதோன்றி. (முனிமாப்பிரமமுதல்வித்தாய்) சங்கல்பிக்கிற பரப்ரஹ்மமாகிற பரமகாரணமாய். முனி-துறந்தவன். தேசாந்தரம்போன ப்ரஜையைத் தாய்நினைக்குமாபோலே, "இவையென்பட்டன" என்று திருவுள்ளத்தாலே நினைத்து, பரப்ரஹ்மமானதானே த்ரிவிதகாரணமுமாய். (உலகமூன்றும்முளைப்பித்த) கார்யவர்க்கமடையத் தன்பக்கலிலே யரும்பும்படி பண்ணினனாயிற்று பஹுபவநசங்கல்பமிருந்தபடி. (தனியித்யாதி) ஒப்பில்லாத பரதேவதையினுடைய, தளிர்போலேயிருக்கிற திருவடிகளின்கீழே புகுதல். இதுகாணும் ஸ்ருஷ்டிப்ரயோஜநம். சேதந

ஞானுபகரித்தவன்றிருவடிகளைப் பற்றவிறே ப்ராப்தம். (அன்றி) அத்தைவிட்டு. அவனடியாரித்யாதி) அவ்வுபகாரத்திலே தோற்றெழுதிக் கொடுக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களோடுண்டான, மிக்கவிலக்ஷணமாயிருந்துள்ள சம்ஶ்லேஷசுகமே நாள்தோறும்வாய்க்க. (நங்கட்கே) இத்தைவிரும்பி "இதுவேபேறு" என்றிருக்கிறநமக்கு, இது காலதத்த்வமுள்ளதனையும் கிட்டவேணும்......................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (தனிமாவித்யாதி) கீழ்மூன்றுபாட்டாலேயும் பகவதநுபவத்தைச்சொல்லி, இப்பாட்டில் "அதுவேண்டா, பாகவதர்களோட்டைச் சேர்த்தியேயமையும்" என்கை வ்யாஹதமன்றோவென்கிற சங்கையை விஷயவிபாகத்தாலே பரிஹரியாநின்றுகொண்டு, "புகுதலன்றி - நனிமாக்கலவியின்பமேநாளும்வாய்க்க" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (ஸ்வயம்புருஷார்த்தமித்யாதி) ஸ்வயம்புருஷார்த்தமாவது - தனியே "எனக்கு" என்றுவரும் பகவதநுபவம்.

உபமாநரஹிதமாய் ஶ்லாக்யமானகுணமாவது - நாமரூபங்களழிந்து தமோபூதமானதசையிலே யிவற்றையுண்டாக்கநினைத்த மஹாகுணம். காலதத்த்வமுள்ளதனையும் நிற்கையாவது - இவ்வுபகாரத்தின் வாசியறிந்தவர்கள் "ஒருவன்பண்ணுமுபகாரமே!" என்று இத்தையே யெப்போதுமொக்க வநுசந்திக்கை. அவ்யக்தசரீரனான தானென்றது - மஹானுக்குக்காரணமான ப்ரக்ருதியை சரீரமாகவுடையதானென்றபடி. அதாவது - ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்ட ப்ரஹ்மமென்றபடி. "தான்" என்றதுக்கு - பூர்ணனானதானென்றர்த்தாந்தரம் (அர்த்திப்பாரித்யாதி) "தோன்றி" என்றதுக்கர்த்தம் (தன்பேருகவித்யாதி) பஹுஸ்யாமென்றுதோன்றியென்றது - வ்யஷ்டி ஸ்ருஷ்டி ப்ரதாநமாகையாலே, அத்தைசங்கல்பித்து, அதுக்குபயுக்தமான ஸமஷ்டி ஸ்ருஷ்டியைப்பண்ணியென்றபடி.

"முனி" என்றதுக்கு மூன்றர்த்தம். சங்கல்ப விசிஷ்டனென்று முந்தினது; இத்தையருளிச்செய்தார் (தன்பேருகபஹுஸ்யாமென்றுதோன்றி) என்கிறவாக்யத்தாலே. "துறந்தவன்" என்றிரண்டாமர்த்தம்; துறக்கையாவது-இவ்விபூதியிலுள்ளார் கரணகளேபரங்களை யிழந்ததுঃகத்தாலே, நித்யஸூரிகளைவிடுகை. நினைக்குமவனென்று மூன்றுமர்த்தம் (தேசாந்தரமித்யாதி) "மாப்பிரமம்-" பரப்ரஹ்மமென்றபடி. (பரப்ரஹ்மமானதானே) என்றதுக்குபாவம் - தன்பெருமைபாராதே ஸ்ருஷ்டிக்கை. "மாப்பிரமனானதான் - முனியாய் - முதல்வித்தாய் - தோன்றி" என்றந்வயிப்பது. "முதல்" என்று - நிமித்தகாரணம். "வித்து" என்று-உபாதாநகாரணம். இவ்விரண்டும் ஸஹகாரிகாரணத்துக்கு முபலக்ஷணம். ஆக, த்ரிவிதகாரணமுமென்றபடி.

"தோன்றி" என்று - ஸமஷ்டி ஸ்ருஷ்டி; "முளைப்பித்த" என்று - வ்யஷ்டி ஸ்ருஷ்டி. "முளைப்பித்த" என்றதுக்குபாவம் (கார்யவர்க்கமித்யாதி) "தோன்றி" என்றதும், "முளைப்பித்த" என்றதும் புநருக்தமன்றோவென்ன (பஹுபவநேத்யாதி) பஹுபவநஸங்கல்பமென்றது - சங்கல்பகார்யமான வ்யஷ்டி ஸ்ருஷ்டியென்றபடி. "ബഹുസ്യാം" (பஹுஸ்யாம்) என்று - வ்யஷ்டி ஸ்ருஷ்டியையும், "ப்ரஜாயேய" என்று-ஸமஷ்டி ஸ்ருஷ்டியையுமிறேசொல்லிற்று. "மாத்தெய்வம்-" பரதேவதை. ஸ்ருஷ்டியைச்சொன்னவநந்தரம், திருவடிகளின்கீழே புகுதலைச்சொ

ன்னதுக்குபாவம் (இதுகாணுமித்யாதி) அதெப்படியென்ன (சேதநனுனுலித்யாதி) அத்தைவிட்டென்றது - ஸ்ரீவைஷ்ணவர்களோடேகூடி யநுபவியாத பகவதநுபவத்தை விட்டென்றபடி.

"நனி-" அறமிகுதி. "இன்பமே" என்கிறவவதாரணார்த்தம் (இநுகாலதத்வமித்யாதி) வாய்க்க - பலிக்கவேணும்.

தனிமாப்புகழேயெஞ்சான்று நிற்கும்படியாக - மரப்பிரமனுன - தான் - முனியாய் - முதல்வித்தாய் - தோன்றி - உலகமூன்று முளைப்பித்தவென்றுதொடங்கி, இன்பமே - நங்கட்கு - நாளும்வாய்க்க வித்யந்வயః ............ ......................*

---

# எட்டாம்பாட்டு.

நாளும்வாய்க்கநங்கட்குநளிர்நீர்க்கடலைப்படைத்துத்தன்
றாளுந்தோளுமுடிகளுஞ்சமனிலாதபலபரப்பி
நீளும்படர்பூங்கற்பகக்காவுநிறைபன்னுயிற்றின்
கோளுமுடையமணிமலைபோற்கிடந்தான்றமர்கள்கூட்டமே.

## ஆறுயிரப்படி.

(நாளும்வாய்க்க) அவர்களோடு சம்ஶ்லேஷம்வேணுமோ, ஸஹவாஸமாத்ரமே யென்றும் ஸித்திக்கவமையுமென்கிறர் ..................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஏகார்ணவசாயியான சர்வேஶ்வரனுடைய வடியாரோடுண்டான சேர்த்தியே நமக்கென்று முண்டாகவேணுமென்கிறர்.

பூதாந்தர விகாரஸம்ஸர்க்கமில்லாமையாலே, நளிர் - சீதளஸ்வபாவமான. நீர்-ஜலத்தையுடைத்தான. கடலை-ஏகார்ணவத்தை. படைத்து - "அப ஏவ ஸஸர்ஜாதௌ" (அபஏவஸஸர்ஜாதௌ) என்கிறபடியே ஸ்ருஷ்டித்து. தன் - அதுவேதனக்கஸாதாரணமாக வேதப்ரதிபாத்யமாய். சமன்-ஒப்பு. இலாத-இன்றியிலேயிருப்பதான. தாளும்-திருவடிகளையும். தோளும்-திருத்தோள்களையும். முடிகளும் - திருமுடிகளையும். பல - ஸஹஸ்ரஸங்க்யாதமாம்படி பலவாக. பரப்பி - பரப்பி. நீளும்-நீளாநிற்பதாய். படர்-பணைத்து. பூ-தர்ஶநீயமான. கற்பகக்காவும்-கற்பகச்சோலையையும். நிறை-நிறைந்த. பல் - கிரணத்தையுமுடையவாய், பலவான. நாயிற்றின் கோளும்-ஆதித்யதேஜஸ்ஸையும். உடைய-உடைத்தான. மணிமலைபோல்-மாணிக்கமலைபோலே. கிடந்தான்-கண்வளர்ந்தருளினவனுடைய. தமர்கள் - தமர்களோடுண்டான. கூட்டம்-சேர்த்தியானது. நங்கட்கு-நமக்கு. நாளும்-காலதத்த்வமுள்ளதனையும். வாய்க்க-உண்டாகவேணும்.

கூட்டம் - சேர்த்தி. அன்றியே, சங்கமாய், பாகவதஸங்கம் ஸந்நிஹிதமாக வேணுமென்றுமாம்..........................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

பாகவதர்களோட்டை சம்ஶ்லேஷசுகம் வேணுமென்றார்கீழ்; அதெல்லாம்வேணுமோ, அவர்கள்திரளைக் கண்ணாலேகாணவமையுமென்கிறாரிதில்.

( நாளும்வாய்க்கவித்யாதி ) இதுவே புருஷார்த்தமென்றிருக்கிற நமக்கு, இதுநாள்தோறும் வாய்க்கவேணும். ( நளிர்நீர்க்கடலைப்படைத்து ) சைத்யமே ஸ்வபாவமான ஜலத்தையுடைய கடலையுண்டாக்கி. கண்வளருகைக்கு சத்ருஶயான ஜலமென்கை. ( சமனிலாத - தாளுந்தோளும்முடிகளும் ) உபமாந ரஹிதமான திவ்யாவயவங்கள் (பலபரப்பி ) அக்கடலிலே பாழ்தீரும்படி வடிவாலேயலங்கரித்து. ( நீளும் படர்பூங்கற்பகக்காவும் ) நிரவதிகபோக்யமான பூப்போலேயிருக்கிறதாளும், கற்பகக்காவைப்போலேயிருக்கிற தோளும். தாளுந்தோளுமிருக்கிறபடி. ( நிறைபன்னாயிற்றின்கோளும் ) " முடிகளாயிரத்தாய் " என்கிறத்தைச்சொல்லுகிறது. கோளென்று - தேஜஸ்ஸு. ஆயிரக்கோடி ஆதித்யர்களைத் திரட்டி முடியாக வகுத்தாப்போலேயிருக்கிறமுடி. கோளென்று - க்ரஹங்களாய், அவைதான் தேஜ:பதார்த்தங்களாகையாலே, தேஜஸ்ஸைலக்ஷிக்கிறது என்றுமாம். (மணிமலைபோல்கிடந்தான்) ஒருரத்நபர்வதம்சாய்ந்தாப்போலேயாயிற்றுக் கண்வளர்ந்தருளுகிறபடி. (தமர்கள் கூட்டமேநாளும்வாய்க்க) இப்படி வைத்தகண்வாங்கவொண்ணாதபடி கண்வளர்ந்தருளாநிற்கு மவனையன்று, நாளும்வாய்க்கவென்கிறது; "கிடந்ததோர்கிடக்கை" என்று கிடையழகிலேதோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள்திரளிலே நானுமொருவனாயங்வயிக்கவேணுமென்னுதல், அத்திரளைக்கண்ணாலேகாணவமையுமென்னுதல். பசியர் "கலவரிசிச்சோறுண்ணவேணும்" என்னுமாபோலே, தம்மபிநிவேசந்தோற்ற வருளிச்செய்கிறார். " ஸஹ்ரைவஸஹாஸீத" (ஸத்பிரேவஸஹாஸீத) என்றும், "ஈட்டங்கண்டிடக்கூடுமேல்" என்றும் சொல்லக்கடவதிறே. அவன்பண்ணினவுபகாரத்துக்குத்தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களோடே சம்ஶ்லேஷிக்கவேணுமென்றார் கீழ்; கிடையழகிலேதோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள்திரளைக்கண்ணாலேகாணவமையுமென்கிறாரிதில் ... ...............*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (நாளுமித்யாதி) "நாளும்வாய்க்கநங்கட்கு" என்கிறவிது இரண்டிடத்திலு மொத்திருக்கையாலே புநருக்தமன்றோவென்கிற சங்கையையும் பரிஹரியாநின்றுகொண்டு, " தமர்கள்கூட்டமே - நாளும்வாய்க்கநங்கட்கு" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (பாகவதர்களோட்டையித்யாதி) "நங்கட்கு" என்றதின் த்விதீயார்த்தத்துக்குச்சேர (அதெல்லாமித்யாதி.)

"நங்கட்கு" என்றதுக்கர்த்தம் (இதுவேயித்யாதி) நங்கட்கு - நமக்கென்று முந்தினவர்த்தம்; நம்முடையகண்ணுக்கென் றிரண்டாமர்த்தம் மேலேகண்டுகொள்

வது. இதுவேயென்றது - ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளிலே நானுமொருவனு யந்வயிக்கையென்றபடி.

நீளும்படர்பூக்களையும், கற்பகக்காவையும், நிறைபன்னுயிற்றின் கோளையுமுடைய மணிமலைபோல். "நீளும்படர்பூ" என்றது-திருவடிகளுக்குத்ருஷ்டாந்தம். "கற்பகக்கா" என்றது - தோள்களுக்கு த்ருஷ்டாந்தம். "நிறைபன்னுயிற்றின்கோள்" என்றது-திருவபிஷேகங்களுக்கு த்ருஷ்டாந்தம். "நீளும்படர்" என்றபுநருக்திக்கர்த்தம் (நிரவதிகபோக்யமானவென்று) "பன்னுயிற்றின்" என்று ஆதித்யபஹுத்வம் சொல்லுகைக்கு, திருமுடிகள் பலவுண்டோவென்ன (முடிகளாயிரத்தாயித்யாதி) ஒரோதிருமுடிக்கு ஒரோஸூர்யன் த்ருஷ்டாந்தமென்றுகருத்து. பாவாந்தரம் (ஆயிரக்கோடியித்யாதி) "முடி" என்றது - ஜாத்யேகவசநம்.

அவதாரிகையிலும், பதவ்யாக்யாநத்திலு மருளிச்செய்த வர்த்தத்வயத்தையும் வ்யுத்க்ரமமாக வருளிச்செய்கிறார் (கிடந்ததோரித்யாதி வாக்யத்வயத்தாலே) "நங்கட்கு" என்றது-நமக்கென்றாய், நானுமொருவனுயந்வயிக்கவேணுமென்றபடி. நம்முடையகண்ணுக்கென்று த்விதீயார்த்தம். "தமர்கள்" என்றால்போராதோ, "கூட்டம்" என்கிறதென்னென்ன (பசியரித்யாதி) "நங்கட்கு" என்றதினர்த்தத்வயத்துக்கும் ப்ரமாணத்வயம் (ஸத்பிரோவேத்யாதி) "ஸத்பிரேவ ஸஹாஸீத ஸத்பிஃ குர்வீத ஸங்கமம் । ஸத்பிர் விவாதம் மைத்ரம் ச நாஸத்பிஃ கிஞ்சிதாசரேத்" (ஸங்கஸ்ஸர்வாத்மநாத்யாஜ்யஸ் ஸசேத்த்யக்தும்நஶக்யதே । ஸத்பிரேவஸஹாஸீதஸத்பிஃகுர்வீதஸங்கமம் । ஸத்பிர்விவாதம்மைத்ரம்சநாஸத்பிஃகிஞ்சிதாசரேத்) இதிமார்க்கண்டேயபுராணே. (ஈட்டங்கண்டிடவித்யாதி) பெருமாள்திருமொழி, "தேட்டரும்" இத்யாதி. ஈட்டம்-கூட்டம். அவதாரிகைக்குச்சேரநிகமநம் (அவன்பண்ணினவித்யாதி)

குளிர்நீர்க்கடலைப்படைத்து - நீளும்படர்பூம் - தாளும் - கற்பகக்காவும்-தோளும் - பன்னுயிற்றின் - நிறை - கோளுமுடைய - சமனிலாதபல - முடிகளையும்-அதிலேபரப்பி - மணிமலைபோல்கிடந்தான்றமர்கள் கூட்டமே - நங்கட்கு - நாளும்வாய்க்கவித்யந்வயஃ......................................................................*

---

## ஒன்பதாம்பாட்டு.

தமர்கள்கூட்டவல்வினையைநாசஞ்செய்யுஞ்சதுமூர்த்தி
யமர்கொளாழிசங்குவாள்விற்றண்டாதிபல்படையன்
குமரன்கோலவைங்கணைவேடாதைகோதிலடியார்தந்
தமர்கடமர்கடமர்களாஞ்சதிரேவாய்க்கதமியேற்கே,

### ஆறாயிரப்படி.

(தமர்கள்) அவர்களோடு ஸஹவாஸந்தான் வேணுமோ, அவர்களடியாரடியா ரடியாராம் சதிரேவாய்க்கவமையுமென்கிறார்... ... ......*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், விரோதிநிரஸநோபகரணமான திவ்யாயுதங்களையுடையனான ஸர்வேஶ்வரனுக்கு சேஷபூதரான பாகவதர்களுடைய சம்பந்தி சம்பந்திகளுக்கு நாம் சேஷபூதராகையாகிற வுறுதிக்கோளானது நமக்குண்டாகவேணுமென்கிறார்.

தமர்கள் - ஆஶ்ரிதருடைய. கூட்டம் - சங்கத்துக்குவரும். வல் - வலிய. வினையை - பாபங்களுடைய. நாசம் - சர்வப்ரகாரவிநாசத்தை. செய்யும் - பண்ணும். சதிர் - சாமர்த்யத்தையுடைய. மூர்த்தி - ஸ்வாமியாய். அமர் - விரோதிநிரஸநார்த்தமான யுத்தோத்யோகத்தை. கொள்-உடைய. ஆழி சங்கு வாள் வில் தண்டாதி-ஸ்ரீபஞ்சாயுதப்ரமுகமான. பல்படையன் - நாநாவிதாஸக்ஙயோயாயுதங்களையுடையனாய். குமரன் - விரோதிநிரஸந சக்திஸூசகமான பருவத்தி லிளமையை யுடையனாய். கோலம் - வடிவழகுக்கு மதிப்பனாய். ஐங்கணை - பஞ்சபாணனான. வேள்-காமனுக்கு. தாதை-உத்பாதகனான வைலக்ஷண்யத்தை யுடையனானவனுடைய. கோது-ப்ரயோஜநாந்தரசம்சர்க்கமாகிற கோது. இல் - இல்லாத. அடியார்தம் - அடியார்க்கு. தமர்கள் - சேஷபூதரானார்க்கு. தமர்கள் - சேஷபூதரானவர்களைப்பற்ற. தமர்களாம் - தாஸ்யசம்பந்தத்தையுடையோமாகிற. சதிர் - அருள்கோளானது. தமியேற்கு - சம்சாரத்தி லசஹாயரான நமக்கு. வாய்க்க - உண்டாகவேணும்.

கூட்ட வல்வினை யென்று - சங்கரூப பாபமாகவுமாம். சதுமூர்த்தியென்று பாடமாய், விக்ரஹபேதத்தைச் சொல்லிற்றாகவுமாம். ............................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

ஸ்ரீவைஷ்ணவர்களுடன் ஸஹவாஸந்தான்வேணுமோ, அவர்களுடைய சேஷத்வத்திலே முடிந்த நிலமாகவமையுமென்கிறார்.

(தமர்கள்கூட்டவல்வினையை நாசஞ்செய்யும்) ஸ்ரீவைஷ்ணவர்களுடைய திரளுக்குவரும் வல்வினையை நாசஞ்செய்யுமென்னவுமாம். அன்றிக்கே, தமர்களுடைய, கூட்டமானவல்வினையை - திரண்டவல்வினையை, நசிப்பிக்குமென்னவுமாம். அன்றிக்கே, தமர்கள் வல்வினையைக்கூட்ட, அத்தை நசிப்பிக்குமென்னுதல். இவனுக்குக் கூட்டுகையே ஸ்வபாவமானாப்போலே, அவனுக்கும் கழிக்கையே யாத்ரையாயிருக்கிறபடி. (சதுமூர்த்தி) விரோதியைப்போக்குகைக் கேகாந்தமான பலவடிவுகளையும் கொள்ளாநிற்கும். இவர்கள், கைங்கர்யத்துக்குப் பலவடிவுகொள்ளுமாபோலேயாயிற்று, அவன் ரக்ஷணார்த்தமாகப் பலவடிவுகொள்ளும்படி. (அமர்கொளித்யாதி) விரோதிநிரஸநத்துக் குறுப்பாக யுத்தோந்முகமான திருவாழிதொடக்கமான திவ்யாயுதத்தை யுடையவன். (குமரன்) நித்யயுவாவாயிருக்கும். (கோலமித்யாதி) பஞ்சபாணனனகாமனுக்கு மூத்பாதகனானவன். "அழகுக்கெனக்குமேலில்லை" என்றிருக்கும் காமனுக்கு மழகுக்குத்பத்திஸ்த்தாநமாயிருக்குமென்கை. அப்பருவத்துக்கு மழகுக்குந்தோற்றிருக்கு மநந்யப்ரயோஜநரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய வடிமையில் முடிந்தநிலமாகவேணுமென்கிறார். (சதிரோவாய்க்க) இந்தநிரதிசயபுருஷார்த்த மென்றுமொக்கவாய்க்கவேணும். (தமியேற்கே) பூதகாலத்திலும் ஸ்ரீசத்ருக்நாழ்வானைத் தேடிப்பிடிக்கவேண்டுகையாலே, வர்த்தமாநகாலத்தில் தமக்குபமாநமின்றிக்கேயிருக்கை. கீழ் "நங்கட்கு" என்றார், * கேசவன்றமர்க்குப்பின்பு தனியரல்லாமையாலே; இங்கு (தமியேற்கு) என்கிறது, சம்சாரிகளில் தமக்குபமாநமில்லாமையாலே... ......*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (தமர்களித்யாதி.) "தமர்கள் தமர்கள் தமர்களாம்" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை (ஸ்ரீவைஷ்ணவர்களுடனித்யாதி.) இந்த சங்கதி, கீழ்ப்பாட்டில் "நங்கட்கு" என்றதின் மூந்தினவர்த்தத்தைப்பற்ற.

மூன்றுமர்த்தத்தில், "கூட்ட - நாசம்செய்யும்" என்ற பதச்சேர்த்திக்குபாவம் (இவனுக்கித்யாதி.) "வல்வினையைநாசம்செய்யும் சதுமூர்த்தி" என்றுகூட்டிபாவம் (விரோதியையித்யாதி.) "சதுமூர்த்தி -" சதுர்மூர்த்தி. அதாவது - வாசுதேவ சங்கர்ஷண ப்ரத்யும்நாநிருத்தர்களாய், அவதாராந்தரங்களுக்கு முபலக்ஷணம். "சதிர்மூர்த்தி" என்றுபாடம். விரோதிநிரஸந சக்திஸூசகமான பருவத்தினிளமையையுடையவனென்று, அதுக்கர்த்தம். கீழ்ச்சொன்ன வர்த்தத்தை த்ருஷ்டாந்தபூர்வகமாக ஸ்த்திரீகரிக்கிறுர் (இவர்களித்யாதி.)

அமர்கொள் - அமரையுடைய. யுத்தோந்முகமான வென்றபடி. கொள்கை-உடைத்தாகை. "கோலம்" என்றது - * வேளுக்கு விசேஷணம். "ஐங்கணை -" பஞ்சபாணங்கள். "வேள் -" காமன். இத்தால் பலிதம் (அழகுக்கித்யாதி)

பருவத்தையு மழகையுஞ்சொல்லி, "கோதிலடியார்" என்கையாலே பலிதத்தை யருளிச்செய்கிறுர் (அப்பருவத்துக்குமித்யாதி) சதிரோ - நிரதிசயபுருஷார்த்தமே. கோதாவது - ப்ரயோஜநாந்தரபரதை. பின்னையும், அநந்யப்ரயோஜநரில்லையோ, அத்விதியனுக்கென்கிறதென்னென்ன (பூதகாலத்திலுமித்யாதி) ஆனுல், கீழே "நங்கட்கு" என்றத்தோடு விரோதியாதோவென்ன (கீழித்யாதி வாக்யத்வயம்.)

தமர்கள் கூட்ட வித்யாரப்ப, சதிரோ - தமியேற்கு - வாய்க்க வித்யந்வயஃ. வாய்க்க - வாய்க்கவேணும். உண்டாகவேணுமென்றபடி. ..........................*

# பத்தாம்பாட்டு.

வாய்க்கதமியேற்கூழிதோறூழியூழிமாகாயாம்
பூக்கொண்மேனிநான்குதோட்பொன்னுழிக்கையென்னம்மா
னீக்கமில்லாவடியார்தம்மடியாரடியாரடியாரெங்
கோக்களவர்க்கேகுடிகளாய்ச்செல்லுநல்லகோட்பாடே.

## ஆறுயிரப்படி.

(வாய்க்க) இப்ப்ராப்யமே யெனக்கு மென்பரிக்ரஹத்துக்கு மென்றும் வாய்க்கவேணுமென்கிறுர் ..........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அதிசயிதாநுபாவ்யமான வடிகாராவயவசோபைகளையுடைய சர்வேஶ்வரனுக்கு அப்ருதக்ஸித்த சேஷபூதராணுருடைய சம்பந்தி பரம்பரையினுடைய வெல்லையிலே யடிமைசெய்து நடக்கையாகிற வுத்யோகமானது கல்பந்தோறுமுண்டாகவேணுமென்கிறுர்.

மா - தர்ஸநீயவைலக்ஷண்யத்தை யுடைத்தான. காயாம்பூ - காயாம்பூநிறத்தை. கொள் - கொள்வதான. மேனி - திருமேனியையும். நான்குதோள் - ஆஶ்ரிதர்க்கொதுங்கநிழலான நாலுதிருத்தோள்களையும். பொன் - ஸ்ப்ருஹணீயமான. ஆழி - திருவாழியையுடைய. கை - திருக்கையையுமுடைய. என் - இவ்வடிவழகைக் காட்டி யென்னை யெழுதிக்கொண்ட. அம்மான் - ஸ்வாமியானவனை. நீக்கம் - பிரிவு. இல்லா - இல்லாதபடி யநுபவிக்கிற. அடியார்தம் - அடியார்க்கு. அடியாரடியாரடியார் - அசாதாரண சேஷபரம்பரையிலுள்ளார். எம் - எனக்கு மென்னோடுசம்பந்தமுடையார்க்கும். கோக்கள் - சேஷிகள். அவர்க்கே - அவர்களுக்கே. குடிகளாய் - சேஷவ்ருத்திபண்ணும் குலமாய். செல்லும் - செல்லும்படியராய். நல்ல - ஶ்லாக்யமான. கோட்பாடு - ஸ்வீகாரப்ரகாரமானது. ஊழிதோறூழி - மஹாகல்பந்தோறுமுண்டான. ஊழி - அவாந்தர கல்பங்களிலும். தமியேற்கு - ததீயபாரதந்த்ர்யத்திலொப்பின்றியே யிருக்கிற வெனக்கு. வாய்க்க - உண்டாகவேணும். ..............*

## ஈடு - பத்தாம்பாட்டு.

இப்ப்ராப்யம், எனக்குமென்பரிக்ரஹத்துக்கு மென்றும் வாய்க்க வேணுமென்கிறார்.

(வாய்க்கதமியேற்கு) புருஷார்த்தத்தினெல்லையிலே யவகாஹிக்கையாலே யுபமாநரஹிதனானவெனக் கிப்பேறேவாய்க்கவேணும். (ஊழிதோறூழியூழி) காலதத்வமுள்ளதனையு மிடைவிடாதே யாவதாத்மபாவியாக விதுவேபுருஷார்த்தமென்கை. (மாகாயாம்பூவித்யாதி) அழகியகாயாம்பூப்போலேயிருக்கிறதிருமேனியையும், கல்பகதருப்பணைத்தாப்போலேயிருக்கிற திருத்தோள்களையும், கல்பகம்பூத்தாப்போலேயிருக்கிற திருவாழியையுங்காட்டி யென்னையநந்யார்ஹனாக்கினவன். (நீக்கமில்லாவடியார்) பிரியநினைக்கில் "குருஷ்வமாம்" என்னவேண்டும்படி விஶ்லேஷிக்கமாட்டாதவர்களில் சரமாவதியானவர்க ளென்ஸ்வாமிகள். "தமர்கள்தமர்கள்தமர்களாம்" என்றுமுடித்தவெல்லையை முதலாகத்தொடங்குகிறார். சயமேயடிமைதலைநின்றாராகிறார் - ஸ்ரீபரதாழ்வான்போல்வார்; கோதிலடியாராகிறார் - ஸ்ரீசத்ருக்நாழ்வான்போல்வார்; நீக்கமில்லாவடியாராகிறார் - இளையபெருமாள்போல்வார். (அவர்க்கேகுடிகளாய்) இருகரையராயிராதே, "[grantha script] | [grantha script]" (நசேத்ராமாநுஜேத்யேஷா சதுராசதுரக்ஷரீ | காமவஸ்தாம்ப்ரபத்யந்தேஜந்தவோஹந்தமாத்ருஶா:) என்றிருக்கப்போலேகாணுமடுப்பது. (அவர்க்கேயித்யாதி) அவர்களுக்கே சபரிகரமாக வநந்யார்ஹராய்ச்செல்லும் நல்லகட்டளை - வாய்க்கதமியேற்கு. கோட்பாடு-கோளுபாடு ..............................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. ( வாய்க்கவித்யாதி. ) " அவர்க்கே குடிகளாய்ச்செல்லும் நல்லகோட்பாடு - தமியேற்கு - ஊழிதோறூழி யூழி - வாய்க்க" என்றபதங்களைக்க

விளைவதாகவித்திளேன்" என்றுளாம். "தொண்டனூர்நம்பி, எச்சான்" என்று சிலமஹாபுருஷர்களுண்டிறே – பாகவதசேஷத்வமே யாத்ராயாய்ப்போந்தவர்கள், அவர்கள்படியேயாகப்பெறுவர்கள் ... ... ............*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (நல்லவித்யாதி) "நல்லபதத்தால்" இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியித்யாதி.)

கீழெல்லாம் ததீயசேஷத்வத்தைச்சொல்லி, அநந்தரம் "நல்லகோட்பாட்டுலகங்கள்" என்றதுக்குபாவம் (இவரித்யாதி) லோகம் கட்டளைப்படுகையாவது- எல்லாருந்திருந்தி, ததீயசேஷபூதராகை. ததீயசேஷத்வஜ்ஞாநமுடையவர்களுடைய ஹ்ருதயத்திலிருக்கையாலே, வ்யாப்தியும் தேவையாயிராதே புதுக்கணித்ததென்றபடி. அல்லி-இதழ். கமலவிதழ்போன்ற கண்களையுடையவனென்றபடி. இவர்-ஆழ்வார்.

வேதத்தைப்பற்ற வாதிக்யமேதென்ன (பரத்வமித்யாதி வாக்யத்வயம்) வேதாவதாரம் திருவாய்மொழியென்றுகருத்து.

அதெப்படியென்ன (அத்தையித்யாதி) (நிஷ்கர்ஷித்தபடியாலே – நல்லபதமாகிறது பாகவதசேஷத்வமிறே) என்றந்வயிப்பது. நல்லபதத்தால்-நல்லபதத்தோடேயென்றபடி. ஒன்றைநினைக்கையன்றிக்கே – ஏகஹ்ருதயராயென்றபடி. "கொண்டபெண்டிர்மக்களே-" தங்கள்நினைவை யங்கீகரித்த பார்யாபுத்ராதிகளையுடையராயென்று சப்தார்த்தம். சபரிகரமாக பாகவதர்களுக்குறுப்பாய் வர்த்தித்தபேருண்டோவென்ன (திருவநந்தபுரத்துக்கித்யாதி) சாத்தாக - திரளாக. ஆழ்வாரைப்போலே பாகவதசேஷத்வைக நிஷ்டரானவர்களைக் கண்டதுண்டோ வென்ன (தொண்டனூரித்யாதி.)

நல்லகோட்பாட்டுலகங்களென்றுதொடங்கி, வல்லார்கள் - கொண்டபெண்டிர்மக்களையுடையராய்க்கொண்டு - பாகவதசேஷத்வமாகிற நல்லபதத்தோடே மனைவாழ்வரித்யந்வய:. மனைவாழுகையாவது – கார்ஹஸ்த்யத்தோடே ஜீவிக்கை. மனை - மனையிலேயென்றபடி ........................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

(நெடுமாற்கடிமை.)

व्यामुग्धत्वात् स्वकीयेष्ववनरसवशादम्बुदाभः स्वदेह-
स्वात्मप्रहाणाद्यहितनिरसनात्प्रोक्तसर्वेष्टसिद्धेः । स्वाभाव्या-
द्भिक्तयोगाद्गतिदशितहृते तत्त्वसंरक्षणात्र्यात्स्वाकूतोऽष्टे
श्रीयत्तावात्रयविशदयति तत्राह नायस्सदाश्रम ॥

(வ்யாமுக்தத்வாத்ஸ்வகீயேஷு) நெடுமாற்கடிமை - ஆஸ்ரிதரிடத்திலே மிகவும் வ்யாமோஹத்தையுடையனாகையாலும்; (அமலகாருசா) புயல்மேகம்போல் தி

ருமேனியம்மான் - வர்ஷூகவலாஹகம்போலேயிருக்கிற வடிவையுடையனாகையா லும்; (வாமநத்வேச) உலகமூன்றுமுடனிறையச் சிறுமாமேனிநிமிர்த்த -சிறியவா மநரூபத்தைக்கொண்டு த்ரைலோக்யமும் நிறையும்படி த்ரிவிக்ரமனாய் வளருகை யாலும்; (ஆபத்பந்துத்வாஸ்சர்யபாவாத்) இருமாநிலமுன்னுண்டுமிழ்ந்த - மாயன் கோலமலரடிக்கீழ் - ப்ரளயகாலத்திலே எல்லாலோகங்களையும் திருவயிற்றிலேவை த்து ரக்ஷிக்கையாலும்; ஆஸ்சர்யசேஷ்டிதங்களையுடையனாகையாலும்; (அஹிதநிர ஸநாத்) புகர்ச்செம்முகத்தகளிறட்ட - கம்ஸனாலே ப்ரேரிதமாய் அதிகுபிதமாய் வந்த குவலயாபீடத்தை சம்ஹரிக்கையாலும்; (லோகஸ்ருஷ்ட்யாதிஸக்தே:) உலக மூன்றுமுளைப்பித்த - லோகங்களுடையஸ்ருஷ்டிஸ்த்திதிகளிலே ஸமர்த்தனாகையா லும்; (அப்தௌஸாயித்வயோகாத்) களிர்நீர்க்கடலைப்படைத்தித்யாதி - நிரதிசய தேஜஸ்ஸையுடைய நீலரத்நபர்வதம்போலே சமுத்ரத்திலே சாய்ந்தருளுகையாலு ம்; (ஸ்ரிததுரிதஹ்ருதேஸ்ச) தமர்கள்கூட்டவல்வினையை நாசம்செய்யும் சதிர்மூர் த்தி - ஆஸ்ரிதருடைய துரிதங்களை நிரஸிக்குமவனாகையாலும்; (அதஸீபுஷ்பகாந்த் யாத்வாக்ருஷ்டே:) மாகாயாம்பூக்கொள்மேனி - காசாம்பூப்போலே ஸ்யாமையா ன திருமேனிகாந்தியாலே எல்லாரையு மாகர்ஷியாநிற்கையாலும்; எம்பெருமான், ஸ்வதாஸ்யத்தை ஸ்வாஸ்ரித தாஸ்யபர்யந்தமாக விஸதீகரியாநிற்கிறானென்று நெடு மாற்கடிமையிலே ஆழ்வார் நிஸ்சயித்தருளினாரென்கிறார்............................*

இப்படி அஷ்டமஸதகத்தில் பத்துதஸகங்களாலும் ப்ரதிபாதிதங்களான
வர்த்தங்களை ஸங்க்ரஹித்தருளுகிறார்.

த்ரஷ்டும் ஸ்வை: ஶீக்ரத்ருʼஶ்யம் [illegible] விஷய [illegible] ஹைரேவ
லப்யம் ஸ்வாநாம் விஶ்லேஷே போக்யம் ஶ்ரிதவிஹிதஸமக்ர [illegible]
[illegible] । ரக்ஷாபேக்ஷம் ஸ்வபதவிதரண [illegible] ஹ்ருʼத்யம் [illegible]
[illegible] ஸ்வம் தஸ்ய நிஷ்டாம் [illegible] ஶேஷவஶ்யம் ॥

தன்னைக்காணவேணுமென்றாசைப்படுகிறபேர்களாலே காணப்படுமவனாய், இதரவிஷயங்களிலே பற்றற்றபேர்களாலே தானே லப்யனுமாய், விஸ்லேஷசமய த்திலே தனக்காஸ்ரிதர் பரியவேண்டும்படியான போக்யதையையுடையனுமாய், ஆ ஸ்ரிதர்நிமித்தமாக ஸமக்ரவிபவனுமாய், ரக்ஷிக்குமிடத்தி லபேக்ஷாப்ரதீக்ஷனுமாய், ஸ்வபதவிதரணத்திலே ஸந்நத்தனுமாய், ஆஸ்ரிதஹ்ருதயத்திலேதானே நிரதனுமாய், தன்னைக்குறித்து சேதநர்க்குண்டான தாஸ்யத்தையு மதிலே நிஷ்டையையு மதினு டைய வெல்லைநிலத்தையும் ப்ரகாஸிப்பிக்குமவனாயிருக்கிற வெம்பெருமானை அஷ் டமஸதகத்திலே ஆஸ்ரிதேச்சாநுவர்த்தியாக ஆழ்வாரருளிச்செய்தாரென்கிறார் ...*

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

நெடுமாலழகுதனில்நீள்குணத்திலீடு
படுமாநிலையுடையபத்தர்க் - கடிமைதனில்
எல்லைநிலந்தானாகவெண்ணினான்மாறன்து
கொல்லைநிலமானநிலைகொண்டு.

(நெடுமாலழகுதனில்) இதில், அநந்யார்ஹசேஷத்வத்துக்கெல்லை, பாகவத சேஷத்வ பர்யந்தமாயிருக்குமென் றாழ்வாரருளிச்செய்தபாசுரத்தை யநுவதித்த ருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில், ஜீவாத்மாவுக்குச்சொன்ன பகவதநந் யார்ஹசேஷத்வந்தான் நிலைநிற்பது, பாகவதசேஷத்வபர்யந்தமானா லென்னுமிட த்தையநுசந்தித்து, "அவனுடையசௌந்தர்யசீலாதிகுணசேஷ்டிதங்களிலே தோ ற்றடிமைபுக்கிருக்கும்" பாகவதர்களுக்கு சேஷமாயிருக்குமிருப்பே யெனக்குப்புரு ஷார்த்தம்; ஐஶ்வர்யகைவல்யபகவல்லாபங்களாகிற புருஷார்த்தங்கள் நான்பற்றி னபாகவதசேஷத்வமாகிற பரமபுருஷார்த்தத்துக்குத் தனித்தனியும் திரளவும் ஒப் பாகமாட்டா; ஆனபின்பு எனக்கு மென்னுடையார்க்கு மிப்புருஷார்த்தம் காலத த்வமுள்ளதனையும் நித்யசித்தமாய்ச்செல்லவேணும் என்று ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ப்ரார்த்தித்துத் தலைக்கட்டுகிற நெடுமாற்கடிமையிலர்த்தத்தை, நெடுமாலழகுதனில், இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

(நெடுமாலழகுதனில் நீள்குணத்திலீடுபடுமாநிலையுடையபத்தர்) அதாவது, "புயல்மேகம்போல் திருமேனியம்மான் புனைபூங்கழலடிக்கீழ்ச் சயமேயடிமைத் தலைநின்றார் திருத்தாள்வணங்கி" என்றும், "அவனடியார்சிறுமாமனிசராயென்னை யாண்டாரிங்கேதிரிய-செந்தாமரைக்கட்டிருக்குறளன் நறுமாவிரைநாண்மலரடிக்கீ ழ்ப்புகுதலுறுமோ" என்றும், "தனிமாப்புகழேயெஞ்ஞான்றும்" என்றுதொடங்கி, "தனிமாத்தெய்வத்தளிரடிக்கீழ்ப்புகுதலின்றி யவனடியார் நனிமாக்கலவி யின்ப மேநாளும்வாய்க்கநங்கட்கு" என்றும், "கோளுமுடைய மணிமலைபோற்கிடந்தான் தமர்கள்கூட்டமே நாளும்வாய்க்கநங்கட்கு" என்றும், "தமர்கள்கூட்டவல்வினை யை" என்றுதொடங்கி "கோதிலடியார்தம் தமர்கடமர்கடமர்களாம் சதிரேவாய்க் கதமியேற்கு" என்றும், நீக்கமில்லாவடியார்தம் மடியாரடியாரடியாரெங்கோக்க ளவர்க்கேகுடிகளாய்ச்செல்லும்நல்லகோட்பாடு - வாய்க்கதமியேற்கு" என்றும், இ ப்படி உத்துங்கதத்வமான வடிவழகிலும், தனிமாப்புகழேயென்கிற தீர்க்கசௌ ஹார்த்தகுணத்திலும், ஈடுபட்டிருக்கும் (பத்தரடிமைதனிலெல்லைநிலம் தானாகவெ ண்ணினான்மாறன்) பக்தர்கள்திறத்தி லடிமையாமளவன்றிக்கே, அவ்வடிமையில் ஸீமாபூமிதாமாம்படி யநுசந்தித்தாராழ்வார். (அதுகொல்லைநிலமானநிலைகொண்டு) அந்தபாகவதசேஷத்வம் ஸீமாதிலங்கியான உத்தமபுருஷார்த்தமென்கிற நிஷ்ட் டையைக்கொண்டு, எல்லைநிலம் தானாகவெண்ணினான். "ஶத்ருக்நோ நித்யஶ த்ருக்நஃ," (ஶத்ருக்நோநித்யஶத்ருக்நஃ) என்கிறபடியே. "வியன்மூவுலகுபெறினு ம்" என்கிற வைஶ்வர்யம் ஆத்மப்ராப்தியளவாயிருக்கும்; "தானேதானேயானாலு ம்" என்கிற வாத்மப்ராப்தி "செந்தாமரைக்கட்டிருக்குறள னறுமாவிரைநாண்மலர டிக்கீழ்ப்புகுதல்" என்கிற பகவத்ப்ராப்தியளவாயிருக்கும்; இந்தபகவத்ப்ராப்தி பா கவதப்ராப்தி ஸாபேக்ஷமாயிருக்கும்; இந்தபுருஷார்த்தத்துக்கு மேலெல்லையில்லை ஆகையிறே "முழுதுமுறுமோ" என்றது ...............................................*

எட்டாம்பத்தில் - பத்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி - அ0.—பாட்டு - அஅஉ.

## எட்டாம்பத்து ஸம்பூர்ணம்.



